மூ—வண்மையுகந்தவருளால்வரந்தரும்மாதவனா்
உண்மையுணா்ந்தவரோதிவிக்கின்றவுரைவழியே

---

முதல்வியாக்யானம்.

களை யுற்றபடி யறிந்த வாசார்யர்களுடைய வுபதேசத்தாலும் க்ரந்த முகத்தாலும் பிறந்தபடியினலே ஸர்வாஜ்ஞாந நிவ்ருத்தி பூர்வகமாக ஸர்வஜ்ஞத் வாகாரத்தை யடைந்தோ மிதுவன்றோ நமக்காசார்யன் பண்ணின க்ருஷிபல மென்கிறு ரொருபாட்டாலே.

(வண்மையுகந்தவருளால்) வண்மை - ஔதார்யத்தை, உகந்த, ஸந்தோஷியாநின்ற, அருளால் - க்ருபையாலே (வரந்தரும் மாதவனா்) "ச॒து॒ர்வி॒தா॒ ம॒ஜ॒நா॒:" (சதுர்விதாமமஜநா:) என்றும் "உ॒தா॒ரா॒ஸ்ஸ॒ர்வ॒ ஏ॒வை॒தே॒" (உதாராஸ் ஸர்வஏனவதே) என்றும் சொல்லுகிறபடியே தத்ததிஷ்டமான பலங்களைக் கொடாநிற்கும் ஸ்ரீய: பதியினுடைய, ஸகல பலப்ரதமான வீச்வரனுடைய ஔதார்யம் க்ருபாகார்யமென்று விசிஷ்டதாத்பர்யம். (உண்மையுணர்ந்தவர்)உண்மை-ஸ்வபாவம், உணர்கை - நன்றாகவறிகை, ஸ்ரீய:பதியினுடைய ஸ்வரூப ரூபகுண விபூத்யாதிகளை யுள்ளபடியறிந்த வாசார்யர்களுடைய (ஓதிவிக்கின்ற வுரைவழியே) அப்யாஸம்பண்ணிவையாநின்ற சப்தமார்க்கத்திலேதானே யுண்டான வென்றபடி. இது தெளிவுக்கு விசேஷணம், உரைவழியென்றது உரைவழியாலே யென்னவுமாம். (திண்மைதருந் தெளிவொன்றால்) திண்மை - தார்ட்யத்தை, தரும் - கொடுக்கும், ஸம்யக்ஞானத்தாலே, தெளிவு - ஸமீசிநஜ்ஞாநம், குருபதேசத்தாலே வந்ததத்வ விஷயமான த்ருடதர ஜ்ஞாநத்தா லென்றபடி (திணியிருள் நீங்கியநாம்) அத்யந்த நிபிடமாயிருந்த அஜ்ஞாநத்தை நீங்கியிருக்கிற நாம், தத்வவிஷயமான ஸம்யஞ்ஞானத்தாலே அநாதியாக வுண்டான அஜ்ஞாநங்களை

---

இரண்டாம்வியாக்யானம்.

அபிநதம்விது:) என்கிறபடியே நித்யஸூரிகளாலும் அபரிச்சேத்ய ப்ரபாவசாலிகளான ப்ரஹ்ம வித்துக்களுடைய ப்ரபாவத்தை "ஜ்ஞா॒நீ॒த்வா॒த்மை॒வ॒மே॒ம॒த॒ம்" (ஜ்ஞாநீத்வாத் மைவமேமதம்) என்கிறபடியே உகவாநிற்கிற வென்றபடி. (வண்மை) அழகை, (உகவாநிற்கிற) "ஸே॒வ்ய॒ ஸ்ரீ॒ஹ॒ பூ॒மி॒நீ॒ளா॒பி॒:" (ஸெவ்யஸ்ரீ பூமிநீளாபி:) "உடனமர் காதல்" இத்யாதிகள்படியே பார்ச்வத்வய்த்திலும் ஸ்ரீபூமிநீளைகளாலே ஸேவ்யனுய் அவர்களுடைய வழகை உகவாநிற்கிற வென்னவுமாம், (அருளால்) க்ருபையாலே (வரந்தரும்) வரத்தைக் கொடாநிற்கிற, "சதுர் வி॒தா॒ப॒ஜ॒ந்தே॒மா॒ம்" (சதுர்விதாப ஜந்தேமாம்) என்கிறபடியே ஆஸ்ரீதருக்குத்தத்ததபீஷ்ட பலப்ரதனுயிருக்கிறவென்றபடி. (மாதவனா்) லக்ஷ்மீபதியினுடைய, (உண்மையுணர்ந்தவர்) யாதாத்ம்யத்தை அறிந்தவர்,

இரண்டாம்வியாக்யானம்.

ஸ்ரீயஃபதியினுடைய யாதார்த்யத்தை நன்றாக வறியாநிற்கிற வஸ்மதாசார்யர்களாலே யென்றபடி. (ஓதிவைக்கின்ற உரைவழியே) ஓதிவைக்கப் படாநிற்கிற உக்திமார்க்கத்தாலே, உரை - உக்தி, வழி - மார்க்கம், உபதேசிக்கப்படாநிற்கிற ரஹஸ்யத்ரய ரூபமார்க்கத்தாலே உண்டாகாநிற்கிற என்றபடி. (திண்மைதரும் தெளிவொன்றால்) திண்மைதரும்- தார்ட்யத்தைக் கொடாநிற்கிற, திண்மை - தார்ட்யம், தெளிவொன்றால் - ஒருதெளிவாலே, ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களிலெ தார்ட்யத்தைக் கொடாநிற்கிற வத்விதீயமான நிச்சயத்தாலே, ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களிலே நிஷ்டையோடே நிற்கிற அநன்ய சேஷத்வாநந்யோபாயத்வாநந்ய புருஷார்த்த த்வாத்ய வஸாயத்தாலே என்றபடி. (திணியிருள்நீங்கிய நாம்) த்ருடமாயிருக்கிற வந்தகாரத்தினின்றும் நிவ்ருத்தராகா நிற்கிற நாமென்றபடி (தத்துவங்காணும் தரத்தனமே) தத்துவங்களைக்காணுகிற ஸ்வபாவத்திலே, தரம் - ஸ்வபாவஃ, தனமென்று ஸ்வார்த்தே அனுப்ரயோகஃ, தத்தத்தத்வ நிரூபண ஸ்வபாவத்திலே என்றபடி. காண்கை - இங்கேநிரூபிக்கை, தண்மை-தன்மை, ணநயோரபேதாத், தன்மை-ஸ்வபாவத்தை, தத்தத்வ ஸ்துஸ்வபாவத்தை (தெளிந்தனம்) தெளிந்தோம், சிதசிதீச்வர ரூபதத்வத்ரய நிரூபணநு குணமாக தத்தத்வஸ்து ஸ்வபாவங்களை நன்றாகத் தெளிந்தோமென்றபடி. தண்மை - தாழ்ச்சியை, தெளிந்தனம் - அறிந்தோம், நிவ்ருத் தத்வேந அறிந்தோமென்னவுமாம். தண்மைகழிந்தனந்தத்துவங்காணத் தரத்தனமே. என்று பாடமானபோது தத்துவங்களை நிரூபிக்கிற விஷயத்திலே தண்மை தாழ்ச்சியை - அயோக்யதையை, கழிந்தனம் - கழிந்தோம், தத்வத்ரய நிரூபணனுகுண தத்தத்வஸ்து ஸ்வபாவா பரிஜ்ஞாந ரூபாயோக்யதயைக் கழிந்தோ மென்றபடி, தத்துவங்காணுந் தரித்தனமே யென்று பாடமானபோது தத்துவங் காண்கையும் தரித்தோம், தத்வ நிரூபணத்தையும் பெற்றோமென்றபடி, வண்மையுகந்த வித்யாதியால் ஈச்வர தத்வமும், உண்மையுரைக்கின்ற வித்யாதியாலே ஜீவதத்வமும், தத்துவங்காணு மென்கிறத்தாலே, அசித்தத்வமும் ஸூசிதமாய்த்து, இங்கு கோபலீவர் தந்யாயத்தாலே அசித்தத்வம் ஸூசிதமாய்த்து. (கசு)

"ஸதாசார்யோபதேச பூர்வகமாக வறியவேண்டும் தத்வத்ரயத்தில் ஜீவதத்வமாவது ஸ்வரூபத்தாலும் ஸாமர்த்யத்தாலும் பரிச்சின்னமான வஹமர்த்தம்" என்றுதுடங்கி "யிந்ததத்வரத்நா வலியிலே ஏதேனு மொன்றையும் எல்ல ப்ரகாரத்தாலும் தெளிகை ஸர்வஜ்ஞனுக்கல்லது கூடாமையாலே உபயுக்தமான விவ்வளவு தெளிந்தாலும் உபாயபல ஸித்தியுண்டாம்" என்னுமளவான ப்ரபந்தத்தாலே சிதசித் தவத்தையு மீச்வரத்தவத்தையு முப்பது வாக்யங்களாலே நன்றாக நிரூ

மூ—திண்மைதருந்தெளிவொன்றுற்றிணியிருள்நீங்கியநாம்
தண்மைகழிந்தனந்தத்துவங்காணுந்தரத்தனமே. (கசா)

மூல்வியாகயானம்.

யெல்லாம் போக்கின நாமென்றபடி (தண்மைமகிழ்ந்தனம்) தண்மை-தாழ்ச்சி, வலித்தல், மெலித்தலாய், கழித்தனமென்றது, கழிந்தனமென்று ரூபமாய், அஜ்ஞத்வ பாஷண்டத்வாத்ய வஸ்தைகளாகிற தாழ்மையைப் போக்கடித்தோம் என்றர்த்தம். நாம் பூர்வதசைகளைப் போக்கடித்து உத்தரதசை யடைந்தோமென்றபடி. (தத்துவங்காணுந் தரத்தனமே) தத்துவங்களை யதாவத்தாக வறியும்படியான வேற்றம், தரத்தனம், ச்ரைஷ்ட்யம், ஸகலதத்வ விஷயகமான ஜ்ஞான ச்ரைஷ்ட்யமென்றபடி. அடைந்தோமென்ற த்யாஹரித்து தத்வஜ் ஞாநத்தாலே வந்த ச்ரைஷ்ட்யத்தை யடைந்தோ மென்று தாத்பர்யம். யத்வா (தண்மைகழிந்தனம்) தாழ்ச்சி கழிந்தவர்களாக வானோம் (தத்துவங் காணுந் தரத்தனமே) இதுவன்றோ தத்வஜ்ஞாநத்தால்வந்த ச்ரைஷ்ட்யமென்றும் யோஜிக்கலாம். (கசா)

இந்தரஹஸ்யத்திலே சிதசிதீச்வர ஸ்வபாவங்களைப் பத்துப் பத்து வாக்யங்களாலே சொன்ன வர்த்தத்தை ஸங்க்ரஹியா நின்றுகொண்டு இவ்வர்த்தங்களை யெல்லாம் ச்ருத்யாதி முகத்தாலே மஹாக்ருபாவான்களான வாசார்யர்க ளுபதேசிக்கையாலே ஸகலவஸ்து விஷயமான வஜ்ஞாநாதிகளையும் நிவர்த்திப்பிக்கும் த்ருடதர ஜ்ஞாநத்தை யடைந்தோமென்கிறார் முடிவிலொருபாட்டாலே.

இரண்டாம்வியாக்யானம்.

பித்து இனிமேல் பாட்டாலே கல்யாண குணசாலிகளான தேசிகர், ஸ்ரீமன் நாராயணன் பரன், நாமவனுக்கு நிலையடியோம் - நித்யதாஸர், சேதநசேதனம் ஸர்வமு மவனுக்கு சரீரம், இத்யாத்யர்த்த ப்ரதிபாதகங்களான ச்ருதிகளாலே அஜ்ஞரான நம்மைத் திருத்துகையாலே தீராமயல் தீரும்படி பூர்ணமாகா நிற்கிற தெளிவை யடைந்தோ மென்கிறார்.

நாராயணன் பரனித்யாதி, (சீரார்பெருந்துகைத்தேசிகர்) சீரார்-கல்யாணகுணங்களாலே வ்யாப்தராயும், சீர்-கல்யாணகுணம், ஆர்கை-வ்யாப்தமாகை, பெருந்துகை - பெரிதாயிருக்கிற துகையையுடையராய், ஜ்யேஷ்டமாயிருக்கிற கணையையுடையராய், “விஜ்ஞாணாங்கய கவுரயாநமணநெ நிஷ்டாங்கநிஷ்டாஸ்ரயாம்” பிப்ராணுங்கதக ப்ரதாநகண நெநி நிஷ்டாங்க நிஷ்ட்டாஸ்ரயா) மென்கிறபடியே கநிஷ்டாஸ்ரயமான கணையையுடையவராய், கதகாக்ரகண்யராயுமிருக்கிறவென்றபடி. பெருந்தகைத்தேசிகரென்று பாடமானபோது, பெரிய ஆணையாயிருக்

மூ—நாராயணன்பரனுமவனுக்குநிலையடியோம்
சோராதனைத்துமவனுடம்பென்னுஞ்சுருதிகளால்
சீரார்பெருந்தகைத்தேசிகரெம்மைத்திருத்துதலால்
தீராமயலகற்றுந்திறம்பாத்தெளிவுற்றனமே. (கஎ)

முதல்வியாக்யானம்.

(சீரார்பெருந்தகைத்தேசிகர்) கல்யாண குணங்களாலே பூர்ணராயும் பெரிதான க்ருபையையுமுடைய வாசார்யர்கள், தகை - க்ருபை, சீர் - கல்யாணகுணம், சீர் பெருந்தகையென்றும் க்ருபையோடு சீர்மையை யந்வயிக்கலாம். ப்ரத்யுபகார ரஹிதமாக ப்ரவர்த்திப்பிக்கையிறேதகைக்குச்சீர்மை, தேசிகருக்குத் திருந்தலோடே யந்வயம் (நாராயணன்பரன்) நாராயண சப்தவாச்யனை ஸ்ரீயஃபதியே ஸர்வோத் க்ருஷ்டன் (நாமவனுக்கு நிலையடியோம்) அஸ்மதாதிகளான ஜீவவர்க்கமெல்லாம் அந்த நாராயணனுக்கு நிருபாதிகதாஸ பூதர்கள். நிலை - ஸித்தி, இங்கு நிருபாதிகத்வம் விவக்ஷிதம் (அனைத்தும்) ஸகலசேதநா சேதநவஸ்துக்களும் (சோராது)சுவரிப்போகாது, இதுகளிலொன்று மொதுங்காதே யென்றபடி. (அவனுடம்பு) அவனுக்கு சரீரம், நியதாதேயமாயும் நியதவிதெயமாயும் நியதசேஷமாயு மிருக்கையாலெ ஸர்வபதார்த்தமும் அவனுக்கு சரீரமென்றபடி (என்னும் சுருதிகளால்) இப்படி ப்ரதிபாதியா நிற்கிற ச்ருதிகளாலே, இது உபலக்ஷணம் "யஸ்யாத்மா சரீரம்-யஸ்ய ப்ருதிவீ சரீரம்" "தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே" "ஜகத்ஸர்வம் சரீரந்தே" (யஸ்யாத்மா சரீரம் யஸ்யப்ரதிவீ சரீரம்) (தாஸபூதாஸ்வ தஸ்ஸர்வே) (ஜகத்ஸர்வம் சரீரந்தே) இத்யாதி ப்ரமாணங்களாலே யென்றபடி. (எம்மைத்திருத்துதலால்) காடுமேடு திரிகிற வெம்மை, கிடாம்பியப்புளார் அடியேனைக் கிளியைப் பழக்கிவைக்குமாப்போலே பழக்கிவைத்த வென்றபடி (தீராமயலகற்றும்) ஒன்றுந் தீராமல்போன அஜ்ஞாநத்தைப் போக்கும்படியான, மயல்-அஜ்ஞாநம், (திறம்பாத்தெளிவு) மறவாத ப்ரகாசத்தை, திறம்புகை-மறப்பு, ஸம்சய விபர்யயாதி ரஹிதமான ஸம்யஞ்ஞாநத்தை யென்றபடி (உற்றனமே) உற்றனம் - அடைந்தோம். ஏ - வாக்யாலங்காரம். இப்படிவந்தவிட மெங்குஞ் கண்டுகொள்வது. இந்தரஹஸ்யத்தி லிரண்டுபாட்டுகளிலும் ஆசார்யாதீனமாகவந்த ஜ்ஞானத்தா லுண்டானதன் னேற்றஞ் சொல்லுகிறதென்னு மிடத்தை தத்வரத்நாவலி ப்ரதிபாத்ய ஸங்க்ரஹத்திலே "இதில முதலில் கவியும்முடிவில்கவியும் ஆசார்யன் பண்ணின க்ருஷிபலித்தபடி சொல்லுகிறது" என்று தாமே யருளிச்செய்தார். (கஎ)

இரண்டாம்வியாக்யானம்.

கிற, தகை - ஆணை, பெரியவாணைக்கு நிதானமாயிருக்கிற, ஆளவந்தார் ஸ்ரீபாதமென்றுப்போலே, பெரியஆஜ்ஞைக்கு நிதாநபூதராயிருக்

இரண்டாம்வியாக்யானம்.

கிற, அப்ரதிஹததசாஸ்நராயுமிருக்கிற வென்றபடி. அத்ர - சீர்சப்த꞉, ஶௌலவீவஹ்ஙாயெந (சோபலீவர்த்தந்யாயேந) க்ருபாவ்யதிரிக்த கல்யாணகுணகணபர꞉, பெருந்தகை-மஹத்தரக்ருபாசாலியான, தகை-தகைவு, என்னவுமாம். (தேசிகர்) - தேசிகர், தேசமறிந்தவர்; ஆச்ரிதரை வழியில்லாவழியிலே போகாதபடிவிலக்கி, நல்வழிகாட்டுகைக்கு நிலவரான வாசார்யர்களென்றபடி. (நாராயணன்பரன்) - ஸர்வஸ்மாத்பரன், அத்ர நாராயணசப்த꞉ ஸ்ரீவிசிஷ்டபர꞉, அன்யதா பஹுப்ரமாண விரோதாத், (நாமவனுக்கு நிலையடியோம்) - நிலையாயிருக்கிற தாஸன், நித்யதாஸரென்றபடி. (சோராதனைத்தும்) சோராது-விடாது, அனைத்தும் - க்ருத்ஸ்நம், ஒன்றும்விடாதபடி க்ருத்ஸ்நமும், சேதநாசேதநம் ஸர்வமுமென்றபடி. (அவனுடம்பென்னும்) - அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு சரீரமென்னும், (சுருதிகளால்) - உக்தார்தப்ரதிபாதக ச்ருதிகளால், "நாராயண꞉ பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண꞉ பர꞉, மகாரஸ்து தயோர்தாஸ꞉, யஸ்ய ப்ருதிவீ ஶரீரம், யஸ்யாத்மா ஶரீரம் பர꞉ பராணாம், ஸகலா நயத்ர க்லேசாதயஸ்ஸந்தி பராவரேசே, தாஸபூதாஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மான꞉ பரமாத்மந꞉" (நாராயண꞉ பரம்ப்ரஹ்ம, தத்வன்நாராயண꞉பர꞉, மகாரஸ்துதயோர்தாஸ꞉, யஸ்யப்ருதி வீசரீரம், யஸ்யாத்மாசரீரம், பர꞉பராணும், ஸகலாநயத்ர - க்லேசாதயஸ்ஸந்திப ராவரேசே, தாஸபூதாஸ்வதஸ்ஸர்வெ,சராசராணிபூதாநி,)இத்யாதிச்ருதிதபுப்ருஹ்ஹணங்களாலே என்றபடி. (நம்மை) அத்யந்த மஜ்ஞரான நம்மை (திருத்தலால்) திருத்துகையால், சிக்ஷிக்கையாலே யென்றபடி. (தீராமயல் தீர்க்குந்திறம்பர) தீர்க்கப்படாமலிருக்கின்ற மயக்கத்தை தீராநிற்கிற விஷயத்திலே ச்ரேஷ்டமாயிருக்கிற, மயல் - மயக்கம்-மோஹம், அஞ்ஞானமென்றபடி, திறம் - விஷயம், பர - ச்ரேஷ்டம் (தெளிவுற்றனமே) விசதஜ்ஞாநத்தைப் பெற்றோம், தெளிவு - விசதஜ்ஞாநம், துர்நிவாராஜ்ஞாந நிவர்தகத்வ மாஹாத்ம்யாபாதக மாயும் அதஏவ பூர்ணமாயுமிருக்கிற விஜ்ஞாநத்தை யடைந்தோ மென்றபடி. தீராமயல்தரும் திறம்பற என்று பாடமானபோது தீராதமயல்தரும்-துர்நிவாராஜ்ஞாந ப்ரதமாயிருக்குற, திறம் - விஷயம், சப்தாதிவிஷயமென்றபடி. பற - பறந்துபோம்படி, விட்டுப்போம்படி என்றர்த்தம். தீராமயலகற்றும் என்றுபாடமானபோது மிப்படியே அர்த்தங்கண்டு கொள்வது. ப்ரதமபாதே வித்யமாநா மிதிபதஸ்யா த்ராநுஷங்க꞉, ததாச நாம் தெளிவுற்றனமென்று கருத்து. ஆக விரண்டுபாட்டாலும் ஆசார்யர்கள் பண்ணின க்ருஷி ப்ரதம பாடவத்திலேதானே ஸ்வ விஷயத்திலேபலித்தபடியே அருளிச்செய் தருளினர். இவ்வர்த்தத்தை தத்வரத்நாவலீஹ்ருதயத்தி னுபக்ரமத்திலே "தத்வரத்நா வலியில் முதல்கவியாலும் முடிவில் கவியாலு மாசார்யர் பண்ணின க்ருஷி பலித்தபடி சொல்லுகிறது" என்று தாமே அருளிச்செய்தாரிறே. (கஎ)

மூ—ஒன்றேபுகலென்றுணர்ந்தவர்காட்டத்திருவருளால்
அன்றேயடைக்கலங்கொண்டநம்மத்திகிரித்திருமால்

---

முதல்வியாக்யானம்.

மேல்ரஹஸ்ய ரத்நாவலி யிரண்டுபாட்டிருக்கிறது, அந்த விரண்டு பாட்டையும் ரஹஸ்யரத்நாவலீ ஹ்ருதயத்திலே விஸ்தாரமாகத் தாமே வ்யாக்யாநம் செய்தருளி யிருக்கிறார். அதில் முதல்பாட்டை ஹஸ்திகிரி மாஹாத்மய வ்யாக்யாநத்திலே வகுளாபரணம் வீரராகவாசாரியர் ஒரு ப்ரகாரமாக வ்யாக்யாநம் செய்தருளியிருக்கிறார். அந்த அர்த்தங்களையே யிங்கும் க்ரமபங்கம் வாராதபடி ஸங்க்ரஹமாக வெழுதுகிறோம். ஸதாசார்யோப தேசபூர்வகமாக ஸர்வேச்வரன் திருவடிகளிலே ஸமர்ப்பித்த பரனை முமுக்ஷுவினுடைய நிர்ப்பரத்வா த்யவஸாயத்தை ப்ரகாசிப்பிக்கிறது முதல்பாட்டு.

(உணர்ந்தவர்) அர்த்தபஞ்சகத்தையும் சேஷசேஷி பாவத்தையுமறிவந்தவர்கள், (ஒன்றேபுகல்) "விஷ்ணுரேக꞉ பராயணம்" இத்யாதி ப்ரமாணங்களாலே நாராயண னொருவனுமே ஸித்தோபாயம் (என்று காட்ட) யிப்படியுபதேசிக்க "ஏவம் நாதிஹரம் விஷ்ணும் ஶரணம் மங்களம் ஹரிம்" என்கிற உபதேசத்தாலே நம்மைக்கொண்டு பரந்யாஸம் பண்ணிவைக்கவென்றபடி. யத்வா, ஒன்றேபுகலென்றுணர்ந்தவர் காட்

---

இரண்டாம்வியாக்யானம்.

இனிமேல் ரஹஸ்ய ரத்நாவலி என்கிற ரஹஸ்யத்தைச் செய்தருளக்கோலி முதல்கவியாலே தத்வஹித புருஷார்த்தரூப வக்ஷ்யமாணார்த்தங்களை ஸங்க்ரஹேண ஸூசிப்பியா நின்றுகொண்டு காருண்ய வாத்ஸல்யாதி கல்யாணகுண பரிபூர்ணராய் அத்யாத்ம ஸாரவித்துக்களான வாசார்யர்களாலே பகவந்யஸ்தபரராய் அத எவ பகவதா ஸ்வீக்ருத பரரான முமுக்ஷுக்களுடைய நிர்ப்பரத்வாத்ய வஸாயத்தை வெளியிடுகிறார் ஒன்றேபுகலித்யாதியால்.

இதில் இந்த விரண்டுபாட்டும் ஸ்ரீமத் ரஹஸ்யரத்நாவ லீஹ்ருதயத்திலே ஆசார்யசரணை꞉ ஸ்வயமேவ ப்ரபஞ்சேந வ்யாக்யாத மாகிலும் தத்ரப்ரவே சாக்ஷமரான ஸத்துக்களுக்காக புநஶ்ச ஸங்க்ரஹேண வ்யாக்யாதமாகிறது. (உணர்ந்தவர்) அறிந்தவர்கள், உணர் - ஞானம், உணரை உடையவர் - உணர்ந்தவர், ப்ரதிபுத்தாதிகாரிகள், அர்த்தபஞ்சகத்தையும் ஸம்பந்த விசேஷத்தையும் திருந்தக் கண்டவரொன்றபடி. (ஒன்றேபுகல்) - ஏகமே உபாயம், புகல் - உபாயம், "தஸ்மாத் ஸர்வாத்மநா ஶ்ரேய꞉ ஸர்வாணி தவ தேஜஸா ஸத்யம் விஷ்ணுரேக꞉ பராயணம்" (தஸ்மாதத்தி துக்காநாம் ஆஸ்பதேது பவார்ணவே, பவதாம் கத்ய தே ஸத்யம் விஷ்ணுரேக꞉பராயணம். "நாகணைமிசைநம்பிரா

இன்றேயிசையிலிணையடிசேர்ப்பரினிப்பிறவோம்
நன்றேவருவதெல்லாம்நமக்குப்பரமொன்றிலதே. (கஅ)

---

முதல்வியாக்யானம்.

டத் திருவருளென்று நேரே யந்வயித்து அநந்யோபாயத் வாத்யவஸா யசாலிகளான வாசார்யர்கள் ஆத்மீயத்வேந நம்மையவன் திருவடிகளி லே ஸ்மர்ப்பிக்கவென்று மர்த்தமாம். (திருவருளால்) ஸ்ரீமத் க்ருபை யாலே, பிராட்டி க்ருபையாலே யென்னுமாம். (அன்றே) பரந்யாஸோ த்தரகாலமே. (அடைக்கலங்கொண்ட) ரக்ஷ்யவஸ்துவாக ஸ்வீகரித்த வரான, (நம்மத்திகிரித் திருமால்) நமக்கு ஸ்வாமியாய் ஸ்ரீஹஸ்திகிரி யிலே வஸிக்கிற ஸ்ரீயஃபதி-இத்தாலங்கே செய்தருளினபடி ஸூசிதம். (இன்றே) பரந்யாஸோத்தரக்ஷணமே (இசையில்) ஸம்ஸார நிவ்ருத்தி யை அப்யுபகமித்தோமாகில். (இணையடிசேர்ப்பர்) - யுகளீபூதங்களா ன திருவடியை யடைவிப்பர், இத்தாலிவர்கள், சொத்தொழிந்தது அநப் யுபகமத்தாலென்று ஸூசிதம். (இனி) தேஹாவ ஸாநாந்தரம், (பிற வோம்) ஸம்ஸரியோம். (வருவதெல்லாம்) இருந்தநாளிலே இங்குவரு கிற சுகதுக்காதிகளெல்லாம், (நன்றே) அவனநுக்ரஹ பலமாகையாலே நல்லதுகளே, (நமக்குப்பரமொன்றிலதே) - பகவதிந்யஸ்தபரனனமக் கு ஒரு பாரமுமில்லை. ஆத்மதேஹயாத்ராநுகுணமாகக் கர்த்தவ்யலே சமுமில்லை யென்றபடி. பிறவோம் நமக்குஎன்கிற பகுவசனத்தாலே அநுபந்தி பர்யந்தரக்ஷணம் ஸூசிதம், (கஅ)

---

இரண்டாம்வியாக்யானம்.

ன் சரணே சரண்நமக்கு" இத்யாதி பஹுப்ரமாண ஸம்ப்ரதாயங்கள் படியே ஸ்ரீமன்நாராயண னொருவனுமே ஸித்தோபாய மென்றபடி. (என்றுகாட்ட) இப்படி உபதேசிக்க "ஸர்வயோக்ய மநாயாஸ மப்ர மேயமநூபமம் । ப்ரபந்நார்த்திஹரம் விஷ்ணும் ஶரணம் கந்துமர்ஹஸி" (ஸர்வயோக்ய மனாயாஸ மப்ரமேயமனூபமம், ப்ரபன்னார்த்தி ஹரம் விஷ்ணும் சரணங்கந்துமர்ஹஸி,) என்கிற உபதேசத்தாலே, நம் மைக்கொண்டு பரன்யாஸம் பண்ணிவிக்கஎன்றபடி, யத்வா - ஒன்றே புகலென்றுணர்ந்தவர் என்ற ந்வயம், அநந்யோபா யத்வாத்யவஸாய சாலிகளென்றபடி (காட்ட) "ஆத்மாத்மீயஞ்ச யத்கிஞ்சித் துர்பரம் துஸ்த்யஜம் மயா । தத்ஸர்வம் த்வயி விந்யஸ்தம் ஶுபயோ: பாதபத்மயோ:" ஆத்மாத் மீயஞ்சயத்கிஞ்சித்-துர்பரம்துஸ்த்யஜம்மயா, தத்ஸர்வம்தவிந்யஸ்தம்- சுபயோ: பாதபத்மயோ:) என்கிறபடியே, ஸ்ரீமந்நாராயணன் திருவடி களிலே ஸமற்பிக்கவென்றபடி. (திருவருளால்) - ஸ்ரீமத்க்ருபையாலே, என்றபடி, திருவருளால் - பெரிய பிராட்டியாருடைய க்ருபையா லே யென்னவுமாம், (அன்றே) - அப்போதே, பரந்யாஸகாலத்திலேதா னே யென்றபடி, (அடைக்கலம்) ரக்ஷ்யவஸ்துவாக(கொண்ட) ஸ்வீ

இரண்டாம்வியாக்யானம்.

கரித்தவனை, (நம்) - நம்முடைய ஸ்வாமிகளான, (அத்திகிரித் திருமால்) - ஹஸ்திகிரியில் வஸிக்குமவரான, (திருமால்) - லக்ஷ்மீவிஷயத்திலே வ்யாமுக்தரான (இன்றே) - இப்போது தானே, (இசையில்)- அப்யுபகமிக்கில், பரந்யாஸோத்தரக்ஷணத்திலேதானே ஸம்ஸார நிவ்ருத்தியை அங்கீகரித்தோமாகில் என்றபடி. (இணையடி) - யுகளீபூதங்களான திருவடிகளை (சேர்ப்பர்) அடைவிப்பர், நம்மையிதிசேஷ:, இசையில்சேர்ப்பரென்கிற நிர்தேசத்தாலே; இவர்சேரா தொழிந்தது - நம்முடைய அநப்யுபகமத்தாலே யல்லது தம்முடைய அநௌதார்யத்தாலே யன்றுஎன்று த்வநிதம், (இனிப்பிறவோம்) - இந்த தேஹாவஸாநாநந்தரம் ஸம்ஸரியோம், (வருவதெல்லாம்) பகவத் ஸங்கல்பத்தாலே வருமவையெல்லாம், (நன்றே) - நல்லவைகளே, இங்கிருந்தநாளனுகூலங்களாகவும் ப்ரதிகூலங்களாகவும் வருமவையெல்லாம், ப்ராரப்தபுண்யபாபரூபநிகளவிகட்டநப்ரவ்ருத்தனை வீச்வரனுடைய வனுக்ரஹ பலமாகையாலே இஷ்டதமங்களென்றபடி. (நமக்கு) - இப்படிபகவதிந்யஸ்தபரரான நமக்கு, (பரமொன்றிலதே) - ஒருபரமுமில்லை, ஆத்மதேஹயாத்ரானுகுணமாக கர்த்தவ்ய லேசமில்லையென்றபடி, பிறவோம் நமக்கென்கிற பஹுவசநநிர்தேசத்தாலே, ஈந-வஙிவயஷ்ரூஜ ஒெந ஜூயஷ்ரூ° வஷஎவி தம°. (அநுபந்திபர்யந்தநைர்பர்யம் ஸூசிதம்) ஒன்றேபுகலென்று உணர்ந்தவர் நம்மத்திகிரித்திருமாலித்யாதியாலே தத்வமும், காட்ட அடைக்கலங்கொண்ட வித்யாதியாலே ஹிதமும், இணையடிசேர்ப்ப ரினிப்பிறவோ மித்யாதியாலே புருஷார்த்தமும், ஸூசிதமாய்த்து. ஆகவித்தால், அநந்யசேஷத்வாநந் யோபாயத்வாநந்யப்ரயோஜநத்வாத்யவஸாயசாலிகளான வாசார்யர்களாலே பகவச்சரணாரவிந்தங்களிலே ஸமர்ப்பிதபரராய் பேரருளாளராலே ஸ்ரீமத்க்ருபையாலே அப்போதே ஸ்வீக்ருதபரராய் யாதேனு மொருபகவத்க்ஷேத்ரவாஸ கைங்கர்யாதி ஸங்கத்தாலும் ஸ்ரீபாஷ்யாதி காலக்ஷேபருசியாலும் "இங்கே திருந்தேற்கிழிக்குற்றேன்"என்கிறபடியே பரமபுருஷார்த்தத்திலே, த்வாயற் றிருக்கிற நமக்கு யாவச்சரீரபாதம் பகவத்ஸங்கல்பத்தாலே வருமவையெல்லாம் ப்ரியஹித விசேஷங்கள், இனி ஒருபரமுமுண்டோவென்று சொல்லித்தாய்த்து. (கரு)

"ஒரு ஜீவனுக்கொருஜீவன் தஞ்சமல்லன்" என்று துடங்கி "இது ஸாத்விக ஹ்ருதயங்கமையான ரஹஸ்யரத்நாவலி" யென்னு மளவான வாக்யங்களாலே பரதத்வபரமஹித பரமபுருஷார்த்தங்களை ஸவிசேஷமாக ப்ரதிபாதித்து இனிமேல் முடிவில் கவியாலே "உெகூ)நி விஷயம°உந°" (முக்த்யை நிர்விஷயம்மந:) இத்யாதிகள்படியே உபகாரகதமமுமா யந்தரங்கதமமுமான மனஸ்ஸைப்பற்ற உபதேசிக்கிறுப்போலே ப்ரவருத்தமான வாக்யவிசேஷத்தாலே இப்படி ப்ரதிஷ்டித

மூ—சிறுபயனிற்படியாத தகவோரெம்மைச்
சேர்க்கவடைக்கலங்கொண்ட திருமால்தானே

முதல்வியாக்யானம்.

இப்படி ப்ரதிஷ்டித புத்தியான ப்ரபன்னனுக்கு ஸ்வயம் ப்ரயோஜனமானவுத்தரக்ருத்ய விசேஷத்தி லுகப்பிருக்கும்படியை, "மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ: । பந்தாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந:" (மநஏவமனுஷ்யாணும் காரணம் பந்தமோக்ஷயோ: - பந்தாயவிஷயாஸங்கிமுக்த்யை நிர்விஷயம்மந:), இத்யாதிகள் படியே; உபகாரதமமுமாய் - அந்தரங்கதமமுமான மநஸ்ஸைப்பற்ற உபதேசிக்கிறுப்போலே, ப்ரவ்ருத்தமான வாக்யவிசேஷத்தாலே காட்டுகிறதுமுடிவில்பாட்டு.

இதுவும் ஆசார்யசரணோேவ வ்ருதமாயிருக்கும், அந்தவர்த்தத்தையே ஸங்க்ரஹிக்கிறோம். (சிறுபயனில்) - அல்பபலத்திலே, (படியாத) - படியாதவர்களான, (தகவோர்) - க்ருபாவான்கள், க்ஷுத்ரபலமான இதரபுருஷார்த்தத்திலே யாசைப்படாதே, பரமபுருஷார்த்தத்திலே யூற்றமுடையவர்களாய், ஸச்சிஷ்யர்களுக்கு க்யாதிலாபபூஜா நிரபேக்ஷமாகத் தத்வத்தை யுபதேசம் பண்ணுமவர்களான வாசார்யர்களென்று விசிஷ்டார்த்தம், (எம்மை) - ஆகிஞ்சின்யபரிபூர்த்தியுடையநம்மை, (சேர்க்க) "ஶோகமோஹக்ரஹக்ரஸ்தஃ விஶரந்பவஸாகரே । இஹாத்யவிதிநாப்ராப்தஃ தவபாதாப்ஜபத்தநம்॥" (சோகமோஹக்ரஹக்ரஸ்த: விசரன்பவஸாகரே, இஹாத்யவிதினுப்ராப்த:தவபாதாப்ஜபத்தநம்) என்கிற நம்முடைய வாகிஞ்சன்யநிவேதந பூர்வகமாக வவன் திருவடிகளிலே நம்மை ஸமர்ப்பிக்கவென்றபடி, (அடைக்கலங்கொண்டதிருமால்)-ரக்ஷ்யவஸதுவாகக் கைக்கொண்டதிருமால், அலங்

இரண்டாம்வியாக்யானம்.

புத்தியான ப்ரபன்னனுக்கு ஸ்வயம்ப்ரயோஜநமான உத்தர க்ருத்யவிசேஷத்தி லுகப்பிருக்கும்படியைக் காட்டுகிறார்.

சிறுபயனித்யாதி (சிறுபயனில்படியாத) சிறிதாயிருக்கிறபலன்களில் படியாதவரான "யே து ஶிஷ்டாஸ்த்ரயோபக்தாஃ பலகாமாஹி தே மதாஃ । ஸர்வே ச்யவநதர்மாணஃ ப்ரதிபுத்தஸ்து மோக்ஷபாக்" (யேதுசிஷ்டாஸ்த்ரயோபக்தா: பலகாமாஹிதேமதா:, ஸர்வேச்யவநதர்மாண: ப்ரதிபுத்தஸ்துமோக்ஷபாக்) இத்யாதிகள்படியே க்ஷுத்ரப்ரயோஜநங்களை யாசைப்படாதே ப்ராரப்தகர்மவசத்தாலே வந்தவைகளிலுந் துவக்கற்று த்வயத்திலுத்தரகண்டத்தி லூற்றமுடையவர்களான என்றபடி. (தகவோர்) க்ருபையாலே அத்விதியரான, தகவு - க்ருபை, ஓர் - அத்வதீயம். "பரீக்ஷ்யவிவிதோபாயைஃ க்ருபயா நிஸ்ப்ருஹோ வதேத்"

மூ—மறுபிறவியறுத்தழியா வானில்வைக்கும்
மநமேநீமகிழாதே யிருப்பதென்கொல்
உறுவதுனக்குரைக்கேனிங் கிருந்தகாலம்
ஒருபிழையும்புகுருத வுணர்த்திவேண்டிப்

முதல்வியாக்யானம்.

கநீய புருஷகாராதிகளால் ப்ரீதனுய்க்கொண்டு பரஸ்வீகாரம் பண்ணின ஸ்ரீய꞉பதியே யென்றபடி. (தானே) கரணகளே பராதிப்ரதாநம் முதல் இவ்வளவுபண்ணினதான்தானே, (மறுபிறவியறுத்து) - வேறு ஜன்மத்தையறுத்து, ஜந்மாந்தர ப்ரதமான புண்யபாபவர்க்கத்தை நசிப்பித்தென்றபடி. (அழியாவானில்) - அழியாததான வாகாசத்திலே, நித்யவிபூதியிலென்றபடி. (வைக்கும்) - பின்கொடுக்கிலும் போகவொட்டாதபடி வைப்பன், (மனமே) - ஸர்வகாரணமான மனஸ்ஸே, (நீமகிழாதே யிருப்பதென்கொல்) - நீ ஸந்தோஷியாம லிருப்பதெத்தாலே, "மாசுச꞉" (மாசுச꞉) என்கிற சரண்யவாக்யத்தாலே, ஹர்ஷஸ்தாநத்தில் ஒருபடியாலும் சோகிக்க ப்ராப்தியில்லையென்றபடி. (இங்கிருந்தகாலம்) ஸகலமான வுபத்ரவங்களை யுண்டாக்கு மிந்தலோகத்தில் இருக்கவேண்டினகாலம், (உறுவதுனக்குரைக்கேன்) ஸம்சயாதிகளற்றிருக்கிற உனக்கிப்போது யோக்யமானது செய்யச்சொல்லுகிறேன். (ஒருபிழையும் புகுருதவுணர்த்திவேண்டி), ஒருபத்ரவமும் வாராதபடி

இரண்டாம்வியாக்யானம்.

(பரீக்ஷ்யவிவிதோபாயை꞉ க்ருபயாநிஸ்ப்ருஹோவதேத்) இத்யாதிகள் படியே ஸுபரீக்ஷிதரான ஸச்சிஷ்யர்களைப் பெற்ருல் க்யாதிலாபபூஜாதி ப்ரயோஜநாந்தர நிரபேக்ஷமாகச்சொல்லி யல்லது தரிக்கமாட்டாதபடியான பர துக்கநிராகரணேச்சை யுடையவரான வாசார்யர்களென்றபடி. (எம்மை) நம்மை, அகிஞ்சனரான எம்மை. "நதர்ம்மநிஷ்டோஸ்மி" "நோற்றநோன்பிலேன்" இத்யாதிகள் சொல்லுகிறவாகிஞ்சன்யவ்ருத்தியையுடையரான நம்மையென்றபடி. (சேர்க்க) ஸமர்ப்பிக்க, ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளிலே ஸமர்ப்பிக்க, கெடுமரக்கலத்தை ஓர் அனுகூல ஸதாகதிகரைசேர்க்குமாப்போலே "ஶோகமோஹ க்ரஹ க்ரஸ்தே விசரன்பவ ஸாகரே । இஹாத்ய விதிநா ப்ராப்த꞉ தவ பாதாப்ஜ பத்தநம்" (சோகமோஹ க்ரஹக்ரஸ்தெவிசரன்பவ ஸாகரே, இஹாத்ய விதிநாப்ராப்த꞉தவ பாதாப்ஜபத்தநம்)என்னும்படி - விண்ணேர் பெருமான் மாசின்மலரடிக்கீழெம்மைச் சேர்க்கவென்றபடி. (அடைக்கலங்கொண்டதிருமால்) ரக்ஷ்யவஸ்துத் வேநஸ்வீகரியாநிற்கிற ஸ்ரீமந்நாராயணன். இப்படி நாமும் பிறரும் நமக்குத் தஞ்சமாகாதபடி நிற்கிறநம்மை, அநந்யரக்ஷ்யத்வேநஸமர்ப்பிக்க அலங்கநீய புருஷகார ஸம்பந்த குண விசேஷங்களாலே ப்ரீதனுய்க்கொண்டு பரஸ்வீகாரம் பண்ணின, ஸ்ரீய꞉பதியென்றபடி. (தானே) - தான்தானே, அடியிலே கரண

மூ—பெறுவதெல்லாமிங்கோநாம் பெற்றுவாழப்
பேரடிமையார்க்கென் றிகழேனீயே. (கசு)

---

முதல்வியாக்யானம்.

யான ஜ்ஞானத்தை யபேக்ஷித்துக்கொண்டு, பகவதபசாராதிகள் வாராதபடி பக்திஜ்ஞாநாதிகளை யபேக்ஷித்துக்கொண் டென்றபடி. (நாம்) ந்யஸ்தபரரான நாம், (பெறுவதெல்லாம்) பரமபதத்திலே பெறக்கடவ சேஷ வ்ருத்திகளையெல்லாம், (இங்கே) இருள்தருமா ஞாலத்திலே, (பெற்றுவாழ) - அடைந்து ஸந்துஷ்ட்டராயிருக்க, ஈச்வரோஹ மென்றிருக்கும் லோகத்திலே நாம் ஆத்மதாஸ்யம் பெற்றிருக்கவென்றபடி. (பேரடிமை) - பெரிதான கைங்கர்யம், (யார்க்கு) - எவர்களுக்கு, (என்று) - ஏவம் ரூபமாக, (நீயே யிகழேல்) - நீதானே இகழாதே, இங்குசெய்கிற பெரிதானகைங்கர்யம் மோக்ஷோபாயமன்றாகில் யார்க்கதுவேணுமென்று ஸ்வரூபப்ராப்தத்தை யுபேக்ஷியாதே பரமபதத்திலும் ஹேதுவல்லாத கைங்கர்யத்தை யபேக்ஷித்த நீயே இத்தையும் ஸ்வரூபானு குணமென்று கைக்கொள்ளென்று தாத்பர்யம். (கசு)

---

இரண்டாம்வியாக்யானம்.

களே பரப்ரதாநாதி பூர்வகமாக இவ்வளவு க்ருஷிபண்ணின ஸர்வவித பந்துவானதானே யென்றபடி. (மறுபிறவியறுத்து), புநர்ஜந்மத்தைச் சேதித்து,தேஹாந்தரபரிக்ரஹ ஹேதுவான புண்யபாப ஸம்ஜ்ஞிதபாப வர்க்கத்தை யெல்லாங் கழித்தென்றபடி. (அழியாவானில் வைக்கும்) நசியாத பரமபதத்திலே வைப்பன், அழிகை-நசிக்கை, வாநம்-ஆகாசம், பரமாகாசம் - பரமபதமென்றபடி. ‘‘ஷிவ்ஃஂஸ்யாநஜரஞ்ஞாவ்ஜயஂ। ஊ- விஜ்ஞெயகுஞாமமெஜஸஃஸ்ஃஜாஃஂ। வஜெதஜெவநிரயாஸ்தாதஸ்யாநஸ் வராஜாதநஃ’’ திவ்யம்ஸ்தாநம ஜரஞ்சாப்ரமேயம், துர்விஞேயம்சாகமைர் கம்ய மாத்யம், ஏதேவைநிரயாஸ்தாதஸ் தாநஸ்யபமாத்மநஃ) இத்யாதிகள்படியே, சொன்னகலங்காப் பெருநகரியிலே நித்யஸூரிகளொடு நிர்விசேஷமாக ‘‘மேலுள்ளகாலமெல்லாம் பிணைக்குடுக்கிலும் போகவொட்டாதே வைக்கும்’’ என்றபடி, (மனமேநீமகிழா திருப்பதென்கொல்) மனமே - மநஸ்ஸே, நீ - உபகாரகதமமுமாய் அந்தரங்கதமமுமானநீ, மகிழாதிருப்பது - ஸந்தோஷியாதிருப்பது, என்கோல் - யாதுக்கு, நிச்சேஷாநிஷ்ட நிவ்ருத்தியும் பிறந்து நிரதிசயபுருஷார்த்தமும் பெறுகைக்கு, நிஸ்ஸமாப்யதிகனான ஸத்யஸந்தன், ‘‘மொக்ஷயிஷ்யாமிமாசுசஃ’’ (மோக்ஷயிஷ்யாமிமாசுசஃ) என்றுநினைப்பிட்டருளினபின்பும், ஹர்ஷஸ்தாநத்திலே சோகிக்கைக்கு ஒருபடியாலும் ப்ராப்தியில்லை யென்றபடி. (உறுவதுனக்குனாக்கே னிங்கிருந்தகாலம்நீ) நீ - தேஹேந்த்ரியாதிகளோடேகூடியிருக்கிறநீ, இங்கு - ப்ரக்ருதிமண்டலத்திலே, இருந்தகாலம் - இருக்கவேண்டிய காலத்தையும், உனக்கு - பகவத்ப்ராப்தி

இரண்டாம்வியாக்யானம்.

யில் ஸம்சயமற்றவுனக்கு, உறுவது - யோக்யதை, உரைக்கேன்-சொல்லுகிறேன், "ஃஸ்தி ஸ்தூணம் ஸ்நாயுபந்தம், இந்த்ரியாணி ப்ரமாதீநி" (அஸ்திஸ்த்தூணம் ஸ்நாயுபந்தம், இந்த்ரியாணிப்ரமாதீநி) இத்யாதிகளில்சொன்ன துர்நிவாரதுஸ்த்யஜதோஷ பஹுளதே ஹேந்த்ரியங்க ளோடேகூட "க்ருதிஸ. நம்ஸஹாஸஹாஸம் வாக்ப்ரலாபம்விகத்தநம்" அதிமானம்ஸதாஹாஸம், வாக்ப்ரலாபம்விகத்தநம்) இத்யாதிகளில் சொன்ன ராஜஸதாமஸ விகாரங்களுக்கு விளைநிலமான கொடுவுலகத்திலே ஒரு மருளாலே இருக்கவேண்டின காலத்தளவும், (என்று) - பிழை புகுகிறதோவென்று, இப்போது நிரபாயப்ரதாந கைங்கர்யத்தை இழந்து நிற்கிறோமென்று பரிதபிக்கப்பார்த்தாயாகில், ஸாத்யோபாயவிசேஷ வசீக்ருதமான ஸித்தோபாய விசேஷத்தாலே, ஸாத்யப்ராப்ய விசேஷலக்ஷ்யபூதஸித்தப்ராப்ய விசேஷபூத ப்ராப்தியில் ஸம்சயமற்றவனுக்கு மற்றுவரும் பரிதாபமும் சமிக்கும்படிநின்ற நிலைக்குற்றது சொல்லுகிறேனென்றபடி. (ஒருபிழையும் புகுராதவுணர்த்திவேண்டி) ஒருதப்பையுமடையாமைக்காக தத்வஜ்ஞாநத்தை யபேக்ஷித்து, பிழை - தப்பு, புகர்கை - ப்ரவேசிக்கை - அடைகை, உணர்த்தி - ஜ்ஞாநம்; வேண்டுகை-அபேக்ஷிக்கை, பகவதபசாராதிக ளெல்லாவற்றுக்கும் நிதாநம், தத்வஜ்ஞாந வைகல்ய மாகையாலே "தத்பாத பக்தி ஜ்ஞாநாப்யாம் பலமந்யத்கதாசந। நயாசேத்புருஷம் விஷ்ணும் யாசநாந் நச்யதித்ருவம்" (தத்பாத பக்திஜ்ஞாநாப்யாம், பலமந்யத்கதாசந-நயாசேத்புருஷம் விஷ்ணும் யாசநாந் நச்யதித்ருவம்) - இத்யாதிகள்படியே, அநன்யப்ரயோஜநனுகக்கொண்டு தத்வஜ்ஞாநாபி வ்ருத்தியை யபேக்ஷித்தென்றபடி. (பெறுவதெல்லாமிங்கே நாம்பெற்றுவாழ) - பரமபதத்திலே பெறத்தக்கின புருஷார்த்தங்களெல்லாம் இந்த லீலாவிபூதியிலே ந்யஸ்தபரரான நாம் அடைந்து வாழ்கைக்காக, பரமபதத்திலே சென்று, சேஷ சேஷாசனுதிகளுக்கு ஸமமாக வசேஷவ்ருத்திகளையே இந்தளத்திலே தாமரை பூத்தாப்போலவும், மருபூமியிலே மஹாதடாகத்தைப் பெற்றாப்போலேயும் "ஈச்வரோஹமஹம்போகீ" (ஈச்வரோஹமஹம்போகி) - இத்யாதிகள்படியே - எதிரம்புகோத்துநிற்கும் தேசத்திலே, ஆத்மதாஸ்யத்தை உணர்ந்து, அகிஞ்சனராய் அநந்யப்ரயோஜநராய், ந்யஸ்தபரராய் நிற்பவரான நாம் நிரபாயமாகப்பெற்று ஸந்துஷ்டராக வென்றபடி. (பேரடிமையார்க் கென்றிகழேல்) - பேரடிமை யார்க்கென்று இகழேல், இதிபதச்சேதஃ, பேரடிமையார்க்கு-பெரியகைங்கர்ய முடையவர்க்கு - நித்யஸூரிக்கென்றபடி. என்று - கர்தவ்யமென்று, இகழேல் - இகழாதே, பெரியகைங்கர்யபரருக்கு கர்த்தவ்யமென்று, (நழுவாதே) - ப்ரபூத கைங்கர்யபரர்களுடைய வ்ருத்தியில்நின்றும் நழுவாதே, ஸர்வசக்தியான பரமகாருணிகன் பக்கலிலே பரந்யாஸம் பண்ணினோமாகில்

இரண்டாம்வியாக்யானம்.

பண்ணப்புகுகிற கைங்கர்யம் மோக்ஷோபாயமன்றுகிலிதென்ன ப்ரயாஸமென்று ஸ்வரூபாநுகுண வ்ருத்தியான கைங்கர்யத்தை யுபேக்ஷியாதே கொள்ளென்றபடி; (நீயே) - கைங்கர்யத்தையே பரமபுருஷார்த்தமாகச் சொல்லாநிற்கிறநீ, மேலும் மோக்ஷோபாயமல்லாத கைங்கர்யத்தையன்றோ பரமபுருஷார்த்தமாகக் கோலித்து, ஆனாலு மிங்கும் ஸமானமன்றோ வென்றுணர்ந்துகொள் ளென்றபடி. ஆகவத்தால் ஐச்வர்ய கைவல்யாதி க்ஷுத்ரப்ரயோஜநங்களை ஆசைப்படாதவராய் க்ருபாபரவசரான வாசார்யர்கள் அகிஞ்சனரான நம்மை பகவச் சரணாரவிந்தங்களிலே அநந்யரக்ஷ்யத்வேந ஸமர்ப்பிக்க, குணாதிப்ரோதனைக் கொண்டு பரஸ்வீகாரம்பண்ணின ஸ்ரீய:பதிதானே புனர்ஜந்மத்தை யறுத்து நித்யமான பரமபதத்திலே வைப்பன், மனஸ்ஸே அந்தரங்கதமனான நீ ஸந்தோஷியாதிருப்பதே துக்காக, தேஹேந்த்ரியங்களோடேயிருக்கிற நீ இருள்தருமாஞாலத்தி லிருக்கவேண்டினகாலத்தி லென்னபிழை புகுகிறதோவென்று பரிதபியாநிற்கிற பரம புருஷார்த்தத்தில் ஸம்ஸயமற்றிருக்கிற வுனக் குற்றது சொல்லுகிறேன். பகவதபசாராதியான வொருபிழையும் புகாமைக்காக தத்வ ஜ்ஞாநாதி வ்ருத்தியை யபேக்ஷித்து பரமபதத்திலே அடையத்தக்கின புருஷார்த்தங்களை யெல்லா மிந்த லீலாவிபூதியில் ந்யஸ்தபரரான நாம் வாழ்கைக்காக கைங்கர்யத்தையே பரமபுருஷார்த்தமாகக் கோலாநிற்கிற நீ ஸ்வரூபானுகுண கைங்கர்யத்தை உபேக்ஷியாதே கொள்ளென்று சொல்லிற்றாய்த்து. (௧௬)

ஸ்ரீமத் வேதாந்ததேசிகர் ரஹஸ்யரத்நாவலியென்கிற ரஹஸ்யத்தைச் செய்தருள வாரம்பித்து “[illegible] ” தத்வோபாயபுமர்த்தேஷ் வத்யத்மவிதாம் விபாவநீயெஷு, ஸ்வயமேவஸூசயாமோ, ரஹஸ்யரத்நாவலீஹ்ருதயம்) என்கிற ச்லோகத்தாலே வக்ஷ்யமாணார்த்த ஸூசநபூர்வகமாக சிகீர்ஷித ப்ரபந்த ப்ரதிஜ்ஞையைச் செய்தருளி ஒன்றேபுகலென்கிற பாட்டுக்கு அவதாரிகா பூர்வகமாக ப்ரபந்சேந வ்யாக்யாநமிட்டருளி “ஒருஜீவனுக் கொருஜீவன் தஞ்சமல்லனென்று துடங்கி “இதுஸாத்விக ஹ்ருதயங்கமையான ரஹஸ்யரத்நாவலீ” யென்னு மளவான ஸூத்ரஸ்தாநீயங்களான வாக்யங்களுக்கு பஹுப்ரமாண ஸத்ஸம்ப்ரதாயாநேகோப பத்திகதந பூர்வகமாக வ்யாக்யாநஞ் செய்தருளி, முடிவில் கவிக்கு மதுக்குமேல் ச்லோகத்துக்கு மவதாரிகா பூர்வகமாக விஸ்தரேண வ்யாக்யாநஞ் செய்தருளி புநஶ்ச ஒன்றே புகலென்கிற “[illegible]” (காதாமாரப்யரக்ஷந்த் வநந்யரக்ஷ்யாம்) என்கிற ச்லோகபர்யந்த க்ரந்தத்துக்கு ஸாரார்த்தங்களை அருளிச்செய்

மூ.—சாக்கியர்சைனர்கள்சார்வாகர்சாங்கியர்சைவர்மற்றும்
தாக்கியநூல்கள்சிதையத்தனிமறையின்கருத்தை

முதல்வியாக்யானம்.

மேல்ரஹஸ்யரத்நாவலியிலே, முடிவிலிருக்கிற மூன்றுபாட்டில் முதல்பாட்டு, இப்படி இந்தரஹஸ்ய ரத்நாவலி ஹ்ருதயத்தில் ரத்நாவலியினுடைய ஆத்யந்த பாசுரங்களுக்கும், நடுவிலுள்ள முப்பது வாக்யங்களுக்கும், விஸ்தாரமாகத்தாமே தாத்பர்யமருளிச்செய்து இப்படி விவரித்தத்துக்கு வேதபாஹ்யமான மதநிராஸ பூர்வக வேதாந்தார்த்த ஸ்தாபநமாகையாலே, இவ்வர்த்தங்களை யுங்கள்மநஸ்ஸிலே தரித்துக்கொண்டு ஜ்ஞானத்தைப் பெறுங்கோளென்று ஹிதோபதேசம் பண்ணுகிருரொருபாட்டாலே.

(தனிமறையின்கருத்தை) தனி - அத்விதீயமான, மறையின் - வேதத்தினுடைய, கருத்தை - தாத்பர்யத்தை, ஸகலவேதாந் தாந்தரங்கமான ரஹஸ்யார்த்தங்களை யென்றபடி. (வாக்கியமுப்பதினுல்) முப்பது வாக்யங்களினுலே, ஒருஜீவனுக் கொருஜீவன் தஞ்சமல்லனென்று துடங்கி முப்பது வாக்யங்களினுலே என்றபடி. (வகைசெய்து) வகையாகச்செய்து, ஜீவனுக்கு ஜ்ஞாதவ்யமான வர்த்தங் களையும் சிதசிதீச்வரஸ் வருபங்களையும் நன்ருக ப்ரமாணபூர்வகமாகப் பிரித்தென்றபடி.இதுக்கு வ்யாகரித்தோமென்கிறத்தி லந்வயம். (சாக்கியர்) பௌத்தர்கள், (சைனர்கள்) ஜைநர்கள், (சார்வாகர்) சார்வாகர்கள், (சாங்கியர்) ஸாங்க்யாள், (சைவர்) பாசுபதாள், (மற்றும்) யிதுகள் தவிர, (தாக்கியர்) தார்க்கிகர், (நூல்கள்) இவர்களுடைய சாஸ்திரங்களை,

இரண்டாம்வியாக்யானம்.

தருளி "ரமாஸகபரிஷ்க்ரியாமிதி ரஹஸ்யரத்நாவலீம்" (ரமாஸகபரிஷ்கிரியாமிதி, ரஹஸ்யரத்நாவலீம்) ஸம்க்ஷிப்தம்விஸ்த்ருதம்வா" (ஸம்க்ஷிப்தம் விஸ்த்ருதம்வா) என்கிற ச்லோகங்கலாலே பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய விவிதவாத கோஷபீதரான ஸாத்விகாப்யர்த்தநயா விவ்ருதமாய்த்து இப்ரபந்தமென்று அருளிச்செய்தருளி, இனிமேலொரு பாட்டாலே பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய மதங்கள் சிதையும்படி அத்விதீய வேதங்களுடைய தாத்பர்யார்த்தங்களை முப்பது வாக்யங்களாலே வகைசெய்து அதுக்கு வ்யாக்நானம் பண்ணினேம். இந்த ப்ரபந்தத்தை மனஸாநிரந்தரமாக ஸ்மரித்து த்ருடமான வஜ்ஞாநாந்தகாரத்தினின்றும் நிவ்ருத்த ராகுங்கோளென்று பரம ஸாத்விகர்களைக் குறித்து ஹிதத்தை யருளிச்செய்கிருர்.

சாக்கியரித்யாதி - (சாக்கியர்) சாக்யர்கள், (சைனர்கள்) - ஜைநர்கள், (சார்வாகர்) - சார்வாகர், (சாங்கியர்) - ஸாங்க்யர்கள், (சைவர்) -

வாக்கியமுப்பதினுல்வகைசெய்துவியாகரித்தோம்
தேக்கிமனத்திலிதனைத்திணியிருள்நீங்குமினே. (உ௦)

முதல்வியாக்யானம்.

(சிதைய) சிதைகைக்காக, அழியும்படி பண்ணுகைக்காக வென்றபடி. ஸர்வசூன்யத்வ க்ஷணிகவஸ்துத்வாதிகளைச் சொல்லும் பௌத்தமதமும், ஸப்தபங்கிதயா பதார்த்தங்களுச்கு பேதாபேதமும், கஜாத்யனுரூபமாக ஜீவஸ்வரூப பரிணமாதிகளும் சொல்லுகிற ஜைநமதமும், ஸ்ரீயப்பதிக்கு ஈச்வரத்வம் சொல்லாமல் சிவனுக்கு ஜகன்னிமித்த காரணத்வாதிகள் சொல்லும் பாசுபதமதமும், அபௌருஷேயமான வேதத்தைப் பௌருஷேயமென்றும், அணுவான ஜீவனை விபுவென்றுஞ் சொல்லுகிற காணுதமதமும், இந்த ரஹஸ்யத்தினுடைய வாக்யார்த்தங்களாலே யழிந்துபோம்படி யதா யோக்யமறிந்து சொல்வதென்று தாத்பர்யம்.

(வியாகரித்தோம்) விஸ்தாரமாகச் சொன்னேம். (இதனை) இந்த வர்த்தங்களை, (மனத்தில்) மநஸ்ஸிலே, (தேக்கி) தேக்கிக்கொண்டு, மறவாதபடி பண்ணிக்கொண்டென்றபடி. (திணியிருள்) நிபிடமான வந்தகாரத்தை, மனஸ்ஸிலே பற்றியிருக்கும் த்ருடதரமான வஜ்ஞாநாந்தகாரத்தை யென்றபடி. (நீக்குமினே) நீங்கினவர்களாக வாகுங்கோள். நீக்குங்கோளென்றுமாம். நாம்சொன்ன விந்தவர்த்தங்களை யதாவத்தாக வறிந்தால். அந்த மதாந்தரயுக்திகளால் மனஸ்ஸில்வந்த வஜ்ஞாநங்கள் தானே நீங்குமென்று தாத்பர்யம். (உ௦)

இரண்டாம்வியாக்யானம்.

சைவர்கள், (மற்றும்,) இன்னமுள்ள மதாந்தரஸ்தர்கள் - (ஆக்கிய) பண்ணப்படாநிற்கிற, இவர்களாலே நிர்மிக்கப்படாநிற்கிற; (நூல்கள் சிதைய) - சாஸ்திரங்களழியும்படி, நூல் - சாஸ்திரம், சிதைகை - அழிகை, (தனிமறையின் கருத்தை) - அத்விதியவேத தாத்பர்யங்களை, தனி - அத்விதியம், மறை - வேதம், கருத்து, தாத்பர்யம், (வாக்கியமுப்பதினுல்) - முப்பது வாக்யங்களாலே, (வகைசெய்து) - ஒருப்ரகாரமாகப்பண்ணி, வகை - ப்ரகாரம், செய்கை - பண்ணுகை, ரஹஸ்யரத்நாவ லீஹ்ருதயமென்கிற ப்ரபந்தத்தை யென்றபடி. (மனத்தில்) - மனஸ்ஸில், (தேக்கி) - நிறுத்தி, நிரந்தரம் மநஸா சிந்தித்து என்றபடி. (திணியிருள்நீங்குமினே) - த்ருடமானவந்த காரத்தி னின்றும் நிவ்ருத்த ராகுங்கோள், த்ருடதரமான வஜ்ஞாநாந்தகாரத்தில் நின்றும் நிவ்ருத்தராகுங்கோளென்றபடி. தாக்கியர் நூல்களையென்று பாடமானபோது, தாக்கியர் - தார்க்கிகர்கள், இவர்களுடைய சாஸ்த்ரங்களை யென்றபடி, நூல்களை, இதிப்ரதமார்த்தே த்விதியா வேதிதவ்யா. "நாராயணவனவ ஸவஒெ‌தூாவாஸ) ஊதி நிணீஒயாோ‌ஈகூா வு

மூ.—தள்ளத்துணியிலும்தாய்போலிரங்குந்தனித்தகவால்
உள்ளத்துறைகின்றவுத்தமன்தன்மையுணர்ந்துரைத்தோம்

முதல்வியாக்யானம்.

"இவ்வர்த்தங்களையெல்லாம் தேவரீ ரறிந்தபடி யென்னென்னில், வெள்ளைப்பரிமுகதேசிகராய் விரகாலடியோம், உள்ளத்தெழுதிய" தென்கிறபடியே ஸர்வாந்தர்யாமியானவர் தன் ஸ்வபாவத்தை ஆசார்யமுகமாக வறிவிக்கவறிந்தோமென்றும், அவர்கள் ரகஸ்யார்த்தங்களை உபதேசிக்க வல்லவர்களேயாகிலும், இதரமத நிராஸநயோக்யமான ஜ்ஞானவான்களோவென்ன, வாதிஹம்ஸாம்புவாஹ ரென்கிற ப்ரஸித்தியையுடைய வெங்களாசார்யர்கள் முன்னேயந் தகுமதிகள்வந்தால் வெள்ளத்திடைப்பட்ட நரிபோலே மேல்யுக்திதோன்றாமல் விழிப்பார்களென்றும் அருளிச்செய்கிறார்.

(தள்ளத்துணியிலும்) தள்ளுகைக்குத் துணிந்திருந்தாலும், நாமீச்வரனை யங்கீகரியாமல் தள்ளிவிட நிச்சயித்துக்கொண் டிருந்தாலுமென்றபடி, (தனித்தகவால்) அத்விதீயமான க்ருபையாலே, நிருபாதிக

இரண்டாம்வியாக்யானம்.

ப்ரதமார்த்தே த்விதீயேதி நிஸ்சீயத இதி பாஷ்யோக்தே:" நாராயணஏவஸர்வத்ரோபாஸ்ய இதிநிர்ணீயமாநத்வாச்ச - ப்ரதமார்த்தெத்விதீயெதி நிச்சீயத இதிபாஷ்யோக்தே:, நூல்கள் சிதையவென்றே அர்த்தம். ஆகவித்தால்-தொண்டர்களான ஸாத்விகர்காள், ரஹஸ்யரத்நாவ லீஹ்ருதயமென்கிற விந்தரஹஸ்யத்தை ஸதாசார்யஸகாசாத், ஸம்யக்ச்ரவணம்பண்ணி நிரந்தரம் மநஸாசிந்தித்து அஜ்ஞாநாந்த காரத்தினின்றும், நிவ்ருத்தராகுங்கோளென்றதாய்த்து. "தொண்டீரேல்நீ" ரென்று ஆழ்வாருபதேசித்தாப்போலவும், "இதியதிராஜமஹாநஸ பரிமள பரிவாஹ வாஸிதாம்பிபத" (இதியதிராஜமஹாநஸ - பரிமளபரிவாஹவாஸிதாம்பிபத) என்று நிகமனதிகாரத்தில் தாமுபதேசித்தாப் போலவுமிங்கு மிப்ரந்தத்தை அஜ்ஞாநஸம் சயவிபர்யயங்கள் தீரும்படி, ஸதாசார்ய கடாக்ஷத்தாலே தெளிந்து, இப்ரபந்த ப்ரதிபாதிதங்களான தத்வஹித புருஷார்த்தங்களை மநஸாஸதாசிந்தித்து, உஜ்ஜீவியுங்கோளென்று ஸாத்விகர்களை யழைத்து ஹிதத்தை உபதேசித்தருளுகிறாரென் றிப்பாட்டுக்கு பர்யவஸிதார்த்தம். (உ0)

இப்படி பாகவதர்களை யழைத்த வாசிதெரியாதே அபாகவதர்களும் வரப்ரஸக்தராக, அவர்களை இரண்டுபாட்டாலே "கூழாள்பட்டு நின்றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்" என்கிறபடியே நிஷேதிக்கிறார்.

முள்ளொத்தவாதிகள்முன்னேவரினெங்கள்முக்கியர்பால்
வெள்ளத்திடையில்நரிபோல்விழிக்கின்றவீணர்களே. (உக)

முதல்வியாக்யானம்.

மான க்ருபையா லென்றபடி. (தாய்போலிரங்கும்) தாயார்போலே யிரங்குமவனுன, ப்ரஜை உதைத்து தள்ளிவிட்டாலும் தயையாலே யதின் தொட்டில் கீழேகிடக்கும் தாயானவள்போலே நம்முடைய வப ரிசுத்தி பாராமலிரங்கி நம்மிடத்தில் வருமவனுன வென்றபடி- (உள் ளத்துறைகின்ற) ஹ்ருதயத்திலே வஸிக்குமவனுன, (உத்தமன்) அதி ஹெயமான வஸ்மதாதி ஹ்ருதயவாஸித்வ மிருந்தாலும் அத்தால் தோ ஷந்தட்டாத புருஷோத்தமனுடைய, (தன்மை) ஸ்வபாவத்தை, ஸ்வரூ பரூப குணவிபூத்யாதிகளை யென்றபடி. (உணர்ந்து) ஆசார்யரிடத்தி லே நன்ருகவறிந்து, (உரைத்தோம்) நாமறிந்தபடி யிந்தரஹஸ்யத்தி லே சொன்னேம். மேலாசார்ய ப்ரபாவம் சொல்லலுற்று (முள்ளொ த்தவாதியர்) முள்ளுக்கு ஸத்ருசமாக வாதம்பண்ணுமவர்கள், அதிகர்க் கசமான யுக்திகளைச் சொல்லுமவர்க ளென்றபடி (எங்கள் முக்கியர் பால்) எங்களுக்கு ஸ்வாமிகளாய் வாதிஹம்ஸாம்புவாஹாதி ஸம்ஞை யாலே வாதிஜயத்திலே முக்கியாளாயுமுள்ள வஸ்மத் ஸித்தாந்த நிஷ் டாளிடத்திலே, (முன்னேவரில்) வாதத்துக்காக முன்னேவந்தார்களா கில், (வெள்ளத்திடையில் நரிபோல்) உபயபார்ச்வ மஹாப்ரவாஹாந் தர கதஜம்புகம்போலே. இடை - மத்யம், (விழிக்கின்ற வீணர்களே) விழியாநிற்கின்ற வீணர்களே. விழியாநிற்கின்ற வீண்ப்ரயாஸிகள். வீணர்கள் - வ்யர்த்தப்ர யாஸசாலிகள், அஸ்மத் ஸித்தாந்த நிஷ்டா ளுடைய யுக்திக்குமேல் யுக்திதோன்ருமையாலே மெருளவிழியா நின் றுகொண்டு வீண்ப்ரயாஸிகளாவர்களென்று தாத்பர்யம். (உக)

இரண்டாம்வியாக்யானம்.

தள்ளவித்யாதி - (முள்ளொத்த) - முள்ளுக்கொத்த, வாதியர் - வாதிகளுடைய (முள்ளொத்த முள்ளுக்கு ஸத்ருசரான சாக்கியர் முத லான வாதிகளுடைய என்றபடி. (முன்னேவரில்) அக்ரேவரவுக்கு ஸ்தாநமாயிருக்கிற, இல் - ஸ்தானம், "ஸிஜ்ஞாணாஂகுயகுவ்ராயா நமண நெ நிஷ்ராஂகநிஷ்ராஶ்ரயாஂ" ((பிப்ராணுஃகதக ப்ரதாநகணநெ நிஷ்ட் டாங்க நிஷ்ட்டாஶ்ரயாம்) என்கிறபடியே கதகாக்ரகண்யரான வெ ன்றபடி. (எங்கள் முக்கியர்பால்) அஸ்மத் ஸ்வாமிகளான முக்யர் விஷயத்திலே, நாதோயஜ்ஞும் ப்ரவ்ருத்தமென்கிறபடியே ப்ரபன்ன ஜநஸந்தாந கூடஸ்தரான - நம்மாழ்வாருடைய ஸம்ப்ரதாய ப்ரவர் த்தகராய் ஸ்ரீபாஷ்யாதி ப்ரபந்தநிர்மாணப்ர வசநாதிகளாலே ஸர் வோத்கருஷ்டரான ஸ்ரீமன்னுதமுநி முதலான வம்ஸதாசார்யர்கள் விஷயத்திலே யென்றபடி. (வெள்ளத்திடையில் நரிபோல) ப்ரவா

மூ.—செய்யேல்மறமென்றுதேசிகன்தாதையவனுரைத்த
மெய்யேயருள்பொருள்சூடியவெண்மதிகாதலியாம்

முதல்வியாக்யானம்.

இப்படி யபாதிதமான விந்த ஸித்தாந்தார்த்தங்களிலே அனைவருக்கும் ப்ரேமம் வாராதிருப்பானென்னென்ன, கையுந் திருவாழியுமாக ஆஸ்ரிதருடைய ஸகலவிரோதிகளையும் பொக்குமந்த ஸர்வரக்ஷகனிடத்திலே நிருபாதிகமாக ப்ரேம முடையவர்களுக்கே இந்த்ரியஜய பூர்வகமாகவந்த ஸர்வேச்வரன் கீதாதிகளிலே யருளிச்செய்த வர்த்தங்களிலேநிஷ்கர்ஷமும் ப்ரேமமு முண்டாமென்கிறு ரொருபாட்டாலே.

(கையேறுசக்கரக்காவலன்) ஆஸ்ரிதவிரோதி நிரஸநார்த்தம் திருக்கையிலே யேறுநிற்கிற திருவாழியையுடைய வந்த ரக்ஷகனிடத்திலே, காவலன் - ரக்ஷகன், (காதலடைந்தவர்க்கே) ப்ரேமத்தை யடைந்தபேர்களுக்கு, பகவத்விஷயத்திலே நிருபாதிக ப்ரேமசாலிகளான அநந்யப்ர யோஜநருக்கே என்றபடி. இதுக் குக்ரியையோடே அந்வயம்.

இரண்டாம்வியாக்யானம்.

ஹத்தினுடைய மத்யத்திலே யிராநிற்கிற நரிபோல, வெள்ளம் - ப்ரவாஹம், இடை - மத்யம், ப்ரவாஹபரிவ்ருதமான திடரிலே தைவாத் வித்யமானங்களான நரிகள்போல என்றபடி. (விழிக்கின்ற வீணர்களே) விழியாநிற்கிற வம்பர்களே, விழி - முழி, இங்கு நரிகள்போல வென்று நரியை த்ருஷ்டாந்தமாகச் சொன்னது மற்றுள்ள திருஷ்டாந்தங்களுக்கு முபலக்ஷணம். பரமபத ஸோபாநத்திலே, பீதிபர்வத்திலே "காற்றுத்தடைபட்ட கலவர் மனம்போலவும், ஆற்றங்கரைவாழ் மரம்போலவும், இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்புபோலவும், பாம்போ டொருகூரையிலே பயின்றுப்போலவும், வெள்ளத்திடைபட்ட நரியினம்போலவும், உள்ளந்துளங்கி ப்ரயோஜநாந்தரமாத்ரபரனுத" லென்னு மளவான ப்ரபந்தத்தாலே அநேக த்ருஷ்டாந்தங்களைத் தாமே யருளிச்செய்தாரீறே. "ஹ்ருத்யாஹ்ருத்பத்ம ஸிம்ஹாஸந ரஸிகஹயக்ரீவ ஹேஷோர்மி யோக்ஷிப்த ப்ரத்யர்த்தித்ருப்திர்ஜயதி" (ஹ்ருத்யாஹ்ருத்பத்ம ஸிம்ஹாஸந ரஸிகஹயக்ரீவ ஹேஷோர்மியோக்ஷிப்த ப்ரத்யர்த்தித்ருப்திர்ஜயதி) யென்கிறபடியே அஸ்மதாசார்யர்களுடைய வாதகோஷபீதராய் யெங்கும் போகமாட்டாதே நடுங்கிக்கொண்டிருக்கிற ப்ரயோஜநாந்தர மாத்ரபரர்களென்றபடி. (உக)

(செய்யேல் மறமென்று) விஸ்மரணத்தைப் பண்ணுதேயென்று, மறம் - மறப்பு, அநித்யத்வ விஸ்மரண மென்றபடி. "ஸ்மரநித்ய மநித்யதாம்" (ஸ்மரநித்ய மநித்யதாம்) என்கிறபடியே. அநித்யத்வத்தை ஸ்மரி, சரீராநித்யதையை மறவாதே (ஸ்மரி) ஆசார்யன் பண்ணின உப

பொய்யேபகைப்புலனையிரண்டொன்றுபொருங்கருவி
கையேறுசக்கரக்காவலன்காதலடைந்தவர்க்கே. (உஉ)

முதல்வியாக்யானம்.

(தேசிகன்தாதை அவன்) பரமகுருவாகையா லெஸர்வாசார்ய பிதாவென்று சொல்லப்படு மந்த ப்பரமா சார்யனாலே, (செய்யேல் மறமென்று) மறம்செய்யேலென் றந்வயம், மறம் - மறப்பு, செய்யேல் - பண்ணாதே, என்று - நாம்சொல்லுகிற வர்த்தங்களை மறந்துபோகாதே யென்றபடி. (உரைத்த) சொல்லப்பட்டதான, கீதாது கீதாதிகளிலே சொல்லப்பட்டதான, (மெய்யேயருள்பொருள்) யதார்த்தமாக க்ருபையாலேவந்த வர்த்தங்களை, மெய்யேயுரைத்தவென்று மந்வயிக்கலாம், அவன்யதார்த்தமாக வுரைத்ததாயும் க்ருபையாலே வந்ததாயுமுள்ள வர்த்தங்களிலே யென்றபடி. (சூடியவெண்மதி) வெண்மை - வெளுப்பு, பரிசுத்தி விவக்ஷிதம். அந்தவர்த்தங்களைச் சூடின பரிசுத்தமதி, பகவதுக்தார்த்த விஷயக ஸம்யக்ஜ்ஞாந மென்றபடி. இதுக்கும் க்ரியையோடே யந்வயம். (பொய்யேபகை) பொய்யாகவே பகைக்கவாகாநிற்கிற, இந்திரியங்கள் வகுத்தவிஷயத்திலே போனால் பகையல்லாமையாலே பொய்யான பகையென்றது. (பொருங்கருவி) கருவிபொரும் - கருவிபோலே விஷயங்களிலே மாறிமாறி ப்ரவேசிக்குமதான, கருவி - சதுரங்கம் சொக்கட்டான்காய். (ஐயிரண்டொன்றுபுலன்) ஜ்ஞாநகர்மேந்த்ரியங்கள்பத்து, மனஸு ஒன்று, ஆக பதினொரு இந்த்ரியங்களும், (காதலியாம்) காதல் - ப்ரேமம், அத்தை யுடைத்தானது காதலி, ப்ரேமசாலிகளாம். பொருங்கருவி யென்கிறத்தை சக்கரத்தோடும் அன்வயிக்கலாம். அப்போது கருவி - கர்வி, அதிகர்வத்தோடே ஆஸ்ரிதவிரோதிகளிடத்தில் ப்ரவேசிக்கும் திருவாழியென் றர்த்தம். பொருமென்று - பொருதலை யுத்தத்தைப் பண்ணுமென்றுமாம். பகவத்விஷயத்திலே நிருபாதிக ப்ரேமசாலிகளுக்கே வெள்ளைப் பரிமுகர் தேசிகராய் "ஹ்ருத்யா ஹ்ருத்ய ஸிம்ஹாஸந ரஸிக ஹயக்ரீவ" (ஹ்ருத்யா ஹ்ரு

இரண்டாம்வியாக்யானம்.

கார பரம்பரயை மறவாதெயென்னவுமாம். க்ருதக்நதை வாராமைக்காக நினைக்கவேண்டு மவைத்தில் ப்ரதாந மாசார்யன்செய்த ப்ரதம கடாக்ஷம் முதலான வுபகாரமென்று, உத்தரக்ருத்யாதிகாராந்தத்திலே தாமே யருளிச்செய்தபடியே, ஆசார்யன்பண்ணின வுபகார பரம்பரயை மறவாதே ஸ்மரி என்றபடி. செய்யேல்மறம் - அதர்மத்தைப்பண்ணாதே, மறம் - அதர்மம், என்னவுமாம். "ஸ்மர்தவ்யஸ்ஸததம் விஷ்ணு:" (ஸ்மர்தவ்யஸஸ்த்தம் விஷ்ணு:) என்கிறபடியே, ஸ்ரீமஹாவிஷ்ணுவை மறவாதேயென்றபடி (என்று) இப்படி, (தேசிகன்) - தேசிகனாலே, (தகவயனுக்குரைத்த) தகவுக்கு யோக்யனானவனுக் குரைத்தாய், தகவு -

முதல்வியாக்யானம்.

த்பத்மவிம்ஹாஸ நரவிக ஹயக்ரீவ) "பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி" இத்யாதிகள்படியே யாசார்ய முகமாயும் கீதாபகவச் சாஸ்த்ராதிகளிலே நெரோயுமந்த ஸர்வரக்ஷக னுபதேசித்த நிச்சயார்த்தங்களிலெ ஸம்யக்ஞானமும் ப்ரேமமு முண்டாம். அப்ராப்த விஷயங்களிலே பட்டிபுக்குப் பகையான விந்திரியங்களும் "க்ஷுக்ஷூ ஊ்க்ஷு. ஜிஹ்வெ கீத்ய" (த்வக்சத்ருக்ச, ஜீஹ்வே கீர்த்தய) இத்யாதி ச்லோகங்களிலெயும், முடியானேயிலும் சொல்லுகிறபடியே ப்ராப்தவிஷயங்களிலே போகும்படி ப்ரேமசாலிகளுமாமென்று பாட்டுக்கு விசிஷ்டதாத்பர்யம். புலன்களைக்கருவிப் பொருங்கையேறு சக்கரமென்று மங்வயிக்கலாம், அப்போது ஸ்வாஶ்ரீதருடைய விந்திரியங்களை விஷயங்களிலே போய் அவர்களுக்குப் பகையாகாதபடி போக்யதாதிசயத்தாலே ஸ்வ விஷயத்திலே யாகர்ஷிக்கும் திருவாழியையுடைய ரக்ஷகனென் றர்த்தமாம். முன்கருவி யீரைந்து மென்கிற விடத்திற்போல் கருவி யென்கிறது, இந்த்ரிய பரமானல் புலனைந்து மெய்யும் பொறியென்கிற விடத்தில் போலே யிங்குமிருக்கிற புலன்சப்தம் விஷயபரமாய் தத்தத்விஷயங்களை யவகாஹிக்கும் இந்த்ரியங்களெல்லாம் ஸமீசீன விஷயத்திலே காதலுடையதாகவாமென்று பொருள். ஐயிரண்டென்று பாடமானல் ஐயிரண்டென்று சொல்லப்படும் புலன்களைப் பொரும் கருவி இந்த்ரியம்மநோரூபேந்த்ரியம், மற்றது ஸமானம். (உஉ)

---

இரண்டாம்வியாக்யானம்.

க்ருபை, தகவுக்கு யோக்யன் - தகவயன், க்ருபாயோக்யனை ஸச்சிஷ்யனுக்கு, உபதேசிக்கப்பட்டானும். தேசிகன் கருத்தை யவனுரைக்கவென்று பாடமானபோது கருத்தையவன் - கருத்தையுடையவனுக்கு, கருத்து - தாத்பர்யம், கருத்தையுடையவன் - கருத்தையவன், சிஷ்யஸ்தேஹமித்யாதி சாஸ்த்ரார்த்தாபிப்ராயவானு யிருக்கிற பரமாஸ்திகனுக்கு ஆசார்யனாலே யுரைக்கப்பட்டானு மென்றர்த்தம், "நித்யம் விஷ்ணுபரங்கர்ம குருநித்யாநிமாக்ருதா:। ஸதாத்மாநம் விபுத்த்யஸ்வ நபாபேஷுமந:க்ருதா:। யஜஸ்வநித்யமாத்மேசம் மாயாஜீரந்யதேவதா:। லக்ஷஸ்வலக்ஷணோர்பர்து: லக்ஷிஷ்டாமான்யலக்ஷணை:। உபாஸ்வவைஷ்ணவான் நித்யம் அஸதோமோபஸிததா:" (நித்யம்விஷ்ணுபரங்கர்ம குருநித்யாநிமாக்ருதா:, ஸதாத்மாநம் விபுத்த்யஸ்வ நபாபேஷுமந:க்ருதா:, யஜஸ்வநித்யமாத்மேசம் மாயாஜீரந்யதேவதா:, லக்ஷஸ்வலக்ஷணோர்பர்து: லக்ஷிஷ்டாமான்யலக்ஷணை:, உபாஸ்வவைஷ்ணவான் நித்யம் அஸதோமோபஸிததா:) இத்யாதிகள்படியே ஸதாசார்யனாலே பஞ்சஸம்ஸ்காராநுஷ்டாந காலத்திலே உபதேசிக்கப்பட்டானு மென்றபடி,(மெய்யே) ஸத்யங்களாயும் ப்ரமாணஸித்தங்களாயு மென்றபடி. (அருள்)

இரண்டாம்வியாக்யானம்.

க்ருபையாலே உண்டாகானும் பகவதாசார்யாதி க்ருபையினுலே உண்டாகானுமிருக்கிற (பொருள்) புருஷார்த்தங்களாலே, உபதேசகாலத்தில் அப்யுபகதங்களாய் கைங்கர்யரூபங்களாக வநுஷ்டீயமானங்களான வுத்தரக்ருத்ய ரூபங்களான புருஷார்த்தங்களாலே என்றபடி. (சூடிய) அலங்கரிக்கப்படா நிற்கும், சூடுகை - அலங்கரிக்கை, (எண்மதிகாதலியாம்) அஷ்டவித குணங்களையுடைத்தான ஜ்ஞாநமென்ன அநுராகமென்ன இதுகளையுடையரான, மதி - ஜ்ஞாநம், காதல் - அநுராகம், "஗்ரஹணஂ தாரணஂசைவ" (க்ரஹணந்தாரணஞ்சைவ) என்று சொல்லப்படாநிற்கிற க்ரஹணதாரணுத்யஷ்டகுண விசிஷ்டஜ்ஞாநாநுராகங்களை உடையரான, எண்மதி "஭க்திரஷ்டவிதா ஜ்ஞேயா" பக்திரஷ்டவிதாஜ்ஞேயா) என்கிறபடியே. அஷ்டவித பக்திரூபஜ்ஞாநமென்னவுமாம். காதலியாம் என்கிறத்துக்கு காவலடைத்தவர்க்கே என்கிறவிடத்திலே அந்வயம். (பொய்யேபகை) பொய்யே, ஸ்வாபாவிகங்களாகாமலும் கர்மோபாதிகங்களாயும், பகை - பகையை உடைத்தானதுகளாயும், ஆஸ்ரீதவிரோதிகளாயு மென்றபடி. (புலனை யிரண்டொன்று) புலன் இந்திரியங்கள், ஐயிரண்டு, பத்து ஒன்று ஏகம், "இந்த்ரியாணி தஶைகஂச" (இந்த்ரியாணிதசைகஞ்ச) என்கிறபடியே ஏகாதசேந்த்ரியங்களோடேகூட (பொருகருவி) யுத்தத்தையும் ஸங்கல்பிப்பித்து, "தஶேந்த்ரியாநநஂ கோரஂ யோ மநோரஜநீசரஂ। விவேகஶரஜாலேந ஶமஂ நயதி யோகிநாஂ" (தசேந்த்ரியாநநம் கோரம்யோமநோரஜநீசரம், விவேகசரஜாலேந சமம்நயதியோகிநாம்.) "விண்ணுளார்பெருமாற்கடிமை செய்வாரையுஞ் சேருமைம் புலனிவைமண்ணுளென்னைப் பெற்றாலென்செய்யாமற்று நீயும் விட்டால்" இத்யாதிகள்படியே ஆஸ்ரீதவிரோதிகளான ஏகாதசேந்த்ரியாதிகளோடே யுத்தத்தையும் ஸங்கல்பித்து என்றபடி. (கையேறுசக்கர) கையையேறாநிற்கிற சக்கரத்தையுடையவனான, இந்த்ரியஜயார்த்தம் திருவாழியாழ்வானைக் கையிலேந்துமவனான, (காவலன்) ரக்ஷகன், ஸர்வரக்ஷகனான ஸ்ரீமந்நாராயணனுடைய, (காவலடைத்தவர்க்கே) ரக்ஷையையடைந்தவற்கே, ரக்ஷ்யதேவ்நஸமர்ப்பிதபரர்க்கே, ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளிலே ந்யஸ்தபரரான ஸாத்விகர்க்காகவே என்றபடி. (காவலடத்தவர்க்கே) யென்கிறத்துக்குக் கீழ்ப்பாட்டில் பூர்வார்த்தாந்தத்தி லிருக்கிற உரைத்தோமென்கிற க்ரியையோடே அந்வயம். (தள்ளத்துணியிலும்) தள்ளுகிறத்துக்குத் துணிந்தாலும், த்வம்மேயென்று ஸர்வேச்வரன் பின்துடர, அஹம்மேயென்று து முறிலும், என்றபடி. (தாய்போலிரங்கும்) தாயைப்போலே யிரங்கானும், "மந்யே மாதாஜட இவ ஸ்வே வத்ஸலா மாத்ருஸேக்வஂ" (மன்யேமாதாஜட இவஸ்வேதே வத்ஸலாமாத்ருசேத்வம்) என்கிறபடியே மாத்ருவத்வத்ஸலராயு மென்றபடி. (தனித்தகவால்) அத்

முதல்வியாக்யானம்.

மேல்தத்வத்ரய சுளகத்தில் அநாத்மஜீவேச்வர சிந்தநங்களைப்பண்ணுகிற மூன்றதிகாரத்தில் ஆத்யந்தங்களிலே யிருக்கிற வெட்டுபாட்டுகளிலே முதல்பாட்டு, "ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளையே யுபாயமாயு முபேயமாயும் பற்றுமவனுக்கு முற்பட்ட ப்ரக்ருத்யாத்மப்ரமாதிகள் கழியும்படி தத்வத்ரயத்தை விவேகிக்கவேணும்" என்று துடங்கி மூன்றதிகாரத்தாலே யருளிச்செய்யப் புகுகிற தத்வத்ரயத்தை ஸங்க்ரஹியா நின்றுகொண்டு தத்வஸாகர ஸம்ஹிதாதிகளிலே விஸ்தாரமாக சொல்லப்பட்ட தத்வங்கள் சுளகஸம் ஜ்ஞிகமாய் அத ஏவ பரிமிதமான விந்தரஹஸ்யத்திலே யடங்குமோ வென்கிற சங்காவாரணார்த்தமதி விஸ்த்தாரமான ஸமுத்ரத்தை யடக்கின வகஸ்த்யருடைய சுளகம்போலே யாசார்யர்கள் தங்கள் ஹ்ருதயத்திலே யடக்கிக்கொண்டிருந்து நமக்குபதேசித்த தத்வங்களிது வென்கிறு ரொருபாட்டாலே,

---

இரண்டாம்வியாக்யானம்.

விதீயமான க்ருபையாலே, தனி - அதிவ்தீயம், தகவு - க்ருபை, (உள்ளத்துறைகின்ற) ஹ்ருதயத்திலே வஸீயானும், "𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿" (ஈச்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுநதிஷ்டதி) என்கிறபடியே ஸர்வபூதங்களுடைய ஹ்ருதயத்திலே வஸியானுமென்றபடி. (உத்தமர்தம்மை) உத்தமனை, தம்மையென்று ஸ்வார்த்தே அநுப்ரயோகஃ, "𑌉𑌤𑍍𑌤𑌮𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌃 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌃" (உத்தமஃபுருஷஸ்த்வன்யஃ பரமாத்மேத்யுதாஹ்ருதஃ,) என்கிறபடியே ஸர்வோத்தமனை ஸ்ரீயஃபதியை யென்றபடி. (உணர்ந்து) - அறிந்து, ஆசார்யகடாக்ஷத்தாலே நன்றாயறிந்து என்றபடி. (உரைத்தோம்) - உரைச்சோம், ரஹஸ்யரத்நாவலியென்கிற ரஹஸ்யத்தை விவரித்தோமென்றபடி. ஆக விரண்டுபாட்டாலே கதகாக்ரகண்யராய் தர்சனப்ரவர்த்தகரான வஸ்மதாசார்யர்கள் விஷயத்தில் அதிபீதராய் நடுங்கின ப்ரயோஜநாந்தரபரர்களைப் பஞ்சஸம்ஸ்காரதசையில் ஸதாசார்யோபதிஷ்டங்களாய் ப்ரமாணஸித்தங்களாய் புருஷார்த்தத்வேந வநுஷ்டேயமானங்களான வர்ணாச்ரமதர்மாநுக்ருஹீதங்களாய், ஜ்ஞாநபக்தி வைராக்யசாலிகளாய், ஆஸ்ரீதவிரோதி நிரஸநார்த்தமாக ஹஸ்தாரவிந்த தார்யங்களான திருவாழி துடக்கமான திவ்யாயுதசாலியாய், நிற்கிற ஸர்வரக்ஷகனை ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளிலே ரக்ஷ்யத்வேந ஸமர்ப்பிதரான பரமஸாத்விகர்களுக்காகவே யாஸ்ரீதவாத்ஸல்யனைய் ஸர்வாந்தர்யாமியாய் ஸர்வோத்தமனை ஸ்ரீயஃபதியினுடைய ஸ்வரூபஸ்வபாவாதிகளை ஸதாசார்ய கடாக்ஷத்தாலே நன்றாக வறிந்து இப்ரபந்தத்தை யுரைத்தோமாகையால் "𑌯𑍂𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑌿𑌙𑍍𑌕𑌰𑌾𑌃" (யூயமிந்த்ரியகிங்கராஃ) என்கிறபடியே இந்த்ரியகிங்கரரான உங்களுக்கு இப்ரபந்த சிந்தையி லந்வயமில்லை என்றதாய்த்து. (உஉ)

மூ.—அந்தமிலாததேவனழிசெய்தடைந்தவளவேலையோதமடைய

முதல்வியாக்யானம்.

(அந்தமிலாத) அந்தம் - பரிச்சேதம், அதில்லாதவனான, தேசதஃ-காலத: - வஸ்துதச்ச - பரிச்சேதர ஹிததயா அநந்தனான வென்றபடி, ஸ்வரூபத: - குணத: - விக்ரஹதச்ச - விபுவானவ னென்ற தாய்த்து, (தேவன்) க்ரீடாபரதந்த்ரனான வந்தஸ்ரீய:பதியாலே, (அழித்தடைந்த) ஸம்ஹார காலத்திலே யழித்து - ஸர்ககாலத்திலே யடையப்பட்டதான, அளைந்தவென்று பாடமானால் "மஹார்ணவேசயா நோப்ஸ" (மஹார்ணவேசயா நோப்ஸு) என்று அவனாலே யளையப்பட்டதான, (வளவெலை யோதமடைய) வளம்-ஸம்பத்து, வேலை-ஸமுத்ரம், ஓதம்-ஜலம், அடைய - க்ருத்ஸ்நம், ரத்நாகரமாகையாலே ஸம்பத்ப்ரதமான ஸமுத்ரத்தினுடைய ஜலங்களை யடங்கலுமுடைத்தான. இது சீராங்கைக்கு விசேஷணம், ஓதமுடையவென்று பாடமானால் ஸ்பஷ்டம், (செந்தமிழ்நூல்) செவ்வையான த்ராவிட சாஸ்திரத்தை (வகுத்த) பிரித்துச் சொன்னவரான, (சிறுமாமனிசர்) ஆக்ருதியாலே சின்னவராய் மாஹாத்ம்யத்தாலே பெரியவரான வகஸ்த்யருடைய, மா-மஹத்து,

இரண்டாம்வியாக்யானம்.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகர் தத்வத்ரய சுளகமென்கிற ரஹஸ்யத்தைச் செய்தருளக்கடவராய் அவிக்நபரிஸ மாப்திப்ரசயகமானுதி ஷித்யர்த்தமாக ஸ்மிருத்யாசார ப்ராப்தமான இஷ்டதேவதாசார்யவந்தனுதி மங்களத்தை மாநஸிகமாகச் செய்தருளி சிகீர்ஷிதமான ப்ரபந்தத்தில் ப்ரதிபாத்யார்த்தங்களை ஸங்கரஹேண முதல்பாட்டாலே காட்டுகிருர்.

அந்தமிலாத்தேவ னித்யாதி - (பரவும்பொருள்) பரவாநிற்கிற பதார்த்தம், பரவுகை - வ்யாபிக்கை, பொருள் - பதார்த்தம், நியந்த்ருதயா ஸர்வத்ரவ்யாப்தமான ஸ்ரீமன் நாராயணபதார்த்த மென்றபடி. இதுக்கு - அந்தமிலாத் தேவனென்கிறத் தோடேயந்வயம். (இவையே) இந்த ஆகாசாதி பதார்த்தங்களை, சராசரங்களையென்றபடி. (அழித்து) நசிப்பித்து, "அத்தாசராசரக்ரஹணத்" என்கிறபடியே ப்ரளயகாலத்திலே ஸம்ஹரித் தென்றபடி (வல்வேலையோதமடைந்து) வல் - த்ருடமாயிருக்கிற, வேலை - கரையையுடைத்தாயிருக்கிற, ஓதம் - ஜலத்தை, அடைந்து - அடைஞ்சு, "ஸம்க்ஷிப்ய சபுராலோகான் மாயயா ஸ்வயமேவஹி । மஹார்ணவேசயா நோப்ஸு த்வாம் பூர்வமஜீஜந:" (ஸம்க்ஷப்யசபுரா லோகான் மாயயாஸ்வயமேவஹி, மஹார்ணவேசயா நொப்ஸு மாம்த்வம் பூர்வமஜீஜந:) என்றும் "பாலனுயே மூலகுண்டு பரிவன்றி யாலிலையின் றவஞ்செய்யு மண்ணலாரொன்னும்" ஆலமாமரத்தினிலைமே லொருபாலகனுய் ஞாலமேழுண்டான்" இத்யாதிகள்படி

செந்தமிழ்நூல்வகுத்தசிறுமாமனிசர்சிறுகைச்சிராங்கைபோல்
சந்தமெலாமுரைப்பதிதுவென்றுதங்களிதயத்தடக்கியடையும்
பந்தமெலாமறுத்தருள்தந்துகந்துபரவும்பொருள்களிவையே. ()

முதல்வியாக்யானம்.

ஸம்ஸ்க்ருத வேதாதிகள் அபசப்தமாகாதபடி பாணினி வ்யாகரணம் பண்ணினாப்போலே த்ராவிட வேதாதிகளுக்காகத் தமிழ் வ்யாகரணம் பண்ணின வகஸ்தியருடைய வென்றபடி (சிறுகைச் சிராங்கைபோல்) ஆக்ருதிக் கநுகுணமாகச் சின்னதானகையினுடைய சுளகம்போலே, இதுக்கு அடக்கி யென்கிறத்தில் அந்வயம், (சந்தமெல்லாமுரைப்பது) சந்தம்-வேதம், இது உபலக்ஷணம், ச்ருதிஸ்மிருத்யாதிகளில் விஸ்தார மாகச் சொல்லு மவைகளெல்லாம் (இதுவென்று) நாம் சொல்லுகிற வித்தத்வங்களென்று (தங்களிதயத்து) தங்களுடைய ஹ்ருதயத்திலே, (அடக்கி) அதிவிஸ்தாரமான தத்வங்களை யெல்லாம் அகஸ்தியருடைய சுளகம்போன்ற ஹ்ருதயத்திலே யடக்கிக்கொண்டு (நம்பந்தமெல்லாம்) நம்முடைய பந்தங்களை யெல்லாம், (அறுத்துகக்க) சேதநம்பண்ணி ஸந்தோஷிக்க, அவர்களுபதேசத்தாலே நமக்குவந்த பந்தநிவர்த்தி தங் களதாகையாலே உகக்கவென்றது. (அருள்தந்த) க்ருபையாலே தந்த தான, க்யாதிலாப பூஜாநிரபேக்ஷமாக வுபதேசித்ததான வென்றபடி (பரவும்பொருள்கள்) பரவுகை-விஸ்தரிக்கை, விஸ்தாரமாக வனுஸந் திக்கும் தத்வங்களெல்லாம் (இவையே) நாமிந்தரஹஸ்யத்திலே சொல் லுகிற தத்வஸ்வரூபங்களே, நாம் சொல்லப்புகுகிற தத்வங்கள் ஸங்க் ரஹருசிகளுக்கும் விஸ்த்தர ருசிகளுக்கும் யோக்யமாயிருக்குமென்று கருத்து. இப்பாட்டி லாசார்யவாசி சப்தமில்லாமையாலே - அத்யா ஹரித்தும் யோஜிக்கலாம். சிறுமாமனிச ரென்கிறத்தை யநுஷங்கித்து ஆசார்யபரமாகவும் யோஜிக்கலாம். நம்பந்தமெல்லா மென்கையாலே சிதசித்ஸ்வரூபமும், அந்தமில்லாததேவ னென்கையாலே யீச்வர ஸ்வ ரூபமு மிதில் ஸங்க்ருஹீதம், பகவத்குணமு மாசார்யகுணமும்சொல் லுகையாலே யிப்பாட்டு ஸ்துதிரூபமான மங்களமுமாம். (உரு)

இரண்டாம்வியாக்யானம்.

மஹார்ணவத்திலே ஒரு ஆலிலையிலே கண்வளராநிற்கிற என்றபடி. (அந்தமில்வகுத்த) - அந்தமில்லாமல் பிரிக்கப்படாநிற்கிற, பத்தமுக்த நித்யபேதேந - அநந்தராகப் பிரிக்கப்படாநிறகிற, ஜீவாந்தர்கதரான (சிறுமாமனிசர்) - சிறு ஆக்ருதியினாலே சிறியராயும், மா - குணாதிக ளாலே மஹான்களுமான, ,,ஶ்ரீநாநுவஞ்ஜூ தொவொகெ வ்ரு தாஸ்ஹஸ ஶுகுலி-கொநு” (தீதாங்ஸஞ்சரதோலோகேவ்ருதயர்த்தம் ப்ருசகர்சி தான்) என்கிறபடியே வ்ருத்திகார்ச்யத்தாலே சிறியராயும், ஞானபக்த் யாதிகளாலே மஹான்களுமான வென்னவுமாம். மனிசர் - மனுஷ் யர்களுடைய, (சிறுகைச் சிறுங்கைபோல்) - அல்பத்வமஹத்வங்

இரண்டாம்வியாக்யானம்.

கள்போல், சிறுகை - சிறுத்தனம், அல்பத்வமென்றபடி. சிறுங்கை - சிறுத்தனமாகாமை, மஹத்வமென்றபடி. (இது) சேதநா சேதநபேதேந த்விவிதப்ரபஞ்சமானது, (சந்தமெல்லா முறைப்பதுவென்று) - சந்தமெல்லாம் - ஸ்வபாவங்களையெல்லாம், சந்தம் - ஸ்பாவம், உறைப்பது - அடையக்கடவது, என்று - ஸங்கல்பித்து, ஜங்கம ஸ்தாவரபேதேநபின்னங்களாய் ஆக்ருதி குணங்களாலே அல்பத்வ மஹத்வசாலிகளான வஸ்துக்கள் ஸ்வபாவங்களை விடாமல் நிர்பாதகமாக விருக்கக்கடவதுகளென்று திருவுள்ளம்பற்றி யென்றபடி. (தங்களிதயத்தடக்கி) தம்முடைய ஹ்ருதயத்திலே மறைத்து, இதயம் - ஹ்ருதயம், தங்களென்று பஹுவசனம் பூஜாயாம், (அளித்து) ரக்ஷித்து, அளிக்கை - ரக்ஷிக்கை, ‘‘யஸ்ஸதேவோமயாத்ருஷ்டஃ புராபத்மாயதேக்ஷணஃ’’ (யஸ்ஸதேவோமயாத்ருஷ்டஃ புராபத்மாயதேக்ஷணஃ) என்கிறபடியே அடுக்குகுலையாமல் மார்க்கண்டேயன் காணும்படி ஸர்வலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்து என்றபடி. (அளந்து)-திருவடியாலே அளந்து, ‘‘தாதாயதாபூர்வமகல்பயத்’’ (தாதாயதாபூர்வமகல்பயத்) என்கிறபடியே புநஸ்ஸ்ருஷ்டமான ப்ரபஞ்சத்தை த்ரிவிக்ரமாவதாரத்தில் தன் பொன்னடியா லளந்து என்றபடி. அளந்தவென்று பாடமானபோது அளந்தவென்கிறத்துக்கு வளவேலையென்கிறத்தோடே அன்வயம். (நின்பந்தமெல்லாமறுத்து) நின் - நில்லாநிற்கிற, பீஜாங்குரந்யாயத்தாதே அநாதிஸித்தமான (பந்தமெல்லாம்) - பந்தகமெல்லாவற்றையும், பந்தம் - வந்ஸம், ஸம்ஸாரமென்றபடி. (அறுத்து) சேதித்து, அறுக்கை - சேதிக்கை, (ஒக்க) ஒக்க - ஸமமாக, தாரதம்யமன்றிக்கே யென்றபடி, (அருள்தந்த) - க்ருபையைத் தாராநிற்கிற, அளக்கிற தசையிலே ஸ்வசரணகமல ஸ்பர்சத்தாலே சேதநருடைய ஸம்ஸாரமெல்லாம் நிச்சேஷமாக நிவ்ருத்தமாம்படி உத்க்ருஷ்டநிருஷ்ட விபாகமன்றிக்கே க்ருபைபண்ணுநிற்கிற என்றபடி. (பரவும்பொருள்) இவையென்கிறத்தின் மேலேயிருக்கிற ஏகாரத்தைப் பொருள் என்கிறத்தோடே அன்வயிப்பது. ததாச நியந்த்ருதயா ஸர்வத்ரவ்யாப்தமான பதார்த்தமென்றபடி. (அந்தமில்லாத்தேவன்) - அந்தமில்லாத தேவன், அந்தம் - நாசஃ, நாசரஹிதனை, நித்யோ நித்யானுமென்கிற படியே நித்யனை வென்றபடி, தேவன் - தீவ்யதீதிதேவஃ, என்கிறபடியே - கல்யாணகுணங்களாலே விளங்காநிற்கிறவன், அந்தமில்லாத்தேவன்- அந்தம்-பரிச்சேதஃ, பரிச்சேதரஹிதனை, ‘‘ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம’’என்கிறபடியே த்ரிவித பரிச்சேத ரஹிதனை தேவனென்னவுமாம். ‘‘யொப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்’’(யொப்ரஹ்மாணம்விததாதிபூர்வம்) என்றும் ‘‘ஏதௌத்வௌவிபுதஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌஸ்ம்ருதௌ । ததாதர்ஶிதபந்தாநௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ’’ (ஏதௌ

விட்டவாறுபற்றுமாறுவீடுகண்டுமேவுவார்

---

முதல்வியாக்யானம்.

டஃ" என்கிறபடியே - ஆறுபதமாய் இரண்டுகெண்ட மானத்வயத்தில், (ஒன்றில்) "வ்யாஸாம்நாயபயோதிகௌஸ்துபநிபம்" என்கிறபடி யத்வி தீயமான வொரு சரமச்லோகத்தில்; (எங்கும்) ஆஹத்யவிங்கு மூன்று ரஹஸ்யத்திலேயும், இந்தரஹஸ்யங்களை ப்ரதிபாதியாநின்ற மற்ற விடங்களிலேயு மென்றுமாம். (ஆறு) உபாயத்தை, அகிஞ்சநாதிகார மான ப்ரபத்தியை யென்றபடி. (இயம்புவார்) - சொல்லாநிற்குமவர்க ளான, திருமந்த்ராதிகள் மூன்றுக்கும் ஸ்வரூபொபாய புருஷார்த்தங் களிலே அடைவே தனித்தனியே நோக்கானலு முபாயப்ரதான மென் பார்களென்றபடி. இது தேசிகற்க்கு விசேஷணம், (விட்டவாறு) ஸ்வா திகாரானு ரூபமென்று விடப்பட்ட பக்த்யுபாயமும், (பற்றுமாறு) ஸ்வாதிகாரானுரூபமென்று பரிக்ரஹிக்கும் ப்ரபத்தியும், யத்வா (விட் டவாறு) - (முமுக்ஷுவுக்கு விருத்தமென்று விட்டகாவ்யாதி ப்ரவ் ருத்தி தர்மங்களும், (பற்றுமாறு) ப்ரபன்னனுக்கு - யோக்யமான நிவ் ருத்தி தர்மங்களும், (ஆறென்றுபாயமானலும்) தர்மமும் பலஸாதநத் வேந உபாயமாகையால் விருத்தமன்று (வீடு) - மோக்ஷம், இது உப லக்ஷணம், தத்தத் ஸாத்யபலமென்றபடி. (கண்டுமேவுவார்) இதுகளை ஜ்ஞாநத்தாலே கண்டாதரிக்கு மவர்களான,

---

இரண்டாம்வியாக்யானம்.

யிருக்கிற, இரண்டிலே "ஷட்பதொயம் த்விகண்டஃ" ஷட்பதொயம்த்விக ண்டஃ) என்கிறபடியே, ஷட்பதயுக்தகண்டத்வயாத்மக மந்த்ரரத்நத்தி லே யென்றபடி. ஒன்று - ஒன்றிலே, ஹரௌருத்த மம்ச்லோகமென்கிற படியே, ஒன்ருயிருக்கிற சரமச்லோகத்தில் என்றபடி. இலங்குமாறு- விளங்குகிற ப்ரகாரத்தை, தத்வஹிதபுருஷார்த்தங்கள் சாப்தங்களாயும் ஆர்த்தங்களாயும் விளங்குகிற ப்ரகாரத்தை, இயம்புவார் - அர்த்தாநு ஸந்தாந பூர்வகமாக உபதேசிக்குமவர்களாய், ரஹஸ்யத்ரயஸாரங்களில் ப்ரதிபாதித்ததத்வ ஹிதபுருஷார்த்தாநு ஸந்தாந பூர்வகமாக உபதேசத் தைப் பண்ணுமவர்களாய் என்றபடி. விட்டவாறு-விடுகிற ப்ரகாரத்தை, அஹங்கார மமகாரங்களை விடுகிற ப்ரகாரத்தை யென்றபடி. இதுக்கு கண்டு என்கிறத்தோடே அந்வயம். மூலமந்த்ராந்தர்கத நமஸ்ஸிலே கண்டு என்றபடி. மூலமந்த்ரகடகீபூதநமஸ்ஸு ஸூக்ஷ்மயோஜநாயாம் "அஹம் ஹி ஹரவத வணவ நஃ, ஃயாஃ க்ருதயஃந தாஃ, ஹரவதவணவ" இத்யாதி நிருக்த்யாநுகுண்யேந அஹங்கார மமகார நிவ்ருத்திப்ரதி பாதகமிறே. "ஃஞ்ருஷ் ஹணிஃஸ்ரீஃநநஃஸா வட்ஸஸ்ரூவும்மதிஃ, மஃரூம்ஸிக்ஷித ஃக்ஷிதெ நவாதஃ வஸ்தாஃவிஸூநதஃ" மந்த்ரப்ரஹ்ம ணி மத்யமெநமஸாபும் ஸஸ்வரூபங்கதி: கம்யம் சிக்ஷிதமீக்ஷிதெந

கள

சிட்டரானதேசுயர்ந்ததேசிகர்க்குயர்ந்துமேல்
எட்டுமூன்றுமூடறுத்தஎந்தைமாலிரக்கமே. (ஙகூ)

முதல்வியாக்யானம்.

இதுவும் தேசிகவிசேஷணம். (சிட்டரான) - சிஷ்டாளான, சைஷ்ட்யமாவது சாஸ்த்ரஸம்மத தர்மாநுஷ்ட்டாநம் ஸ்வகீயாங்ப்ரத்ய நுஷ்டாந பயித்ருத்வஞ்ச. (தேசுயர்ந்த) தேசு - தேஜஸ்ஸு, ஜ்ஞாநா னுஷ்ட்டாநங்களாலே வந்த தேஜஸ்ஸாலே யத்யுச்ருதாளான.(தேசிகர்க்கு) ஸ்வகீயர்களை யல்லாத வழிபோகாதபடி நல்வழியிலே மூட்டும்வர்களான தேசிகோத்தமர்களுக்கு, (உரிந்து) யோக்யராய், உரிகை - யோக்யனுகை, தேசிகர்க்கு யோக்யனுகையாவது. அவர்களுடைய ஜ்ஞாநாதிகளைக் கண்டவர்களுக்கு தாஸாளாகையே நமக்கு யோக்கியமென்றறிந்து தாஸாளாகை. (மேல்) இப்படியானத்துக்குமேல், உரிந்த - மேலென்று பாடமானுலும் இதுவே பொருள். தேசிகற்குயர்ந்து மேலென்று பாடமானுல் உயர்கை - உச்சரிதாளாகை, தேசிகர்க்கென்கிற ஷஷ்டியிலே தாஸ்யத்தை விவக்ஷித்து அவர்களுக்கு தாஸாளாய் அதினுலே, உச்ச்ரிதாளான பின்பெனறர்த்தம். இதுக்கு பலம் மேல். (எந்தைமாலிரக்கமே) யெனக்கு ஸ்வாமியாயா ஸ்ரீதரிடத்தில் வ்யாமுக்தனுன ஸர்வேச்வரனுடைய தயாதீனஸங்கல்பத்தாலே. இரக்கம் - தயயாலே ரக்ஷிப்போமென்கிற ஸங்கல்பம். (எட்டுமூன்றும்) எண்மூன்று இருபத்துநாலு, சதுர்விம்சதிதத்வாத்மகமான ப்ரக்ருதியும் (ஊடு) ஸம்பந்தத்தை, (அறுத்தது) சேதித்தது, பகவத்ஸங்கல்பத்தாலே ப்ரக்ருதிசம்பந்தமற்றதென்று கருத்து. பகவத்ஸங்கல்பமானது ப்ரக்ருதியிலேயும் நமக்கு ஸம்பந்தத்தைச் சேதித்ததென்று மாம். எட்டுமூன்றுமொட்டறுத்ததென்று பாடமானுலு மிப்படியே அர்த்தங் கொள்ளவேணும். ஸதாசார்ய கடாக்ஷத்தாலே ரஹஸ்யார்த்தங்களை யறிந்து அதில் நிஷ்டையுடையவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுப் போம்படி பகவத் ஸங்கல்ப முண்டாகுமென்று விசிஷ்டதாத்பர்யம். (ஙகூ)

இரண்டாம்வியாக்யானம்.

புரதஃ பச்சாதபிஸ்தாநதஃ) என்றுபட்டரும் அஷ்ட்ட ச்லோகியிலே அருளிச்செய்தாரிறே. (பற்றுமாறு) - அடைகிற ப்ரகாரத்தை, உபற்றுகை - அடைகை, இதுக்கும்கண்டு என்கிறத்தோடந்வயம். த்வயத்தின் பூர்வகண்டத்திலே, ஸாங்கமாக பரந்யாஸானுஷ்ட்டாந ப்ரகாரத்தைக்கண்டு என்றபடி. (வீடுகண்டு) வீடு - விடுகையை, ஸர்வதர்மத்யாகத்தை, கண்டு - அறிஞ்சு, ஸர்வதர்மத்யாகாந பேக்ஷாங்கபஞ்சக ஸம்பன்னபர ந்யாஸானுஷ்ட்டாபகவிதியை சரமச்லோகத்தின் பூர்வார்த்தத்தாலேகண்டு என்றபடி. (மேவுவார்) ஆதரிக்குமவர்களாகிய, திருமந்த்ரத்தாலே ஸ்வரூபத்தையும், த்வயத்தாலே, ஸாங்கபரந்யாஸானுஷ்ட்டாந ப்ரகாரத்தையும், சரமச்லோகத்தாலே அனுஷ்ட்டா

இரண்டாம்வியாக்யானம்.

நோபயோகி விதிப்ரகாரத்தையும், நன்ருகவரிஞ்சு ரஹஸ்ய த்ரயத்தையும் ஆதரிக்குமவர்களாகியும் என்றபடி. "ஸமெதநஸகெ லெநவாஹ ஸெஷ்ந தகுஹித வ-ரு-ஷாஸ-ாவ லொயெஸதி உதாரஹஸ்ய ஷயலெவயஸ-ீதி ஶஂகாவிவா ராஹா" ஏதேந ஏகேநைவரஹ்ஸ்யேந தத்வஹித புருஷார்தாவபோதேஸதி இதரரஹஸ்யத்வய வையர்த்யமிதி சங்காபி ப்ராஸ்தா. (சிட்டரான) - சிஷ்ட்டரான, "கிரியாவாநெஷ ஬்ரஹ்மவிதாம்வரிஷ்டஃ" (க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம்வரிஷ்டஃ) என்கிறபடியே, ப்ரஹ்மவித்ச்ரேஷ்ட்டராய் நித்யகர்மானுஷ்ட்டாநசீலரான என்னவுமாம். (எட்டில்) அஷ்டாக்ஷரத்தில், (ஆறிரண்டில்) த்வாத சாக்ஷரத்தில், ஆறிரண்டு பனிரண்டு என்கிற கணக்கிலே பன்னிரண்டு அக்ஷரமாயிருக்கிற வாஸு தேவத்வாத சாக்ஷரத்திலே என்றபடி. (ஒன்றில்) ஷடக்ஷரத்தில், வ்யாபகத்ரயத்தில் மற்றொன்ருயிருக்கிற விஷ்ணுஷடக்ஷரத்திலே யென்றபடி. யத்வா, (ஆரொன்றில்) ஷடக்ஷரத்தில், ஆறொன்று என்கிறகணக்கிலே விஷ்ணுஷட க்ஷரத்திலே யென்றபடி. (இலங்குமாறியம்புவார்) விளங்குகிற ப்ரகாரத்தை யுபதேசிக்குமவர்களான, வ்யாபகமந்த்ரங்களாலே ப்ரதிபாதி தங்களான தத்வஹித புருஷார்த்தங்களையனு ஸந்தாந பூர்வகமாக வுபதேசிக்குமவர்களான என்றபடி. (விட்டவாறுகண்டு) விடுகிற ப்ரகாரத்தை, ஒருவனுக் குரியனோ "உகாரொநந்யாஹஂ நியமயதி ஸஂபஂ஧மநயொஃ" (உகாரோநந்யார்ஹம் நியமயதிஸம்பந்தமனயோஃ) என்கிறபடியே அவதாரணார்த்தகடகீபூத உகாரத்தாலே அந்ய சேஷத்வம்விடுகிற ப்ரகாரத்தைக்கண்டு, (பற்றுமாறு) - பற்றுகிற ப்ரகாரத்தை, பூர்வகண்டமங்க பரமுத்தரகண்டமங்கி பரமென்று அருளாளப் பெருமா ளெம்பெருமானு ரருளிச்செய்கிறபடியே, கண்டத்வ யாத்மக மந்த்ரரத்நத்தாலே, ஸாங்கபர ஸமர்பணுனுஷ்டாந ப்ரகாரத்தைக்கண்டு என்றபடி. (வீடுகண்டு) மோக்ஷத்தைக்கண்டு, சரமச்லோகத்தாலே விதிபூர்வகமாக ஸர்வபாப மோக்ஷத்தைக்கண்டு என்றபடி. (மேவுவார்) - ஆதரிக்குமவர்களான, ஸ்வரூப ப்ரதிபாதன ப்ரதானமாயும் அனுஷ்ட்டான ப்ரதிபாதன ப்ரதானமாயும் விதிப்ரதிபாதன ப்ரதாநமாயுமிருக்கிற ரஹஸ்யத்ரயத்தை யாதரிக்குமவர்களான வென்றபடி. வ்யாபகத்ரயத்தையும் அர்த்தானு ஸந்தானத்தோடே யாதரிக்குமவர்களான என்னவுமாம். (தேசுயர்ந்த தேசிகர்க்கு) தேசு-தேஜஸ்ஸாலே, உயர்ந்த - உச்ச்ருதரான, தேசிகர்க்கு - தேசிகருடைய, (மேல்) மேலே, ஜ்ஞாநபக்தி வைராக்யா னுஷ்ட்டாநங்களாலே அதிதேஜஸ்விகளாய் எழுந்தருளியிருக்கிற தம்மாசார்யர்கள் விஷயத்திலே யென்றபடி. உயர்ந்து உச்ச்ருதமா யிருக்கிறதென்று ஒருபதம் அத்யாஹார்யம். ஸர்வோத்க்ருஷ்ட்டமா யிருக்கிறதென்றபடி. நிலைதந்த தாரகனுய் என்

முதல்வியாக்கியான்ம்.

[illegible]

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤 𑌮𑌹𑌾𑌗𑍁𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃.

---

இரண்டாம்வியாக்யானம்.

கிறபாட்டில் போலிங்கு மங்வயம் கண்டுகொள்வது. யாதொருதேசி கர்களியம்புவார் மேவுவாரோர்ந்திருக்கிற மாலிரக்கமவர்கள் விஷயத் திலே யென்றங்வயிக்கவுமாம். யத்வா எந்தைமாலிரக்கம் ஆசார்யவிஷ யத்திலேயே உயர்ந்து எட்டுமூன்று மூடறுத்து, என்றங்வயிப்பது. ஆக விப்பாட்டால் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே பிறந்ததத்வஹித புரு ஷார்த்த விவேக பூர்வகமாக தத்வாத்யுப தேஷ்ட்டாக்களாய் ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளிலே ந்யஸ்தபரராய் உத்தரகண்டார்த்தத்தில் ஊற்றமுடையவராய், மாசுச: என்கிறபடியே நைர்ப்பர்யாதிவிசிஷ்ட ராய் ஆச்ரிதாக்ரகண்யராய், ஸ்ரீபாஷ்யாதி ப்ரபந்தநிர்மாண ப்ரவசந பரபக்ஷ ப்ரதிக்ஷேபாஸ்ரீதஸம் ரக்ஷகணுதிகளாலே யதிதேஜஸ்விகளா யெழுந்தருளியிருக்கிற வாதிஹம்ஸாம்பு வாஹாசார்யர் முதலான நம் மாசார்யர்களிடத்திலேயே "நாயகத்வஞ்ச ஸர்வேஷாம் நாமநத்வம்பரோபதே" (நாயகத்வஞ்ச ஸர்வேஷாம்நாமநத்வம்பரோபதே) இத்யாதிகள் படியே, தத்ததக்ஷர ப்ரதிபாத்யனும் ஸர்வரக்ஷகனும் ஸர்வகாரண பூத னும் ஸர்வஸ்வாமியாய் ஸர்வஸ்வதந்தரனும் ஸர்வாதாரபூதனும் ஸர்வ வ்யாபகனும் மோக்ஷப்ரதனும் முக்தப்ராப்யனும் எழுந்தருளியிருக் கிற ஸ்ரீமந்நாராயணனுக்கு மிகவு மிரக்கமென்று தம்மாசார்யர்களைக் கொண்டாடினபடி சொல்லித்தாய்த்து. (௩௧)

இரண்டாம்வியாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீமதேநிகமாந்த மஹாதேசிகாயநம:

ஸ்ரீ

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநம:

# அம்ருதாஸ்வாதிநி

## முதல்வ்யாக்யானமும் ப்ரதிபதமும்.

"𑌶𑍍𑌰𑍀𑌬𑌾𑌲𑌧𑌨𑍍𑌵𑌿𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤 𑌗𑌰𑍁𑌪𑌾𑌦𑌾𑌬𑍍𑌜𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇, 𑌯𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌵𑌯𑌮𑌨𑍍𑌯𑍇𑌽𑌪𑌿 𑌗𑍂𑌢𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌵𑍇𑌦𑌿𑌮𑍋, 𑌅𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌿𑌨𑍀𑌗𑌾𑌥𑌾𑌸𑍍𑌤𑌤𑍍𑌸𑌕𑌾𑌶𑌾𑌦𑍍𑌯𑌥𑌾𑌶𑍍𑌰𑍁𑌤𑌂, 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌦𑌾𑌸𑍋𑌽𑌯𑌂 𑌸𑌮𑍍𑌯𑌗𑍍𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌿𑌸𑌨𑍍𑌮𑍁𑌦𑍇" (ஸ்ரீபாலதந்வி வேதாந்த குருபாதாப்ஜமாஶ்ரயெ, யத்பக்த்யாவயமன்யேபிகூடார்த் தாந்ஸம்ப்ரபேதிமெ, அம்ருதாஸ்வாதி நீகாதாஸ்தத்ஸகாசாத்யதாஶ்ருதம், ஸ்ரீரங்கநாததாஸொயம் ஸம்யக்வ்யாக்யாதிஸன்முதே) இந்த அம்ருதாஸ்வாதிநீ யென்கிற ப்ரபந்தத்திலே ஸாரஸாரம் முதல் முநிவாஹநபோக மளவாகவுள்ள வொன்பது ரஹஸ்யங்களிலே யிருக்கிற பாசுரங்கள் முப்பத்தேழில், ப்ரதமம் ஸாரஸாரத்திலே திருமந்த்ராதிகாரத்தடியிலே - ஒன்று, ப்ரணவம் நமஸ் நாராயணசப்தம் சதுர்த்தீ யிதுகளுடைய வர்த்தாநந்தரம் - நாலு, அதிகாராந்தத்திலொன்று, ஆக - ஆறுபாசுரம், த்வயாதிகாரத்தில் ஆத்யந்தங்களிலும் கண்டத்வய மத்யத்திலும் ஆக மூன்றுபாசுரம், சரமச்லோகாதிகாரத்தில் ஆதிமத்யாவஸாநங்களிலே-அஞ்சுபாசுரம், ஆக விந்தரஹஸ்யத்தில் பதிநுலு பாட்டுகளில் முதல்பாட்டு "𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑌨𑌵𑌤𑌿𑌮𑌰𑍍𑌧𑌂 𑌸𑌙𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑌂 𑌰𑌹𑌸𑍍𑌯𑍈𑌃" (த்ரிபிரநவதிமர்த்தம் ஸங்க்ருஹீதம் ரஹஸ்யை:) என்கிறபடியே ஸங்க்ரஹருசிகளுக்கு ஸாரஸம்க்ஷேபம் செய்தருளி "𑌵𑌿𑌪𑍁𑌲𑌤𑌰𑌮𑌤𑍀𑌨𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌸𑌤𑌃 𑌖𑍍𑌯𑌾𑌪𑌯𑌿𑌷𑍍𑌯𑌨𑍍" (விபுலதரமதீநாம்வ்யாஸத: க்யாபயிஷ்யந்) என்கிறபடியே விஸ்தாரருசிகளுக்கு ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் செய்தருளி "𑌸𑌹𑍃𑌦𑌯𑌬𑌹𑍁𑌮𑌾𑌨𑍍𑌯𑌂 𑌸𑌾𑌰𑌸𑌾𑌰𑌂" (ஸஹ்ருதயபஹுமான்யம் ஸாரஸாரம்) என்கிறபடியே ஸஹ்ருதய பாகவதர்களுக்காக ஸாரஸார மென்கிற ரஹஸ்யத்தை ஸ்ரீபாஷ்யா நந்தரம் அந்தவர்த்தங்களை யெல்லாம் ஸங்க்ரஹீயாநிற்கிற வேதாந்ததீபம் போலே - யதிவிஸ்த்ருதமான ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரார்த்த ஸங்க்ராஹகமான வதிகாரத்ரயாத்மகமாக வருளிச்செய்யப் புகுகிறவராயடியிலே யாசார்யஸ்துதி ரூபமங்களமாயும் அந்தரஹஸ்யார்த்த ஸங்க்ராஹகமாயுமொருபாட்டருளிச் செய்கிறார்.

க-மூ.—மூலங்கிளையெனவொன்றிரண்டானமொழியிரண்டும்
மேலொன்றிலையெனநின்றவவ்வித்தகன்றன்னுரையும்
காலங்கழிவதன்முன்னங்கருத்துறக்கண்டிடவே
ஞாலம்புகழுநந்தேசிகர்தானம்மைவைத்தனரே.

(பதவுரை.) ஞாலம் - பூமியிலுள்ளோர், புகழும் - ஸ்துதிக்கின்ற, நந்தேசிகர்-நம்மாசிரியர்கள், தாம் - தாமே, மூலங்கிளையென - வேர் போலவும் சாகைபோலவும், ஒன்று - ஒன்றும், இரண்டான - இரண்டு மான, மொழியிரண்டும் - மூலமந்த்ரம் த்வயம் என்னுமிரண்டு மந்த்ரத் தையும், மேல் - இதற்குமேலே, ஒன்றிலை - வேறொன்றில்லை, என - என்னும்படி, நின்ற - இருந்த, அவ்வித்தகன்தன்-அந்த ஆஶ்சர்யஸ்வ பாவனுன க்ருஷ்ணனது, உரையும் - உக்தியான சரமச்லோகத்தையும், காலம் - வயதானது, கழிவதன்முன்னம் - கழிந்துபோவதற்குமுன்பே, கருத்து - ஹ்ருதயத்தில், உற - அர்த்தங்கள் நிலைநிற்கும்படியாக, கண் டிட - அறியும்வண்ணம், நம்மை - அவ்வாசாரியர்களை ஆச்ரயித்தநம் மை, வைத்தனர் - வைத்தார்கள், செய்தார்களென்கை. ஏ-அசை.

வியாக்கியானம்.

(ஞாலம்புகழ்) பூமியிலுள்ள ஜநங்களாலே புகழப்படுமவர்களான, ஞாலம் - பூமி, புகழுகை - ஸ்துதிக்கை, ஞாலசப்தம் தத்ரத்யஜநபரம், (நல்தேசிகர்) நல்லவாசார்யர்கள், இவர்களுக்கு நன்மையாவது ஸதா சார்யகடாக்ஷமும் சாஸ்த்ரஸம்மதஜ்ஞாநாநுஷ்டாநமும் (தாம்) ஸ்வய மேவ இதுக்கு கண்டு என்கிறத்தில் அந்வயம். (மூலங்கிளையென) என வென்கிற திவார்த்தகம், மூலம்போலேயும் கிளைபோலேயும், (ஒன்றிர ண்டானமொழியிரண்டும்) ஒன்றுதானே இரண்டாக வாகாநின்ற சப்தத் வ்யமும், மொழிசப்தம் மூலமூலிகள்போலே திருமந்த்ர மொன்றுமே கண்ட த்வ்யாத்மகமான மந்த்ரரத்நமாக வாகாநின்ற ப்ரதம மத்யமரஹ ஸ்யங்களு மென்றபடி. (மேலொன்றிலையெனநின்ற) தனக்குமேலே யொன்றுமில்லையென்று சொல்லும்படி நின்ற, (அவ்வித்தகன்) அந்தவி ஸ்மயநீயனன க்ருஷ்ணனுடைய, (தன்னுரையும்) தன்திருப் பவளத்தா லே சொன்ன உக்தியும், இங்குதன் என்று கீதாத்யுபதேசத்தில் சப்தர சனம் வ்யாஸக்ருதமென்று மிந்த சுலோகம் ஸ்வக்ருதமென்றும் ஸூசிப் பிக்கைக்காக. பக்த்யுபதேசாநந்தரம் ப்ரபத்யுபதேசம்போலே யிதுக்கு மேலொரு உபதேசமில்லாதபடி சரமோபதேசமான வந்த ஸ்ரீக்ருஷ்ண சரமச்லோகமுமென்று கருத்து. (கருத்துற) ஹ்ருதயத்திலே படும்படி, அந்த ரஹஸ்யார்த்தங்கள் தங்கள்தங்கள் கருத்தில் நன்றாகப் படும்படி, (காலங்கழி வதன்முன்னம்) காலங்கழிந்து போம்முன்னமே "இளரொ ளியிளமை கெடுவதன்முன்னம் "உத்தமேசேத்வயஸிஸாது வ்ருத்தஃ" (உத் தமேசேத்வயஸிஸாது வ்ருத்தஃ) என்கிறபடி, இத்யாத்யநுஸாரேண

உ-மூ.—காரணமுங்காவலனுமாகியென்றுங்
கமலையுடன்பிரியாதநாதனை
நாரணனுக்கடியேன்னடிமைபூண்ட
நல்லடியார்க்கல்லான்மற்றொருவர்க்கல்லேன்
ஆரணங்கள்கொண்டகமும்புறமுங்கண்டா
லறிவாகயறிவதுமாயறுநான்கின்றிச்
சீரணிந்தசுடர்போலத்திகழ்ந்துநின்றேன்
சிலைவிசயன்றேரணையச்சிறுவேதத்தே.

---

(ப-ரை.) சிலை-வில்லாளியான, விசயன்-அர்ஜுனனது, தேரணைய-ரதத்திற்கு ஸத்ருசமான, சிறுவேதத்து - சிறியவேதமாகிய ப்ரணவத்தில், காரணமும்-உபாதாநகாரணமும் நிமித்தகாரணமும், காவலனும்-ரக்ஷகனும், ஆகி - ஆய், என்றும் - எப்போதும், கமலையுடன் - பெரிய பிராட்டியாரோடு, பிரியாத - பிரிவுறாத, நாதனை - ஸர்வஸ்வாமியான, நாரணனுக்கு - நாராயணசப்தவாச்யனான புருஷோத்தமனுக்கு, நான் - யான், அடியேன் - தாஸபூதன், அடிமைபூண்ட-அவனது தாஸ்யத்தை போக்யமாய்வஹித்த, நல்லடியார்க்கல்லால் - நல்லவராகிய பாகவதர்க்கல்லது, மற்றொருவர்க்கு - வேறொருவருக்கு, அல்லேன்-உரித்தானவனல்லேன், ஆரணங்கள் - வேதங்களை, கொண்டு - பிரமாணமாகக்கொண்டு, அகமும்புறமும் - உள்ளும் வெளியும், கண்டு-பராமர்சித்தறிந்து, அறிவாகி - ஜ்ஞானஸ்வரூபனாய், அறிவதுமாய் - ஜ்ஞாதாவுமாய், அறுநான்கன்றி - இருபத்திநாலு தத்வங்களிலும் வேறுபட்டு, சீர்அணிந்த-பெருமைபெற்ற, சுடர்போல - தேஜஸ்ஸுபோல, திகழ்ந்துநின்றேன்-விளங்கிநின்றேன். ஆல் - அசை.

---

வியாக்கியானம்.

உசிதவயஸ்ஸிலே யென்றபடி. (கண்டு) அந்த ரஹஸ்யார்த்தங்களை யுள்ளபடிகண்டு (நம்மை) தங்கள் திருவடிகளை யாச்ரயித்தநம்மை (அடைவே) க்ரமத்திலே, திருமந்த்ராதிகளாலே ப்ரதிபாதிதமான ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களுடைய நிஷ்டாக்ரமத்திலே, (வைத்தனரோ) ஸ்தாபித்தார்கள். ரஹஸ்யத்ரயார்த்தமான ஸ்வரூபாதிகளையுள்ளபடி தாங்களுமறிந்து அதுகளிலே நிஷ்டையுடையவர்களாய் ததீயாளான நம்மையு மதிலே நிஷ்டாவான்களாக ஸ்தாபித்தார்களென்று தாத்பர்யம். இத்தாலிந்த க்ரந்தத்துக்கு ரஹஸ்யத் ரயஸாரமே முக்யவிஷயமென்று சொன்னபடி. (க)

இப்படி மங்களாசரணம்பண்ணி "கண்ணபுரமொன் றுடையானுக்கடியேன்" என்று துடங்கி - அதில் ப்ரதமாதிகாரத்தில் திருமந்த்ரார்த்த விசாரந்துடங்கி ப்ரதமபதமான ப்ரணவாந்தர்கதமான அகாராத்யக்ஷரத்ரயத்துக்கு ப்ரக்ருதி ப்ரத்யயத்தாலே வருமர்த்தங்களை விஸ்

வியாக்கியானம்.

தாரமாக வருளிச்செய்து ஸுகரபோதார்த்தமாக வொன்பதர்த்தங்கள் ப்ரதானமாக வநுஸந்தேயங்களென்று காட்டுகிருரொருபாட்டாலே.

(சிலைவிசயன் தேரனைய) வில்லாளியான வர்ஜுனனது ரதத்துக்கு ஸத்ருசமான, சிலை-வில்லு, அனைய-ஸத்ருசம். (சிறுவேதத்தே) சின்னதான வேதத்திலே, ப்ரணவத்தி லென்றபடி. அர்ஜுனரதத்தில் ஸாரதியான வீச்வரனுக்கு ப்ராதான்யமன்றியிலே வில்லாளியான வர்ஜுனனுக்கு ப்ராதான்ய முண்டானுப்போலே ப்ரதமாந்த முக்யவிசேஷ்ய போதக தயா ப்ரணவம் ஜீவப்ரதான மென்றர்த்தம். ஸகல வேதஸார பூதமாகையாலே சிறுவேதமென்றது, இதுக்குத் திகழ்ந்துநின்றேனென்கிற க்ரியையோடே யந்வயம். (காரணமும் காவலனுமாகி) ஜகத்காரணமும் ஜகத்ரக்ஷகனுமாகா நின்றுகொண்டு, (கமலையுடன் பிரியாதநாதனை) பெரியபிராட்டியோடே யப்ருதக்ஸித்தனாய்க் கொண்டே ஸர்வஸ்வாமியான, (நாரணனுக்கு) ஸகலோப நிஷத்ப்ரஸித்த நாராயண சப்தவாச்யனை ஸ்ரீயஃபதிக்கு, இத்தால் ஸவிபக்திகமான அகாரத்தில் ஈச்வரனுக்குண்டான காரணத்வரக்ஷகத்வ சேஷித்வ ஸ்ரீயஃபதித்வரூபமான நாலர்த்தமும் சொன்னபடி. (அடியேன் நான்) நிருபாதிகதாஸனை நான், (அடிமைபூண்டு) தாஸ்யத்தைப்பூண்டு, அனுதிஸித்தமான தாஸ்யத்தை ப்ரணவத்தில் சதுர்த்தியாலே யறிந்தென்றபடி, பூண்டென்றது பூஷணம்போலே போக்யமாக வங்கீகரித் தென்றபடி. இது லுப்தசதுர்த்யர்த்தம். (அவனல்லடியார்க்கல்லால்) அந்த ஸ்ரீயஃபதியினுடைய நல்லதா ஸவர்க்கங்களுக்குத்தவிர, பாகவதர்களுக்கு நன்மையாவது அநன்யப்ரயோஜநத்வமும் சேஷத்வஜ்ஞாநராஹித்யமும், (மற்றொருவர்க்கல்லேன்) வேறொருவருக்கும் தாஸனுகவாகிறே னல்லேன். இத்தால் லுப்தசதுர்த்தியில் அர்த்தலப்தமான பாகவதசேஷத்வமும் மத்யமாக்ஷரார்த்தமான ததீயபர்யந்த தேவதாந்தரவர்ஜநமும் சொன்னபடி - (ஆரணங்கள்கொண்டு) வேதங்களைக்கொண்டு, ஜீவஸ்வரூபசோதகமான வேதாந்த பாகத்தைக்கொண் டென்றபடி. (அகமும் புரமுங்கண்டால்) உள்ளும்புறமும்கண்டால், வேதாந்தங்களிலே சொன்னபடியே ஜீவஸ்வரூபத்தையும் அவன் குணத்தையும் பார்த்தாலென்றபடி. (அறிவாகி) ஜ்ஞாநஸ்வரூபமாகி, (அறிவதுமாய்) க்ரகிக்கும் வஸ்துவுமாய், (அறுநான்கின்றி) அறுநான்கு இருபத்துநாலு, இருபத்துநாலு தத்வவிலக்ஷணமாய் ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஜ்ஞாதாவுமாய் சதுர்விம்சதி தத்வவிலக்ஷணமுமா யென்றர்த்தம், (சீரணிந்தசுடர்போல) சீர் சப்தம் குணவாசி, இங்கு குணபூதப்ரபாபரம். ப்ரபையாலே யலங்க்ருதமான தேஜஸ்ஸுபோலே, (திகழ்ந்து) விளங்கா நின்றுகொண்டு, (நின்றேன்) இராநின்றேன். இத்தால் மநஜ்ஞாநே, மந அவபோதநே, இத்யாதியாகலப்தமான மகாரார்த்தம் சொன்னபடி. (உ)

ரு-மூ.—யானெனதென்பதொன்றில்லையென்செய்வதவனையல்லால்
ஆனதறிந்திடுந்தன்னடியார்க்கென்னையாட்படுத்தான்
தானென்னைநல்கிநடத்துகின்றான்தன்னருள்வழியே
நானுன்னைவீடுசெய்வேனென்னநந்திருநாரணனே. (சஉ)

---

(ப-ரை.) நம் - நமக்குஸ்வாமியான, திருநாரணன்-ஸ்ரீயஃபதியான நாராயணன், ஆனது-யோக்கியமானவைகளை, அறிந்திடும்-அறிந்தவர்களான, தன்னடியார்க்கு - தன்பக்தர்களுக்கு, என்னை - அடியேனை, ஆள்படுத்த - தாஸனுக்கிவைக்க, தான் - தானே, என்னை - அடியேனை, நல்கி - ஸ்நேஹித்து, உன்னை - உன்னை, நான்-நான், வீடுசெய்வேன் - பாபங்களைப் போக்கி முக்தனுகச்செய்வேன், என்று - என்று, தன் - தனது, அருள்வழியே - கிருபையின்வழியிலே, கிருபையால் காட்டிய ப்ரபத்திமார்க்கத்திலே. நடத்துகின்றான் - நடக்கச் செய்கின்றான், யான் என்பது - நானென்பதும், எனதுஎன்பது - என்னுடையது என்றுசொல்வதும், ஒன்றில்லை-ஒன்றுமில்லை, அவனையல்லால் - அவனை நீங்கலாக, என்செய்வது - யார்என்ன செய்கின்றது. (ரு)

---

வியாக்யானம்.

இப்படி ப்ரணவார்த்தாநந்தரம் நமச்சப்தத்துக்கு ஸ்தூலஸூக்ஷ்ம யோஜநாதிகளால்வரும் அர்த்தவிசேஷங்களை விஸ்தாரமாக வருளிச்செய்துஇதுகளில் முக்யமான ஸ்வஸ்வாமித்வ நிவ்ருத்தி, ஸ்வகீயஸ்வாமித்வ நிவ்ருத்தி, ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி, பாகவதசேஷத்வம், சரணுகதி, ஆக விந்த வைந்தர்த்தங்களை ஸுகரமாக வநுஸந்திக்கைக்காக வொரு பாட்டாலே காட்டுகிறார்.

(யானெனது) நான் என்னுடையது, (என்பது) என்றுசொல்வது, (ஒன்றில்லை) ஒருவஸ்துவில்லை, அஹம்மதீயமென்று சொல்லப்படுமொருவஸ்துவுமில்லை. எதேநஸ்வஸ்வ கீயஸ்வாமித்வ நிவ்ருத்திருக்தா, விரோதியானவஹங்கார மமகாரநிவ்ருத்திஃபலிதா. (அவனையல்லால்) ஸ்வதந்த்ரனை அந்த ஸர்வேச்வரன்தவிர (என்செய்வது) என்னபண்ணுவது, நானிதிசேஷஃ. தத்ப்ரவ்ருத்ய தீநமஸ்மதாதி ப்ரவ்ருத்தியென்றபடி. அநெநஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்திருக்தா, இதுக்குபலம்மேல், (நானுன்னை)ஸ்வதந்த்ரனைநான்அகிஞ்சனனைவுன்னை, (வீடுசெய்வேன்) வீடு-மோக்ஷம், அதுசெய்விப்பேன், ஸம்ஸார நிவ்ருத்திபண்ணுவேன் என்றபடி. (என்ற) இப்படிசொன்ன, (நம்திருநாரணனே) நமக்கு ஸ்வாமியான ஸ்ரீயஃபதியே, இதுக்கு க்ரியைகளோடே அந்வயம், இத்தால் நமச்சப்தார்த்தமான ப்ரபத்திக்கு லக்ஷ்யமான மேல்பதார்த்தமும் அத்தால்லக்ஷ்யமான கீழ்பதார்த்தமும் சொன்னபடி. (ஆனதறிந்திடும்) ஆனதுயோக்யமானது, அதையறிந்திடுகை - அறிந்துவிடுகை, யோக்யமானசேஷத்வாதிகளை நன்றாகவறிந்திருக்குமவர்களான வென்றபடி.

ச-மூ.—யாதாமிவையனைத்தும்படைத்தேந்துமிறைவனுமாய்
கோதாங்குணங்களுடன்குறுகாக்குணத்தனுமாய்
மாதாபிதாவெனமன்னுறவாய்க்கதியெனநின்றான்
போதார்திருவுடன்பொன்னருள்பூத்தநம்புண்ணியனே. ()

(ப-ரை.) போது - தாமரஸபுஷ்பத்தின்கண், ஆர் - நிறைந்த, திருவுடன் - பெரியபிராட்டியாரோடு, பொன் - அழகிய, அருள்பூத்த - க்ருபையை புஷ்பித்த, க்ருபையால் விளங்குமென்கை. நம்புண்ணியன் - நமக்கு ஸ்வாமியாய் பாவனதமனான நாராயணன், யாதாம் - ஏதாகிலும், இவை அனைத்தும் - இவையெல்லாவற்றையும், படைத்து - ஸ்ருஷ்டித்து, ஏந்தும் - தரிக்கின்ற, பரிபாலிக்கின்ற, இறைவனுமாய் - ரக்ஷகனுமாய், நியந்தாவுமாய்என்கை. கோதாம் - ஹேயமாகிய, குணங்களுடன் - குணங்களோடே, குறுகாத - நெருக்குப்படாத, குணத்தனுமாய் - கல்யாணகுணவானுமாய், மாதாவென - மாதாவென்றும், பிதாவென-பிதாவென்றும், இதுமுதலாக்சொல்லப்படும், மன் - த்ருடமான, உறவாய்-ஸகலவிதபந்துவுமாய், கதியென - மோக்ஷோபாயனாகவும், நின்றான்-வீற்றிருந்தான். (ச)

வியாக்யானம்.

(தன்னடியார்க்கு) தன்னுடைய ஸ்வரூபாதிகளை யறிந்தபாகவதர்களுக்கு, (என்னை) பரதந்த்ரனானவென்னை, (ஆள்படுத்தான்) தாஸனாகப்படுத்தான், நிருபாதிகதாஸ்யம் வஹிக்கும்படி பண்ணினனென்றபடி. (தான்) ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரனான ஈச்வரன் (என்னை) அவன் நடத்தினவழியே நடக்கவொருப் பட்டவென்னை, (நல்கி) ஸ்நேஹித்து, அபிமானித்தென்றபடி. (தன்னருள்வழியே) தன்னுடைய க்ருபையாலே வந்த வழியிலே, தன் க்ருபையாலே நம்முடைய பரத்தை ஸ்வீகரிக்கும்படியான ப்ரபத்திரூபமார்க்கத்திலென்றபடி. (நடத்துகின்றான்) நடத்திவையாநின்றான். வ்யாஜமாத்ர ஸாபேக்ஷனாகையாலே நம்மைக்கொண்டு ந்யாஸத்தைப் பண்ணிவையாநின்றான் என்றபடி. இத்தால் பாரதந்த்ர்யலப்தபாகவத சேஷத்வ சரணாகத்யாதிகம் சொன்னபடி. (ங)

இப்படி நமச்ச ப்தார்த்தமருளிச்செய்து மேல் நாராயணசப்தத்தில் நரசப்தத்தாலும் நாரசப்தத்தாலும் பஹுவ்ரீஹிதத் புருஷஸமாஸரூபத்தாலும் வருமர்த்த விசேஷங்களை நன்றாக வெளியிட்டு அதில் ப்ரதானமான சிலவர்த்தங்களை யொருபாட்டாலே யருளிச்செய்கிறார்.

(போதார்திருவுடன்) போது-புஷ்பம், ஆர்-பூர்த்தி, புஷ்பத்திலே பூர்ணையாயிருக்கிற லக்ஷ்மியுடனே, கமலவாஸிநியான பிராட்டியுடனென்றபடி, இத்தால் விவக்ஷிதமான ஸ்ரீஸம்பந்தம் சொன்னபடி. (பொன்னருள்பூத்த) ஸ்ப்ருஹணீயமான க்ருபையை புஷ்பித்த, ஸர்வஸ்ப்ருஹணீய க்ருபாரூப புஷ்பசாலியான வென்றபடி - (நம்புண்ணி

ரு-மூ.—இருவிலங்குகழித்திடராமுடலந்தன்னி
லிலங்குநடுநாடியினலெம்மைவாங்கி
ஒருவிலங்குநெறியில்லாவழியால்மன்னு
முயர்வானிலேற்றியுயர்நிலையுந்தந்து

(ப-ரை.) இருவிலங்கு-புண்யபாபரூபமான இரண்டுநிகளங்களையும், கழித்து - நீக்கி, இடராம்-துக்கப்ரதமாகிய, உடலந்தன்னில்-சரீரத்தில், இலங்கும் - விளங்குகின்ற, நடுநாடியினல் - மத்யநாடியினல், எம்மை - நம்மை, வாங்கி - தேகத்தினின்றுமெடுத்து, ஒருவிலங்குநெறியில்லா - ப்ரதிபந்தகமானவழியொன்றுமில்லாத, வழியால் - அர்ச்சிராதிமார்க்கத்தாலே, மன்னும் - த்ருடமாகிய, உயர் - ஸர்வோத்க்ருஷ்டமான, வானில் - பரமபதத்தில், ஏற்றி - ஏறவைத்து, உயிர் - ஜீவாத்மாவினது, நிலையும் - அபஹதபாப்மத்வம் முதலான ஸ்வரூபத்தையும், தந்து - கொடுத்து, ஆவிர்பவிப்பித்து என்கை. பெருவிலங்காம்-பெரிய

வியாக்கியானம்.

யனே) நமக்குஸ்வாமியாய் ஸகலபுண்ய பூதனை ஸ்ரீய:பதியே, இதுக்கு நின்றானென்கிறத்தோடே யந்வயம். (யாதாம்)ஏதேனுமாம், சிதசித்துக்களிலே தேனுமா மென்றபடி. (இவையனைத்தும்) இந்தஸகல வஸ்துக்களையும் (படைத்து) ஸ்ருஷ்டித்து, சிதசித்விபாகமற வெல்லாத்தையும் ஸ்ருஷ்டித்தென்றபடி, இது "நராஜ்ஜாதானி தத்வானி" (நராஜ்ஜாதானி தத்வானி) என்கிறவர்த்தம். (எந்துமிறைவனுமாய்) இதுகளைத் தரிக்கு மீச்வரனுமாய், இது ந்ருநயே என்கிற தாதுலப்தமான நரசப்தார்த்தம், (கோதாங்குணங்களுடன்) கோது-அவத்யம், கோதாகாநிற்கும் குணங்களோடே (குறுகாக்குணத்தனுமாய்) குறுகாததான குணங்களையுடையவனுமாய், அவத்யாவஹமான ஹேயகுணஸம்பந்தத்தாலே தோஷந் தட்டாதபடி ஸம்யக்குணங்களையுடையனுமா யென்றபடி. இது நரஸம்பந்தி நாரமென்கிற குணவர்க்கபரம். (மாதாபிதாவென)மாதாவென்றும் பிதாவென்றும் சொல்லும்படி, (மன்னுறவாய்) த்ருடமான ஸம்பந்தமாய் "த்வமேவமாதா சபிதாத்வமேவ" (த்வமேவமாதா சபிதாத்வமேவ) என்கிறபடியே நிருபாதிக ஸர்வவிதபந்துவுமா யென்றபடி. (கதியென) கதியென்று சொல்லும்படி, கதிசப்தமுபாயோபேயபரம், இத்தால் தத்புருஷ னிலயநரசப்தத்தி லதிகரணவ்யுத்பத்தியால் வந்த ஆதாரத்வமும் அத்தால் பலித்த ஸர்வவித பந்துத்வமும் கரணுதிவ்யுத்பத்தியால்வந்த உபாயோபேயத்வமும் சொன்னபடி. எந்து மிறைவனுமா யென்கிறவிடத்தில் பஹுவ்ரீஹியி னர்த்தமான ஸர்வாந்தர்யாமித்வ ஸர்வநியந்த்ருத்வாதிகளும் கோதாங்குணங்களித்யாதியில் உபயலிங்கத்வமும் கண்டுகொள்வது. (௪)

பெருவிலங்காமருள்தன்னூற்றன்னடிக்கீழ்ப்
பிரியாதவமரருடன்பிணைத்துத்தன்னோ
ருருவிலங்குமிகச்செய்விக்குமும்பர்போக
முகந்துதருந்திருமாலையுகந்தோம்நாமே. (சச)

நிகளமாகவாகின்ற, அருள்தன்னால் - கிருபையினால், தன் - தனது, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, பிரியாதவகை - என்றும் பிரியாதபடியாய், பூண - சிரஸ்ஸில் அணியும்படி, பிணைத்து - சேர்த்து, தன் - தனது, ஆர் - நிறைந்த, உருவில் - ஸ்வரூபத்தில், அங்கும் - அந்தபரமபதத்திலும், இசைவிக்கும் - அங்கீகரிப்பியாநின்ற, உம்பர் போகம் - நித்யஸூரிகளினது போகங்களை, உகந்து - தான்ஸந்தோஷித்து, தரும்-நமக்குக்கொடாநிற்கின்ற, திருமாலை - ஸ்ரீயஃபதியை, நாம் - இவ்வளவு பாக்கியம்பெற்ற நாம், உகந்தோம் - ஸந்தோஷித்து சரணவரணம் செய்தோம். (ரு)

வியாக்கியானம்.

இப்படி நாராயணசப்தார்த்த மருளிச்செய்து, மேல் சதுர்த்தியினர்த்தமான ஸம்ப்ரதானதாதர்த்தயாதிகளையும் அந்த தாதர்த்யத்தால் வந்த கைங்கர்யாதிகளையும் விஸ்தாரமாக வருளிச்செய்து அந்த கைங்கர்யம் வருவது தேசவிசேஷத்திலே யாகையாலே தத்ப்ராப்திக்கு விருத்தமான சரீராதிஸம்பந்தங்களை யெல்லாம் விடுவித்து தேசவிசேஷப்ராப்தி பூர்வகமாகஅந்த வீச்வரன் நம்மைக்கொண்டு கைங்கர்யம் செய்விக்கும் ப்ரகாரங்களையெல்லா மொருபாட்டாலே யருளிச்செய்கிறார்.

(இருவிலங்கு) இரண்டுச்ருங்க்கலத்தை, ச்ருங்க்கலப்ராயமான புண்யபாபங்களை யென்றபடி. புண்யத்தை ச்ருங்க்கலையென்றது பரமபலவிருத்தமாகையாலே, (கழித்து) கழியும்படிபண்ணி, ஸுஹ்ருத்த்விஷத்துக்களிடத்தில் ஸங்க்ரமிப்பித் தென்றபடி - (இடராமுடலந்தன்னில்) இடர் - ப்ரதிபந்தகம், உடல் - சரீரம், தன் - ஸ்வார்த்தே, ஸ்வாநுபவத்துக்கு ப்ரதிபந்தகமாகாநின்ற சரீரத்திலே (இலங்கு) விளங்காநின்றுள்ள, (நடுநாடியினால்) மத்யத்திலிருக்கிற நாடியினாலே "ஸிதாஸிதாஃ ஊர்த்வமேகஸ்ஸ்த்திதஸ்தாஸாம்" (ஸிதாஸிதாஃ ஊர்த்வமேகஸ்ஸ்த்திதஸ்தாஸாம்) இத்யாதிகள்படியே அநேகநாடி மத்யத்தில் விளங்காநின்ற சதாதிகையான ப்ரஹ்மநாடியாலே யென்றபடி (எம்மை) பலத்திலே த்வரியாநின்ற நம்மை, (வாங்கி) சரீரத்தை விட்டுவாங்கி, சரீரவிச்லேஷம் பண்ணுவித்தென்றபடி. இதுக்கு வானிலேற்றி யென்கிறத்தோடந்வயம், (ஒருவிலங்கு நெறியில்லா) நெறி - மார்க்கம், விலக்ஷணமான ஒரு விலங்குபோலே யிராநின்ற மார்க்கம்போலே யில்லாததான, நெறியில்லாவென்கிறபாடம் ஸமீசீனம், அந்நெறியில்லாததானை

வியாக்கியானம்.

வென்றர்த்தம். ஆரோஹாவரோஹவத்தான தூமாதிமார்க்கம்போலே ச்ருங்க்கலாப்ராயமல்லாத வென்றபடி, (வழியால்) மார்க்கத்தாலே, விலக்ஷணமானவர் சிராதிமார்க்கத்தா லென்றபடி, (உயர்வானிலேற்றி) உச்ருதமான வாகாசத்திலேறும்படி பண்ணி, பரமாகாசமான நித்ய விபூதியிலே கொண்டுபோ யென்றபடி. (உயர்நிலையுந்தந்து)ச்ரேஷ்ட்டமான ஸித்தியையுங்கொடுத்து, அபஹதபாப்மத்வாதியான ஸ்வஸ்வரூபாவிர்பாவத்தைக் கொடுத்தென்றபடி. உயிர்நிலையென்று பாடமாகுலு மிதுவேபொருள், (பெருவிலங்காமருள்தன்னால்) பெரியதான விலங்குபோலே யாகாநின்ற தன்னுடைய க்ருபையாலே புணரக்கொடுக்கிலும் போகவொட்டாரோ யென்று க்ருபையாலே நம்மை விடாததை நினைத்திங்கு பெருவிலங்கென்றது அருளை. (தன்னடிக்கீழ்ப்பிரியாத) தன்திருவடிகளின் கீழேவிட்டுப் பிரியாதவர்களான, (அமரருடன்) நித்யஸூரிகளுடனே, (பிணைத்து) சேர்த்து, நித்யஸூரிகளுடனே யொருகோர்வையாகச்சேர்த்து என்றபடி, (அங்கு) அந்த பரமபதத்திலே, (தன்னோருருவில்) தனக்க ஸாதாரணமான வொருசரீரத்திலே, பரமபத நிலயமான தன்பரவாஸுதேவ மூர்த்தியிலே யென்றபடி. (மிக) அதிகமாக, (செய்விக்கும்) செய்யும்படி பண்ணிவைக்கும், அனுபவருசியாலே யுத்தரோத்தரம் நாம் செய்யும்படி பண்ணும தான வென்றபடி. இது போகவிசேஷணம், (உம்பர்) உன்னதஸ்த்தானவர்த்திகள், நித்யஸூரிகளுடைய வென்றபடி, (போகம்) போகத்தை, நித்யஸூரிகள் பண்ணும் கைங்கர்யத்தையும் அத்தால்வந்த வனுபவ விசேஷத்தையு மென்றபடி. (உகந்துதருந்திருமாலே) ஸந்தோஷித்துக் கொடுக்கும் ஸ்ரீயஃபதியை, ஸந்தோஷத்தாலே நமக்கு ஸகலபோகங்களையுங் கொடுக்கும் ஸ்ரீயஃபதியை, (நாமே)இப்படி யவனிடத்தில் நின்றும் ஸகல புருஷார்த்தங்களையும் பெறப்புக்குற நாம் (உகந்தோம்) ஸந்தோஷித்தோம். இப்படிப்பட்ட நிருபாதிக க்ருபாவானுண்டோவென்று ஸந்தோஷித்தோம். ஸந்தோஷிப்பித்தோமென்று ணிஜந்தமாயும் சொல்லலாம், இந்தப்பலன்களை நாகுபெறும்படியா யத்தாலே யவனை நாம் ஸந்தோஷிப்பித்தோம். (ரு)

இப்படிபட்ட ப்ரணவாதியாக சதுர்த்திபர்யந்த முண்டான திருமந்த்ரத்துனுடைய பதங்களுக்கு விசதமாக வர்த்தமருளிச் செய்து பின்பு மந்த்ரத்துக்கு முழுக்கயோஜனைகளும் நாலுவிதமாக வருளிச்செய்து பின்னும் சிலவர்த்தங்களைத் திருமந்த்ரத்திற்கு கம்யமாக வருளிச்செய்து தத்வஹித புருஷார்த்தங்களை ப்ரதிபாதிக்கிறதென்கிற வந்திம யோஜனையிலே நோக்காக ப்ரணவாதிமுதல் பதத்ரயங்களிலிந்த விந்த வர்த்தங்களருளிச்செய்தோமென்று ஸுகபோதார்த்தமாக வொருப்பாட்டாலே காட்டுகிறுர்.

சு-மூ.—உறவையிசைந்திறையல்லாவொருவர்க்கன்றி
யொண்சுடராயோரெழுத்திலோங்கிநின்றோம்
துறவறுந்தூய்மதியுந்துயரந்துறவுந்துய்யவர்கட்
காண்மையுமிரண்டிலுணர்த்தோம்
அறமுயலுமனைத்துறவாயனைத்துமேந்து
மம்புயத்தாள்கணவனைநாமணுகப்பெற்றோம்
பிறவியறுத்தடிசூடியடிமையெல்லாம்
பிரியாதவமரருடன்பெற்றோம்நாமே. (சரு)

---

(ப-ரை.) நாம் - ஸதாசார்யகடாக்ஷத்தாலே திருமந்த்ரார்த்தங்களை விசதமாக வறிந்தநாம், ஓரெழுத்தில்-ஏகாக்ஷரமான ப்ரணவத்தில், உற வை-ஸர்வேச்வரனுக்கும் நமக்குமுள்ள ஸ்வஸ்வாமிபாவஸம்பந்தத்தை, இசைந்து - அங்கீகரித்து, என்றும் - ஸர்வகாலத்திலும், ஒண் - ப்ரகா சிக்கின்ற, சுடராய் - தேஜோரூபியாய், இறையில்லா - தனக்கு நியந்தா வொருவருமில்லாத, ஒருவர்க்கு - ஸர்வேச்வரன் ஒருவனுக்கே, என்று- சேஷபூதர்களென்று, ஓங்கி - உயர்ந்து, நின்றோம், இரண்டில் - இரண் டக்ஷரமானநமஸ்ஸில், துறவு - த்யாகசப்தவாச்யமான, அறமும் - பரம தர்மமான சரணாகதியையும், தூய்மதியும் - பரிசுத்தமான "நமம"வென் கிற அகங்கார மமகாரநிவ்ருத்திரூப புத்தியையும், துயரந்தீர்ப்பும்-துக்க நிவ்ருத்தியையும், தூயவர்கட்கு-பரிசுத்தரான பாகவதர்களுக்கு, ஆண் மையும் - சேஷபூதரானதன்மையையும், உற்றோம் - பெற்றோம், அனு ஷ்டானபர்யந்தமாக அறியப்பெற்றோம். அறமுயலும்-சரணாகதரக்ஷண தர்மாநுஷ்டானத்தில் முயற்சிசெய்பவராய், அனைத்துறவாய் - ஸர்வ விதபந்துவாய், அனைத்தும்ஏந்தும் - ஸர்வபதார்த்தங்களையுந் தரியா நின்ற, அம்புயத்தாள் - தாமரஸவாஸிநியான பெரியபிராட்டியாரது, கணவனை - பர்த்தாவான புருஷோத்தமனை, அணுகப்பெற்றோம்-கிட்ட ப்பெற்றோம், பிறவி - ஜன்மஸம்பந்தத்தை, அறுத்து - சேதித்து, அடி சூடி - எம்பெருமான் திருவடிகளை சிரஸ்ஸிலணிந்து, பிரியாத - என் றும் எம்பெருமானைப்பிரியாத, அமரருடன் - நித்யஸூரிகளுடன், அடி மையெல்லாம் - தாஸவ்ருத்தி யெல்லாவற்றையும், நாம்பெற்றோம்-நாம டைந்தோம், நிச்சயமாய் அடையப்போகின்றோ மென்கை. (சு)

---

வியாக்கியானம்.

(நாம்) ஸ்வஸ்வரூப பரஸ்வரூபாதிகளை யறிந்த நாம், (ஓரெழுத் தில்) ஏகாக்ஷரமான ப்ரணவத்திலே, (உறவையிசைந்து) ஸம்பந்தத் தை யங்கீகரித்து, ஸவிபக்திகமானவகாரத்தில் ஈச்வரனோடே சேஷத்வ ரூப ஸம்பந்தத்தை போக்யமாக வங்கீகரித்தென்றபடி. (இறையல்லா) ஈசுவரனல்லாத, (ஒருவர்க்கன்றி) ஒருவருக்கும் யோக்யனாகவன்றிக்கே, நிருபாதிகேச்வரனல்லாத ஒருதேவதைக்கும் தாஸனாகவன்றிக்கேயென்

வியாக்யானம்.

றபடி, மத்யமாக்ஷரார்த்தமிது. (ஒண்சுடராய்) விலக்ஷணமான தேஜஸ்ஸாய், ஜ்ஞாதாவுமாய், ஜ்ஞாநஸ்வரூபனுமாயிருக்குகையே நமக்கு வைலக்ஷிண்யம். (ஓங்கிநின்றேம்) ஓங்கிக்கொண்டிராநின்றேம், ஓங்குகையாவது சேஷப்ரதாநமான வர்ஜுநரதம்போலே ப்ரதமாந்த முக்ய விசேஷ்யதயா ஜீவப்ரதாநமாயிருக்கை, ஸ்வஸ்வரூபந் தெளிந்துநிற்கையே ஓங்குகையாகவுமாம். (இரண்டில்) அக்ஷரத்வயாத்மகமான நமஸ்ஸிலே - (துறவறும்) துறவு, ஸம்பந்தம், அறுகை - அற்றுப்போகை, ஸ்வஸ்வகீயங்களோடே தனக்கு சேஷித்வ ஸம்பந்த மற்றுப்போகையும் (தூய்மதியும்) பரிசுத்தமான புத்தியும், ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி ஜ்ஞாநமுமென்றபடி, ஸம்பந்தத்தை யற்றுப்போகும்படி பண்ணுந் தூய்மதியென்றும் யோஜிக்கலாம். (துயரந்துறவும்) துயரம், துக்கம், துறக்கை, துறந்துபோகை, துக்கங்கள்விட்டுப்போம் ப்ரகாரங்களும், இத்தால் ஸகலதுக்க நிவர்த்தகங்களான வுபாய விசேஷங்கள் விவக்ஷிதம், (துய்யவர்கட்காண்மையும்) பரிசுத்தாளான பாகவதர்களுக்கு தாஸாளாகவானமையும் (உரைத்தோம்) இந்தவர்த்தங்களை நமஸ்ஸிலே நன்றாகச் சொன்னேம். (அற) அத்யந்தம், (முயலும்) அபிநிவேசிக்குமவர்களான, (அனைத்துறவாய்) உறவு-ஸம்பந்தம், ஸகலஸம்பந்தமுமாய், மாத்ருத்வாதி ஸகலஸம்பந்தமுமாய், அத்யபிநிவிஷ்டாளான மாதாபிதாக்கள்போலேயா யென்றபடி. (அனைத்துமேந்தும்) ஸகலத்தையும் தரியாநிற்குமவரான, (அம்புயத்தாள்கணவனை) அம்புயத்தில் வஸிக்குமவள் அம்புயத்தாள், கணவன் - நாயகன், கமலவாஸிநியான பிராட்டிக்கு நாயகனான ஸ்ரீய:ப்பதியை (நாம்) ததாயத்த ஸ்வரூபஸ்திதிகளான நாம், (அணுக) கிட்ட, (பெற்றேம்) பேறுடையவர்களாகவானேம், அவன்கிட்டுகையே பேறென்றபடி, இவ்வளவும் நாராயணசப்தார்த்தம். (நாமே) அவனை உபாயோபேயமாகப் பற்றினநாம், (பிறவி) ஜன்மத்தை, ஜன்மஹேதுவான ப்ரக்ருதிஸம்பந்தத்தை, (அறுத்து) சேதித்து, ஸவாஸநமாகப் போக்கியென்றபடி, (அடிசூடி) அவன்திருவடிகளை சிரோபூஷணமாக தரித்துக்கொண்டு, (பிரியாதவமரருடன்) ஸதாபச்யந்தியென்கிறபடியே ஒருநாளு மவனைவிட்டுப் பிரியாத நித்யஸூரிகளோடேகூட, (அடிமையெல்லாம்) தாஸக்ருத்யமெல்லாம், அநுபவ பரீவாஹமாய்வரும் கைங்கர்யமெல்லாம் (பெற்றேம்) அடைந்தோம், பெறப்புகுகிறேமென்கிற திங்குபெற்றேமென்றிருக்கிறது. வர்த்தமாந ஸாமிப்யே வர்த்தமானவ்யபதேசঃ, இது சதுர்த்யர்த்தம். (சு)

இப்படி ப்ரதமாதிகாரத்தாலே, திருமந்த்ரத்துக்கு பதவாக்ய யோஜனைகளை யருளிச்செய்து த்விதீயாதிகாரத்தாலே த்வயத்துக்கர்த்தம் அருளிச்செய்யப் புகுகிறவராய் அடியிலே யந்த த்வயப்ரதிபாத்யமான வுபாயானுஷ்டாநத்துக்கு யோக்யமான வதிகாரத்தையும் நிருபியா

எ-மூ.—கருமமெனஞானமெனவதினுற்கண்ட
வுயிர்கவருங்காதலெனக்கானிலோங்கும்
அருமறையாற்றருநிலையிந்நாளில்லாவடியேனை
யலையாதவண்ணமெண்ணித்
தருமமுடையாருரைக்கயானறிந்துதனக்கென்று
வடிமைக்காவாழ்ச்சிவேண்டித்
திருமகளோடொருகாலும்பிரியாநாதன்
றிண்கழலேசேதுவெனச்சேர்கின்றேனே. (சசு)

(ப-ரை.) கருமமென - கர்மயோகமென்ன, ஞானமென - ஜ்ஞானயோகமென்ன, அதனுல் - அந்த கர்மஜ்ஞான யோகங்களால், கண்ட - காணப்பட்ட, உயிர் - ஜீவாத்மாவை, கவர் - அபஹரிக்கின்ற, காதலென - பக்தியோகமென்ன, இவைகளாகிற கானில் - அரண்யத்தில், ஓங்கும் - வ்ருத்தியாகாநின்றுள்ள, அருமறையால் - அரியமறைகளால், தரும் - உபதேசிக்கப்பட்ட, நிலையில் - ஸ்த்திதியில், அடியேனை - அடியேனை, இந்நாளெல்லாம் - இந்தநாள்களிலெல்லாம், அலையாதவண்ணம் - அலையாதபடி, எண்ணி - நினைத்து, இவனலையாதிருக்கவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி யென்கை. தருமமுடையார் - தர்மவான்களான நம்மாசாரியர்கள், உரைக்க - உபதேசிக்க, யான் - அடியேன், அறிந்து - மந்த்ரரத்னத்தின் அர்த்தங்களையறிந்து, தனக்கென்று - மமவென்னுமல், மமகாரத்தை விட்டென்கை. அடிமைக்காம் - தாஸவ்ருத்திக்கு யோக்யமான, வாழ்ச்சி - பரமபதப்ராப்தியாகிறவாழ்வை, வேண்டி - பெற வேண்டி, திருமகளோடு - பெரியபிராட்டியாரோடு, ஒருகாலும் - ஒரு காலத்திலும், பிரியா - பிரியாதவரான, நாதன் - ஸர்வஸ்வாமியான நாராயணனது, திண் - திருடமான, ஆச்ரிதரை விடாததான வென்றபடி. கழலே - திருவடிகளே, சேதுவென - ஸம்ஸாரஸாகரத்திற்கு அணையென்று அத்யவஸித்து, சேர்கின்றேன் - அடைகின்றேன், சரணகதிசெய்கின்றே னென்கை. (எ)

வியாக்யானம்.

நின்றுகொண்டு அந்தத்வி தீயரஹஸ்யத்துக்கு ஸமுதிதமான வர்த்தத்தை ஸ்வாநுஸந்தான ரூபமான வொருபாட்டாலே காட்டுகிருர்.

(கருமமென) கருமம் - கர்மம், என - என்ன, கர்மயோகமென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படுமதென்ன. (ஞாநமென) ஜ்ஞாநயோகமென்ன (அதினுல்கண்ட) அந்த கர்மஜ்ஞாநயோகங்களாலே காணப்படுமதான, (காதலென) ப்ரேமமென்ன, ப்ரேமவிசேஷமான பக்தியோகபரம் இங்கு காதல்சப்தம். கர்மயோகாதிகளாலே யாத்மஸ்வரூபந்தெளிந்து பின்பு அந்தவாத்மாவாலே பகவத்விஷயத்தில் அபிநிவேசத்தோடே யநுஷ்ட்டிக்கப்படும் ப்ரேமவிசேஷமான பக்தியோகமென்ன,

அ-மூ.—வினைவிடுத்துவியன்குணத்தாலெம்மையாக்கி
வெருவுரைகேட்டவைகேட்கவிளம்பினளுந்
தனையனைத்துமடைந்திடத்தானடைந்துநின்ற
தன்றிருமாதுடனிறையுந்தனியாநாதன்
நினைவழிக்கும்வினைவழிக்குவிலக்காய்நிற்கு
நிகரில்லாநெடுங்குணங்கணிலைபெறத்தன்
கணைகழற்கீழடைக்கலமாங்காட்சிதந்து
காரணனுந்தன்காவல்கவர்கின்றானே. (சஎ)

(ப - ரை.) வினை - பாபங்களை, பாபபலமான அஜ்ஞானாதிகளை. விடுத்து - போக்கி, வியன் - மேன்மைதங்கிய, குணத்தால் - குணங்களினால், எம்மை - நம்மை, ஆக்கி - ஜ்ஞானாதிகளாலே பரிபக்வமாக்கி, வெருவுரை - ஆர்த்தத்வநியை, கேட்டு - தான்கேட்டு, அவை - அந்த ஆர்த்தத்வநிகளை, கேட்க - ஸர்வேச்வரன் கேட்கும்படி, விளம்பினளும் - சொல்பவளும், தனை - தன்னை, அனைத்தும் - ஸகலசேதநரும், அடைந்திட - ஆச்ரயிக்க, தான் - தான், அடைந்து நின்ற - ஸர்வேச்வரனை ஆச்ரயித்திருந்தவளுமான, தன்திருமாதுடன் - தனக்கஸாதாரணையான பெரியபிராட்டியாரோடு, இறையும் - க்ஷணகாலமும்-தனியா - பிரியாத, நாதன் - ஸர்வஸ்வாமியான நாராயணன், நினைவு, ஸ்ம்ருதியை, அழிக்கும் - அழிக்கின்ற, வினைவழிக்கு - பாபமார்க்கத்திற்கு, விலக்காய்நிற்கும் - ப்ரதிபந்தகமாய்நிற்கின்ற, நிகரில்லா - ஒப்பில்லாத, நெடுங்குணங்கள் - அதிசயிதங்களான குணங்கள், நிலைபெற-நிலையாயிருக்கும்படி, தன் - தனது, கணை - வீரச்சிலம்புகள் சப்திக்கின்ற, கழற்கீழ் - திருவடிகளின்கீழே, அடைக்கலமாம் - ரக்ஷ்யவஸ்துவாகவாகிற, காட்சி - பெருமையை, தந்து - கொடுத்து, காரணனுந் தன்காவல் - ஜகத்காரணபூதனை தன்னுடைய ரக்ஷகத்வத்தை, கவர்கின்றான் - நிலைநிறுத்திக்கொள்கின்றான். (அ)

வியாக்கியானம்.

வென்றபடி. இவ்வளவுக்கு நிலையோடங்வயம், (கானிலோங்கும்) கான்-வநம், அதில் ஓங்குகை அத்யயநம்பண்ணுகை, (அருமறையால்) ஸூக்ஷ்மமான வேதத்தாலே, "அரண்யே தீயீத" வென்கிறபடியே அரண்யத்திலே அத்யயநம் பண்ணப்படும் ஸூக்ஷ்மார்த்தப்ரதி பாதகமான வேதாந்தத்தா லென்றபடி. (தருநிலை) தருகிறநிலை, அந்த வேதாந்தபாகத்தாலே ப்ரதிபாத்யமான பூர்வோக்தபக்தி யோகாதிருபஸித்தி யென்றபடி. (இந்நாள்) இப்போது, (இல்லாவடியேனை) பக்த்யாத்யபாவத்தாலே யந்த பக்த்யாதிகளிலே யதிகாரமில்லாத வடியேனை, (அலையாத வண்ணம்) அலையாதிருக்கும் ப்ரகாரத்தை, வண்ணம் - ப்ரகாரம், (எண்ணி) நினைத்து, முக்யோபாயா நதிகாரத்தால் வந்தபலத்தில் இழ

கூ-மூ.—என்னதுயான்செய்கின்றேனென்னுதார்க்கு
மின்னடிமைதந்தளிப்பானிமையோர்வாழும்
பொன்னுலகிற்றிருவுடனேயமர்ந்தநாதன்
புனலாரும்பொழிலரங்கந்திகழமன்னி
தன்னகலமகலாததகவாலோங்குந்
தகவுடனேதன்கருமந்தானேயெண்ணி
என்னையுமடைக்கலங்கொண்டஞ்சறந்தென்
னழலாறநிழலாரவளிகின்றனே. (சஅ)

(ப-ரை.) என்னது - என்னுடையது, யான் செய்கின்றேன் - நான் கர்மங்களை யநுஷ்டிக்கின்றேன், என்னுதார்க்கும் - என்று சொல்லாமல் எம்பெருமான் தன்கருமங்களைத்தானே தன் ப்ரீதிக்காக செய்விக்கின்றனென்று ஸாத்விகத் யாக பூர்வகமாக கர்மானுஷ்டானம் செய்பவர்க்கும், இன்னடிமை - போக்யமான கைங்கர்யத்தை, தந்து - கொடுத்து, அளிப்பான் - ரக்ஷிக்கின்றவனும், பொன்னுலகில் - அப்ராக்ருத லோகத்தில், திருவுடனே - பெரியபிராட்டியாருடனே, அமர்ந்த - நித்யவாஸம் செய்கிற, நாதன் - ஸர்வஸ்வாமியுமான நாராயணன், புனல் ஆரும் - ஜலம் நிறைந்த, பொழில் - சோலைகளையுடைய, அரங்கம் - ஸ்ரீரங்கமானது, திகழ - பிரகாசிக்கும்படி, மன்னி - ஸ்திரப்ரதிஷ்

வியாக்யானம்.

வாலே நான் அலையாத ப்ரகாரத்தை நினைத்தென்றபடி. (தருமமுடையாருரைக்க) தர்மமுடையவர்கள் சொல்ல, சாஸ்த்ரங்களாலே ஸகலதர்மங்களையு மறிந்தவர்கள் க்ருபையாலே நமக்குச்சொல்ல, (யானறிந்து) அவர்களுக்குதாஸனுன அடியேனறிந்து, இவ்வளவாலதிகாரம் சொன்னபடி. மேல் த்வயார்த்தம், அதிலன்வயக்ரமத்தாலே உத்தரகண்டார்த்த பூர்வகமாக வருளிச்செய்கிறுர். (தனக்கென்னு) தனக்கு சேஷமென்று சொல்லாததான, (அடிமைக்கா) அடிமைசெய்கைக்காக, (வாழ்ச்சி வேண்டி) வாழ்க்கையைவேண்டி, செய்கிற கைங்கர்யம் ஸ்வாதீனமென்றும் ஸ்வசேஷமென்றும் எண்ணுத பகவத்கைங்கர்யமாகிற வாழ்ச்சியை அபேக்ஷித்துக்கொண்டென்று விசிஷ்டார்த்தம். இதுத்தரகண்டார்த்தம். (திருமகளோடு) பெரியபிராட்டியாரோடே, (ஒருகாலும்) ஒருக்காலமும், ஸர்வதாவென்றபடி, (பிரியாதநாதன்) விச்லேஷியாத ஸ்வாமியினுடைய, புருஷகாரமாயும் உபாய விசேஷமாயு மாகாநிற்கிற திருமகளோ டொருகாலும் பிரியாத ஸர்வஸ்வாமியினுடைய வென்றர்த்தம். (திண்கழலே) த்ருடமான திருவடிகளையே, அதுக்குத் திண்மையாவது ஸ்வாச்ரிதரை உபாயாந்தர வ்யவதானமறரக்ஷிக்கை, (சேதுவென) ஸேதுவென்று, ஸேதுவாவது தரணத்திற்குபாயம், ஸம்ஸாரஸாகரதரணோபாயமாக வென்றபடி, (சேர்கின்றேனே) சேராநின்றேன், அடையாநின்றே னென்றபடி. (எ)

ட்டிதனுயிருந்து, தன்னகலம் - தன்ஸமீபத்தை விட்டு, அகலாத - நீங்காத, தகவால் - க்ருபையினால், ஓங்கும் - வ்ருத்தியடைந்த, தகவுடனே - ப்ரஸாதத்தோடே, தன்கருமம் - மோக்ஷப்ரதான ரூபமான தன் க்ருத்யத்தை, தானே யெண்ணி - தானே விரகுபார்த்து, என்னை - அடியேனை, நயவடைக்கலம் கொண்டு - இன்பத்திற் கிடமாகிய ரக்ஷ்ய வஸ்துவாக திருவுள்ளம்பற்றி, மேன்மைபெற்ற சரணாகதியை செய்வித்து, அஞ்சல்தந்து - அபயப்ரதானம் செய்து, என் - அடியேனது, அழல் - ஸம்ஸாரதாபம், ஆற - ஆறும்படியாக, நிழல் - தன் திருவடிநிழலை, ஆர - பூர்ணமாக, அளிக்கின்றான் - கொடுக்கின்றான், விரைவில் - கொடுக்கப்போகின்றானென்கை. (கூ)

---

வியாக்கியானம்.

இப்பாட்டுக்கனந்தரம் ச்ருத்யாதிகளிலென்று துடங்கி பூர்வகண்டத்திலுள்ள ஸ்ரீசப்தாதிகளானவாறு பதங்களுக்குள்ள வர்த்தங்களை விஸ்தாரமாக வருளிச்செய்து இப்படி தாமருளிச்செய்த வர்த்தங்களையெல்லாம் ஸங்க்ரஹியா நின்றுகொண்டு இந்த பூர்வகண்டத்திலுக்தமான வுபாயத்தை யந்தஸ்ர்வேச்வரனே நம்மைக்கொண்டனுஷ்ட்டிப்பித்தானென்கிறா ரொருபாட்டாலே.

ஸ்ரீசப்தத்துக் குண்டான நாலு தாதுலப்தமான வார்த்தங்களை ப்ரதம மருளிச்செய்கிறார். (வினைவிடுத்து) பாபங்களை விடுவித்து, பாப ஹேதுவான கர்மங்களைப் போக்கி யென்றுமாம். இது "ஶ்ருணாதிநிகிலம் தோஷம்" (ச்ருணாதிநிகிலந்தோஷம்) என்கிறபடியே - ச்ருஹிம்ஸாயாம் யென்கிற தாத்வர்த்தம். (வியன்குணத்தால்) விலக்ஷணமான குணத்தாலே, (எம்மையாக்கி) ஸ்வாச்ரிதரான நம்மை யோக்யாளாக்கி, நமக்கு நல்லகுண பாகத்தை யுண்டாக்கி யென்றபடி. இது ச்ராபாகே யென்கிற தாத்வர்த்தமான "ஶ்ரீணாதி ச குணைர்ஜகத்" (ஸ்ரீணாதிசகுணைர்ஜகத்) என்கிற வர்த்தாநுவாதம். (வெருவுரைகேட்டு) வெருவுரையாவது, ஆச்ரிதருடைய ஆர்த்தநாதம், அத்தைக்கேட்டு, (அவை) அந்த ஆர்த்தத்வநியை, (கேழ்க்க) ஈச்வரன் கேழ்க்கும்படி, (விளம்பினாளும்) சொல்லாநிற்குமவளும், ஆஶ்ரிதார்த்தத்வநியைக் கேட்டு அத்தை யீச்வரனை கேழ்ப்பிக்கு மவளுமென்றர்த்தம். யத்வா (விளம்பி) சொல்லி, (நாளும்) திங்கள் தோறும், இது ஶ்ருஶ்ரவணே யென்கிற தாதுலப்தமான வர்த்தத்வயம் (தன்னை) தன்னை, ஸகலவஸ்துவுக்கு மாஶ்ரயணீயையான தன்னை, (அனைத்தும்) எல்லாவஸ்துவும் (அடைந்திட) அடையாநிற்க, (தான்) அவர்களாலே யாஶ்ரயிக்கப்பட்ட தான், (அடைந்து) ஈச்வரனையடைந்து, (நின்ற) அப்படியே ஸ்த்திரப்ரதிஷ்டிதையா யிராநின்ற, (தன்திருமாதுடன்) மாது-ஸ்த்ரீ, தனக்கு பத்நியாய் ஸ்ரீசப்தவாச்யையான பிராட்டியுடன், இது ஶ்ரிங் ஸேவாயாமென்கிற

வியாக்யானம்.

தாதுலப்தமான வர்த்தத்வயம் (இறையும்) ஈஷத்காலமும், (தனியாநா தன்) தனிகை-விச்லேஷிக்கை; அதில்லாத ஸ்வாமி, புருஷகாரபூதை யாயு முபாய விசேஷமாயு மிருக்கிற பிராட்டியோடே யீஷத்கால மும் பிரியாதவந்தஸ்வாமியானவன், இது மதுபர்த்தம். (நினைவழிக் கும்) நினைவு - ஸ்ம்ருதி, அழிக்கை - போக்குகை, வகுத்தவிஷயத்திலே ஸ்ம்ருதியையழிக்கும் தான், (வினை) பாபங்களுடைய (வழிக்கு) மார்க் கத்துக்கு, (விலக்காய்நிற்கும்) விலக்காகவாகா நின்றிருக்குமதான, (நிகரில்லா) ஸத்ருசமில்லாதவைகளான, (நெடுங்குணங்கள்) நெடுமை யான குணங்கள், நெடுமை - அனுபந்திபர்யந்தம் போகை, பாபமார்க்க நிவர்த்தகங்களாய் ஸத்ருசங்களாய் உபாயத்வோப யுக்தங்களான வாத் ஸல்யர்தி குணங்கள் என்றபடி (நிலைபெற)ஸ்த்திதிபெறுகைக்காக, இது க்குத் தந்தென்கிறத்தில ந்வயம், இது நாராயணசப்தார்த்தம் (தன்கனை கழல்கீழ்) த்வநியாநின்ற தன் திருவடிகளின் கீழே, கனை - த்வநிக்கை, திருச்சிலம்பு முதலான வாபரணத்வநியுடைய திருவடிகளின்கீழே, (அடைக்கலமாம்) ரக்ஷ்யவஸ்துவாக வாகாநிற்கிற, அடைக்கலம் - ரக்ஷ் யவஸ்து, காட்சி-காங்க்ஷிதத்தை, தனக்கு ஸர்வரக்ஷகமான அவன் திரு வடிக்கீழே நாம் ரக்ஷ்யவஸ்துவாகையே நமக்குகாங்க்ஷிதம், அத்தைத் தந்து, இவ்வளவு த்விதீயாந்த பததவ்யார்த்தம், (காரணனுந்தன்காவல்) ஜகத்காரண பூதனுன தன்னுடைய ரக்ஷணத்தை, காவல் - ரக்ஷணம். (கவர்கின்றுனே) கவர்கையாவது அபிநிவேசத்தோடே வ்யாபரிக்கை. தன் திருவடிகளை நமக் குபாயமாகக் கொடுத்து தன் ரக்ஷணத்தை ஸ்தா பியா நின்றுனென்றர்த்தம், இது தாத்வர்த்தம். (அ)

இப்படி பூர்வகண்டார்த்தம் அருளிச்செய்து பின்பு உத்தரகண் டத்திலுள்ள பதத்ரயத்துக்கு முக்யார்த்தமான களையற்ற கைங்கர்யத் தை விஸ்தாரமாக வருளிச்செய்து இக்கைங்கர்யங் கொள்ளுகைக்காகவு மிந்த சேதநவர்க்கத்தை ரக்ஷிக்கைக்காகவும் பரமபதத்தைவிட்டு ஒரு பயணமெடுத்து கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறுனென்று சொ ல்லா நின்றுகொண்டு அதிகாரார்த்தத்தையும் ஸங்க்ரஹிக்கிறுர்முடிவி லொரு பாட்டாலே,

(இமையோர்வாழும் பொன்னுலகில்) நித்யஸூரிகள் வாழாநின் றுள்ள ஸ்ப்ருஹணீயமான லோகத்திலே, நித்யஸூரி போக்யமான பர மபதத்தி லென்றபடி. (திருவுடனே யமர்ந்தநாதன்) பெரியபிராட்டியா ரோடே கூட ஸ்த்திரப்ரதிஷ்டிதனுன ஸர்வஸ்வாமியானவன், இதுக்கு க்ரியாதிகளோ டந்வயம் (என்னது) எனக்குச் சேஷம், (யான்செய்கின் றேன்) நான் ஸ்வதந்த்ரனுய் செய்யாநின்றேன், (என்னுதார்க்கும்) இப் படி யென்னுதவர்களுக்கும், கைங்கர்யத்தில் ஸ்வாதீந ஸ்வார்த்தகர்த்ரு தத்வரூப ப்ரமமற்றவர்களுக் கென்றபடி, இது இங்குற்ற நமச்சப்தார்த்

கo-மூ.—ஒண்டொடியாள்திருமகளுந்தானுமாகி
யொருநினைவாலீன்றவுயிரெல்லாமுய்ய
வண்டுவரைநகர்வாழவசுதேவர்க்காய்
மன்னவர்க்குத்தேர்ப்பாகனாகிநின்ற
தண்டுளவமலர்மார்பன்றானேசொன்ன
தனித்தருமந்தானெமக்காய்த்தன்னையென்றுங்
கண்டுகளித்தடிசூடவிலக்காய்நின்றக்
கண்புதையல்விளையாட்டைக்கழிக்கின்றானே. (சகூ)

---

(ப-ரை.) ஒண்டொடியாள்-ஒளிபொருந்திய ஹஸ்தகடகமுடைய, திருமகளும் - பெரிய பிராட்டியாரும், தானுமாகி - தானுமாய், ஒரு நினைவால் - ஏகாபிப்ராயமாய், ஈன்ற - ஸ்ருஷ்டித்த, உயிரெல்லாம் - சேதநவர்க்கமெல்லாம், உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாக, வண் - வளம் பொருந்திய, துவரைநகர் - த்வாரகாபட்டணம், வாழ - வாழும்படியாக, வஸுதேவர்க்காய் - ஸ்ரீவஸுதேவ புத்ரனாய் திருவவதரித்து, மன்னவற்கு - அரசனாகிய அர்ஜுநனுக்கு, தேர்ப்பாகனாகிநின்ற - ரதஸாரதியாய் நின்றவனாகிய, தண் - குளிர்ந்த, துளவமலர் - திருத்துழாய் மாலையை, மார்பன் - மார்பிலேயணிந்த ஸ்ரீயஃபதியானவன், தானேசொன்ன - அர்ஜுநனை வ்யாஜீகரித்துதானே அருளிச்செய்த, தனி - ஒப்பற்ற, தருமம் - பக்தியோகமாகிற மோக்ஷோபாயமாக, எமக்கு - அசக்தராய் விளம்பாக்ஷமராய் அகிஞ்சநராய் பரந்யாஸம்பண்ணின நமக்கு, தான் ஆய்-தானேயாய், தானே பக்தியோகஸ் தானத்திலே நின்று என்கை; தன்னை-தன்னை, என்றும்-எப்போதும், கண்டு - ஸாக்ஷாத்கரித்து, களித்து - ஸந்தோஷித்து, அடிசூட - திருவடிகளை சிரஸா வஹிக்கைக்கு, கைங்கரியம் பண்ணுகைக் கென்கை; விலக்காய்நின்ற - ப்ரதிபந்தகமாயிருந்த, கண்புதையல் விளையாட்டை - தத்வஹித புருஷார்த்த விவேகமென்னும் கண்ணை மறைக்கும் லீலையை, கழிக்கின்றான் - போக்குகின்றான். (கo)

---

வியாக்கியானம்.

தம், (இன்னடிமை) போக்யமான தாஸக்ருத்யத்தை, (தந்து)ஸ்பஷ்டம். (அளிப்பான்) ரக்ஷிக்கவேணுமென் றிச்சையுடையவனாய், அளிக்கை-ரக்ஷிக்கை. மார்கழி நீராடுவான், திருவடித் தொழுவானி த்யாதிபோலேயர்த்தம். போக்யமான கைங்கர்யத்தைக் கொடுத்து ரக்ஷிக்கைக்காக வென்று தாத்பர்யம். இதுக்கு மன்னியென்கிறத் தோடந்வயம். (புனலாரும்) ஜலங்களாலே ஸம்ருத்தமாயிருக்கிற, புனல்-ஜலம், ஆர்-பூர்த்தி, (பொழில்)உத்யாநங்களையுடைய, (அரங்கம்) வண்டினமுரலுஞ்சோலை இத்யாதிப்படியே நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்புமுள்ள கோயிலிலே, (திகழ்) விளங்கும்படி, (மன்னி) ஸ்திரமாக கண்வளர்ந்தருளி, கோயில்

கக-மூ.—தூயமனத்தரதுறையணுகாததுணையிலியேன்
ஐயமறுத்துனதாணைகடத்தலைகற்றினைநீ
கையமர்சக்கரக்காவனீகாக்குந்திருவருளால்
வையமளந்தவடிக்கீழடைக்கலம்வைத்தருளே. (௯௦)

---

(ப - ரை.) கை - கையில், அமர் - நிலைபெற்ற, சக்கரக்காவல் - சக்ராயுதத்தை யுடைய ஸர்வரக்ஷகனே, தூய - பரிசுத்தமான, மனத்தர் - மனதை யுடையவர்களான பக்தியோக நிஷ்டர்களது, துறை-மார்க்கத்தை, பக்தியோக ரூபமான உபாயத்தை, அணுகாத - கிட்டாதவனை, துணையிலி - ஸஹாயரஹிதனை, என் - எனது, ஐயம் - ஸம்சயத்தை, அறுத்து - சேதித்து, உனது ஆணைகடத்தல் - உன்னுக்கினையை அதிக்ரமித்து நடத்தலை, நீ - நீயே, அகற்றினை - போக்கினுய், வையமளந்த - இவ்வுலகங்களை அளந்த, அடிக்கீழ் - உன் திருவடிகளின் கீழே, காக்கும் - ஜகத்தையெல்லாம் ரக்ஷிக்கின்ற, திரு - மேன்மை பெற்ற, அருளால் - க்ருபையினுலே, அடியேனை - அடைக்கலம் வைத்தருள், ரக்ஷ்யவஸ்துவாக வைத்துக்கொள் - சரணுகதிபண்ணி வைப்பித்துக்கொள் என்கை. (கக)

---

வியாக்யானம்.

திகழும்படி மன்னியென்றுமாம். (தன்னகலம்) தன்னுடைய பரிஸரத்தை, (அகலாத) விச்லேஷியாத, தன்னுடய பார்ச்வத்தை விடாததான வென்றபடி. (தகவாலோங்கு) க்ருபையாலே யோங்கியிருக்கிற, ஸ்வபார்ச்வாநதிலங்கி க்ருபையா ஸர்வோச்சிருதனுயிருக்கிற, (தானே) ரக்ஷகனுயும் ஸ்வதந்த்ரனுயுமிருக்குற தானே, (தன் கருமம்) இங்கு கருமமென்றது வ்யாபாரம், தனக்கஸாதாரண வ்யாபாரமான ரக்ஷணத்தை. (தகவுடனேயெண்ணி) க்ருபையோடேகூட வெண்ணிக்கொண்டு, கருமத்தை க்ருபையோடே யெண்ணுகையாவது நாம்க்ருபாவானுகையாலே ரக்ஷணத்தைவிடில் நம்முடைய க்ருபைக்கு பங்கம்வருமென்று நினைக்கை (என்னையும்) அகிஞ்சனனுன வென்னையும், (அடைக்கலங்கொண்டு) ரக்ஷ்யவஸ்துவாக வங்கீகரித்துக்கொண்டு, (அஞ்சல்தந்து) அஞ்சுகை-பயப்படுகை, அஞ்சல்-அதிலாமை, அத்தைக்கொடுத்து, அபயப்ரதாநம் பண்ணி யென்றபடி. (என்னழலாற) அழல்-அக்நி, என்னுடைய தாபத்ரயாக்நியாறும்படி (நிழல்) தன்திருவடிச் சாயையை "வாஸுதேவதரு‌ச்சாயா" (வாஸுதேவதருச்சாயா) என்றதிறே ப்ரமாணம், (ஆர்) பூர்ணமாக, (அளிக்கின்ருனே) க்ருபைபண்ணுநின்ருன். தாபத்ரயாக்நி தாபத்ரயம் போம்படி தன்திருவடிச் சாயையை க்ருபையாலே பூர்ணமாகக் கொடுத்தானென்று கட்டார்த்தம். இதில் த்வயார்த்த மிருக்கும்படி கண்டுகொள்வது. (கூ)

வியாக்கியானம்.

இப்படி யிரண்டதிகாரத்தாலே ப்ரதமமத்ய மரஹஸ்யார்த்தங்களை யருளிச்செய்து த்ரிதீயாதிகாரத்தாலே சரமச்லோகார்த்த மருளுகைக்காக கீழ்ச்சொன்ன வுபாயம் ஸம்ஸாரநிவர்தக மாகையாலே ஸ்வஸ்ய லீலாரஸபங்கம்வாராதோ, த்வயத்தில் ஸ்ரீவைசிஷ்ட்யமிருக்கத் தத்விருத்தமாக ‹‹ஊ0ஊகூ0›› (மாமேகம்) என்று தான் சொல்லலாமோ; இத்யாதி சங்காபரிஹார பூர்வகமாக வந்தச்லோகாவதார க்ரமத்தை யடியிலொருபாட்டாலே ஸங்க்ரஹிக்கிருர்.

இப்பாட்டு ஸ்ரீமதுத்தரஸாரா ஸ்வாதிநியிலே சரமச்லோகாதிகாரத்திலே ஸ்ரீமத் கோபால மஹாதேசிகனுஃ வ்யாக்யாதமா யிருக்கிறது. அந்த பக்கியையே இங்கும் க்ரமத்துக்காக வெழுதுகிரும்.

(தண்டுளபமலர்மார்பன்) தண்-சீதளமான, துளபம்-திருத்துழாய், மலர் - புஷ்பத்தை, மார்பிலே வக்ஷஸ்தலத்திலே யுடையவனை சரண்யன், கர்த்தா. (ஒண்டொடியாள்) ஒண் - அழகியதாயிருக்கிற, தொடி-ஹஸ்தாபரணத்தையுடைய, (திருமகளும்) பெரியபிராட்டியாரும் (தானுமாகி)நகேவலம்ஸ்வயமேவகிந்து ஸ்ரீயாஸஹிதொபூத்வா இத்யர்த்தஃ. (ஒருநினைவாலீன்ற) ‹‹வைஹ-ஸ்வஸ்யாம்›› (பஹூஸ்யா) மென்று ஏகரூப ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டித்த, (உயிரெல்லாமுய்ய) சேதனரெல்லாருமுஜ்ஜீவிக்கும்படி, இதுக்குத்தானே சொன்ன வென்கிறத்தோடந்வயம். (வண்டுவரைநகர்வாழ) வண்-அழகியதாயிருக்கிற, துவரைநகர்-த்வாரகாபுரம், வாழ-வாழும்படி, த்வாரகாஜந பதம்வாழும்படி(வசுதேவர்க்காய்) வஸுதேவநந்தனுய் அவதரித்து, அநந்தரம் (மன்னவர்க்கு) ராஜாக்களுக்கு-பாண்டவர்களுக்கு, (தேர்ப்பாகனுகி நின்ற) ஸௌலப்யஸௌசீல்யாதிஸ்வ பாவத்தாலே பாண்டவ ஸாரதியாய்நின்ற, (தானேசொன்ன) தண்டுளபமலர்மார்பன் ஸகலஜீவர்களு முஜ்ஜீவிக்கும்படியாக ஸ்வயமேவசொன்னதான, நதுப்ரோஷ்யாதி முகேநவென்று கருத்து. (தனி) அத்விதீயமான, (தருமம்) ‹‹க்ரூஷ்ணஊ0ஸநாதநம்›› (க்ருஷ்ணம்தர்மம் ஸநாதநம்)என்கிறபடியே ஸித்தோபாயபூதனை, (தான்)தாமே, (எமக்காய்)அஸ்மாகம், ஸ்வீக்ருதபரனுய்க்கொண்டு உபாயபூதனுய், (தன்னை) தன்னை (என்றும்)ஸர்வதாயாவதாத்மபாவியாய் (கண்டு)தேசவிசேஷத்திலே கிட்டி ஸாக்ஷாத்கரித்து, (களித்து) ப்ரேமபரவசனுய் (அடிசூட) சிரஸாபாதவஹ நோபலக்ஷித ஸர்வவிதகைங்கர்யத்திற்கு, (விலக்காய் நின்ற) விரோதியாய் நின்ற, (கண்புதையல் விளையாட்டை) ‹‹நயநவியா நயீம்க்ரீடாம் தக்வஹித புருஷார்த்த விவேகசக்ஷுஃ வியாநாத்ம ஸம்ஸார பந்தலீலாம்›› (நயனபிதாநமயீம் க்ரீடாம்தத்வஹிதபுருஷார்த்த விவேகசக்ஷுஃ பிதாநாத்ம கஸம்ஸார பந்தலீலையை) யென்றபடி (கழிக்கின்ருனே) நிவர்த்திப்பிக்க விரகுசெய்கின்ருனே. இங்கு

கஉ-மூ.—அறியாதவிடைச்சியருமறியும்வண்ணம்
அம்புயத்தாளுடனந்நாளவதரித்த
குறையாதுமில்லாதகோவிந்தாநின்
குறைகழற்கீழடைக்கலமாங்குறிப்புதந்தாய்
வெறியாருமலர்மகளுநீயும்விண்ணில்
விண்ணவர்களடிசூடவிருக்குமேன்மை
குறையாதவினையகற்றியடிமைகொள்ளக்
குறுகவொருநன்னுணீகுறித்திடாயே. (ருக)

(ப-ரை.) அறியாத - இடக்கை வலக்கையறியாத, இடைச்சியரும்- கோபிகா ஸ்திரீகளும், அறியும்வண்ணம் - அறிந்து கொள்ளும்படியாக, அம்புயத்தாளுடன் - கமலவாஸினியான பெரியபிராட்டியா ரோடே கூட, அந்நாள் - அந்தநாளிலே, அவதரித்த - திருவாய்ப் பாடியிலே திருவவதாரம் செய்தருளின, குறை - குறைதல், படாதும் - ஈஷத்தும் இல்லாத—, கோவிந்தா - ஆச்ரிதவாத்ஸல்யம் தோற்றும்படி கோவிந்த பதாபிஷேகம் பெற்றவனே, நின் - உனது, குரைகழற்கீழ் - வீரகடகங்கள் சப்திக்கின்ற திருவடிகளின்கீழே, அடைக்கலமாம் - அடைக்கலமாகவாகத்தக்க, குறிப்பு - க்யானத்தை, தந்தாய் - க்ருபைசெய்து கொடுத்தாய், வெறியாரும் மலர்மகளும் - பரிமளம்நிறைந்த தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கும் நித்யயுவதியான பெரியபிராட்டியும், நீயும்—, விண்ணில் - பரமபதத்தில், விண்ணவர்கள் - நித்யஸூரிகள், அடிசூட- திருவடிகளை சிரஸ்ஸில் அணிந்து தாஸ்யம் செய்யும்படியாக, இருக்கும் மேன்மை - இருக்கின்ற மேன்மையிலே, குறையாத - குறைவு படாத, வினை - புண்யபாப ரூபகர்மங்களையெல்லாம், அகற்றி - நீக்கி, அடிமைகொள்ள - அடியேன் செய்யுங் கைங்கர்யங்களைத் திருவுள்ளம் பற்றுதற்கு, ஒரு நன்னாள் - ஒரு நல்லநாளை, குறுக - சீக்கிரத்தில், நீ- நீயே, குறித்திடாய் - நிர்த்தேசிக்கவேண்டும், ஸங்கற்பிக்க வேண்டுமென்கை. (கஉ)

வியாக்யானம்.

“ஸ்வஸ்யலீலாரஸாபேக்ஷயாபி ஸ்வபுத்ரதாஸாதிபூதஸமஸ்தசேதநோஜ்ஜீவநம்” (ஸ்வஸ்யலீலாரஸா பெக்ஷயாபி ஸ்வபுத்ரதாஸாதி பூதஸமஸ்தசேதனோஜ்ஜீவநம்) தனக்கு போகரஸவர்த்தக மாகையாலே லீலாரஸேரச் சேதனம் புருஷார்த்தஹாநகர மன்றென்றபடி. (ஒண்டொடியாள் திருமகளும் தானுமாகி) ஸ்ருஷ்ட்யு பலக்ஷிதஸ்த்திதிஸம்ஹாராதி மோக்ஷப்ரதாநாதிகளும் ஸ்ரீயஃகாரணத்வத் போதகமாகையாலே மாமேகமென்கிற விடத்திலும் ஸ்ரீவைசிஷ்ட்யத்திலே தாத்பர்யமாகையாலே த்வயாத்யுக்தவிசிஷ்ட ப்ரபத்தவ்ய விரோதமில்லையென்று கருத்து. (கo)

வியாக்யானம்.

இப்படி இச்லோகத்தை யவதரிப்பித்து, அதில் பூர்வார்த்த ப்ரதிபாத்யமான வர்த்தங்களை பதசஃவிசதமாக வருளிச்செய்து இப்படி தாமருளிச்செய்த ப்ரபத்தி விதாயக வாக்யார்த்தத்தை யவனை யபிமுகீகரித்து இவ்வுபாயத்தை யகிஞ்சனனுன வெனக்கு அனுஷ்டிப்பிக்கவேண்டும் ரக்ஷகனுன நீயேயென்று சொல்லுகிற வொரு பாசுரத்தாலெ ஸங்க்ரஹிக்கிருர்-

(கையமர்சக்கரக்காவல்) கை - திருக்கையிலே, அமர் - ஸ்திர ப்ரதிஷ்டிதமா யிருக்கிற, சக்கர - திருவாழி யாழ்வானை யுடையவனுன, காவல் - ரக்ஷகனுனவனெ, இத்தால் ஸ்வாராதன விரோதி நிரஸந ஸாமக்ரீ நித்யயோகமும் ரக்ஷணைத் யுக்ததையும் சொல்லித்து, (நீ)- ஸ்வாஸ்ரித விரோதி நிரஸன சீலனுன நீ, காவலமொன்று பாடமானுலும் விசேஷணமாக்கி யிப்படியே யர்த்தங் கொள்ளவேணும். இதுக்கு வைத்தருளென்கிற க்ரியையோட ந்வயம் - (தூயமனத்தர்) பரிசுத்த மனஸ்கர்களுடைய, (துறையணுகாத) அவர்கள் துறையான கர்மயோகாதிகளை கிட்டாதவனுன, துறையென்றத வதரணஸ்தலமாய் லக்ஷணயாபரிசுத்த மனஸ்கர்களிழிந்த வுபாயவிசேஷத்தைச் சொல்லுகிறது. இது ஹேதுகர்பித விசேஷணம், அவர்கள் துறையை யணுகாததினுலே, (துணையிலியேன்) புகலொன்றில்லாவடியே னென்கிறபடியே ஸஹாயாந்தரமில்லாத வகிஞ்சனனுன வெனக்கு, துணையில்லாதவன் - துணையிலியன், தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது துணையிலியேன் என்று ரூபம், இத்தால் பரித்யஜ்ய என்கிற விடத்தில் அனுவாத பக்ஷத்தை ஸ்திரீகரித்தபடி. (ஐயமறத்துணையானை) அய்யம் - ஸம்சயம், அது அறும்படி, துணையானவனை, நிஸ்ஸம்சயமாகத் துணையாயிருக்கிற உன்னை என்றபடி. (கடைத்தலை) கடசிப்ரதேசத்திலே, கடைத்தலையென்று கடைவாசலா யிங்கு ப்ரதேச பரமாகிறது. கீதையினுடைய வந்திமப்ர தேசத்திலேயென்றபடி. (கற்றனை) அப்யஸிப்பித்தாய், உபதேசித்தா யென்றபடி. உன்கடைத்தலையிருந்து வாழுமென்கிற விடத்தில்போலே லக்ஷணயா கடைத்தலையென்று திருவடிகளைச் சொல்லி நிஸ்ஸம்சயமாகத் துணையானவனுடைய திருவடிகளை யுபாயமாக உபதேசித்தாயென்றும் யோஜிக்கலாம். துணையானை கடைத்தலையென்று த்ரமிட ஸ்வாபாவ்யாத்த்வி கர்மகத்வ முபபன்னம். யத்வா துணையிலியேன் - அகிஞ்சனனுகையாலே ஸஹாயமில்லாத நான், தூயமனத்தர் துறையணுகாத - நிர்மலாந்தஃகரணருக்குத் துறையான கர்மயோகாதிகளைக் கிட்டாதபடி, துணையானை-ஸஹாயபூதனுனவுன்னை, ஐயமற - ஸம்சயமில்லாதபடி, கடத்தலை கற்றனை - அந்திமோபாயமாக வுபதேசித்தாய். இது விதிபக்ஷத்தைச் சேரும் (காக்குந் திருவருளால்) அகிஞ்சன ஜநத்தை ரக்ஷிக்குமதான ஸ்ரீமத் க்ருபையாலே,

வியாக்யானம்.

ஸர்வ ஜநரக்ஷகையான பிராட்டி க்ருபையாலே யென்றுமாம், இத்தால் மாமென்கிறவிடத்தில் ஸௌலப்யாதி குணயோகமும் பத்நீ ஸம்பந்தமும் விவக்ஷிதமென்றபடி. (வையமளந்த வடிக்கீழ்) பூமியையளந்துகொண்ட திருவடிகளின்கீழே, (அடைக்கலம் வைத்தருளே) ரக்ஷ்ய வஸ்துவாக வைத்தருளாயே, இத்தாலிங்கு மாமேகமென் றிருந்தாலுமிதுக்கு மூலமானது த்வயத்தில்போலே திருவடிகள் ஸம்பந்தம் விவக்ஷிதமென்றபடி. (கக)

இப்படி பூர்வார்த்தத்துக் கர்த்த மருளிச்செய்து அநந்தர முத்தரார்த்தத்தில் பாபநிவர்தனுதி ரூபபலப்ரதி பாதகமான விரண்டு வாக்யங்களுக்கும் பதார்த்தங்களையும் தாத்பர் யார்த்தங்களையு மருளிச்செய்து அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹியா நின்றுகொண்டு ஸ்வப்ரார்த்தனுரூபமான வொரு பாட்டாலே பலாம்சத்தையே விஸ்தாரமாக வருளிச்செய்கிறுர்.

(அங்நாள்) அந்தநாள், பாராக்ராந்தையான பூமி உன்னவதாரத்தை யபேக்ஷித்தபோது, (அம்புயத்தாளுடன்) கமலவாஸி நியான பிராட்டியுடனே, (அறியாத விடைச்சியரும்) இடைக்கை வலக்கை யறியாத கோபிகளும், (அறியும்வண்ணம்) வண்ணம் - ஸ்வபாவம், ஸ்வபாவத்தை யறியும்படி, அறியும் வண்ணமென்னு முழுச்சொல்லாய் அறியும்படி யென்றுமாம். (அவதரித்தாய்) வஸுதேவ நந்தனு யவதரித்தருளினுய், இத்தால் "வஷநாராயணஸ்ரீமாநு" (ஏஷநாராயண ஸ்ரீமான்) என்கிற ப்ரமாணத்தையும் ஸௌலப்யத்தையும் காட்டினபடி. அவதரித்த வென்று பாடமாகுல் கோவிந்தனுக்கு விசேஷணம். இதுவே ஸமீசீனம். (குறையாதுமில்லாத கோவிந்தா) யாதும் ஈஷத்தும் யாதுங் குறையென்ற ந்வயித்து ஈஷத்துங் குறையில்லாதவனுன கோவிந்த சப்தவாச்யனே, இத்தால் ஹேயப்ரத்ய நீகத்வமும் ஸௌசீல்யமும் சொன்னபடி, (நின்குரைகழல்கீழ்) உன்னுடைய சப்தாயமாநமான திருவடிகளின்கீழே, சரணஸ்ய சப்தாயமானத்வம் கடகநூபுராதிநா. (அடைக்கலமாங்குறிப்பு) குறிப்பு - ஸாவதாநம், இங்கு தர்மிபரம், அடைக்கலமாக வாகாநின்ற ஸாவதாந க்ருத்யத்தை, நாம் ரக்ஷ்ய வஸ்துவாகைக்காக வுன்திருவடிகளிலே சரலக்ஷ்யவேதநம்போலே ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபாதிகளை ஸாவதாநமாய் ஸமர்ப்பிக்கவேண்டுமெ தானப்ரபத்தியை யென்றபடி, (தந்தாய்) கொடுத்தாய், நீயென்னைக் கொண்டு பண்ணிவைத்தாய் என்றபடி. (வெறியாரும் மலர்மகளும்) வெறி-பரிமளம், ஆர் - பூர்த்தி, பரிமளம் மிக்கிருந்துள்ள புஷ்பவாஸிநியான பெரிய பிராட்டியும், (நீயும்) அவளுக்கு பதியானநீயும், (விண்ணில்) பரமபதத்தில், (விண்ணோர்க ளடிசூட) நித்யஸூரிகள் திருவடிகளை

உஎ-மூ.—காசினியில்வரையனைத்துங்காயாவண்ணன்
கடைந்தெடுத்தகௌத்துவத்தின்சீர்மைக்கொவ்வா
காசிமுதலாகியநன்னகரியெல்லாங்
கார்மேனியருளாளர்கச்சிக்கொவ்வா
மாசின்மனந்தெளிமுனிவர்வகுத்ததெல்லா
மாலுகந்தவாசிரியர்வார்த்தைக்கொவ்வா
வாசியறிந்திவையுரைத்தோம்வையத்துள்ளீர்
வைப்பாகவிவைகொண்டுமகிழ்மினீரே. (௬௬)

(ப - ரை.) காசினியில் - பூமியிலுள்ள, வரையனைத்தும் - பர்வதங்கள் எல்லாம், காயாவண்ணன்-காயாம்பூவர்ணனான நாராயணன், கடைந்து - க்ஷீரஸாகர மதனம்செய்து, எடுத்த - உத்தரித்த, கௌத்துவத்தின் - ஸ்ரீகௌத்துபரத்தினத்தினது, சீர்மைக்கு - பெருமைக்கு, ஒவ்வா-ஒப்பாகா, காசிமுதலாகிய - காசிமுதலான, நல்நகரியெல்லாம்-முக்திப்ரதங்களான நல்லநகரங்களெல்லாம், கார் - மேகம்போன்ற, மேனி-திவ்யமங்கள விக்ரஹமுடைய, அருளாளர் - பேரருளாளனது, கச்சிக்கு - ஸ்ரீகாஞ்சீநகரத்துக்கு, ஒவ்வா - ஒவ்வா, (அதுபோல) மாசில் - குற்றமற்ற, மனந்தெளி - மனஸ்ஸுதெளிந்த, முனிவர் - மஹர்ஷிகள், வகுத்ததெல்லாம் - சொன்னவை யெல்லாம், மால் - ஸ்ரீயஃபதியானவன், உகந்த - திருவுள்ளமுகந்த, ஆசிரியர் - ஆசார்யர்களது, வார்த்தைக்கு - திவ்யஸூக்திக்கு, ஒவ்வா - ஒவ்வா, வாசி - தாரதம்யத்தை, அறிந்து - அறிந்து, இவை - இதுகளை, உரைத்தோம் - சொன்னோம், வையத்துள்ளீர் - இப்பூமியிலுள்ளவர்காள், நீர் - நீங்கள், இவை - இவ்வர்த்தங்களை, வைப்பாக - நிக்ஷேபமாக, கொண்டு-வைத்துக்கொண்டு, மகிழ்மின் - ஸந்தோஷியுங்கள். (உஎ)

---

வியாக்யானம்.

(காசினியில்) பூமியிலே, (வரையனைத்தும்) அனைத்துவரையும் என்றன்வயம். வரை - பர்வதம், ஸகலரத்நமய பர்வதங்களும், (காயாவண்ணன் கடைந்தெடுத்த) காயா - காசா, இங்கு தத்புஷ்பம் விவக்ஷிதம் - காசாம்பூவுக்கு ஸத்ருசமான வர்ணத்தையுடைய ஸர்வேச்வரனாலே கடைந் தெடுக்கப்பட்டதான, (கௌத்துபத்தின்) கௌஸ்துபத்தினுடைய, (சிரமைக்கு) ஸ்வபாவத்துக்கு, சீர் - குணம், சீர்மை-குணவத்தை, பகவத்வக்ஷஸ்தல ஸம்பந்தம்பெற்ற நல்லஸ்வபாவத்துக்கென்றபடி, (ஒவ்வா) ஒப்பாகுமோ, ஸத்ருசமாகுமோ. (காசிமுதலாகிய நன்னகரியெல்லாம்) காசியைமுதலாக வுடையதுகளான முக்திக்ஷேத்ரங்களான நல்ல நகரிகளெல்லாம், (கார்மேனியருளாளர் கச்சிக்கொவ்வா) கார் - நீருண்டமேகம், மேனி - சரீரம், வார்ஷுகவலாஹகஸத்ரு சவர்ணசாலியான பேரருளாளருடைய நகரியான காஞ்சிக்கி

வியாக்யானம்.

ஸ்த்ருசமாகுமோ, (மாசில்மனந்தெளி) மாசு - மலம்; அதில்லாத மனஸ்விலுடைய தெளிவையுடைய, (முனிவர் வகுத்ததெல்லாம்) வகுக்கை - பிரித்துச்சொல்லுகை, நிர்மலாந்தஃகரணரானரிஷிகள் பிரித்து தத்வநிரூபணம் பண்ணின வாக்யங்களெல்லாம் (மாலுகந்தவாசிரியர்) மால்-ஸ்வாமி, ஸர்வஸ்வாமியான ஸ்ரீயஃபதியுகந்த வாசார்யர்களுடைய, (வார்த்தைக்கொவ்வா) க்ரந்தரூபமாயு முபதேசரூபமாயுமுள்ள வாக்யங்களுக் கொப்பாகுமோ, "ரத்நத்வாவிஶேஷேபியதாவா ஹமவத்ஸம்பந்தாயத்தௌஸ்த்ருஷ்ட்யம் கௌஸ்துபஸ்ய, முக்திக்ஷேத்ரத்வாவிஶேஷேபி ஹமவத்ஸம்பந்த ப்ரயுக்தஶ்ரேஷ்ட்யம் காஞ்ச்யாஃ தத்வைவ விதவித்ரத்வ தத்வநிரூபணத்வாவிஶேஷேபிஸ்வாம்யபிம தத்வஶ்ரேஷ்ட்யமாசார்யவாக்யஸ்ய தத்வைவேத்யர்த்தஃ". (ரத்நத்வாவி சேஷேபியதாவா பகவத்ஸம்பந்தாயத்தௌத்க்ருஷ்ட்யம் கௌஸ்துபஸ்ய, முக்திக்ஷேத்ரத்வாவிசேஷேபி பகவத்ஸம்பந்த ப்ரயுக்தச்ரைஷ்ட்யம் காஞ்ச்யாஃதத்வதேவ சிதசிதீச்வரதத்வநிரூபணத்வா விசேஷேபிஸ்வாம்யபிம தத்வரூபஸ்ரைஷ்ட்ட்ய மாசார்யவாக்ஸ்ய தத்வதேவேத்யர்த்தஃ (வாசியறிந்து) வாசி-பேதம், ரிஷிவாக்யத்துக்கும் ஆசார்ய வாக்யத்துக்கு முண்டான பேதமறிந்து, (இவையுரைத்தோம்) இந்தரஹஸ்யார்த்தம் சொன்னோம். இந்த வாசார்யவாக்ய ஸ்ரைஷ்ட்ட்யம் சொன்னோமென்றுமாம். (வையத்துள்ளீர்) பூமியிலேயிருக்குஞ் ஜநங்காள், (வைப்பாகவிவைகொண்டு) யிந்தவர்த்தங்களை வைப்பாக நிக்ஷேபமாகவைத்துக்கொண்டு, நிக்ஷேபம்போலே ரக்ஷிக்குமென்றெண்ணிக்கொண்டு, (மகிழ்மினீரோ) மத்யமபுருஷபஹுவசனம். மகிழுங்கோள், ஸந்தோஷியுங்கோள். (உஎ)

இதுக்கு மேலுபகார ஸங்க்ரஹத்திலிருக்கிற வாத்யந்தப் பாட்டுக்கள் மூன்றில் முதல்பாட்டு. இந்த ரஹஸ்யத்திலே ஜீவாத்மாவுக்கு ஈச்வரன் ஸ்வரூபத்திலும் குணபூத ஜ்ஞாநாதிகளிலும் சாஸ்த்ரப்ரதாநாதிகளிலும், ஆசார்யாதீந வ்யாபாரங்களிலும், உபாயாநுஷ்ட்டாநாதிகளிலும், உத்தரதசைகளிலும் ஸம்ஸார நிவ்ருத்தி பூர்வக திவ்யதேசப்ராப்திதத்ரத்ய கைங்கர்யாதிகளிலும் பண்ணுமுபகார விசேஷங்களை விஸ்தாரமாக வருளிச்செய்கைக்காக வடியிலே யந்தவுபகாரங்களில் முக்க்யமான சில வுபகாரங்களை ஸங்க்ரஹியாநின்றுகொண்டு இவ்வளவு உபகாரம் நமக்கீஸ்வரன்பண்ணினது ஆழ்வாருடைய க்ருபையாலே யென்கிறு ரொருபாட்டாலே.

(அந்தமிலா) அந்தமில்லாததான, (பேரின்பம்) பெரிதானஸுகம், ஸ்வர்க்காதிஸுகம்போலே நாசமில்லாதவபரிச்சேத்யமான மோக்ஷஸாம்ராஜ்ய ஸுகத்தை யென்றபடி. (அருந்த) அருந்துகை-பானம்பண்ணுகை, இங்கு அனுபவிக்கையிலே தாத்பர்யம் (ஏர்க்கும்) யோக்யா

உஅ-மூ.—அந்தமிலாப்பேரின்பமருந்தபேர்க்கு
மடியோமையறிவுடனேயென்றுங்காத்து
முந்தைவினைநிரைவழியிலொழுகாதெம்மை
முன்னிலையாந்தேசிகர்தம்முன்னேசேர்த்து
மந்திரமுமந்திரத்தின்வழியுங்காட்டி
வழிப்படுத்திவானேற்றியடிமைகொள்ளத்
தந்தையெனநின்றதனித்திருமாறாளிற்
றலைவைத்தோஞ்சடகோபனருளினாலே. (கூஎ)

(ப-ரை.) அந்தமில்லா - முடிவில்லாத, பேரின்பம் - பெரிய இன்பத்தை, அறிந்தபேர்க்கும் - அறியாதவர்களுக்கும், அடியோமை-தாஸபூதரான நம்மை, அறிவுடனே - ஞானத்தோடே, என்றும் - எப்போதும், காத்து - ரக்ஷித்து, முந்தை - பழமையான, வினைநிரை - கர்மஸமூஹங்களின், வழி - மார்க்கத்தில், ஒழுகாது - சிதறிப்போகாமல், எம்மை - நம்மை, முன்னிலையாம் - முந்தினநிலையாகிய, தேசிகர்தம் - ஆசார்யர்களுடைய, முன்னே - முன்னே, சேர்த்து - சேர்ப்பித்து, ஆசார்யப்ராப்தி செய்வித்து; மந்திரமும் - மந்த்ரத்தையும், மந்தரத்தின்வழியும் மந்த்ரப்ரதி பாத்யமான மார்க்கத்தையும்; காட்டி - அறிவித்து, வழிப்படுத்தி - பக்திப்ரபத்திரூப உபாயத்தில் ப்ரவர்த்திப்பித்து, வான் - பரமபதத்தில், ஏற்றி - ஏறவைத்து, அடிமைகொள்ள-கைங்கர்யங்களை திருவுள்ளம் பற்றுவதற்கு, தந்தையென - பிதாபோலே, நின்ற - வீற்றிருந்த, தனி - ஒப்பற்ற, திருமால்-ஸ்ரீ:பதியினது, தாளில்-திருவடிகளில், சடகோபன் - நம்மாழ்வாருடைய, அருளால் - க்ருபையினால், தலை - சிரஸ்ஸை, வைத்தோம் - பணிந்தோம். (உஅ)

---

வியாக்யானம்.

ளான, (அடியோமை) அடியோங்களை, ஸூரிபோக்யமான ஸுகத்தையனுபவிக்க ப்ராப்தாளான வெங்களை யென்றபடி. (அறிவுடனே) ஜ்ஞானத்துடனேகூட (என்றும்), ஸர்வதா, (காத்து) ரக்ஷித்து, ஜ்ஞாதாவாயும் ஜ்ஞாநஸ்வரூபனுயுமுள்ள வெங்களை யிதுகளழியாதபடி ப்ரளயதசையிலும், காத்தென்றபடி. (முந்தை) அநாதிகளான, (வினை) கர்மங்களுடைய, (நிரை) வர்க்கம், ஸமூஹமென்றபடி. (வழியில்) மார்கத்தில் (ஒழுகாது) ஒழுகிப்போகாதே, (எம்மை) விரோதிபூயிஷ்டத்தையுடைய நம்மை, (முன்னிலையாந்தேசிகர்) முந்தின நிலையாகாநின்ற வாசார்யருடைய, இவன் ரக்ஷணத்திலே ப்ரதமஸ்தாநமான வாசார்யனுடையவென்றபடி. (முன்னேசேர்த்து)அவர்களங்கீகரிக்கும்படி அவர்கள் முன்னேசேரும்படி நம்மைப்பண்ணி, ப்ராரப்த்தா ப்ராரப்தரூபங்களாயனுதிகளான பாபமார்கங்களிலே சேராதபடி நம்மை ஸதாசார்யர் பக்கலிலே சேர்த்தென்று தாத்பர்யம். (மந்திரமும்) திருமந்த்ராதி

வியாக்யானம்.

களும், (மந்திரத்தின்வழியும்) திருமந்த்ராதிகளிலே ப்ரதிபாத்யமான வழியும், (காட்டி) ரஹஸ்யத்ரயாதிகளும் ததர்த்தங்களும் மனஸ்ஸில் படும்படி யாசார்யாளைக்கொண்டு காண்பிவைத்து, (வழிப்படுத்தி)ஸ்வாதிகாரானுரூபமான வொருமோக்ஷமார்க்க பூதமான வுபாயாநுஷ்ட்டாநத்திலே யுறப்படுத்தி, யத்வா - மந்த்ரத்தின் வழியென்று உபாயவிசேஷத்தைச்சொல்லி, வழிப்படித்தியென்று அர்சிராதியைச் சொல்லவுமாம். (வானேற்றி) அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலேயேற்றி, (அடிமைகொள்ள) ஸூரிபோக்யமான கைங்கர்யங் கொள்ளுகைக்காக, (தந்தையெனநின்ற) தந்தை - பிதா, ஹிதபரனனபிதாபோல நில்லாநின்ற, (தனித்திருமால்தாளில்) அத்விதீயனுன ஸ்ரீயஃபதியினுடைய திருவடிகளிலே, நம்முடைய ரக்ஷணத்தில், அஸஹாயனுயிருக்கையே, இங்கு - அத்விதீயத்வமவனுக்கு. (தலைவைத்தோம்) சிரஸ்ஸை மடுத்தோம்) அவன்திருவடிகளை நம்முடைய சிரோபூஷணமாக்கினே மென்றபடி. (சடகோபனருளினல்) ஈச்வரன் நமக்கு உபகாரம் பண்ணினது, ஆழ்வாருடைய க்ருபையாலே, ஆழ்வார் ஸம்பந்தம் பெற்றபடியினுலே யென்றபடி. இங்கே யாழ்வாரை யெடுத்தது இந்த ரஹஸ்யத்தில் பூர்வாவர மத்யமதசைகளில் பண்ணு மீச்வரனுடைய வுபகாரங்களை மூன்றதிகாரத்தாலே சொல்லி இவ்வள வர்த்தங்களும் ஆழ்வாருடைய முதல்ப்ரபந்தமான திருவிருத்தம் முதல்பாட்டி லிருக்கிறதென்று முடிவிலே காண்பிக்கிறபடியாலே. (உஅ)

இப்படி ஸங்க்ரஹமாக வுபகாரங்களை யருளிச்செய்து பின்பு மூன்றதிகாரத்தாலே தாம் விஸ்தாரமாக வருளிச்செய்த ஸர்வேச்வரனுடைய வுபகாரங்களை யறிகைக்கி பல மேதென்கிற வாகாங்க்ஷையில் முமுக்ஷுவான ஜீவாத்மாவுக்கு அபேக்ஷிதமாய் ரஹஸ்யார்த்தங்களான தேகாத்ம ப்ரமஸ்வதந்த்ராத்மப்ரமாதி நிவ்ருத்தி பூர்வகமாக வுபகாரங்களை பகவத்ஸ்வரூபாதிகளை யறிகையே யிதின் பலமென்னுமிடத்தை ஸ்வாநுஸந்தானரூபமான வொருபாட்டாலே முடிவிலே காட்டுகிருர்.

(தான்) அஹம்சப்த வாச்யனுனதான், (தனக்கு) ப்ரகாசபலியான தன் ஜீவஸ்வரூபத்துக்கு, (தன்னுலேதோன்றி) ஜ்ஞாநஸ்வருபனுய் அத ஏவஸ்வயம் ப்ரகாசமுமான ஸ்வரூபத்தாலே தோன்றிக்கொண்டு, அஹமஹமென்று ப்ரத்யக்த்வாதி விசிஷ்டமாக ஸ்வரூபத்தை ஸ்வரூபத்தாலே தானேயறிந்தென்கை. (தன்னேரொளியிணை குணத்தாலும்) தனக்கத்விதீயமாய் தேஜஸ்ஸூபோலே ப்ரகாசகமாய் தன்னை விட்டுப் பிரியாதே குணபூதமான தத்பூதஜ்ஞானத்தாலும், (தன்னைக் கண்டு) ஸ்வஸ்வரூபத்தைக்கண்டு, விஷயப்ரகாசந வேளயாம் ஸ்வாப்ருதக்ஸித்ததர்மபூத ஜ்ஞானஸ்யாபி ஸ்வஸ்யவிஷயதா ப்ரகாசம் சொன்னபடி யிது. ஜ்ஞாதாவும் ஜ்ஞானஸ்வரூபனுமானமைக்கு பலமிதுகள்.

உகூ-மூ.—தான்றனக்குத்தன்னாலேதோன்றித்தன்னே
ரொளியிணைக்குணத்தாலுந்தன்னைக்கண்டு
தான்தனக்கென்றறியாததன்குணத்தை
தன்குணத்தாற்றானிறையிற்றானேகூட்டி
ஊன்மறித்துப்புலன்மனமாறுங்காரங்க
ளொருமூலப்பிரகிருதியன்றிநின்ற
நான்தனக்குத்தான்றனக்கென்றறிவுதந்த
நாரணனைநான்மறையானுன்கண்டேனே. (கூஅ)

(ப-ரை.) தான்தனக்குத்தன்னாலேதோன்றி-ஸ்வயம் ப்ரகாசமாய், தன் - தனது, ஓரொளி - ஒரு ப்ரகாசத்தை, அணைக்கும் - அணைத்துக் கொள்ளுகின்ற, குணத்தாலும் - ப்ரத்யத்வகுணத்தினாலும், தன்னை - தன்ஸ்வரூபத்தை, கண்டு - கண்டு, (தான்தனைக்கென்றறியாத) தன் குணத்தை - தனதுகுணத்தை, (தன்குணத்தால்) தன்னிறையில்-தனது ஈச்வரனிடத்தில், தானே - தானே, தபடி - சேர்த்து, ஊன் - மாம்ஸ மயமான சரீரத்திலும், மருத்து - ப்ராணன் முதலியவாயுக்கள், புலன் - இந்திரயங்கள், மனம் - மனது, மான் - மஹத்தத்வம், ஆங்காரங்கள் - ஸாத்விகராஜஸ தாமஸாஹங்காரங்கள், ஒரு - ஒன்றாகிய, மூலப்பிர கிருதி - மூலப்ரக்ருதி, அன்றி - இவைகளாகாமல், இவைகளில் வேறு பட்டு, நின்ற - நின்றவனான, நான் - நான், தனக்கு - தனக்கு சேஷ பூதன், தான் - நமக்குசேஷியான ஸ்ரீய꞉பதி, தனக்கு - தனக்கு, (அன் யாதீனனன்று) என்று-என்று, இசைவு-அங்கீகாரத்தை, தந்த-எனக்கு உண்டாகச்செய்த, நாரணனை - ஸ்ரீமன்நாராயணனை, நான் - நான், நான்மறையால் - நாலுவேதங்களினால், கண்டேன். (உகூ)

---

வியாக்யானம்.

(தான்தனக்கென்றறியாத) தானென்றும் தனக்கென்று மறியாததான, அஹம்மமேதி ஜ்ஞாநசூந்யமான வென்றபடி. (தன்குணத்தை) தனக்கு குணபூதங்களான தேஹாதிகளை, (தன்குணத்தால்) தனக்கு குணபூத மாயாசார்யா தீனமாகவந்த சரீராத்மபாவஸம்பந்தாதி ஜ்ஞாநத்தாலே, (தாநிறையில்கூட்டி) தத்வவிவேகம்பிறந்த தான் ஸர்வசரீரியான வீச் வரநிடத்திலே சேர்த்து, அவனுக்கே சேஷமென்றெண்ணி யென்றபடி. இதுக்கு பலமாயுமே தத்விவரணரூபமாயுமிருக்கும்மேல். (ஊன்மறி த்து) தேகத்தைக்காட்டிலும் வேறாய், ஊன் - சரீரம், (புலன்) இந்த்ரி யங்கள், (மன) மநஸ்ஸு, (மான்) மஹாநு, (ஆங்காரங்கள்) அஹங்கா ரங்கள், ஸாத்விகாதிபேதேந பஹுவசனம். (ஒருமூலப்பிரகிருதி) இது களுக்கு காரணமாய த்விதியமான மூலப்ரக்ருதி, (அன்றிநின்ற) இதுக னன்றியிலே யிராநின்ற, (நான்) தேஹவிலக்ஷணனாய் அதரவ - ப்ரக் ருத்யாதி சதுர்விம்சதி தத்வபின்னனாயிருக்கிற நான், (தனக்கு) ஸ்வ சரீரியான தனக்கு, (தான்தனக்கு) ஸர்வஸ்வதந்த்ரனான தான்தனக்

வியாக்யானம்.

கென்று, (அறிவுதந்த) ஜ்ஞானத்தைக்கொடுத்த, தேஹாதிவிலக்ஷண ஞன தனக்கு சேஷமென்றும், ஸர்வஸ்வாமியான தான்தனக்கே ஸ்வாதீனனென்று மிப்படிப்பட்ட ஜ்ஞானத்தைக்கொடுத்த வென்றபடி. (நாரணனே) ஸ்ரீயஃபதியை, இங்கு நாராயணசப்தத்தாலே முன்சொன்ன ஸர்வசரீரத்வாதிகள் விவக்ஷிதங்கள் (நான்மறையால்) நாலுவேதங்களாலே, தத்ப்ரதிபாத்யார்த்தங்களா லென்றபடி. (நான்கண்டேனே) அசித்கல்பனுயிருந்த நான் அவனுடைய வுபகாரத்தாலே ஜ்ஞானம் பிறந்து அத்தாலே நன்ருக வறிந்துக்கொண்டேனே. இப்பாட்டிலிறையில் கூட்டியென்கிற பர்யந்த மீச்வரபரமாயும் யோஜிக்கலாம், எப்படியென்னில், (தான்தனக்கித்யாதி) விபுவால் ஜ்ஞானஸ்வரூபமான தன் திவ்யாத்மஸ்வரூபமானது அஹமென்று தானேதோன்றி, (தன்னேரொளியிணேயித்யாதி) தனக்கஸாதாரணகுணமாய் விபுவான தர்மபூத ஜ்ஞானத்தாலும், ஸர்வதாஸ்வ ஸ்வரூபத்தையும் பாத்துக்கொண்டு, (தான்தனக்கித்யாதி) அஹம்மமேதி ஜ்ஞானசூன்யமான வசேதனமாய் தனக்கு குணபூதங்களான ப்ரக்ருத்யாதிகளே, இதுகளே குணமென்றது அப்ருதக்ஸித்தமானபடியால், தன்குணத்தால்-ஸ்வஸங்கல்பத்தாலே, (தானிறையில்கூட்டி) ஸ்வதந்த்ரனுன தான் தன்னிடத்தில்கூட்டி, ஸ்வாப்ருதக்ஸித்தமான ப்ரக்ருத்யாதிகளே ஸ்வஸங்கல்பத்தாலே ஸ்வசரீரமாயும் ஸ்வாதீனமாயு மங்கீகரித்தென்கை. மேல்பூர்வவத் பூர்வயோஜனைக்கு ப்ரக்ருதார்த்தஸ்வாரஸ்யமுண்டு. இதுக்கு தான் நாரணனே யித்யாதி சப்தஸ்வாரஸ்யமுண்டு. (உகூ)

இப்படிப்பட்ட வுபகாரங்களே வேருெருவர் செய்யமாட்டாரோ வென்கிற சங்கையைப் பரிஹரிக்கைக்காக தான் ப்ரதமாதிகாரத்தாலே சொன்ன முமுக்ஷுவுக்கு கர்ப்பவாஸ ப்ரப்ருதியுபாயாநுஷ்டானபர்யந்த மீச்வரன்பண்ணு முபகாரங்களேயும் த்விதீயாதிகாரத்தாலே வெளியிட்ட வுபாயாநுஷ்டான ப்ரப்ருதி ப்ரம்மநாடிப்ரவேசபர்யந்தம் பண்ணுமுபகாரங்களேயும் த்ரித்ரியாகாரத்தாலே ப்ரகாசிப்பித்த வர்ச்சிராதிக மனப்ரப்ருதிமேல் முழுக்கச்செய்யு முபகாரங்களேயும் ஒருபாட்டாலே யுபலக்ஷணதயாஸங்க்ரஹிக்கிருர்.

இப்பாட்டில் மூன்றதிகாரத்தாலே சொன்னவர்த்தங்களே மூன்று பாதத்தாலே ஸங்க்ரஹித்து நாலாம்பாதத்தால் முன்வந்த சங்கையை பரிஹரிக்கிருர்.

(கழியாத) கழிந்துபோகாததான, ப்ராயச்சித்தாதிகளால் நாச்யமல்லாததான, (கருவினேயில்) கரு-கர்ப்பம். இது உபலக்ஷணம். கர்பஜந்மஜராமரணுதி ப்ரதமான பாபங்களில், (படிந்தநம்மை) படியாநின்றுள்ள நம்மை, பாபபூயஸ்தையாலே சேற்றிலழிந்தின சேருகளேப்

கூ௦-மூ.— கழியாதகருவினையிற்படிந்தநம்மைக்
காலமிதுவென்றொருகாற்காவல்செய்து
பழியாதநல்வினையிற்படிந்தார்தாளிற்
பணிவித்துப்பாசங்களடையநீக்கிச்
சுழியாதசெவ்வழியிற்றுணைவரோடே
தொலையாதபேரின்பந்தரமேலேற்றி
அழியாதவருளாழிப்பெருமான்செய்யு
மந்தமிலாவுதவியெல்லாமளிப்பாரரோ. (சுசுு)

(ப - ரை.) கழியாத - கழிவுபெறாத, கருவினையில் - கர்ப்பம்முதலிய இடர்விளைவிக்கும் பாபங்களில், படிந்த-படிந்திருக்கின்ற, நம்மை-நம்மை, இதுகாலம் - ரக்ஷிக்க இது ஏற்றகாலம், என்று - என்று, ஒருகால் - ஒருதடவை, காவல்செய்து - ரக்ஷித்து, பழியாத - குற்றமற்ற, நல்வினையில் - ஸுக்ருதத்தில், ஸத் கர்மங்களில், படிந்தார் - படிந்த பெரியோர்களது, தாளில் - திருவடிகளில், பணிவித்து - பணியும்படி செய்து, பாசங்கள் - பந்தங்களான கர்மங்களை, அடைய - நிச்சேஷமாய், நீக்கி - நீங்கச்செய்து, சுழியாத - சுழித்தலற்ற, செவ்வழியில் - ருஜுவான மார்கத்தில், துணைவரோடே-ஸஹாயபூதர்களுடன், தொலையாத - அழிவில்லாத, பேரின்பம் - பெரிய இன்பத்தை, தர - அளிக்க, மேல் - ப்ரக்ருதி மண்டலத்திற்குமேல், ஏற்றி - ஏறவைத்து, அழியாத - என்றும் அழிவுறாத, அருள் - க்ருபையையுடைய, ஆழி - சக்கரதரனாகிய, பெருமான்-எம்பெருமான், செய்யும் - செய்யும், அந்தமிலா-முடிவில்லாத, உதவி எல்லாம்-உபகாரங்களையெல்லாம், ஆர்-யார்தான், அளப்பார் - அளவிடவல்லவர்கள், இவ்வளவென்று பரிச்சேதித்தறிய வல்லவர்யாவரொன்கை. (கூ௦)

---

வியாக்யானம்.

போலே, ததந்தர்கதனானவன்போலே யிருக்கிற நம்மை, (ஒருக்கால்) ஒருவேளையிலே, ஜாயமான கடாக்ஷாதியோக்யமானகாலத்திலே, (இதுகாலமென்று) இவன் ரக்ஷணத்துக் கிதுநல்ல ஸமயமென்று, (காவல் செய்து) ரக்ஷணத்தைப்பண்ணி, அஜ்ஞாதஸுக்ருதோத்பாதந ப்ரப்ருதி ஸதாசார்ய ஸம்பந்த பர்யந்தமான ரக்ஷணங்களைப்பண்ணியென்றபடி. (பழியாதநல்வினையில்) இங்கு வினை-கர்மம், பழிக்கப்படாததான, நல்ல கர்மங்களில், சாஸ்த்ர ஸம்மதமாயும் ஸத்துக்களுகந்ததாயுமுள்ள ஸகல கற்மங்களென்றபடி. (படிந்தார்தாளில்) படிந்திருக்கு மவர்களுடைய திருவடிகளிலே, ஸத்கர்ம நிரதாளான ஸதாசார்யாதிகள் திருவடிகளிலே, (பணிவித்து) பணி - கைங்கர்யம், அத்தைசெய்வித்து, ஸதாசார்யர் திருவடிகளில் கைங்கர்யம் பண்ணும்படி நம்மை யங்கே சேர்த்ததென்றபடி. (பாசங்கள்) பாசம், கயிறு, பாசம்போலே பந்தகங்களான

வியாக்யானம்.

நம்முடைய பாபங்களை, (அடைய) க்ருத்ஸ்நத்தையும், (நீக்கி) உபாய ப்ராப்தி விரோதியான க்ருத்ஸ்ந பாபத்தையும், புருஷகார மோக்ஷார்த்த ப்ரபத்யாதிகளாலே போக்கி, (துலையாபேரின்பம்) துலைகை - நாசம். நாசரஹிதமான மஹத்தரஸுகத்தை தருகைக்காக, கைங்கர்ய ஸம்பத்தைக் கொடுக்கவென்றபடி. (சுழியாத) சுழியாக வாகாததான, (செவ்வழியில்) செவ்வையான வழியில், சுழிபோலே பரிப்ரமண ஹேதுவான தூமாதி மார்கம்போலே யன்றிக்கே, அபுநராவ்ருத்தி ஹேதுவாய் ஸமீசீநமானவர் சிராதிமார்கத்திலென்றபடி. (துணைவரோடே) ஸஹாய பூதாளான வாதிவாஹிகரோடேகூட, (மேலேற்றி) ப்ரக்ருதிக்குமேலான பரமபதத்தி லேற்றிவைத்தும், (அழியாதவருளாழிப் பெருமாள்செய்யும்) ஒருக்காலுமழியாததான க்ருபாஸாகரனுனஸர்வேச்வரன் பண்ணுமதான, "புணைகொடுக்கிலும் போகவொட்டாரோ, தன்னடியார் திறத்து, இத்யாதிப்படியே, முக்தவிஷயத்தில், க்ருபை நிருபாதிகமான படியை பற்றவிங்கு அழியாதவருளென்றது. ஆழி - ஸமுத்ரம். (அந்தமில்லா வுதவியெல்லாம்) உதவி - உபகாரம், அந்தமில்லாததான வுபகாரங்களையெல்லாம், பூர்வோக்தங்களான வநந்தோப காரங்களையெல்லாமென்றபடி. (அளிப்பாராரோ) ஆர்தான் அளிப்பார்கள். அளிக்கை- ரக்ஷிக்கை, இந்த உபகாரங்களைப்பண்ணி ஆர் ரக்ஷிபபரென்கை, அஜ்ஞாத ஸுக்ருதப்ரப்ருதி மோக்ஷப்ரதாந பர்யந்தமான வுபகாரம்பண்ண வொருவரும் ஸமர்த்தரன்றென்றபடி. (௩௦)

மேல் ஸாரஸங்க்ரஹத்திலொருபாட்டு. இந்த ஸாரஸங்க்ரஹத்திலே முமுக்ஷுவுக்கு ஜ்ஞாதவ்யங்களாய் ஸாரதமங்களானத்யாஜ்யோபாதேயவிபாகமென்ன பூர்னத்வப்ரகாரங்களென்ன, ப்ரக்ருதிகுண விவேகாதிபலங்களென்ன, நித்யாநுஸந்தேயமான ஸர்வஸங்க்ரஹமென்ன, ப்ரமாணப்ரமேய ஸங்க்ரஹமென்ன, ஜ்ஞாநுதிக்ருத்யமென்ன, இதுகளை விஸ்தாரமாக வருளிச்செய்து முடிவிலே இவ்வதிகாரிக் கனுஷ்டேயமான ப்ரபத்தியினுடைய வனுஷ்டாந ப்ரகாரத்தை யொரு பாட்டாலே காட்டியருளுகிறார்.

(நின்னருளாங்கதியன்றி) உன்னுடைய க்ருபையாகவாகாநின்ற கதியைத்தவிர, க்ருபாவிசிஷ்டனைக்கொண்டு கதியாகாநின்றவுன்னைத் தவிர வென்றபடி, (மற்றொன்றில்லேன்) வேறொருகதி யில்லாதவனேன், ஏதேந உப்பாயாந்தரப்ரவ்ருத்தி சூன்யத்வரூபமான ஆகிஞ்சின்யாத் யனுஸந்தானுத்மகமான கார்ப்பண்யம் சொன்னபடி. (நெடுங்காலம் பிழைசெய்த நிலைகழிந்தேன்) அனுதியாக ஆஜ்ஞாதிலங்கனரூபமான குற்றம்செய்யாநின்ற நிலையைத்தள்ளிவிட்டேன். பாபாபிஸந்தியைவிட்டேனென்கை. பாபாபிஸந்தி நிவ்ருத்திரூபமான ப்ராதிகூல்யவர்

௯க-மூ.—நின்னருளாங்கதியன்றிமற்றொன்றில்லேன்
நெடுங்காலம்பிழைசெய்தநிலைகழிந்தேன்
உன்னருக்கினிதானநிலையுகந்தே
னுன்சரணேசரணென்னுந்துணிவுபூண்டேன்
மன்னிருளாய்நின்றநிலையெமக்குத்தீர்த்து
வானவர்தம்வாழ்ச்சிதரவரித்தேனுன்னை
யின்னருளாலினியெமக்கோர்பரமேற்றாம
லென்றிருமாலடைக்கலங்கொள்ளென்னைநீயே. (எ0)

(ப - ரை.) நின் - உனது, அருளாம் - க்ருபையாகிற, கதியன்றி-ப்ராபகம்அல்லாது, மற்றொன்று - வேறொரு ப்ராபகம், இல்லேன் - உடையவனல்லென், நெடுங்காலம்-தீர்க்ககாலம், பிழைசெய்த - அபராதங்கள் செய்த, நிலை-ரீதியை, கழிந்தேன்-விட்டேன், உன்னருளுக்கு - உன் க்ருபைக்கு, இனிதான - இனிமையான, நிலை - நிலையை, உகந்தேன் - ஸந்தோஷித்தேன், உன்சரணே - உன் திருவடிகளே, சரண் - ரக்ஷகம், என்னும்துணிவு - என்கிற நிச்சயத்தை, பூண்டேன் - அடைந்தேன். மன் - த்ருடமாகிய, இருளாய்-அந்தகாரமாய், நின்றநிலை - நின்ற நிலையை, எமக்கு - எமக்கு, தீர்த்து - நீக்கி, வானவர்தம்-நித்யஸூரிகளது, வாழ்ச்சி - போதத்தை, தர - கொடுக்க, உன்னைவரித்தேன் - ப்ரார்த்தித்தேன், இன்னருளால் - இனிய உன்க்ருபையினால், இனி - இதன் மேலே, எமக்கு - எமக்கு, ஓர்பரம் - ஒருபரத்தையும், ஏற்றாமல் - ஏறவைக்காமல், என் - எனது, திருமால் - ஸ்ரீயஃபதியே, நீயே - நீயே, என்னை - என்னை, அடைக்கலம் - அடைக்கலமாக, கொள்-அங்கீகரிக்க வேண்டும். (௯க)

---

வியாக்யானம்.

ஜநமித்தால் சொன்னபடி. (உன்னருளுக்கினிதான நிலையுகந்தேன்) உன்க்ருபைக்கு போக்யமான தசையையுகந் தங்கீகரித்தேன், உன் க்ருபை யென்னையுகந்து விஷயீகரிக்கும்படியான நல்லதசையை யங்கீகரித்தேன். தத்வஜ்ஞானு வர்த்தநரூபமான ஸித்தியை யடைந்தேன் என்கை, ஆனுகூல்யஸங்கல்ப்பம் சொன்னபடியிது. (உன்சரணேசரணென்னுந் துணிவுபூண்டேன்) துணிவு - த்ருடாத்யவஸாயம், உன் திருவடிகளே உபாயமென்கிற த்ருடாத்யவஸாயத்தை யடைந்தேன். பூண்டேனென்றது - போக்யமாக விந்த வத்யவஸாயமிருந்ததென்கை. இத்தால் ரக்ஷகத்வாத்யவஸாயாத்மகமான விச்வாசம் சொன்னபடி. (மன்னிருளாய்நின்றநிலை) மன் - த்ருடம், த்ருடமான வந்தகாரம்போலேயிருக்கிற வெங்களுடைய வஜ்ஞானதசையை, (எமக்குத்தீர்த்து) தேவரீரை யுபாயமாகவடைந்த வெங்களுக்கு நிச்சேஷமாகத் தீர்த்து, (வானவர்தம்வாழ்ச்சிதர) வானவர் - நித்யஸூரிகள். அவர்கள் தங்க

வியாக்யானம்.

ளுக்கு அசாதாரணமான வாழ்ச்சியை யெங்களுக்குத் தருகைக்காக, வாழ்ச்சி - வாழுகை, கைங்கர்யம் செய்கையென்றபடி. (வரித்தேனுன்னே) உன்னேவரணம்பண்ணினேன், இத்தால் பலப்ரார்த்தனுத்மகமான கோப்த்ருத்வவரணம் சொன்னபடி. (இன்னருளால்) போக்யமான க்ருபையாலே, (இனி) பரஸமர்ப்பணுேத்தரதசையிலே, (எமக்கு) அகிஞ்சனரான வெங்களுக்கு, (ஓர்பரமேற்ருமல்) ஒருபரத்தையுமேற்ருமல், ஸ்வயத்நஸாத்யமாக வொரு வ்யாபாரத்தையு மெங்கள் தலையில் வையாமலென்றபடி. (என்திருமால்) எனக்கு ஸ்வாமியான ஸ்ரீயஃபதியே, (நீயே) ஸர்வசரண்யனுய் தயாபூர்ணனுன நீயே, (என்னேயடைக்கலங்கொள்) நிருபாதிகதாஸனுன வென்னே ரக்ஷ்யவஸ்துவாக வங்கீகரித்துக்கொள். பரமேற்ரும லென்னே யடைக்கலங்கொள்ளென்றத்தால் ஸ்வநிர்பரத்வாத்ய்யவஸாய பூர்வகமாக பரகர்ப்பமான வாத்மஸமற்பணரூபாங்கி ப்ரதிபாதிதமாய்த்து. பலஸமர்ப்பணம்ஸித்தமித்தாலே எனக்குத் தீர்த்தெறு பலப்ரார்த்தனேயிலே யாத்மீயபரத்தைச்சேர்த்து பஹுவசநமாக இருக்கையாலே அடைக்கலங்கொள்ளென்னே யென்கிறவிடத்திலும் பஹுவசனத்திலேதான் தாத்பர்யம். இப்பாட்டிலங்கங்களே முன்பின்னுகச் சொன்னத்துக்கு "க்ஷத்ராதிகூலௌவிஃவாஃ, அத்யந்தாகிஞ்சநோஹம்" (த்வத்ப்ராதிகூல்யமுகாஃ, அத்யந்தாகிஞ்சனோஹம்) இத்யாதி ப்ரதேசங்கள்போலே க்ரமத்திலே தாத்பர்யமில்லே, அவச்யாபேக்ஷிதத்வத்திலே தாத்பர்யம். இத்தாலங்காங்கீ ஸமுதாயாத்மகமே ப்ரபத்தி சப்தவாச்யமென்றும் இதி லேகதேசமான சேஷத்வ ஜ்ஞாநரக்ஷகத்வாத் யவஸாயங்கள் ப்ரபத்திசப்தவாச்ய மன்றென்றும் சொல்லிற்ருய்த்து. (நுக)

மேல் விரோதபரிஹாரத்திலிருக்கிற வாத்யந்தபாட்டுகள் மூன்றில் முதல்பாட்டு. இந்த விரோதபரிஹாரமென்கிற ரஹஸ்யத்திலே "ஸ்ரீமத்வேங்கடநாயகேநவஹதா ஶேஷாமிவாஜ்ஞாம்ஸதாம்" (ஸ்ரீமத்வேங்கடநாயகேநவஹதா சேஷாமிவாஜ்ஞாம்ஸதாம்) என்கிறபடியே பெரியவாளுடைய நியமனத்தாலே முமுக்ஷுவுக் கவச்யஜ்ஞாதவ்யங்களான ரஹஸ்யார்த்த ப்ரமேயங்களில் பாலுக்குள் நீர்த் துரும்புபோலே வருகிறசங்கைகளே நூற்றெட்டு வாக்யங்களாலே பரிஹரிக்கத் திருவுள்ளமாய், "ஸ்ரீமந்நாராயணஃஸ்வாமீ, உதிதம்பவதஃபாயாத்" (ஸ்ரீமந்நாராயணஸ்வாமி, உதிதம்பவதஃ பாயாத்) என்கிற ச்லோகத்வயத்தை வக்தவ்யார்த்த ஸங்க்ரமாயும் மங்களமாயும் செய்தருளி தமக்கிப்படிப்பட்ட சங்கைகளேப் பரிஹரிக்க யோக்யங்களான ஜ்ஞானசக்த்யாதிகளுண்டென்கிற வம்சத்தை ஸகலவேத ப்ரதிபாத்யனுய் அகடிதகடனுஸாமர்த்யவானுய் ஸர்வவிரோதி நிவர்த்தகனுன ஸர்வேச்வரன் நமக்கு

௩௨-மூ.—பரவுமறைகளெல்லாம்பதஞ்சேர்ந்தொன்றநின்றபிரான்
இரவன்றிரவியின்காலத்தழைத்தவெழிற்படையோன்
அரவுங்கருடனுமன்புடனேந்துமடிரண்டுந்
தரவெந்தமக்கருளால் தளராமநந்தனனே. (எக)

(ப-ரை.) பரவும் - பரவுகின்ற, மறைகளெல்லாம் - வேதங்களெல்லாம், பதம் - தன்திருவடிகளை, சேர்ந்து - அடைந்து, ஒன்ற - பொருந்தும்படி, நின்ற - எழுந்தருளியிருந்த, பிரான் - பரமோபகாரகனும், அன்று-பாரதயுத்தத்தில், இரவியின் காலத்து - ஸூர்யனதுகாலமாகிய பகலில், இரவு - ராத்திரியை, அழைத்த - வரவழைத்த, எழில் - ஔஜ்வல்யமுடைய, படையோன் - சக்ராயுதத்தையுடையவனுமாகிய ஸ்ரீயஃபதி, அரவும் - ஆதிசேஷனும், கருடனும் - கருடனும், அன்புடன் - பிரீதியுடன், பக்தியுடன், ஏந்தும் - தரித்தும், அடியிரண்டும் - திருவடிகளிரண்டையும், தர - நமக்குகொடுக்க, எந்தமக்கு - நமக்கு, தளரா - தளராத, மனம் - மனஸ்ஸை, அருளால் - தன்கிருபையினால், தந்தனன் - கொடுத்தான். (௩௨)

---

வியாக்யானம்.

ப்ரமப்ரமாதாதி ரஹிதமான ஜ்ஞானத்தை க்ருபைபண்ணினனென்கிறரடியி லொருபாட்டாலே.

(பரவும்மறைகளெல்லாம்) மறை - வேதம், பரவுகை - விசாலமாகை, அதி விஸ்த்தீர்ணங்களான வேதங்களெல்லாம், (பதஞ்சேர்ந்து) தம்முடைய திருவடிகளையடைந்து, (ஒன்ற) ஒன்றும்படி, ஒன்றுகை ஏகீபவிக்கை. (நின்றபிரான்) ஸகலவேதங்களும் தம்திருவடிகளை ப்ரதிபாத்யதயா அடைந்து அங்கேயே ஏகீபவித்து நிற்கும்படி ஸர்வோத்க்ருஷ்டனாய்நின்ற வுபகாரனை, ஏகீபவிக்கையாவது அக்நீந்த்ராதிசப்தங்களும் பர்யவஸான வ்ருத்யாதத்பரங்களாகை. இது படையோன் யென்கிறத்தோ டந்வயிக்கும். (அன்று) பாரதஸமரத்தில், (இரவியின்காலத்து) இரவி - ராத்திரி, இன்மை - யில்லாமை, ராத்திரியில்லாத வேளையிலே, யத்வா - இரவிஸூர்யன், இன் - ஸ்வார்த்தே. ஸூர்யனுடைய ஸஞ்சாரகாலத்திலே, (இரவு) ராத்ரியை, (அழைத்தவெழில்படையோன்) எழில் - ஔஜ்வல்யம், அழையாநின்று அத்தாலே ஔஜ்வல்யசாலியான திருவாழியையுடைய ஸர்வேச்வரன், படை - ஆயுதம், தத்விசேஷமான சக்கரம் விவக்ஷிதமிங்கு, ஜயத்ரதவதார்த்தமாக ஸூர்யனிருக்கும்போதே சக்ரத்தாலே யவனைமறைத்து ராத்ரியையுண்டாக்கின வகடிதகடனா ஸாமர்த்யவானான வுபகாரகனென்றர்த்தம். இதுக்கு க்ரியையோ டந்வயம். (அரவும்) ஸர்ப்பமும், ஆதிசேஷனுமென்றபடி, (கருடனும்) கருடனும், (அன்புடனேந்தும்) ப்ரேமத்தோடேகூட வேந்துகைக்கு யோக்யமான, (அடியிரண்டும்)

வியாக்யானம்.

இரண்டுதிருவடிகளையும், (தர) கொடுக்கைக்காக (வந்து) ஆசார்யரூபமாகவந்து, அனந்த கருடாதிகளாலே ப்ரேமபூர்வமாக ஸ்பர்சிக்குந் திருவடிகளை நமக்கும் போக்யமாக வநுபவிக்கும்படி தருகைக்காக விங்குவந்தென்றபடி. இந்த ரஹஸ்யம் திருவஹீந்த்ரபுரத்தில் செய்தருளினபடியால் அங்கே யநந்தகருட ஸம்வாதநிவர்த்தகமாகவந்தமை தோற்றுகைக்காக அரவுங்கருடனு மித்யாதியால் திருவஹீந்த்ரபுரத்தில் வந்தென்றுமாம். (அருளால்) க்ருபையாலே, (எமக்கு) ஸதாசார்ய கடாக்ஷம்பெற்ற நமக்கு, (தளராமனந்தந்தனனே) தளராதமநஸ்ஸைக் கொடுத்தான். மதாந்தரஸ்தர்களு மேகதேசிகளும்பண்ணும் சங்கைகளுக்கு நிவர்த்தகங்களாயும் ப்ரமப்ரமாத ரஹிதங்களாயுமுள்ள ஜ்ஞாநாதிகளையும் க்ருபையாலேதந்து அதுகளில் மநஸ்ஸு போகாதபடி பண்ணிறுனென்று தாத்பர்யம். (கூஉ)

இப்படி நமக்கிவ்விஷயத்திலே பகவத்கடாக்ஷத்தால் வந்ததெளிவை யருளிச்செய்து மேல் எண்பது வாக்யத்தாலே திருமந்த்ரார்த்தத்தில்வரும் சங்கைகளையும் பத்துபத்து வாக்யங்களாலே மத்யமத்ருதீய ரஹஸ்யார்த்தசங்கைகளையும் மேலேழு வாக்யத்தாலே மூன்று ரஹஸ்யத்துக்கும் பொதுவான சங்கைகளையும் பரிஹரித்து, இப்படி நூற்றேழுவாக்யங்களாலே பரிஹரித்த சங்கைகள்தவிர மற்று மிஸ்ஸம்ப்ரதாயார்த்தங்களில்வரும் சங்கைகளை ஸ்ரீபாஷ்யகாராதிகள் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதிகளாலே பரிஹரிக்கலாமென்று நூற்றெட்டாம் வாக்யத்தாலே யருளிச்செய்து இப்படி ஸம்ப்ரதாயத்தை ப்ரவர்த்திப்பித்த ஸ்ரீபாஷ்யகாரருடைய திகந்தவிச்ராந்தமான கீர்த்தியைச் சில த்ருஷ்டாந்தங்களைக் காண்பிவைத்து அதுகளோடே ஸத்ருசமன்றென்று சொல்லியதுக்கு ஹேதுவையு மருளிச்செய்து இது நித்யமாகச் சொல்லவேணுமென்று இக்கீர்த்திக்கு மங்களாசாஸநம் செய்தருளுகிறுரொருபாட்டாலே நாலாமதிகாரத்தில் முடிவிலே.

(மூண்டமுண்டனை) மூளுகை - உத்யோகம், மூண்ட - உத்யுக்தரான, முண்டனை - முண்டரென்று சிகாயஜ்ஞோபவீதாதி ரஹிதரான சங்கராதிகளைசொல்லி வாதம்பண்ணவந்த ஸமஸ்த ஸித்தாந்திகளைனென்னலாம். யத்வா - பூர்வோத்தரபாகங்களாலே ஏகமான மீமாம்ஸையில் முண்டம்போலேயிருக்கிற ஏகதேசக்ராஹிகளான ராஹுக பந்த மீமாம்ஸக ப்ரப்ருதிகளையும் சொல்லலாம். இதுக்கு சாடியென்கிறத்தோ டன்வயம். (சலந்தவிர்ந்து) சலத்தைவிட்டு, தவிர்கை - விடுகை. இதுபலக்ஷணம். வாதத்திலே சலசாதிரூபங்களான நிக்ரஹஸ்தானங்களை விட்டென்றபடி. (வாதுசெய்து) வாது - வாதம், அத்தைச் செய்து, அந்த ஸித்தாந்திகளோடு வாதம்பண்ணி யென்றபடி. (சாடி)

௩.௩-மூ.—அலர்ந்தவம்புயத்திருந்துதேனருந்திகயென்றுகோ
அல்குலாரசைந்தடைந்தநடைகொளாவனமெனோ
நலந்தவிர்ந்தாலதென்கொனுவின்வீறிழந்ததா
னுவணங்குநாதர்தந்தநாவின்வீறிழந்ததென்
சலந்தவிர்ந்துவாதுசெய்துசாடிமூண்டமுண்டரைச்
சருவிலாரெனக்கனத்துரைத்தவெதிராசர்தம்
வலந்தருங்கைநாயனூர்வளைக்கிசைந்தகீர்த்தியார்
வாரிவாலதாகுமென்றுமாசில்வாழிவாழியே. (எஉ)

(ப - ரை.) அலர்ந்த - விகஸித்த, அம்புயத்து - தாமரஸ புஷ்பத்தின்கண், இருந்து - இருந்து, தேன் - மகரந்தத்தை, அருந்தி - பானம் செய்து, இன் - இனிய, அகல் - விசாலமாகிய, அல்குலார் - கடிபுரோபாகமுடைய யுவதிகள், அசைந்து - மெள்ளமெள்ள நடந்து, அடைந்த- அடைந்த, நடை - நடையை, கொளாதது - கொள்ளாததான, அனமெனோ - அன்னமென்னலாமோ, அது - அவ்வன்னம், நலந்தவிர்ந்ததால் - நன்மையற்றதாகையால், என்கொல் - என்னுகின்றது, நாவின் - நாக்கினது, வீறு - பெருமையை, இழந்ததால் - இழந்தமையால், நாவணங்கு - ஸரஸ்வதியினது, நாதன் - உபாஸ்யனுகியஹயக்ரீவன், அல்லது பர்த்தாவாகிய பிரமதேவன், தந்த - தந்த, நாவின்வீறு - நாவின் வீறு, இழந்ததென் - இழந்ததோஎன்ன, சாடிமூண்ட - வாதத்தில் உத்யுக்தர்களாகிய, முண்டரை - மொட்டைத்தலையரை, சாடி-நிராகரித்து, சலந்தவிர்ந்து - ச்சலத்தைவிட்டு, வாதுசெய்து - வாதம்பண்ணி, சருவிலார் - சரிந்துபோத லில்லாதவர், என - என்றுநினைத்து, கனைத்து - கர்ஜித்து, உரைத்த - வாக்யார்த்தமருளிச்செய்த, எதிராஜர்தம் - யதிஸார்வ பௌமனுடைய, வலந்தரும் - அபயப்ரதானம்செய்யும், கை - திருக்கையையுடைய, நாயனூர் - எம்பெருமானது, வளைக்கு - சங்கத்திற்கு, இசைந்த - ஸத்ருசமான, கீர்த்தி - கீர்த்தியானது, வாரி - நிர்மல ஜலம்போலவும், வாலது - சாமரம்போலவும், ஆம் - ஆம், அது - அந்த கீர்த்தி, என்றும் - எப்போதும், மாசில் - களங்கமற, வாழி - வாழக்கடவது, வாழி - வாழக்கடவது. (௩.௩)

---

வியாக்யானம்.

நிராகரித்து, சாடுகை - தள்ளிவிடுகை, வாதத்தாலே யவர்களுடைய யுக்தியை நிராகரித்து அவர்கள் ஸித்தாந்தத்தை யபஸித்தாந்தமாக்கி யென்கை. (சரிவிலாரென), சரிவு - சரிந்துபோகை, அதிலார் சரிவில்லாதவர்கள், என - என்றெண்ணி, இத்தாலு மிவர்களுக்கொரு சரிவில்லையென்று பார்த்தென்றபடி. (கனத்துரைத்த) அதிகமாகச் சொன்னவரான, அதாவது சிரகாலமவர்கள் யுக்திக்குக் கழிவுவரும்படி க்ரந்தரூபமாக வவர்கள் ஸித்தாந்தத்தையழித்து ஸ்வஸித்தாந்தத்தை ஸ்தா

வியாக்யானம்.

பித்தவரான வென்கை. (எதிராஜர்தம்) தம்மென்று ஸ்வார்திகம், அவருக்கே யஸாதாரண மென்கையிலே தாத்பர்ய மாகவுமாம். யதிராஜருடையதான, இதுக்குக் கீர்த்தியோடே யந்வயம். ராமாநுஜாதி சப்தத்தைவிட்டு யதிராஜ சப்தப்ரயோகத்துக்கு ச்ருதி ஸ்ம்ருதி விருத்தமாய் சிகாயஜ்ஞோபவீதரஹிதமான முண்டஸன்யாஸம்போலே யன்றிக்கே, ஸகலசாஸ்த்ரஸம்மதமாய் தத்தாத்ரேய பஞ்சசிகாதிகளாலே பரிக்ருஹீதமாயிருந்த த்ரிதண்ட ஸன்யாஸா ச்ரமபரிக்ரஹம்பண்ணினவரென்று தாத்பர்யம், அதிலும் குடீசகாதிகளில் சிரேஷ்டமான பரமஹம்ஸத்வத்தைப் பரிக்ரஹித்தமை தோற்றுகைக்காக ராஜபதம். (பலந்தருங்கை நாயனர்) பலம்-பலம், தருகை-கொடுக்கை, நாயனர்-ஸ்வாமி, பலத்தைக்கொடாநின்ற திருக்கைகளை யுடைத்தான ஸர்வ ஸ்வாமியினுடைய, பலந்தருங்கையென்று ஆச்ரிதர்களுக்கு அஞ்சாதேயென்று தைர்யப்ரதமான வபயஹஸ்தத்தைக் கணிசிக்கிறபடி. (வளைக்கிசைந்த கீர்த்தியால்) வளை-ஹஸ்தகடகம், அதுக்கு இசைகையாவது ஆஸ்ரித ரக்ஷணத்திலும் ச்வைத்தியத்திலும் போக்யதையிலும் ஸத்ருசமாயிருக்கை. கீர்த்தியை வெளுப்பாக லோகத்தில் வர்ணிக்கையாலும் அதுரக்ஷகமாக நமக்கு இருக்கையாலும் ச்ரவணம் பண்ணும்போது போக்யமாக இருக்கையாலும் இப்படி சொல்லுகை யுபபன்னம். ரக்ஷகத்வமுண்டோவென்ன "வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே சரண்" என்றிறே ஆழ்வாரும் கீர்த்திக்கு. (கீர்த்தியார்) யசஸ்ஸானது, இதுக்கு மேலுள்ள த்ருஷ்டாந்தங்களோடும் காதாந்தத்திலுள்ள க்ரியையோடும் அந்வயம். கீர்த்தியாரென்று சேதநஸமாதியால் நிர்தேசித்தது பூஜ்யதையாலும் அஸத்ருச மாகையாலும். மேல் த்ருஷ்டாந்தம், (அலர்ந்தவம்புயத்திருந்த) அலருகை - விகஸிக்கை, அம்புயம் - பத்மம், விகஸியாநின்ற பத்மத்துக்குள்ளே யிருந்ததான, (தேனருந்தி) அருந்துகை-பாநம்பண்ணுகை, இங்குலக்ஷணயா பாநயோக்யமான ப்ரவாஹபரம், தேனுடைய ப்ரவாஹமானதென் றர்த்தம். அருந்தியென்று ப்ரவாஹத்தையும்சொல்லலாம். (என்றுகோ) என்றுசொல்லலாமோ, ச்வைத்யத்துக்கும் போக்யதைக்கும் விகஸிததாம ரஸாந்தர்கதமது வெள்ளத்தை யதிராஜகீர்திக்கு த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாமோ வென்றபடி, என்கொலென்று பாடமானாலும் அர்த்தமிப்படியே. இது சலிக்கையாலே அசலமான த்ருஷ்டாந்தாந்தரஞ் சொல்லுகிறர் மேல், (அல்குலாரசைந்தடைந்த) அல்குல் - கடிபுரோபாகம். அதுடையவர்கள் அல்குலார், ஸ்திரீகளென்றபடி. அந்த ஸ்திரீகளாலே அசைந்தடையாநின்ற, (நடை) கமனம், அசைந்தடைகையாவது ம்ருதுவாக நடக்கை. (கொளாத) கொள்ளாததான, அந்தநடையை யங்கீகரியாததான வென்றபடி. (அனமெனே) அனம் - ஹம்ஸம், ஹம்ஸமென்னலாமோ,

வியாக்யானம்.

உத்தமஸ்திரீக மனஸத்ரு சகமனவத்தானஹம்ஸத்தினுடைய கமநரஹிததசையையந்த கீர்த்திக்கு ஸத்ருசமாகச் சொல்லலாமோ, இங்கு ஸ்திரீ கமனவத்தையையெடுத்தது உத்தமலக்ஷண வத்வத்யோதநார்த்தம். தந்நிஷ்டகுணங்க ளிதுகளிலில்லாமையினுலே இந்த த்ருஷ்டாந்தங்களைத் தவிர்க்கிருர் மேல், (அது) த்ருஷ்டாந்தங்கள், (நலந்தவிர்ந்தால்) நலம்-ஆநந்தம், ஆநந்தத்தைத்தவிர்ந்திருக்கையால், (என்கொல்) என்னென்று சொல்லலாம். கீர்த்திக்கு ஸத்ருசமான வாநந்த மிதுகளிலில்லாததினுலே யெப்படியதுக்கு ஸத்ருசமாகச் சொல்லலாமென்றபடி. இதுகளைக்காட்டிலு மந்தகீர்த்திக்கு என்ன நலமென்ன; சொல்லுகிருர் மேல். (நாவின்வீறிழந்ததால்) நாவு – ஜிஹ்வை, வீறு – உத்கர்ஷம், நாவினுடைய வுத்கர்ஷத்தை யிழந்தபடியால், நாவுக்கு வீருவது ஸர்வஸம்மதமாயும் விலக்ஷணமாயுமுள்ள சப்தரசனு ஸாமர்த்யம். ததாயத்தமாயன்ருே கீர்த்திக் கௌத்க்ருஷ்ட்யம். ஹம்ஸாதிகளுக்கு ச்வைத்யாதிகளிருந்தாலும் தாத்ருசமான நாவின் வீறில்லாததினுலே யதுக்கு ஸத்ருஸமான வாநந்தப்ரதத்வ சக்தியில்லை. அத ஏவத்ருஷ்டாந்தமாக மாட்டாதென்கை. இப்படி ஹம்ஸாதிகள் ஸத்ருசங்களாகாதிருந்தபோதிலும் இவற்றைப்போலே நாவின்வீறு பெற்றவர்கள் பின்னும் சிலபேர்களிலல்லையோ வென்னசொல்லுகிருர்மேல். (நாவணங்குநாதர்தந்த) அணங்கு-தேவதை. நாவு – வாக்கு, நாவணங்குவாக்தேவதையான ஸரஸ்வதீ. அவளுக் காராத்யத்வேந ஸ்வாமியான ஹயக்ரீவர் கொடுத்ததான, (நாவின்வீறிழந்ததென்) அந்த நாவின்வீறை யிழந்ததென்னவஸ்து. வாக்தேவதாராத்யரான ஹயக்ரீவ ப்ரஸாதலப்தமான ஜ்ஞாநஸத்ருச ஜ்ஞாநமாகுமோ வங்யஜ்ஞாந மென்றபடி. இவருக்கு ஹயக்ரீவர் ப்ரஸாதித்தாரோ வென்ன. பேரருளாளர் ப்ரஸாதித்ததே ஜ்ஞாநப்ர தத்வாகாரத்தாலே ஹயக்ரீவ ப்ரஸாதலப்த மென்கை. நாவணங்கு நாதரென்று ப்ரஹ்மாவுக்கும் ஸரஸ்வதிக்கும் ப்ரத்யக்ஷமாயும் ஆராத்யராயுமுள்ள பேரருளாளரைச் சொல்லவுமாம். நாவணங்கென்ன அவளுக்கு நாதரென்ன இவர்கள் கொடுத்தவீறென் றுத்வந்த்வனுகவும் யோஜிக்கலாம். அப்போது சாரதாபீடத்திலே ஸ்வாமியினுடைய ஸ்ரீபாஷ்யத்தை ஸரஸ்வதி சிரஸாவஹித்து இதுவே ஸர்வோத்க்ருஷ்டமென்று அங்கீகரித்தமை தோற்றலும் ஆகையாலிப்படிப்பட்ட வேற்றம் அன்யநாவுக்கிருந்தாலன்ருே த்ருஷ்டாந்தமாகலாமென்று தாத்பர்யம். இப்படி ஸர்வாம்சத்திலும் ஸமமான த்ருஷ்டாந்தமில்லாவிடிலும் நிர்மலத்வாதிகளிலே தோன்று மோரம்சத்திலாவது த்ருஷ்டாந்தமாகும் வஸ்துவில்லையோவென்னச் சொல்லுகிருர்மேல்; (வாரிவாலதாகுமென்று மாசில்வாழிவாழியே) மாசு-அழுக்கு, அதில்லாத, நிர்மலமானவென்றபடி. இது வாரிக்கும் வாலுக்கும் விசேஷணம். வாரி – ஜலம்,

வியாக்யானம்.

வால் - ஸாமான்யவாசியான வால் சப்தம் தத்விசேஷமான சமரம்ருகத்தினுடைய வாலைச் சொல்லும். அதாகும் - அதுக்கு த்ருஷ்டாந்தமாகும், யத்வா, வாலதென்று - வாலாய் ஆகுமென்று, த்ருஷ்டாந்தமாகுமென்றுமாம். இத்தால் நிர்மலத்வாம்சத்தில் பரிசுத்தஜலமும், சுப்ரமானசாமரமும் யத்யபி த்ருஷ்டாந்தமாகலாமென்றர்த்தம். வாரி வாலதென்று சிடுக்குவிடுத்து வாரினதா யத்தாலே பகவத்கைங்கர்ய யோக்யமான சாமரமென்னும் ஒரு த்ருஷ்டாந்தமாகவும் யோஜிக்கலாம். வாழியென்று மங்களவாசி சப்தமாய் மங்களப்ரார்த்நாபரம். (என்று வாழி) இப்படி யிக்கீர்த்தி நித்யமாகச் சொல்லவேணும். த்விருக்தியாதராதிசயத்யோதகம். வாரிவாலதாகு மென்கிறவிடத்தில் நைர்மல்யமர்த்தஸித்தமாய் மாசிலென்கிறத்தை வாழியோடே சேர்த்து இக்கீர்த்தி நித்யமாயும் நிர்மலமாயு மிருக்கவேணுமென்று ப்ரார்த்திக்கிறதாகவுமாம். எம்பெருமானுருடைய கீர்த்தியானது எம்பெருமானுக்கு நிர்மலமான வொருசாமரம் வீசுகிறதுபோலேயா மாகையாலே யது நித்யமாகச் சொல்லவேணுமென்று இப்படியு மொரு யோஜனைபண்ணலாம். கீர்த்தியாலென்று பாடமாளுலு மிப்படியர்த்தங் கொள்ளலாம். (ஙடு)

இப்படி ப்ரஸ்துதமான வெம்பெருமானுர் கீர்த்தியை ஸ்துதித்து ஸ்ரீமத் வேங்கடநாயகே என்கிற ச்லோகத்தாலே ஸன்நியோகத்தாலதிகர்க்கசயுக்திகளாலே இச்சங்கையைப் பரிஹரித்தோமென்றும் "ஸ்தோதும் நிந்திதுமஸ்மதுக்தி" என்கிற ச்லோகத்தாலே யிந்தக்ரந்தத்தை குணக்ராஹிகள் ஸ்துதித்தாலும் மூடபுத்திகள் நிந்தித்தாலும் நமக்கொரு பாதகமில்லை, நம்முடைய திருவடிகளை யாச்ரயித்தவர்களுக்காகச் செய்தோமென்றும் சொல்லி, இப்படிப்பட்ட சங்காநிவர்த்தகமான ஜ்ஞாநாதிகள் அந்யாளுக் கில்லையாவென்கிற சங்காவாரணுர்த்தம் பகவத் க்ருபாபாத்ரபூதாளான வாசார்ய ஸகாசாத்க்ருஹீதமான ஜ்ஞாநாதிகளையுடையவர்களுக்கு ஸர்வஜ்ஞ த்வேநப்ரஸித்தரான ருத்ராதிகள் பக்கல் நன்ருகவடைந்த ஜ்ஞானமுடையவர்களும் ஸத்ருசராகமாட்டார்க ளென்கிருர் முடிவிலொருபாட்டாலே.

(சடையன்திறலிவர்கள்) சடையன் - ஜடாதாரியான ருத்ரன், திறலென்று ஸாமர்த்யவாசியாய் லக்ஷணயா ஸ்ருஷ்ட்யாதி ஸாமர்த்யவானை ப்ரஹ்மாவைச்சொல்லி, ருத்ரனென்ன ப்ரஹ்மாவென்ன விவர்களென்றர்த்தம், (பெருஞானக்கடலதனை) பெரிதான ஞானமாகிறகடலை, (இடையமிழாது) இடை-மத்யம், மத்யையிலே யமிழ்ந்துபோகாதபடி, (கடத்தலும்) கடக்கை - தாண்டப்பண்ணுகை, ஞானஸாகரத்தை ஸ்வயம் தரணம் பண்ணினுலும் தங்களை யாஶ்ரயித்தவர்களைத் தாண்டிவைத்தாலும், (எய்து) எய்தது என்கிறது நடுக்குறைதலாய் எய்தென்றிருக்கிறது. எய்தது - அடைந்தது, (அளவென்றறியார்) பரிச்சின்னமென்

௩௪-மூ.—சடையன்றிறலிவர்கள்பெருஞானக்கடலதனை
இடையமிழாதுகிடக்கிலுமெய்தளவென்றறியார்
விடையுடனேழன்றடர்த்தவன்மெய்யருள்பெற்றநல்லோர்
அடையவறிந்துரைக்கவடியோமுமறிந்தனமே. (எ௩)

(ப-ரை.) சடையன் - சடாவானுன சிவனது, திறலவர்கள் - பலத்தவர்கள், சிவன்பலத்தால் அறிவுபெற்றவர்கள், பெரு - பெரிய, ஞானக்கடலதனை - ஞானஸமுத்ரத்தை, இடை - மத்தியத்தில், அமிழாது - முழுகிப்போகாமல், கடக்கிலும் - தாண்டினும்; ஈது - இது, அளவென்று - அவதியென்று, அறியார் - அறியமாட்டார்கள், அன்று - நீளாபரிணயகாலத்தில், விடையேழு - ஸப்த வ்ருஷபங்களேயும், உடன் - ஏகதா, அடர்த்தவன் - நிரஸித்த கிருஷ்ணனது, மெய்யருள் - ஸத்யமான கிருபையை, பெற்ற - அடைந்த, நல்லோர் - பெரியோர்கள், அடையவறிந்து - பூர்ணமாக அறிந்து, உரைக்க-நமக்குச்சொல்ல, அடியோமும் - அவர்களின் தாஸபூதர்களான நாமும், அறிந்தனம் - தெரிந்துகொண்டோம். (௩௪)

---

வியாக்யானம்.

றறியமாட்டார்கள். அளவு - பரிச்சேதம், தத்வத்தாயாம்லக்ஷண, அறியவேண்டியவர்த்த மிவ்வளவுதான் வேறில்லையென் றறியமாட்டார்களென்றபடி. யத்வா, இவர்கள் - இந்த மதாந்தரஸ்தர்கள், சடையன் றிறல் - ருத்ரனுடைய ஸாமர்த்யத்தாலே, பெருஞானக்கடல்தன்னை - மஹத்தான ஞானஸாகரத்தை, எய்து-அடைந்து, இடையமிழாது கிடக்கிலும் மத்தியத்திலே விஶ்ரமியாமல் பூர்ணமாக கரைகண்டாலும், அளவென்றறியாத - இவ்வளவுதானென் றறியமாட்டார்களென்றும் யோஜிக்கலாம், பெருஞானக்கடல் தன்னில் இடையமிழாது கிடக்கிலும் எய்தனவென்றறிவார் என்று சிலபாடமுண்டு. அப்போது ருத்ராதிகளிடத்தில் பெற்ற ஜ்ஞாநஸாகரத்திலே மத்தியத்தில் முழுகிப்போகாமலதிலேயே கிடந்துகொண்டிருந்தாலு மிது ஒரு பரிச்சின்னமான ஜ்ஞாநமென்றே யறிவார்கள், என்றர்த்தம். இத்தா லவர்கள் பரிச்சிந்ந தேவதைகளாகையாலே ததாயத்தமாய்வந்த ஜ்ஞானமும் பரிச்சிந்நமானதால் அபரிச்சின்ன ஜ்ஞாநத்தாலே பண்ணவேண்டிய சம்ஸாரநிவர்த்தநத்தை யிது பண்ணமாட்டாதென்று கருத்து. தமக்கபரிச்சிந்ந ஜ்ஞானம் வந்ததுக்கு ஹேது மேல். (விடையுடனேழன்றடர்த்தவன்) அன்று - நப்பின்னைப்பிராட்டி விவாஹகாலத்திலே, ஏழுவிடை - ஏழு வ்ருஷபங்களேயும், உடனடர்த்தவன் - ஏககாலத்திலே ஸம்ஹரித்தவனுடைய, இத்தால் ஜ்ஞாநப்ரதனுடைய ஸர்வவிரோதி நிவர்த்தநசக்தியைக் காண்பிவைத்தபடி. (மெய்யருள்) ஸத்யமான க்ருபையை, ஏகதா விஷயீகரித்த வஸ்துவை விடாதொழிகையே இதுக்கு ஸத்யத்வம்.

வியாக்யானம்.

(பெற்றநல்லோர்) அடைந்த நல்லவாசார்யர்கள், ஸர்வவிரோதி நிவர்த்தகனுன க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ர பூதாளான வாழ்வாராதிகளான வாசார்யர்களென்றபடி. (அடையவறிந்துரைக்க) க்ருத்ஸ்நத்தையும் தாங்களுமறிந்து தங்களேயாஶ்ரயித்த வெங்களுக்கும் தெரியும்படி சொல்ல, (அடியோமுமறிந்தனமே) அவர்கள் திருவடிகளே யாச்ரயிக்கையாலே பகவத் க்ருபாவிஷய பூதாளான நாங்களு மந்த க்ருத்ஸ்நார்த்தங்களேயு மறிந்துகொண்டோம். ஆகையாலே யிந்த க்ரந்தம் பண்ணினேமென்று கருத்து. (௩௪)

மேல் முனிவாஹந போகத்தி லாத்யந்தங்களி லிருக்கிற மூன்று பாட்டுகளில் முதல்பாட்டு, இந்த ரஹஸ்யத்திலே பெரியபெருமாள் நியமநத்தாலே லோகஸாரங்க மாமுனி தோள்தனிலேவந்து அத்தாலே முனிவாஹநனென்று திருநாமமுடைய திருப்பாணுழ்வார் அந்த பெரியபெருமாளேக்கண்டு ஆபாதகேசமாக வநுபவித்து அவ்வநுபவ பரீவாஹமாய்வந்த அமலனுதி பிரானென்கிற ப்ரபந்தத்தை யருளிச்செய்ய அதினுடைய வர்த்தங்களே விசதமாக வருளிச்செய்ய வேண்டுமென்று வைராக்யசாலிகளான பெரியோர்கள் ப்ரார்த்திக்க வதின்பேரில் அருளிச்செய்த தாகையாலே யிதுக்கு முநிவாஹ நபோகமென்று பேர்வைத்து அதற்காக வடியிலே "வ்யாஸிஸ்யா ஸதிஹ க்ரா" (வ்யாசிக்யா ஸதிபக்த்யா) என்கிற ச்லோகத்தாலே தாமருளிச்செய்யப் புகுகிற வம்சத்தை யருளிச்செய்து பின்பு ஒருபாட்டாலே பெரியபெருமாளேத் தவிர விஷயாந்தரத்தில் ப்ரவர்த்தியாத விந்த்ரியங்களேயுடைய விவ்வாழ்வா ரநுபவ பரீவாஹ ரூபமாக வருளிச்செய்த தாகையாலே சுத்த வேதாந்தார்த்தங்க ளென்றறியுங்கொள் இவ்வம்சம் அந்த பெரியபெருமாளாலே வேதாந்ததேசிக பதத்திலே ஸ்தாபிக்கப்பட்ட நாமறிந்து சொல்லுகிறேமென்று பரோபதேசம் பண்ணுகிறுப்போலே யிப்ரபந்தத்தை ஸ்துதியா நின்றுகொண்டு முக்யார்த்தத்தை வெளியிடுகுறர்.

(காண்பனவும்) காணப்படும் வஸ்துவும், (உரைப்பனவும்) சொல்லப்படும் வஸ்துவும், (மற்றொன்றின்றி) வேறொன்று மில்லாமல், கண்ணனேத்தவிர சக்ஷுர் விஷயமான வஸ்துவும் வாக்விஷயமான வஸ்துவும் வேறொன்று மில்லாம லென்றபடி. இவர் சக்ஷுராதிகளுக்கு க்ருஷ்ணவ்ய திரிக்த வஸ்துவை விஷயமாக்கிற தில்லேயென்று கருத்து, (கண்ணனேயே கண்டுரைத்த) க்ருஷ்ணனேயே கண்டநுபவித்து தத்பரிவாஹமாக வுரைக்கப்பட்டதான க்ருஷ்ணுவதாரச்சுவடும் ஸௌலப்யாதிகளு மிருக்கையாலே பெரிய பெருமாளே க்ருஷ்ணனுகச் சொன்னது. இதுக்குப் பாடலோ டந்வயம். (கடியகாதல்) காதல் - ப்ரே

நடு-மூ.—காண்பனவு முரைப்பனவு மற்றொன்றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல்
பாண்பெருமா ளருள்செய்த பாடல்பத்தும்
பழமறையின் பொருளென்று பரவுமின்கள்
வீண்பெரிய விரிதிரைநீர் வையத்துள்ளே
வேதாந்த வாரியனென் றியம்பநின்றோம்
நாம்பெரியோ மல்லோமின்று நன்றுதீதும்
நமக்குரைப்பா ருளரென்று நாடுவோமே. (எச)

(ப - ரை.) காண்பனவும் - காணப்படுமவையும், உரைப்பனவும் - சொல்லப்படுமவையும், மற்றொன்றின்றி - வேறொன்றில்லாமல், கண்ணனையே - கிருஷ்ணனையே, கண்டு-ஸாக்ஷாத்கரித்து, உரைத்த - அவரையே அருளிச்செய்த, கடிய-பூர்ணமான, காதல்-பக்தியையுடைய, பாண்பெருமாள் - திருப்பாணாழ்வார், அருள்செய்த - கிருபைசெய்த, பாடல்பத்தும் - பத்துபாட்டுக்களும், பழமறையின் - பழயதான வேதங்களின், பொருள் என்று - அர்த்தமென்று, பரவுகின்றோம் - ஸ்துதிக்கின்றோம், வீண் - வீணே, பெரிய - பெரியதான, விரிதிரைநீர் - விரிகின்ற அலைகளையுடைய கடலால் சூழப்பட்ட, வையத்துள்ளே - பூமியிலே, வேதாந்தவாரியனென்று - வேதாந்தாசார்யனென்று, இயம்ப-சொல்லும்படி, நின்றோம் - நின்றோம், நாம் - நாமே, நாண் பெரியோமல்லோம் - பெரியவர்களன்று, நமக்கு - நமக்கு, இன்று - இப்போது, நன்றும் - நல்லதும், தீதும் - தீயதும், உரைப்பார் - இதுநன்று இது தீதெனச்சொல்பவர்கள், உளர் - இருப்பார்கள், என்று - என்று, நாடுவோம் - தேடுவோம். (நடு)

---

வியாக்யானம்.

மம், கடிய - அதிகமான, விஷயாந்தரத்திலே போகாதபடி மனஸ்ஸு அங்கேப்ரவணமா யிருக்கும்படியான பூர்ணப்ரேமசாலியான, (பாண்பெருமாள்) பாணென்கிறது பாணனென்றபடி. எம்பெருமான் போலே யிவரு முபகாரகத்வேந ஸ்வாமி யாகையாலே பெருமாளென்றது. அப்படிப்பட்ட பாண்பெருமாள் (அருள்செய்த பாடல்பத்தும்) க்ருபையாலே செய்தருளினதாய் காநயோக்யமான பத்துபாட்டும், உரைக்கவென்றிருக்க விங்கருள்செய்த வென்றது தம்முடைய வனுபவத்தோடே நில்லாமல் ப்ரபந்த ரூபமாகச் செய்தருளினது க்ருபாகார்யமென்கைக்காக. அன்றிக்கே "என்னுள்ளங் கவர்ந்தானை" யென்கிறபடியே தம்முடைய காதலை ப்ரபந்தத்திலே சொல்லுகையாலே கண்ணனைக்கண்டுரைத்த காதலை யுடையவரென்று காதலுக்கு விசேஷணமாயு மாக்கிஸார்த்தக்யம் சொல்லலாம். பாடல் பத்தென்றது சரமச்லோகம் போலே யொற்றையாயும் திருவாய்மொழிபோலே யாயிரமாயுமன்றிக்கே ஸர்வார்த்த ப்ரகாசகமாய்க்கொண்டு பத்துபாட்டா யிருக்கிற

வியாக்யானம்.

தென் கைக்காக. இதுக்குமேல் க்ரியையோடே யந்வயம். (பழமறையின் பொருளென்று) அநாதியான வேதார்த்த ப்ரதிபாதகங்களென்று, (பரவுமின்கள்) பரவுங்கோள், பராமர் சித்தறியுங்கோ ளென்றபடி. இதில் ப்ராமாண்யார்த்த மருளிச்செய்கிறார்மேல். (வீண்பெரிய) வீண்களாலே பெரிதான, வீண் - வ்யர்த்தவார்த்தை, தோஷாரோபண வார்த்தை யென்னவுமாம். இதுவையத்துக்கு விசேஷணம் (விரிதிரை நீர்) விரிகை - விஸ்தாரமாகை - விஸ்தாரமாயும் அனேகம் அலைகளையுமுடைய ஸமுத்ர ஜலங்களாலே சூழப்பட்ட, (வையத்துள்ளே) பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணமான பூமிக்குள்ளே, (வேதாந்த வாரியனென்று) வேதாந்தா சார்யனென்று, (இயம்ப) சொல்லும்படி, (நின்றோம்) ப்ரஸித்தனாக இராநின்றோம். "𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌰𑌾𑌜𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾 𑌲𑌬𑍍𑌧𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌦𑌃" (ஸ்ரீ ரங்கராஜ திவ்யாஜ்ஞா லப்தவேதாந்தா சார்ய பத꞉) என்கிறபடியே பெரியபெருமாளாலே வேதாந்தாசார்ய பதத்திலே நிறுத்தப்பட்டு அப்படியே பூமியிலுள்ளா ரடங்கலும் கொண்டாடும்படி யிருந்தோமென்றபடி. ஆனால் தேவரீருக்குப் பெரியவர்களில்லையோவென்ன; லஜ்ஜித்துச் சொல்லுகிறார். (நாம் பெரியோமல்லோம்) சேஷத்வஜ்ஞாந கார்யமான நைச்யாநு ஸந்தாநத்திலே வந்தால் நாம் பெரியவர்களல்லோம், இத்தையே விவரிக்கிறார்மேல் (இன்று) இப்போது, (நமக்கு) ஸ்பஷ்டம், தீ தும் என்கிறவிடத்தி லிருக்கிற அபிசப்தத்தை நன்று என்கிறத்திலும் கூட்டினால் நன்றும் தீதும் என்றுரூபம். நல்லதும் பொல்லாதும், (உரைப்பா ருளரொன்று) சொல்லுகிறபேர் ளுண்டென்று, (நாடுவோமே) நாம் வேதாந்தாசார்யபதம் பெற்றாலும் நமக்கு ஹிதாஹிதோப தேஷ்டாக்களான பெரியோர்களிப்போ தெங்கே யிருக்கிறார்களென்று தேடாநின்றோ மென்றபடி. நாடுவோ மென்றபடியாலே வஸ்துஸ்த்திதியி லில்லை, ஸ்வசிஷ்ய சிக்ஷார்த்த மிப்படி யநுஸந்தித்தபடியென்று தோன்றுகிறது. (௩௫)

இப்படி ப்ரபந்த கர்த்தாவான வாழ்வாருடைய ஸ்வபாவத்தையும் அதுக்கு வ்யாக்யானம் பண்ணுகிற தம்முடைய ஸ்வபாவத்தையும் சொல்லி மேலே யிப்ரபந்தத்திலுள்ள பத்து பாசுரங்களுக்கும் விஸ்தாரமாக வர்த்த மருளிச்செய்து யிதிலுபதிஷ்டார்த்தங்களும் ரஹஸ்யார்த்தங்களு மிருக்கும்படியாயும் காண்பிவைத்து இப்படி ஸர்வார்த்த ஸங்க்ரஹமான விப்ரபந்த தாத்பர்யத்தை யறிந்தபேர்களுக் குண்டாகும் பலவிசேஷத்தை ஸ்வாநுஸந்தாந ரூபமான வொருபாட்டாலே யருளிச்செய்கிறார் முடிவிலே.

(பாவளருந்தமிழ்மறையில்) பா - பாசுரங்கள், வளருகை - அபிவிருத்தியாகை, காநயோக்யங்களான பாசுரங்களாலே பூர்ணங்களாயிருக்

௯௬-மூ:—பாவளரும் தமிழ்மறையிற் பயனேகொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல்பத்திற்
கோவலனுங் கணவனுமாய்க் கலந்துநின்ற
காரணனைக் கருத்துறநான் கண்டபின்பு
கோவலனுங் கோமானு மானவந்நாள்
குரவைபுணர் கோவியர்தங் குறிப்பேகொண்டு
சேவலுடன்பிரியாத பெடைபோற் சேர்ந்து
தீவினையோர் தனிமையெல்லாந் தீர்ந்தோநாமே. (எ௫)

(ப - ரை.) பா - பாட்டுக்கள், வளரும் - வளருகின்ற, தமிழ்மறையின் - த்ரமிடவேதத்தின், பயனே - ப்ரயோஜனத்தையே, கொண்ட - தமக்கு முக்கியமாகக்கொண்ட, பாண்பெருமாள் - திருப்பாணாழ்வார், பாடியது - பாடியதான, ஓர் - ஒப்பற்ற, பாடல் பத்தில் - பத்துப்பாட்டுக்களில், காவலனும் - ரக்ஷகனும், கணவனுமாய் - ஸ்வாமியுமாய், கலந்துநின்ற - சேர்ந்துநின்ற, காரணனை - ஸர்வகாரணபூதனான ஸ்ரீய꞉பதியை, கருத்து - மனத்தில், உற - பொருந்த, நான் - நான், கண்டபின்பு - பார்த்தபின், கோவலனும் - கோபாலனும், கோமானும் - ராஜாவுமாக, ஆன - ஆகிய, அந்நாள் - அந்தநாளிலே, குரவைபுணர் - ராஸபந்தம்செய்த, கோவியர்தம் - கோபிகைகளின், குறிப்பு - குறிப்பை, கொண்டு - க்ரஹித்து, சேவலுடன் - ஆணுடன், பிரியாத - நீங்காத, பெடைபோல் - பெண்போல், சேர்ந்து - கூடி, தீவினையோர் - துஷ்கர்மவான்களது, தனிமையெல்லாம் - தனிமையையெல்லாம், நாம் - நாம், தீர்ந்தோம் - நீங்கினோம். (௯௬)

வியாக்யானம்.

கிற த்ராவிட வேதங்களுக்குள்ளே, மறையென்றது - கீர்வாணமயமான வேதம்போலே நித்யமாய் அபௌருஷேயமா யிருக்குமென்கைக்காக, அதுகளி லிருக்குக்களென்றும் ப்ருஹத்ஸாமமென்றும் ரதந்தரஸாமமென்று மிருக்குமாப்போலே இங்கு பாசுராதிகள். அங்குகாடகாதி ஸம்ஜ்ஞைபோலே யிங்கு பெரியாழ்வார் திருமொழிபெருமாள் திருமொழி யித்யாதி ஸம்ஜ்ஞை, அது நித்யமென்கை ஸர்வஸம்மதம். இப்படி இதுக்கு ப்ரமாண முண்டோவென்ன “வேதாஶ்ச வேதஶாயாஶ்ச நித்யாஶ்ச த்ராவிடஸம்ஹிதா꞉ । கலௌ கலௌ ப்ரணீயந்தே க்ருபயா ஜ்ஞாநயோகிபி꞉ ॥ த்வாபராந்தே யதா வ்யாஸோ வ்யாஸிஷ்யதி மஹாஶ்ருதீ꞉ । ததா நித்யாத் த்ரமிடாயா ஶ்ரோகோவத்வ்யாஸிஷ்யதி” என்றும் “ஸம்ஸ்க்ருதஶ்ருதயோ யத்வத் தத்வத்ராவிடஸம்ஹிதா꞉” என்றும் (ஏதாச்ச வேதகாதாச்ச நித்யாத்ராவிட ஸம்ஹிதா꞉ (கலௌகலௌப்ரணீயந்தே க்ருபயாஜ்ஞாந யோகிபி꞉ - த்வாபராந்தே யாதா வ்யாஸோ வ்யாஸிஷ்

வியாக்யானம்.

யதிமஹாங் ச்ருதீ:-தஞ்சநித்யாத்ம பூர்காதா: சடகோப:ப்ரணேஷ்யதி) (ஸம்ஸ்க்ருத ச்ரு தயோயத்வத் தத்வத் த்ராவிடஸம்ஹிதா:) என்றும் மார்க்கண்டேயாதி புராண வசநங்களாலும், அதை யனுசரித்ததான ‘‘யொ௨ராக்ஷீசு ௨ராமிடீ௦ ஶ்ரஹ்மஸம்ஹிதா௦’’ (யொத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரும்மஸம்ஹிதாம்) என்றும் ‘‘ஸ௦ஹிதா௦ ௨ரஷ்டவ௩௦, தாஶ்ரவணீ௰ தடாதஶஜிசு௨ரஷ்டஸ௫பீயஶாவா’’ (ஸம்ஹிதாம் த்ருஷ்டவந்தம், தாம்ரபர்ணீ தடகதசடஜித்த்ருஷ்டஸர்பீயசாகா) என்றும் சொல்லுகிற பூர்வாசார்ய வாக்யங்களாலும் நித்யத்வாகாராதிகளாலே தத்துல்ய மென்கைக்குக் குறையில்லை. (பயனேகொண்ட பாண்பெருமாள் பாடியதோர் பாடல்பத்தில்) பலத்தையே முக்யமாகக் கொண்டவரான திருப்பாணாழ்வாருடைய திருப்பவளத்தாலே பாடினதாயுமிதர விலக்ஷணமாயிருக்கையாலே யத்விதீயமாயுமுள்ள பத்துப்பாட்டுகளிலே. பயனேகொண்டவென்றது ‘‘நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்ருர் கரைந்தேங்க’’ என்றும் ‘‘முற்றமூத்து கோல்துணையா முன்னடி நோக்கிவளைந்’’ தென்றும் ‘‘கூடிச்சுட்டியுற்ருர்களிருந்து’’ என்றும்பாடியுலகவ்ருத்தாந்தத்தையும் காடுமேடுகளையும் வர்ணிக்கும் மற்ற ஆழ்வார்கள்போலன்றிக்கே பெரியபெருமாள் திருமேனியையும் அவருடைய கல்யாணகுணங்களையும் தவிர வேருென்றை யிவ்வாழ்வா ரனுபவியாத வம்சத்தை. பாடியதோரென்றது கானயோக்யமேதவிர மற்றப்ரபந்தங்கள் உத்பத்தி தசையிலே தாளத்தோடே பாடினதான விப்ரபந்தம்போலே யிராதென்கைக்காக. உக்தமான வாகாராதிகளே யிப்ரபந்தத்துக்கு வைலக்ஷண்யம். (காவலனுங்கணவனுமாய்க் கலந்துநின்ற காரணனை) ரக்ஷகனுமாய் ஸ்வாமியுமாயு மிப்படிகலந்துகொண்டுநின்ற ஸர்வகாரணபூதனை, (கருத்துறநான்கண்டபின்பு) இந்தவர்த்தங்க ளென்னுடைய மனஸ்ஸிலே படும்படி நான் நன்ருகக்கண்ட வநந்தரம், அமலனதியென்கிறதில் நிர்த்துஷ்டமான காரணத்வத்தையும், பிரானடியார்க்கென்னை யாட்படுத்த வென்கிறதில் ஸர்வரக்ஷகத்வத்தையும், விண்ணவர்கோனென்றதில் ஸர்வஸ்வாமித்வாதிகளையுமறிந்த பின்னென்றபடி. இதுக்குக் கொண்டுசேர்ந்து தீர்ந்தோமென்கிற பதங்களோடந்வயம். (கோவலனும் கோமானுமானவந்நாள்) க்ருஷ்ணுவதாரம்பண்ணி ஸௌலப்யத்தாலே கோபாலனுமாய் ஸர்வலோகக்களுக்கும் ஸ்வாமியுமானபோது, ஏகத்ர கோபாலத்வமும் ஏகத்ர கோஸ்வாமித்வமும் கண்டதுண்டுலகத்தில், தத்ஸமுச்சயார்த்த மிரண்டுபத மிங்கே. (குரவைபுணர்கோவியர்தம்) குரவைபுணராநின்ற கோபிமார்களுடைய வென்றர்த்தம். (குறிப்பேகொண்டு) குறிப்பாகச்செய்யு மத்தையே முக்யமாகக்கொண்டு, குறிப்பு - லக்ஷ்யம், அவர்க ளீச்வரனைத்தவிர வேருருவஸ்துவைத் தங்களுக்கு லக்ஷ்யமாகவெண்ணுத வம்சத்தையே

வியாக்யானம்.

நமக்கு முக்யமென் றெண்ணிக்கொண்டு (சேவலுடன்பிரியாத பெடை போல்சேர்ந்து) சேவல் - ஆண்பக்ஷி, பெடை - ஸ்திரீபக்ஷி, புருஷ பக்ஷியோடே சேர்ந்துகொண்டேயிருந்து ஒருகாலும் பிரியாத ஸ்திரீ பக்ஷிபோலே யெம்பெருமான் பக்கலிலேசேர்ந்து, அவனை பர்த்தா வைப்போலவும் நம்மை பர்த்தாவைவிட் டன்யத்ர பாராத பதிவ்ரதை யான ஸ்த்ரீபோலவும் எண்ணிக்கொண்டென்றபடி. (தீவினையோர் தனிமையெல்லாம்) உக்ரமானபாபத்தை யுடையவர்களுடைய துர் தசையையெல்லாம், (தீர்ந்தோம்நாம்) இப்படி பகவத்விஷயத்திலே யவகாஹித்தநாமே தீரும்படி பண்ணினோம். இப்ரபந்த தாத்பர்யங்க ளான வீச்வரனுடைய ஸ்வபாவங்களை யறிந்தால் ஸகலபாபங்களும் தன்னடையே போமென்பது கருத்து. (௩௬)

இப்படி யிப்ரபந்தம் ஸர்வபாப நிவர்த்தக பஹ்வர்த்த கர்ப்பித மென் றிதற்குண்டான வைலக்ஷண்யத்தை யருளிச்செய்து இப்படிப் பட்ட ப்ரபந்தத்தினுடைய பதார்த்தங்களையும் நன்றாக வெளியிடுகிற தம்முடைய ப்ரபந்தமான விந்த ரஹஸ்யார்த்தங்களை யறிந்தபேர்கள் ஸகல வேதவேதாந்தார்த்தங்களையும் யுக்தாயுக்த விசாரங்களோடே யறிந்தவர்களாவார்களென்றெண்ணி யிந்த ரஹஸ்யம் பண்ணினே மென்று ப்ரசம்ஸிக்கிறா ரொருபாட்டாலே.

(ஆதிமறையென வோங்குமரங்கத்துள்ளே) ஸகல சாஸ்த்ரங்களுக் குமாதியான வேதம்போலே யிருக்கிற ஸ்ரீரங்கஸம்ஜ்ஞிதமான திவ்யவி மானத்துக்குள்ளே, வேதம் ப்ரதிபாதகதயா உத்க்ருஷ்டமாயிருக்கிறாப் போலே பெரியபெருமாளுக் காதாரமாயிருக்கையாலே யோங்கியிருக் கிற ஸ்ரீரங்க திவ்யவிமானத்திலென்றபடி. அன்றிக்கே - ஆதிமறையெ ன்று ஸகலவேதங்களுக்கும் மூலமான ப்ரணவத்தைச்சொல்லி, "விமா நம்ப்ரணவாகாரம் வேதஶ்ருங்கம்" என்றும் "ப்ரபத்யே ப்ரணவாகாரம் பாஷ்யம்ரங்கவிமாநகம்" என்றும் (விமாநம் ப்ரணவாகரம் வேதச்ருங் கம், ப்ரபத்யேப்ரணவாகாரம் பாஷ்யம்ரங்கமிவாபரம்) சொல்லுகிற படியே யந்த ப்ரணவத்துக்கு ஸத்ருசமா யோங்கியிருக்கிற ஸ்ரீரங்கத் துக்குள்ளே யென்றுமாம். (அருளாருங்கடலைக்கண்டவன்) அருளாலே ணமாய் கடல்போலே சாய்ந்தருளின பெரியபெருமாளைக்கண் டநுப வியாநின்ற, அருளாருமென்றதினாலே யிக்கடலுக்கு க்ருபையே ஜல மென்றபடி. (எம்பாணனேதியது) நமக்கு ஸ்வாமியான திருப்பாணாழ்வா ரனுபவ பரிவாகமாக வோதினதான, எம்பாணனென்றது பெரியபெரு மாள் அவருக்குந் தமக்கும் முனிவாஹநனென்றும் வேதாந்ததேசிக னென்றும் திருநாமஞ்சாற்றின வுறவைப்பற்றி. (ஓரிருநான்கு மிரண்டு மான வொருபத்தும்) அதிவிலக்ஷணமான விரண்டு நான்கு ஸங்க்யை

௯எ-மூ.—ஆதிமறை யெனவோங்கு மரங்கத்துள்ளே
யருளாருங் கடலேக்கண்டவ னென்பாண
ஞேதியதோ ரிருநான்கு மிரண்டுமான
வொருபத்தும் பற்ருக வுணர்ந்துரைத்தோம்
நீதியறியாதநிலே யறிவார்க் கெல்லா
நிலேயிதுவே யென்றுநிலே நாடிநின்ஞேம்
வேதியர்தாம் விரித்துரைக்கும் விளேவுக்கெல்லாம்
விதையாகு மிதுவென்று விளம்பிஞேமே. (எசு)

(ப - ரை.) ஆதி - முதன்மையான, மறை - வேதம் [ப்ரணவம்,] என - என்னும்படி, ஓங்கும் - வ்ருத்திபெறுகின்ற, அரங்கத்துள்ளே - ஸ்ரீரங்கத்தில், அருளாரும்கடலே - க்ருபாபூர்ணஸமுத்ரத்தை, கண்டவன் - பார்த்தவராகிய, என் - எனது, பாணன் - திருப்பாணுழ்வார், ஓதியது - அருளிச்செய்த, ஓர் - ஒரு, இருநான்கும் - இரண்டுநாலும், இரண்டும் ஆன - இரண்டுமாகிய, ஒருபத்தும் - ஒருபத்துப்பாட்டையும், பற்ருக - ஆலம்பனமாக, உணர்ந்து - அறிந்து, உரைத்தோம் - சொன்ஞேம், நீதி - மதாந்தர நிரஸநயுக்தியை, அறியாத - தெரிந்துகொள்ளாத, நிலே - நிலேயை, தத்வஸ்திதியை, அறிவார்க்கெல்லாம் - அறியுமவர்க்கெல்லாம், இதுவேநிலே - இதுவேஸ்திரம், என்று-என்று, நிலே - ப்ரபந்ததாத்பரியத்தை, நாடிநின்ஞேம் - விசாரித்து நின்ஞேம், வேதியர்தாம் - வைதிகர்கள், விரித்து - விஸ்தரித்து, உரைக்கும்- சொல்லுகின்ற, விளேவுக்கெல்லாம் - விளேவுகளுக்கெல்லாம், இது - இதுவே, வித்தாகும் - விதையாகும், என்று - என்று, விளம்பிஞேம் - சொன்ஞேம். (௯எ)

---

யாலு மிரண்டுஸங்க்யையாலுங்கூடிப் பத்துபாசுரமான ப்ரபந்தத்தை, பத்துமென்றதே யமைந்திருக்க விருநான்கு மிரண்டுமென்றது அடியிலே நாலுபாட்டு காரணத்வத்தையும் மேல் நாலுபாட்டு ரக்ஷகத்வத்தையும் மேலிரண்டுபாட்டு ஸ்வாமித்வத்தோடேகூடின போக்யத்வத்தையும் முக்யமாக ப்ரதிபாதிக்குமென்கிற வர்த்தம் தொற்றுகைக்காக, (பத்தாகவுணர்ந்துரைத்தோம்) பத்தர்த்தத்தை முக்யமாக ப்ரதிபாதிக்கிறதாகவறிந்து நன்ருக விந்தரஹஸ்யத்திலே சொன்ஞேம், பத்தும்பத்தாக வென்றதனுலே நூறர்த்த மிதிலிருக்கிறதென்று அறிந்து சொன்ஞேமென்றுமாம். பற்ருகவென்று பாடமானுல் இந்த பத்து பாசுரமே நமக்கவலம்பமென்றறிந்து சொன்ஞேமென்று பொருள். இதுக்குமேல் க்ரியையோடே யந்வயம். (நீதியறியாத நிலேயறிவார்க் கெல்லாம்) நிலேயாவது - தத்வஸ்திதி, நீதியறியாதபடி தத்வஸ்திதி யறியாநிற்கு மவர்களுக்கெல்லாம், நீதியறியாதே நிலேயறிகையாவது - மதாந்தரஸ்தர்களே நிராகரிக்கைக்கும் யுக்திகளோடே கேட்டவர்களுக்கு ஸம்சயவிபர்யயமறச் சொல்லுகைக்கும் யோக்யமானபடி யறியாதே

வியாக்யானம்.

க்ஷோதக்ஷமமன்றியிலே கேவலம் தத்வஸ்வரூபத்தைமாத்ர முபதே சத்தாலேயறிகை, (இதுவேநிலையென்று) இந்த ரஹஸ்யமே க்ஷோத க்ஷமமாகும்படியான நிலையென்று, (நிலைநாடிநின்றோம்.) இப்ரபந்த தாத்பர்யத்தினுடைய நிலையைநாடி விசாரியாநின்றோம், இந்த ரஹஸ் யத்தி லிதிசேஷ:. (இது) இப்படி நம்மாலே ஸர்வார்த்தங்களையுந் தே டிச் சொல்லப்பட்டதான விந்தரஹஸ்யம், ஸர்வார்த்த ஸங்க்ரஹமான விப்ரபந்தமென்றுமாம். (வேதியர்தாம் விரித்துரைக்கும்) வேதார்த்த மறிந்தவர்கள் வேதியர், அவர்கள் தாங்களேவிரித்து விஸ்தாரமாக வுபதேசரூபமாகச் சொல்லுமதான, (விளைவுக்கெல்லாம்) விளையு மது களுக்கெல்லாம், விளைவு-பலிக்கை, இங்கு விஸ்தாரமாக பரப்புகையிலே தாத்பர்யம். “தவெஹ)தெகூயிதாஹ)ஊஉ௯ாஃ வ) காஶஜெ ஒஹாத்ரநஃ” (தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:) என்கிற படியே சாஸ்த்ரபரிச்ரமம்பண்ணின யுக்திமான்களுக்கு ஸ்வோபதேச மே க்ஷோதக்ஷம மாகும்படி விஸ்தாரமாக விளைகிறத்துக் கெல்லா மென்றர்த்தம், (விதையாகும்)காரணமாகும், விதை-காரணம். (என்று) இப்படியெண்ணி, சாஸ்த்ர பரிச்ரம மில்லாதவர்களுக்கு த்ரமிட சப் தமயமான விந்த ரஹஸ்யார்த்த மறியவே ஸகல தத்வார்த்தங்களும் யுக்தாயுக்த விசாரத்தோடே யறிந்தபடி யாகுமென் றிப்படி யெண்ணி யென்றபடி. (விளம்பினோமே) சொன்னோம், இந்த ப்ரபந்த தாத்பர் யார்த்தங்களை ப்ரகாசிப்பித்தோ மென்றபடி. இதனாலே யிந்தரஹஸ் யம் முநிவாஹநபோக மென்று ஆழ்வா ரனுபவித்தபடி சொன்னவம லனாதிபிரானுக்கு வ்யாக்யாநமானாலு மிதிலீச்வரனுடைய காரணத்வ ரக்ஷகத்வ ஸர்வஸ்வாமித்வ, ஸர்வாதாரத்வாதிகளையும், ஜீவனுடைய நித்யத்வ ஸ்வதச்சேஷத்வ பாரதந்த்ரயாதிகளையும், மற்றும் ஜ்ஞாதவ் யங்களான வநேகார்த்தங்களையும் வெளியிடுகையாலே தெரிந்தவன் அர்த்தபஞ்சகாதி ஸர்வார்த்தங்களையும் அறிந்தவனென்று சொல்லிற் றுய்த்து. (௩எ)

இதி கௌசிக குலதிலகஸ்ய, ஸ்ரீநிவாஸதேசிக ஸூநஸ்ய, ஸ்ரீமத் கோபால மஹாதேசிக தௌஹித்ரஸ்ய, தச்சரண நகமணிஜ்யோத் ஸ்நாயமான மானஸஸ்ய, ஸ்ரீமத் வேதாந்த ராமாநுஜ ஸம்யமி ஸார்வ பௌம கடாக்ஷலப்த வேதாந்த த்வயஸ்ய, ஸ்ரீபாலதந்வி வேதாந்த மஹாதேசிகஸ்ய தநூஜேந, தச் சரணாரவிந்த ஸமர்பிதாத்ம பரோண தத்க்ருபா ப்ராப்த ஸகலவேத ததங்கவேதாந்த த்வய ரஹஸ்யஜாதேந, ஸ்ரீரங்கநாத தாஸேந, யதாச்ருதம் லிகிதா அம்ருதாஸ்வாதிநீ காதாஸம் க்ரஹஸ்ய வ்யாக்யா ஸம்பூர்ணா.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாயநம:.

ஸ்ரீ

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# அதிகாரஸங்க்ரஹம் வ்யாக்கியானம்.

ஸாராஸ்வாதினியிலிருந்து
எடுத்தெழுதியது.

ஸ்ரீ ஸாக்ஷாத்ஸ்வாமி யென்கிற ஸ்ரீவேதாந்த ராமாநுஜ ஸ்வாமி
அருளிச் செய்தது.

---

## தனியன்.

ஸ்ரீரங்கநாத குரு பாத ஸரோஜ ஹம்ஸம்
வேதாந்த தேசிக பதாம்புஜ ப்ருங்க ராஜம்।
ஸ்ரீமத் யதீந்த்ர சடகோப தயாவலம்பம்
வேதாந்த லக்ஷ்மண முனிம் சரணம் ப்ரபத்யே॥*॥

ஸ்ரீரங்கநாத குரு பாத ஸரோஜ ஹம்ஸம்
வேதாந்த தேசிக பதாம்புஜ ப்ருங்க ராஜம்!
ஸ்ரீமத் யதீந்த்ர சடகோப தயாவலம்பம்
வேதாந்த லக்ஷ்மண முனிம் சரணம் ப்ரபத்யே.

(ப்ராரீப்ஸித குருபரம்பரா ஸாராக்ய ப்ரபந்தஸ்ய நிஷ்ப்ரத்யூஹ பரிபூரண ப்ரசய கமனார்த்தம் குருப்ய இத்யாதினா) (ப்ராரீப்ஸித குருபரம்பரா ஸாராக்ய ப்ரபந்தஸ்ய நிஷ்ப்ரத்யூஹ பரிபூரண ப்ரசய கமனார்த்தம் குருப்ய இத்யாதினு) ஒருமங்களம் செய்தருளி, பராசரப்ரபந்தாதபி வேதாந்தரஹஸ்ய வைசத்யாதிசய ஹேது பூதை: ஸத்யபரமாத்மநி சித்தரஞ்ஜகதமை: ஸர்வோபஜீவ்யை ருபப்ரும்ஹணை: (பராசரப்ரபந்தாதபி வேதாந்தரஹஸ்ய வைசத்யாதிசய ஹேது பூதை: ஸத்யபரமாத்மநி சித்தரஞ்ஜகதமை: ஸர்வோபஜீவ்யை ருபப்ரும்ஹணை:) என்று ஸ்தோத்ர பாஷ்யத்தி லறுதியிட்டபடியே அத்யாத்ம ப்ரபந்தங்களில் த்ரமிட ப்ரபந்தங்கள்ஸாரதமங்களாகையாலே யவ்வுபகாராதிசயத்தையிட்டு த்ரமிடோபப்ரும்ஹணகர்த்ரு திவ்யஸூரிப்ருந்த ஸ்தவநரூபமாக மங்களபூயஸ்த்வார்த்தம் பின்னையு மொரு மங்களாசரணம் செய்தருளுகிறார். பொய்கையிதி.

"பொய்கைமுனிபூதத்தார் பேயாழ்வார் தண்பொருநல்வருங் குருகேசன் விட்டு சித்தன், துய்யகுல சேகரனம் பாணநாதன் றொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி, வய்யமெலா மறைவிளங்க வாள்வேலேந்து மங்கையர்கோ னென்றிவர்கண் மகிழ்ந்துபாடுஞ், செய்யதமிழ் மாலைகளுந் தெளியவோதித் தெளியாத மறைநிலங்க டெளிகின்றோமே". (க)

தண் - சீதளமான, பொருநல் - தாம்ரபர்ணியிலே, தத்தீரத்திலே யென்றபடி. வரும் - வந்தவரான, அவதரித்தவரான வென்றபடி. சீதளதாம்ரபர்ண் யவதீர்ணத்

வோக்த்யா ஆழ்வாருடைய வார்த்ரசித்தத்வம் வ்யஞ்ஜிதமாகிறது. இங்கு தாம்ரபர்ணியையிட்டு ஆழ்வாரை விசேஷித்தது ‘‘கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, தாம்ரபர்ணீ நதீ யத்ர’’ ‘‘கலௌகலுபவிஷ்யந்தி நாராயண பராயணா:, தாம்ரபர்ணீ நதியத்ர’’ என்று ஸ்ரீபாகவதத்திலே மஹர்ஷி நம்மாழ்வாரைக்கொண்டாடின வசனத்தை ஸ்மரிப்பிக்கைக்காக. இங்கு ஸ்ரீவிஷ்ணுசித்தரைச் சொன்னது அவர் திருமகளாரான வாண்டாளுக்கு முபலக்ஷணம். இவரை இங்கு தனித்தருளிச்செய்யா தொழிந்தது மற்றவாழ்வார்களைப்போலே யன்றிக்கே ‘‘விட்டுசித்தர்தங்கள் தேவரை’’ இத்யாதியில் படியே இவ ளிவருக்கு பரதந்த்ரையா யிருக்கிறவேற்றம் தோற்றுகைக்காக. துய்யகுலசேகரன்—பரிசுத்தரான குலசேகராழ்வார், இங்குபரிசுத்தியாவது ஸ்ரீவைஷ்ணவர் ஹாரத்தையபஹரித்தார்களென் றத்யந்தா ந்தரங்கரான மந்த்ரிகள் சொல்லச்செய்தேயும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்காகத் தாம் ஸர்ப்பகடத்திலே கையிடும்படி ஸ்ரீவைஷ்ணவர்பக்கல் தோஷதர்சன மற்றிருக்கை. நம்பாணநாதன்-திருப்பாணாழ்வாராகிற நம்முடையநாதன், முனிவாஹநனென்று திருநாம மாம்படியாகவும் ஸ்ரீவேதாசார்யனென்று திருநாமம்சாற்றி யருளியும் தங்களிருவரிடத்திலும் பெரியபெருமாள் வ்யாமோஹம் செய்தருளின இஸ்ஸம்பந்தத்தையிட்டு விசேஷித்து நம்முடைய நாதனென்று அநுஸந்திக்கிறார். மழிசைவந்தசோதி - திருமழிசையென்கிற திவ்யஸ்தலத்திலே யவதரித்தருளின ஜ்யோதிஸ்ஸு, திருமழிசை யாழ்வாரென்றபடி. பெரும்புலியூரில் யாகஸதஸ்ஸிலே யிவர்பர ஞ்ஜ்யோதிஸ்ஸாந பரதேவதையாய் தோற்றின மஹாப்ரடாவத்தை நினைத்து இவரை ஜ்யோதிஸ்ஸென்கிறார். வையமெல்லாம் - லோகங்களெல்லாவற்றிலும், மறை - வேதமானது, விளங்க-ப்ரகாசிக்கும்படி, வாள்-கட்கத்தையும், வேல்-குந்தமென்கிறவாயுத விசேஷத்தையும்,ஏந்தும்-தரிக்குமவரான, இவர் வாளும் வேலு மேந்தினது - லோகமெல்லாம் வேதம் ப்ரகாசிக்கும்படியாய்த்துஎன்று திருவுள்ளம். அதாவது - இவர் வாளும் வேலு மேந்திக்கொண்டு ஸர்வேச்வரனை மறித்து ஸர்வார்த்தக்ரஹணம் பண்ணத் தொடங்க, இவ்வவஸரத்திலே ஒரு வ்யாஜத்தைக்கொண்டு ஸர்வேச்வர னிவருக்கு திருமந்த்ரத்தை யுபதேசிக்க, அத்தாலே யிவர் ப்ரபுத்தராய் ஸர்வலோகத்திலும் ஸகல வேதார்த்தங்களும் ஸம்யக்ப்ரகாசிதங்களாம்படி யதிப்ரேம பரவசராய்ப் பாடியருளுகையாலே இவையெல்லாவற்றிற்கும் இவர் வாளும்வேலு மேந்தினது நிதானமாய்த் தென்றபடி. லோகத்திலும் ரிஷிகளுமுட்பட தந்தமளவுக்கு வேதம்ப்ரகாசிக்கைக்காக வாரேனு மொரு வாசார்யன்பக்கலிலே ஸமித்பாணிகளாய் வந்துகிட்டி ஸர்வஸ்வதானம்பண்ணி யுபாஸியா நிற்பர்கள். இவர் லோகமெல்லாம் வேதம் ப்ரகாசிக்கும்படி ஸாக்ஷாத் ஸர்வேச்வரன் பக்கலிலே கட்ககுந்தபாணியாய் ஸர்வார்த்தக்ரஹணம் பண்ணி நிர்பந்தித்தா ரொருவரென் றாச்சர்யகர்ப்பமா யிருக்கிறது. மங்கையென் றிவருடைய திவ்யநகரிக்குத் திருநாமம். மங்கையிலே யிருக்குமவர் மங்கையர், கோன் - ஸ்வாமி, அவர்களுக்கு ஜ்ஞாநபக்தி கைங்கர்யாதி ஸர்வஸம்பன் நிர்வாஹகரான வாழ்வாரென்றபடி. இப்படி தத்தன்நாமபி: விசிஷ்யாநு ஸந்தித்து ஆதராதிசயத்தாலே இவர்களுடைய ஸமுதாயத்தை அநுவதிக்கிறார் (என்றிவர்களென்று) இப்படி ‘‘அண்ணிக்குமமுதூறு’’ மென்னும்படியான திருநாமங்களை யுடையராய் ப்ரயோஜநாந்தர ஸஹிஷ்ணுக்களான ரிஷிகளைப்போ லன்றிக்கே பகவத் ப்ரேம ப்ரவாஹங்கள்தாம் வடிவுகொண்டாப்போலே யிருக்கிற இவர்க ளென்றிவ்வநுவாதத்துக்குக் கருத்து. மகிழ்ந்துபாடும், ஆநந்தபரிதராய்ப் பாடுமவையான, பகவதநுபவாநந்த நிர்பரராய் ஆநந்தபரிவாஹமாக விவர்கள் பாடுமவையான என்றபடி. செய்ய-ருஜுக்களான, ஸரளதரங்களான வென்றபடி. தமிழ்மாலைகள்-புஷ்பமாலைகள்போலே ஸர்வேச்வரனுக்கு போக்யதமத்வேந சிரஸா ச்லாக

நீயங்களான த்ரமிடஸூக்திகளை, நாம்-அத்யந்தமிதம்பசரானநாம், யத்வா "த்ரமிடே ஷு சபூரிசः" (த்ரமிடேஷுசபூரிசः) என்று மஹர்ஷிகள் கொண்டாடும்படி இந்த வகஸ்த்யபாஷையுள்ள ஸ்ரீவைஷ்ணவகுலங்களிலே ஜநிக்கும்படியான பாக்யத்தை யுடையநாம், தெளியவோதி - அர்த்தஜ்ஞாந பர்யந்தமாக வப்யஸித்து, இதற்கு தெளிகின்றோ மென்கிறதோடே யந்வயம். தெளியாத - ந்யாயங்களாலும் ரிஷிவசநங்களாலும் ஸம்சய விபர்யய ரஹிதார்த்தநிச்சயம் பிறவாதவையான, மறைநிலங்கள்-வேதப்ரதேசங்களை, உபநிஷத்துக்களையென்றபடி. தெளிகின்றோம் - களங்கரஹிதமாக வறியப்பெற்றோம், அதின் தாத்பர்யங்களை விசதமாக வறியப்பெற்றோ மென்றபடி. (க)

முமுக்ஷுக்க ளெல்லாருக்கும் ஆசார்யவத்வம் நியமேந வேண்டுமோகலிறே குருபந்திபஜநம் வேண்டுமென்று நிர்பந்தமுண்டாவது, பக்திப்ரபத்யாதிகளாலே மோக்ஷம் பெறலாமிறே, பகவானையும் தத்பஜநாதிகளையும் அறிகைக்கு உபதேஷ்டாக்கள் வேண்டாவோ வென்னில்? சாஸ்த்ராந்தரங்களில் பண்டிதனா யிருப்பானுக்கு ஸ்ருதி ஸ்ம்ருத்யாதிகளாலே உபதேஷ்ட்ரு நிரபேக்ஷமாக உபயுக்தங் களெல்லா மறிந்து கொள்ளலாமிறே, "ஏகம்யதி பவேச்சாஸ்த்ரம்" (ஏகம்யதி பவேச்சாஸ்த்ரம்) என்கிற ச்லோகத்தின்படியே ஜ்ஞாத்ருத்வம்ஸுதுர்லபமென்னிலும் "புண்யம் ப்ரஜ்ஞாம்வர்தயதி" "பக்த்யா த்வநந்யயா சக்ய:" "ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந" (புண்யம் ப்ரஜ்ஞாம்வர்தயதி, பக்த்யாத்வநந்யயாசக்ய:, ஜ்ஞாதும்த்ரஷ்டுஞ்சதத்வேந,) இத்யாதிகளில்படியே பகவத்பக்த்யாதிகளாகிற ப்ரபல ஸஹகாரியைக்கொண்டு சாஸ்த்ரமுகேந ஸர்வார்த்தங்களையும் தெளியக்குறையில்லையிறே, ஆகையால் ஸர்வமுமுக்ஷுக்களுக்கும் ஆசார்யவத்வம் வேணுமென்று நிர்பந்தமுண்டோ வென்கிறசங்கையில் "தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்" (தர்மஜ்ஞஸமய:ப்ரமாணம்) என்கிறபடியே முந்தர ஸ்ரீமதுரகவிகளுடைய வநுஷ்டானத்தை ப்ரமாணமாகக் காட்டாநின்றுகொண்டு உத்தரம் அருளிச்செய்கிறார். இன்பத்தில்இதி.

"இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும்பேற்றி லிகழாத பல்லுறவில்ராகமாற்றில், தன்பற்றில் வினைவிலக்கிற் றகவோக்கத்திற் றத்துவத்தை யுணர்த்துதலிற் றன்மையாக்கில், அன்பர்க்கே யவதரிக்கு மாயனிற்க வருமறைக டமிழ்செய்தான் றாளே கொண்டு, துன்பற்ற மதுரகவி தோன்றக்காட்டுந் தொல்வழியே நல்வழிக டுணிவார்கட்கே. (உ)

அறுதியிட்டார்க ளென்னு மளவாலே இங்குப்ரதிபாதிக்கப்புகுகிற குருபஜநரூப தர்மத்துக்கு கண்ணிநுண்சிறுத்தாம்பை யிட்டு ப்ரதமப்ரவர்த்தக ராகையாலே இதற்கு விசேஷித் தாசார்யரான மதுரகவிகளுடைய குணசிந்தநஸ்தவந ரூபமான மங்களமு மிப்பாட்டிலே அர்த்தாத் க்ருதமாகிறது. இதுவும் ஸ்ருத்யாதிகளுக்குமுன்னே யிவருடைய வனுஷ்ட்டாநாதிகளை வர்ணிக்கைக்கு நிபந்தநம். ஆசார்யஸமாச்ரயணம் உபாதேயமாகிறது தத்வஜ்ஞாநாதி ஹேதுத்வமாத்ரத்தா லன்றிக்கே ப்ராப்யத்வம் ப்ராபகத்வம் முதலான்பத்துப்படியாலு முபாதேய மென்கிற திருவுள்ளத்தாலே இங்கு பத்துப்பதங்களாலே கண்ணிநுண்சிறுத்தாம்பு பாட்டுகளின் அர்த்தங்களை யடைவே ஸங்க்ரஹிக்கிறார். இன்பத்தில் - ஆநந்தத்தில், ஆநந்தரூபமானவனுபவத்திலென்றபடி, அண்ணிக்குமமுதூறு மென்று சொன்ன வர்த்தத்தை இரண்டாம்பாட்டிலே இன்பமெய்தினெனென் றநுவதித்தாரிறே. இறைஞ்சுதலில் - ஆச்ரயணத்தில், சரணத்வேந ஆச்ரயணத்திலென்றபடி. மேவினேனவன்பொன்னடி மேன்மையை என்றதை ஸங்க்ரஹித்தபடி. இசையும்பேற்றில் - அப்யுபகமம்பண்ணும் புரு

ஷார்த்தத்தில், இசைகை - அப்யுபகமம்பண்ணுகை, பேறு - புருஷார்த்தம், திரிதந் தாகிலு மென்கிறபாட்டுக்கு பகவத்விஷயத்தை யாழ்வாருகந்த விஷயமென் றவ் வழியாலே யப்யுபகமம்பண்ணுகிறே னத்தனைபோக்கி எனக் கிது ஸ்வதோப்யுபகம னீய மன்றென்று தாத்பர்ய மாகையாலே ஆழ்வாரோ தமக்கு நிருபாதிகமாக வப்யுப கமநீய புருஷார்த்த மென்று வ்யஞ்ஜிதமாகிற வர்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி. இக ழாத - ஒருகாலத்திலும் ப்ரச்யுதமாகாத, பல்லுறவில் - பஹுவிதபாந்தவத்தில், அன்னையாயத்தனாய் இத்யாதியை ஸங்க்ரஹித்தபடி. இராகம்மாற்றில் - அநுசித விஷய ராக நிவர்த்தநத்தில், அடியேன் சதிர்த்தேனென்கிறதின் தாத்பர்யத்தை ஸங்க்ரஹித்தபடி. தன்பற்றில் - தானே தன்பற்றை யுண்டாக்குகையில், தன்புக ழேத்தவருளினான் என்கிறதை ஸங்க்ரஹித்தபடி. வினைவிலக்கில் - பாபநிவாரணத் தில், வல்வினைமாற்றியருளினா னென்கிறதைச் சொன்னபடி. தகவோக்கத்தில் - க்ருபையினுடைய வுத்கர்ஷத்தில், தகவு, க்ருபை, ஒக்கம் - உத்கர்ஷம், அருள்கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதென்றதைச் சொன்னபடி. தத்துவத்தை யுணர்த்துதலில்-தத்வ போதனத்தில், வேதத்தி னுட்பொரு ளித்யாதியின் தாத்பர்யத்தை நிஷ்கர்ஷித்த படி. தன்மை - ஸ்வபாவத்தை, அதாவது ஆழ்வார்தம்முடைய ஸ்வபாவத்தையென் னுதல், ஜீவனுடைய ஸ்வாபாவிகாகாரத்தை என்னுதல், இவைஇரண்டும் பகவத்பாக வதாசார்ய கைங்கர்யங்களென்கிறது, ஆக்கில் - உண்டாக்குகையில், செயனன்றுக வித்யாதியை யருளிச்செய்தபடி. இவைபத்தும் விஷயஸப்தமிகள். இவை பத்துக்கு மருமறைகள் தமிழ்செய்தான்தாளேகொண்டு என்கிறத்தோடந்வயம், அன்பர்க்கே - பக்திமான்களுக்காகவே, லீலாதியான ஸ்வப்ரயோஜநம் ப்ரதாந மன்றிக்கே ஆஸ்ரீதர்க் கிப்பத்துபாட்டில் சொன்ன பத்துப்ரகாரமான வுபகாரத்தையும் தான்பண்ணுகைக் காக வென்றபடி. அவதரிக்கும் - அவதரித்தருளுமவனான, ஆயன்நிற்க, கோபாலன் நிற்கச்செய்தேயும், அவனையநாதரித்து என்றபடி. அரு - ஸூக்ஷ்மங்களான, துர்போ தங்களான வென்றபடி. மறைகள் - வேதங்களை, தமிழ்செய்தான் - த்ரமிடரூபங்க ளாகச் செய்தருளின வாழ்வாருடைய, தாளே - திருவடிகளையே, அவதாரணத்தாலே க்ருஷ்ணனைவ்யவச்சேதிக்கிறது, கொண்டு - அவலம்பித்து, இதனால் என்னப்பனில் நண்ணிஎன்கிறதின் அபிப்பிராயத்தை ப்ரகாசித்தபடி. இதற்கு தோன்றக்காட்டு மென்கிறத்தோடந்வயம். துன்பற்ற - தோஷரஹிதரான, துன்பு - தோஷம், ப்ரம விப்ரலம்பாதி தோஷரஹிததயா ஆப்ததமரான என்றபடி. பகவத்விஷயத்தையும் கழி த்து புருஷார்த்தகாஷ்டையிலும் ஸாரமான ஆசார்யனையே கவிபாடுகையாலே மதுர கவிகளென்று திருநாமம் பெற்றவர். தோன்றக்காட்டும் - தோன்றும்படிகாட்டுகிற, ஸர்வஸுலபனான க்ருஷ்ண னிருக்கச்செய்தே தா மாழ்வார்திருவடிகளையே யவலம் பித்தபடி தம்முடையவனுஷ்டானத்தாலும் உக்தியாலும் நிஸர்கஸுஹ்ருத்தாய் ஸர்வபலப்ரதனான ஸர்வேச்வரனிருந்தாலும் ஸதா சார்யஸமாச்ரயண மில்லாதாருக் குமோக்ஷம் கிடையாதென்று ஜகத்துக்கெல்லாம் ஸ்பஷ்டமாகத்தோற்றும்படி காட்டு கிறாரென்று கட்டதாத்பர்யம். தொல்வழியே-அநாதியானமார்க்கமே, மதுரகவிமாத்ர மன்றிக்கே ப்ராசேதஸ பராசர மைத்ரேயா ச்வலாயனாதி ப்ராசீன மஹாஜனங்க ளெல்லாரும் நடந்த வாசார்ய ஸமாச்ரயண ரூப கண்டாபதமே யென்றபடி. அவ தாரணம் கேவலம்பகவத்பஜந புஸ்தகநிரீக்ஷணாதிகளை வ்யவச்சேதிக்கிறது. துணி வார்கட்கு - தைர்யவான்களுக்கு, விஷயங்களை ஜயிக்கும்படி தைர்யமுடைய முமுக்ஷுக்களுக்கென்றபடி. நல்வழிகள் - மோக்ஷமார்க்கங்கள், மோக்ஷஸாதநமான பக்திப்ரபத்திகளென்கை. பக்திப்ரபத்திகளுக் காசார்யபஜந மன்றிக்கே மார்க்காந் தரத்தாலே ஸம்யக்ஸ்வரூபநிஷ்பத்தியுமில்லை கார்யகரத்வமுமில்லை யென்று கருத் தாலேயதனோ டிவற்றிற் கபேதோபசாரம் பண்ணினபடி. (உ)

இப்படி "வாஸிஷ்டஃக்ஷத்ரியஸ்ய" என்று தொடங்கி ப்ராயச்சித்தமுமாமெ ன்னுமளவும் ப்ரமாணங்களாலே முமுக்ஷுவுக்கு ஸர்வாவஸ்தைகளிலும் குருபங்திம ஜநம்கர்த்தவ்ய மென்று ஸாதித்தருளி இனி யித்தை யநுஷ்ட்டிக்கும்படி எங்ஙனே என்கிற வாகாங்க்ஷையில் ஸர்வருக்கு மநுஷ்ட்டான ஸௌகர்யார்த்த மிதுக்கு ப்ர யோகருபமாக வொருபாட்டு அருளிச்செய்கிறார். என்னுயிர்இதி.

எகூ-மூ.—என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம்புக்கி
யானடைவே யவர்குருக்க ணிரைவணங்கிப்
பின்னருளாற் பெரும்பூதூர் வந்தவள்ளல்
பெரியநம்பி யாளவந்தார் மணக்காநம்பி
நன்னெறியை யவர்க்குரைத்த வுய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத் திருமகளென் றிவரைமுன்னிட்
டெம்பெருமான் றிருவடிக ளடைகின்றேனே. (௩)

யான்-ஆசார்ய கடாக்ஷத்தாலே லப்தஸத்தாகனை நான், என்னுயிர்-என்னுத்மா வை, தந்து - பரசேஷத்வஜ்ஞாந மில்லாமையாலே நஷ்டமாய்ப் போயிருந்தத்தை அந்த பரசேஷத்வோப தேசத்தாலே ஸத்தாக்கி சேஷியுடைய வதிசயாதாநத்தில் விநியோகிக்கலாம்படி யெனக்குக் காட்டித்தந்து, அளித்தவரை - ரக்ஷித்தவரை, இப்படி காட்டித்தருகையே ஸம்யக் ரக்ஷண மென்று கருத்து. ஸ்வாஸ்ய வஹிதா சார்யரை யென்றபடி. சரணம்புக்கு - சரணத்வே நாச்ரயித்து, அவர் குருக்கள்- அந்த ஸ்வாசார்யருடைய குருக்களுடைய, எம்பெருமானுர்க் கிப்பால்பட்ட பரம குருக்களுடைய என்றபடி. நிரை - பங்தியை, அடைவே - "க்ரமாயாத்ராணா ஜௌஸவஸள" (ஆசார்யாணு மஸா வஸௌ) என்கிற ச்ருதியில் சொன்ன க்ரமத் தாலே என்றபடி. வணங்கி - நமஸ்கரித்து, சரணம்புக்கு என்றபடி. பின் - அவர் களுக்குப்பின்பு, இதுக்கு இவர்களை முன்னிட்டு என்கிறத்தோடே அந்வயம். அரு ளால் - ப்ரகடராயும் ப்ரச்சன்னராயு முள்ள பாஷண்டிகளால் ப்ரதாரிதமான ஜகத் தின்பக்கல் க்ருபையாலே, பெரும்பூதூர் - ஸ்ரீபெரும்பூதூரிலே, வந்த - அவதரித்தவ ரான, வள்ளல் - உதாரர், லக்ஷ்மீ நிவாஸமான ஹிரண்யநிதியை பாஹ்ய குத்ருஷ்டி தஸ்கர ரபஹரியாதபடி பண்ணி நமக்குத் தந்தருளின மஹாவதாந்யரான ஸ்ரீபா ஷ்யகாரரென்றபடி. என்னுயிர் தந் தளித்தவரை என்றும் வள்ள லென்று மிம்ம ஹோப காரகத்வா நுஸந்தாநத்தாலே ப்ரேமாதிசயம் தோற்றுகையால் குருபங்க் த்யநுஸந்தாநஸ்ய பக்திருபத்வம் வ்யஞ்ஜிதமாய்த்து. நன்னெறியை - நல்லமார்க்கத் தை, நெறி - மார்க்கம். பக்தியொகாதப்யதிசயித வைபவமான ப்ரபத்தியை யென்ற படி. அவர்க்கு - அந்த மணக்கால்நம்பிக்கு, உரைத்த - உபதேசித்தவரான, இன்ன முத - போக்யா ம்ருதபூதையான, இன் - போக்யம். அத்யந்தம் போக்யையான வென்றபடி. நிருபாதிக போக்யனை பரமபுருஷனுக்கும்கூட போக்யை யாகையா லே திருமக ளத்யந்த போக்யபூதை யென்றுகருத்து. என்றிவரை - இப்படி மனோ ஹரங்களான திருநாமங்களையும் கல்யாண குணங்களையு முடையவரான விவர்களை யென்றபடி. முன்னிட்டு - முந்தர விவர் திருவடிகளை பஜித்து, பின்பு பகவான் திரு வடிகளை பஜிக்கிறே னென்றபடி. (௩)

இப்படி "ஸைதைஹ்யம், ஹ்ருத்யாஹ்ருத்யம்" என்கிற ச்லோகங்களாலே ப்ரகாசன பர்யந்த குருபங்க்தி பஜந ப்ரகாரத்தை யருளிச்செய்து காட்டி இவ்வாசார்யர்களி

லெம்பெருமானுரு மாளவந்தாரும் நாதமுநிகளு முபகாரகத்வாதிசயத்தாலே தனித் தனியே விசேஷித் தநுஸந்தேயரென்னும் திருவுள்ளத்தாலே தத்விஷயமாக மூன்று பாட்டருளிச்செய்கிறார். ஆரணநூலிதி.

அ0-மூ.—ஆரணநூல் வழிச்செவ்வை யழித்திடு மைதுகர்க்கோர்
வாரணமா யவர்வாதக் கதலிகண் மாய்த்தபிரான்
ஏரணிகீர்த் திபிராமா னுசமுனி யின்னுரைசேர்
சீரணிசிந் தையினோஞ் சிந்தியோமினித் தீவினையே. (ச)

ஆரணநூல் - வேதாந்த சாஸ்த்ரத்தினுடைய, வேதாந்த மீமாம்ஸையான சாரீரக ஸூத்ரத்தினுடைய என்றபடி. வழி - மார்க்கத்தினுடைய, ந்யாய ப்ரதிபாதந ப்ரகாரத்தினுடைய என்றபடி. செவ்வை - ருஜுத்வத்தை, ஸூத்ராக்ஷர ஸ்வாரஸ்யாநுகுணமாக ப்ரவர்த்திக்கையை யென்றபடி. அழித்திடும் - கெடுக்கிறவர்களான, ஸ்வஸ்வகல்பிதா ர்த்தஸாதநா நுகுண்யேந ஸூத்ரங்களை யதாயதம் நயிப்பிக்கிறவர்க ளாகையாலே தத்ஸ்வா ரஸ்யாநுகுண ப்ரவ்ருத்தி நாசகரான என்றபடி. "பஹுமதிவ்யாவாத ஊராஸிதாம்" பஹுமதிவ்யா காததூரஸ்திதாம் என்றதிறே. ஐதுகர்க்கு - ஹைதுகருக்கு, ஓர் வாரணமாய் - அத்விதீய கந்தஸிந்துரமாய், இத்தாலே அமோகாரம்பத்வமும் அநாத்ருஷ்ய த்வமும் விவக்ஷிதம். அவர் வாதக் கதலிகள் - அவர்களுடைய வாதங்களாகிற கதளிகள், இத்தால் ததீயவாதங்களுடைய நிஸ்ஸாரத்வமும் அநாயாஸ பஞ்சநீயத்வமும் விவக்ஷிதம். மாய்த்த - நசிப்பித்தவரான, பிரான் - அதஏவ உபகாரகரான, ஏரணி - ஏர்ந்த வணியான, அணி - அலங்காரம். லோகங்களுக் கெல்லாம் அநுரூபா லங்காரமான என்றபடி. கீர்த்தி - கீர்த்தியை யுடையவரான, இராமானுசமுநி - ஸ்ரீபாஷ்யகாரருடைய, இன் - போக்யங்களான, உரை - ஸூக்திகள், சேர் - சேர்ந்திருக்கிற, ததேகவிஷயினியான என்றபடி. இது சிந்தைக்கு விசேஷணம். சீரணி - அதஏவ சீர்களாலே அலங்க்ருதையான, சமாதி குணங்களாலே அலங்க்ருதையான என்றபடி. சிந்தையினோம் - சிந்தையையுடைய நாம், இனி - யதிபரிப்ரூட க்ரந்தைக ரஸிக மனோவ்ருத்திகரான பின்பு, தீவினை - க்ரூரகர்மங்களை, பகவ தநபிமத கர்மங்களை யென்றபடி. சிந்தியோம்- மனஸ்ஸாலும் நினையோம். ஸ்ரீபாஷ்யகாரர் திவ்ய ஸூக்திகளைச்சேர்ந்து கைங்கர்ய விருத்த கர்மாபிஸந்தி யொழியப் பெற்றோமென்று தங்யதாநு ஸந்தாந முகேந அவருடைய பரமோபகாரகத்வத்தை யநுஸந்திக்கிறபடி. (ச)

அக-மூ.—நீளவந் தின்று விதிவகையால் நினை வொன்றியநாம்
மீளவந் தின்னும் வினையுடம் பொன்றி விழுந் துழலாது
ஆளவந்தா ரெனவென் றருடந்தும் விளங்கியசீர்
ஆளவந்தா ரடியோம் படியோ மினி யல்வழக்கே. (ரு)

நீள் - தீர்க்கமாக, வந்து - ஸம்ஸரித்து, இங்கு வருகை என்று ஸம்ஸரிக்கை விவக்ஷிதம். அநாதி தீர்க்க காலமாக ஸம்ஸாரத்திலே ஓடித் திரிந்து என்றபடி. இன்று - இந்தஜந்மத்திலே, விதிவகையால் - விதிபேதத்தாலே, வகை - வகுப்பு, பேதமென்றபடி. பாக்யவிசேஷத்தாலென்கை. நினைவு - தேஹாதிரிக் தாத்மஜ்ஞாந தந்மூல பாரலௌகிக விசாராதிகளை, ஒன்றிய - அடைந்தவர்களான, நாம் - இப்படி ஸ்தாவர திர்யகாதி தசைகள் கழியப் பெற்ற நாம், மீளவந்து - ஸ்வதந்த்ரத்வ தேவதாந்தர சேஷத்வாதி ப்ரமங்களா லுண்டாம் பகவத் பாகவத வைமுக்யாதி தோஷங்களாலே திரும்பியும் ஸம்ஸாரத்திலே போய்ப் புக்கு, இன்னும் - அனந்தமான

உத்தரகாலத்திலும், வினையுடம்பு - துஷ்கர்ம ஜன்யமாய் துஷ்கர்ம ஜனகமுமான தேஹத்தோடே, ஒன்றி - ஏகீபவித்து, தேஹாத்மப்ரம யுக்தனு யென்றபடி. விழுந்து - அதடியாக வதோகதிகளையடைந்து, உழலாது - யாதனைப்படாதபடி, ஆளவந்தார் - ரக்ஷிக்கவந்தார், என - என்னும்படி, மஹாபுருஷ நிர்ணயாதிகளாலே பகவதநந்யார்ஹ சேஷத்வ ஜ்ஞாநாதிகளை யுண்டாக்கி நம்மை ரக்ஷிக்க வவதரித்தாரென்று எல்லாரும் கொண்டாடும்படி யென்று கட்டார்த்தம். வென்று - ப்ரதிவாதிகளை ஜயித்து, அருள்தந்து - லோகத்தாருக்கு க்ருபைபண்ணி, திவ்யப்ரபந்த நிர்மாணாதிகளைப் பண்ணியென்றபடி. விளங்கியசீர் - வித்யோதமான கல்யாணகுணங்களை யுடையவரான, ஆளவந்தார் - அந்வர்த்தநாம தேயரான ஸ்ரீயாமுநாசார்யருக்கு, அடியோம் - அடிமையாகப் பெற்ற நாம், இனி - அவருடைய கடாக்ஷ விஷயரான பின்பு, அல்வழக்கு - அபந்யாயங்களை, அசேஷத்வா ந்யசேஷத்வாதி பரங்களான வஸச் சாஸ்த்ரங்களை என்றபடி. படியோம் - படியோம். ஆளவந்தாருடைய திவ்ய ஸூக்தி லாபத்தாலே யவர்க்கே யடிமையாய் குமதிமத பாதாள குஹரங்களைக் கால்கடைக்கொள்ளப் பெற்றோ மென்று க்ருதார்த்ததா நுஸந்தாந முகத்தாலே யவருடைய மஹோபகார கத்வத்தை யனுஸந்திக்கிறபடி. (ரு)

அ௨.-மூ.—காளம் வலம்புரி யன்ன நற்காத லடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல்
மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே
நாளுந் தொழுதெழுவோ நமக்கார் நிகர் நானிலத்தே. (சு)

காளம் - காஹளம், வலம்புரி - தக்ஷிணாவர்த்தசங்கம், அன்ன - இவைத்துக்கு ஸத்ருசரான, வாதாஹவேஷு அதிகம்பீர த்வநி விஜ்ரும்பணத்தாலே ப்ரதிவாதிகளுக்கு பயங்கரராய் ஸ்வாமிக் கதிசயாவஹராய்க் கொண் டஸாதாரண சேஷபூதரா யிருக்கிற வ் வாகாரத்தாலே சங்க காஹள ஸத்ருசரான என்றபடி. நற்காதல் - நல்ல ப்ரேமத்தை யுடையவரான “யஸ்ய தேவே பரா பக்தி:” யதாதே வேத தாகுரௌ” என்கிறபடியே அநவதிக குருபக்தி சாலிகளான என்றபடி. அடியவர்க்கு - தாஸர்களுக்கு, “கீழையகத்தாழ்வான் மேலையகத் தாழ்வான்” என்கிற மருமக்களான ஸச்சிஷ்யர்களுக் கென்றபடி. தாளம்வழங்கி - தாளவித்யையை ப்ரஸாதித்தருளி, காந்தர்வவேதத்தை யுபதேசித்து என்றபடி. தமிழ்மறை - த்ராமிட வேதத்தினுடைய, இன் - போக்யமான, இசை - கானத்தை, தந்தவள்ளல் - உபதேசித்தருளின மஹோதாரரான, மூளும் - மூளப்படுமதான, முமுக்ஷுக்களுக்கு ஆதரேண வாச்ரணீயமான வென்றபடி. தவநெறி - தபோமார்க்கங்களை, பக்தி ப்ரபத்தி மார்க்கங்களை யென்றபடி. மூட்டிய - லோகத்திலே ப்ரவர்த்திப் பித்தவரான, நாத முனி - ஸ்ரீமன் நாதமுனிகளுடைய, கழலே - திருவடிகளையே, நாளும் - ப்ரதி திநமும், தொழுது - ஸேவித்து, எழுவோம் - உஜ்ஜீவிப்போம், யத்வா - திருவடிகளைத் தொழுகையாகிற மஹாநந்த லாபத்தாலே ஸமுல்லஸித ராவோ மென்றபடி. நமக்கு - ஏவம்வித பாக்ய ராசிகளான நமக்கு, நானிலத்தே - நாலுவகைப்பட்ட நிலத்திலே, க்ருத்ஸ்ந பூமியிலு மென்றபடி. ஆர்நிகர் - ஆர்ஸத்ருசர். நாதமுநிகள் திருவடிகளைத் தொழப் பெற்று நாம் ஸர்வோத்க்ருஷ்ட ராஞே மென் றிம்முகத்தாலே நாதமுநிகளே பரமபுருஷனில் காட்டில் அதிகமான பரதேவதை யென் றநுஸந்திக்கிறபடி. இங்கு சிந்தியோ மினித் தீவினை யென்று மங்கள மனோவ்ருத்தி லாபமும் படியோ மினி யல் வழக் கென்று மங்கள வாக்வ்ருத்தி லாபமும் தொழுதெழுவோ மென்று மங்கள காயவ்ருத்தி லாபமும் அடைவே சொல்லிற்றாய்த்து. இவை யோ

ரொன்று ஒரோரிடத்திலே ப்ரதானமாகச் சொல்லி யிருந்தாலும் மூன்றிடத்திலும் மூன்று மங்கள ஸித்தியு முண்டென்கைக்கு ப்ரதர்சனபரம். (சு)

இப்படி “ரஹஸ்யத்ரயார்த்த விசதீகரணார்த்தாய் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரம்” என்னும் க்ரந்தம் செய்தருள திருவுள்ளம்பற்றி இனி யிந்த ரகஸ்ய த்ரயத்தின் பத வாக்ய யோஜனையும் ஸம்ப்ரதாய ப்ரக்ரியையும் த்ரிதீய சதுர்த்த பாகங்களுக்கு அஸாதாரண விஷயமென்று ஸூசிப்பியா நின்றுகொண்டு இப்ரபந்தத்துக்கு பரம ப்ரயோஜநத்தையும் அவாந்தர ப்ரயோஜநங்களையும் காட்டாநின்றுகொண்டு ஆசார்யர்களுடைய ப்ரஸாதத்தாலே யனுபவ பரீவாஹமாக விப்ரபந்தம் ப்ரவ்ருத்த மாகிற தென்று இப்படி சிகீர்ஷித ப்ரதிஜ்ஞையையும் செய்தருளுகிறார். ஆளுமித்யாதியால்.

அங்-மூ.—ஆளு மடைக்கல மென்றெம்மை யம்புயத் தாள்கணவன்
தாளிணை சேர்ந்தெமக்கு மவை தந்த தகவுடையார்
மூளு மிருட்கள் விள்ள முயன் றோதிய மூன்றினுள்ளம்
நாளு முகக்க விங்கே நமக்கோர்விதி வாய்க்கின்றதே. (எ)

எம்மை - அகிஞ்சநரான நம்மை, அடைக்கல மாளு மென்று - அடைக்கல்மாக வாண்டு கொள்ளுவ னென்று, சரணவரணம் பண்ணில் ஸ்வேனைவ பர்த்தவ்யமான வஸ்துவாக ஸ்வீகரித்து ஸ்வாஸாதாரண மஹிஷீ பரிஜநாதிகளோடொக்க ஸ்வேஷ்ட கைங்கர்யங்களிலே நியோகித்துக் கொள்ளுவ னென்று அத்யவஸித் தென்றபடி. இத்தா லிப்ரபந்தத்துக்கு பரம ப்ரயோஜநம் ஸூசிதமாய்த்து. அம்புய்த்தாள் கணவன் தாளிணை - அம்புயத்தில் வஸிக்குமவள் அம்புயத்தாள் அவளுடைய கணவன் வல்லபனுடைய திருவடிகளுடைய இணை த்வந்த்வத்தை, சேர்ந்து - உபாயமாக வாச்ரயித்து, இத்தால் ப்ரபத்யனுஷ்டானம் இப்ரபந்தத்துக்கு அவாந்தர ப்ரயோஜந மென்று த்யோதிதமாய்த்து. எமக்கும் - தங்களை யாச்ரயித்த நமக்கும், அவை தந்த - அத்திருவடிகளையே உபாயமாக காட்டிக்கொடுத்த, தகவுடையார் - க்ருபாசாலிகளான வாசார்யர்க ளென்றபடி. இதுக்கு ஓதிய என்கிறத்தோடே அந்வயம். மூளும் - ஜ்ரும்பண சீலங்களான, இருள்கள் - அஜ்ஞாநங்கள், விள்ள முயன்று-விட்டுப் போகைக் கபிநிவெசித்து, நிச்சேஷ நிவ்ருத்தங்க ளாகவேணு மென் றபிநிவிஷ்டரா யென்றபடி. இத்தால் அஜ்ஞாந நிவ்ருத்தியு மிப்ரபந்தத்துக் கவாந்தர ப்ரயோஜந மென்று தர்சிதமாய்த்து. ஓதிய - அனுஸந்தித்ததான, உபதேசித்ததான என்றபடி. மூன்றினுள்ளம் - ரஹஸ்யத்ரயத்தினுடைய தாத்பர்யத்தை, இங்கே - பகவத் ஸ்வரூப திரோதாயகமான விந்த ப்ரக்ருதி மண்டலத்திலே, நாளும் - ஸர்வகாலத்திலும், உகக்க - அநுபவித் தாநந்தித் திருக்கும்படி, ப்ரபந்த நிர்மாண தததநுஸந்தாநாதிருப பரீவாஹ யுக்தமாக வத்யர்த்த ப்ரீதியோடே நாளு மனுபவிக்கும்படி என்கை. நமக்கு - அந்த வாசார்யர்களுடைய திருவடிகளை யாச்ராயித்திருக்கிற நமக்கு, ஓர்விதி - விலக்ஷணமான பாக்யமானது, பகவ தநுக்ரஹாதபி விலக்ஷணமான குருபங்க்தி ப்ரஸாதமாகிற பாக்யமானது என்றபடி. வாய்க்கின்றது - வந்து கிட்டாநின்றது, இதுக்கு ஸத்ருசமான ஹேது கண்டிலேன்; பலமாகில் ஸித்தியா நின்றதென்றபடி. மூன்றினுள்ள மென்கிற வித்தாலே விப்ரபந்தத்தில் த்ருதீய பாகத்துக்கு பதவாக்ய யோஜனை விஷய மென்று ஸூசிதம். எமக்கு மவை தந்த என்கிற வித்தாலே யாசார்ய க்ருத்யம் தோற்றுகையாலும் தகவுடையா ரித்யாதியாலே யவர்கள் விஷயத்தில் க்ருதஜ்ஞதாநு சந்தானமும் நித்யம் ததுபதிஷ்ட ரஹஸ்ய த்ரயார்த்தா நுஸந்தாநமு மாகிற சிஷ்யக்ருத்யமும் தோற்றுகையாலும் ஆசார்ய

சிஷ்யோபய க்ருத்யம் சம்ப்ரதாய ப்ரக்ரியாக்யமான சதுர்த்த பாகத்துக்கு விஷய மென்று வ்யஞ்ஜிதமாய்த்து. (எ)

"ஜேணிவர ஜவஶாளசொ:" "மணிவர இவ சௌரோ:" என்று துடங்கி ஸ்ரீய: பதி இத்யாதியாலே சாஸ்த்ரார்த்த விசேஷ ஜிஜ்ஞா ஸொத் பாதநாய உபொத்காத மென்னும் ப்ரதமமான இவ்வதிகாரத்தில் சொன்ன வர்த்தங்களை யெல்லாம் முமுக்ஷுக்களுக்கு ஸ்வசிஷ்டங்களாக வநுசந்தித்துக் கொள்ளும்படி ப்ரயோக ரூபமாகவும் வைசித்யாதி சயார்த்தமாகவும் பாட்டாலே ஸங்க்ரஹிக்கிறார். திருவுடனிதி.

அச-மூ.—திருவுடன் வந்த செழுமணி போற்றிரு மாலிதயம்
மருவிட மென்ன மலரடி சூடும் வகைபெறுநாம்
கருவுடன் வந்த கடுவினை யாற்றில் விழுந்துழலா
தருவுட னைந்தறிவா ரருள் செய்ய வமைந்தனரே. (அ)

மேலும் ப்ரத்யதிகாரம் பாட்டுக்களுக் கிதுவே ப்ரயோஜநம். திருவுடன் வந்த-பிராட்டியோடே கூட க்ஷீராப்தியிலெ யாவிர்ப்பவித்த, இத்தால் ஸ்ரீகௌஸ்துபஸ்ய லக்ஷ்மீ துல்ய ப்ரேமாஸ்பதத்வம் விவக்ஷிதம். செழு மணி போல் - ச்லாக்ய மணி போல், ஸ்ரீகௌஸ்துபத்துக்குப் போலெ யென்றபடி. திருமால் - ஸ்ரீவல்லபனுடைய, இதயம் - ஹ்ருதயம், வக்ஷஸ்தலமென்றபடி. மருவிட மென்ன - மருவும் ஸ்தல மென்ன, நமக்கு ஸ்நேஹமாக வஸிக்கும் ஸ்தலமென்று சொல்லலாம்படி, இவனுக்கு ப்ரியதமராய்கொண்டு ஜீவாபிமானியான ஸ்ரீகௌஸ்துபத்தை ஈச்வரன் பிராட்டியைப்போலே அதிப்ரேமத்தோடே தன் ஹ்ருதயத்திலே வைத்துக்கொண்டிருக்கிற, இது இஜ்ஜீவர்களுக்கும் ததாவித ப்ரேமாஸ்பத த்வக்யாபகமென்று கருத்தாலெ யிவர்களுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தை த்ருஷ்டாந்தமாக வெடுத்தது. மலரடி - பத்ம ஸத்ருசங்களான திருவடிகளை, சூடும் வகை - சிரோ பூஷணமாகக் கொள்ளும் ப்ரகாரத்தை, நிரதிசயபோக்யமாக வடிமைசெய்யும் ப்ரகாரத்தை யென்றபடி. பெறு நாம் - பெற யோக்யதையுடையரானநாம், கருவுடன் வந்த - கர்ப்பத்தோடெ வந்ததான வென்றபடி. கடுவினை யாற்றில் - க்ரூரமான கர்மரூப நதியில், விழுந்துழலாது - நிபதித்துபெருகிப்போகாதபடி. இதுக் கருள்செய்ய வென்கிறத்தோடெ அன்வயம். அருவுடன்-ஸூக்ஷ்மார்த்தத்தோடெ, அங்யெர் துர்போதமான சரீராத்மபாவாதி ஸம்பந்தத்தோடேகூட வென்றபடி. ஐந்தறிவார் - அர்த்த பஞ்சகத்தை யறிவார், ஸம்பந்தத்திலும் அர்த்தபஞ்சகத்திலும் நிஷ்ணாதரான நம்மாசார்யர்க ளென்றபடி. அருள் செய்ய-க்ருபைபண்ணுகைக்கு, அபேக்ஷிதார்த்தங்களை யெல்லாம் தெளிவிக்கைக்கு, அமைந்தனர் - பர்யாப்த ரானார்கள், ஜ்ஞாதார்த்த மினி நமக்கு ஒன்றை யபேக்ஷிக்க வேண்டா மென்று கருத்து. "ஶ்ருதிபவிஶவிவரிதமு" ச்ருதிபதவிபரீத மென்று துடங்கி இந்த ரஹஸ்யத்ரயத்திலித்யாதியால் ரஹஸ்யத்ரயம் மிகவும் ஸாரதம மாகையால் உபாதேயதம மென்று ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்தில் அருளிச்செய்து இவ்வதிகாரார்த்தமெல்லாம் ஸம்ப்ரதாயாகத மென்று காட்டாநின்றுகொண்டு இவைத்தை ஸங்க்ரஹிக்கிறார். அமையாதிதி.

அரு-மூ.—அமையா திவையென்னு மாசையி னுலறு மூன்றுலகில்
சுமையா னகல்விகள் சூழவந் தாலுந் தொகை யிவையென்
றிமையா விமையவ ரேத்திய வெட்டிரண் டெண்ணியநம்
சமயா சிரியர் சதிர்க்குந் தனிநிலை தந்தனரே. (கூ)

இவை - இப்போது நா மப்யஸித்த வித்யைகள், அமையாது - போதாது, என்னு மாசையினல் - இவை நமக்குப் போராது இன்னும் அப்யஸிக்க வேணு மென்கிற வாசையா லென்றபடி. இதுக்கு சூழவந்தாலு மென்கிறத்தோ டந்வயம். உலகில் சுமையான - நிஷ்பலங்க ளாகையாலே "வெஃஹாாஹாாக ாஃ" வேதபாரபராக்ராந்த: இத்யாதிகளில் படியே லொகங்களுக்கு கேவல பாராயணங்களான என்றபடி. அறுமூன்று - அஷ்டாதச ஸங்க்யாகங்க ளான, உபவேதாநாம் ப்ருதக் கணநயா வித்யாநா மஷ்டாதசத்வம். கல்விகள் - வித்யைகள், அத்யாத்ம ஸாரதம ரஹஸ்யத்ரய வ்யதிரிக்த வித்யைக ளென்றபடி. சூழவந்தாலும் - கார்ஸ்ந்யெந லப்தங்க ளானாலும், இவை தோகை யென்று - இவைகள் சங்க்யா பூரண மாத்ர ப்ரயோஜநங்க ளென்று, நிஸ்ஸாரங்களென்று நிச்சயித் தென்றபடி. இதுக்கு எண்ணிய வென்கிறத்தோடே யந்வயம். இமையா - நிமெஷ மில்லாதவர்களான, க்ஷண மாத்ரமபி ஜ்ஞாநசங்கோச லேச மில்லாதவர்களான என்கை. இமையவர் - தேவதைகள், நித்யஸூரிகள். ஏத்திய - கொண்டாடுகிற, அத்யாத்ம விஷய சப்தராசியில் அத்யந்த ஸாரதமங்களான என்று தாத்பர்யம். எட்டு - ஸ்ரீம தஷ்டாக்ஷரத்தையும், இரண்டு - ஸ்ரீமந்த்ரரத்நத்தையும் சரமச்லோகத்தையும், எண்ணிய - ஸர்வதா அநுசந்திக்குமவரான, நம் சமயாசிரியர் - நம்முடைய தர்சன ப்ரவர்தகரான வாசார்யர்கள், சதிர்க்கும் - சதுரமான, "ஃஉ யாவெஃந ஃஃஃஃ" அல்பாயாஸெந ஸர்வார்த்த ஸித்திகரமான என்கை. தனிநிலை - அஸாராதிகளைக் கழித்து ஸாரதமத்திலு மத்யந்த ஸாரதம மான ரஹஸ்ய த்ரயத்தையே விரும்பும்படியான ஸித்தியை, இவ்வதிகாரத்தில் சொன்ன ஸாராஸாரங்களுடைய நிஷ்கர்ஷத்தை என்றபடி. தந்தனர் - நமக்கு க்ருபையாலு முபதேசத்தாலும் ப்ரஸாதித்தருளினர்கள் என்கை. (க)

"ஃஃஃஃ ஃஃஃஃஃ" ஆதேயத்வ ப்ரப்ருதி நியமெ: என்று தொடங்கி, ஜீவெச்வரயோச் சரீராத்மபாவம் ரஹஸ்யத்ர யார்த்தங்களில் ப்ரதானமாய் நம் ஸித்தாந்தத்திற்கு அஸாதாரணமான அர்த்தமென்று ப்ரதான ப்ரதிதந்த்ராதிகாரத்தில் அருளிச்செய்து இச்சரீராத்ம பாவம் வேதங்களில் சொல்லப்படுகிறதோ சொல்லப்படுகிறதாகில் மற்றுள்ள ஸித்தாந்திக ளித்தை இசையா தொழிவானே னென்கிற சங்கையைப் பரிஹரியா நின்றுகொண்டு அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார். நிலையிதி.

அகூ-மூ.—நிலைதந்த தாரக னுய்நிய மிக்கு மிறைவனுமாய்
இலதொன் றிலாவகை யெல்லாந் தனதெனு மெந்தையுமாய்
துலையொன் றிலையென நின்ற துழாய்முடி யானுடம்பாய்
விலையின்றி நாமடியோ மென்று வேதியர் மெய்ப்பொருளே.

நிலை - ஸ்திதி, இது ஸத்தைக்கு முபலக்ஷணம். நிலை தந்த தாரகனுய் - கடாதீந் ப்ரதி பூதலாதிவ தன்றிக்கே தன் ஸ்வரூபாதீநங்களாக ஸத்தாஸ்த்திகளை ஸங்கல்பித்து தாரகனு யென்றபடி, நியமிக்கு மிறைவனுமாய் - ஔபாதிக நியந்தாக்களான ஜீவர்களைப் போலன்றிக்கே நியமனத்தை ஸ்வபாவமாக உடைய வீச்வரனுமாய், ஒன்று மிலது எனு வகை - இதொன்று மிவனுக்கு சேஷமன் றென்னவொண்ணுதபடி, எல்லாந் தனதெனு மெந்தையு மாய் - ஸமஸ்த வஸ்துவும் தனக்கு சேஷ மென்னப்படும் ஸ்வாமியுமாய், இதுக்கு நின்ற வென்கிறத்தோடே அந்வயம். துலை யொன் றிலையென நின்ற - இவனுக்கு ஸமமான வஸ்துவொன்று மில்லை யெ

ன்னும்படி நின்றவனை, துழாய்முடியானுடம்பாய் - ஸ்ரீதுளஸீ மௌளிகனுக்கு சரீரமாய், துழாய்முடியா னென்கிறவித்தா லிவனுடைய திவ்யமங்கள விக்ரஹம்போலெ யாதேயத்வாதிநியமைஸ் ஸர்வமும் சரீரமாகலா மென்றுகருத்து. விலை - க்ரயம், உபாதியென்றபடி. விலையின்றி - உபாதியொன்று மின்றிக்கே, நாமடியோமென்று, நாம் தாஸபூதரென்று, வேதியர் மெய்ப்பொருள் - வேதத்தை யதாவத்தாக வறிந்தவருடைய ஸத்யபூதமான வர்த்தம். ‘‘யஸ்ய ப்ருதிவீ ஶரீரம், யஸ்யாத்மா ஶரீரம்’’ யஸ்ய ஶ்ருதிவிசரீரம், யஸ்யாத்மா சரீர மித்யாதிகளாலே வேதங்களிலே இச்சரீராத்மபாவம் சொல்லாநிற்க விதின் முக்யார்த்தத்துக்கு பாதகமில்லாதிருக்க இத்தை கௌணமாக்கினவர்கள் வேதத்தை யதாவத்தாக வறிந்தவர்க ளன்றென்றுகருத்து. (௧௦)

அர்த்தபஞ்சகஸ்ய ‘‘ப்ராப்யஸ்ய ப்ரஹ்ம’’ ஆதௌப் ராப்யமென்று துடங்கி, ப்ராப்யஸ்ய ப்ரஹ் மணோரூப மித்யாத் யுக்தமான அர்த்தபஞ்சகத்தை உபபாதித்து தஸ்யஸதாசார்ய ஸம்ப்ரதாயாதேவ ஸம்யகவகதத்வ க்யாபனுர்த்மாகவும் ததாத்வேந ஸர்வேஷா மநுஸந்தாநார்த்தமாகவு மிதைபாட்டாலே ஸங்க்ரஹிக்கிறார். பொருளிதி.

அள-மூ.—பொருளொன் றென நின்ற பூமக ளாதன் னவ னடிசேர்ந்
தருளொன்று மன்ப னவன்கொ ளுபாய மமைந்தபயன்
மருளொன்றிய வினை வல்விலங் கென் றிவை யைந்தறிவார்
இருளொன் றிலாவகை யெம்மனந் தேற வியம்பினரே. (௧௧)

பொருள்-புருஷார்த்தம், ஒன்றென - ஒன்றென்று சொல்லும்படி, நின்ற - இவனொருவனுமே பரமபுருஷார்த்த மென்று ஸர்வசாஸ்த்ரங்களும் சொல்லும்படி யநவதிகக்ல்யாண ஸ்வரூப குண விக்ரஹ விபூதி சேஷ்டித சாலியாய்க் கொண்டு நித்யமாக நிலைநின்றவனை வென்று தாத்பர்யம். பூமகள்நாதன் - பத்மாலயாநாதன், அவனடி - தத்பாதங்களை, சேர்ந்து - சரணம்புகுந்து, அருளொன்றும் - க்ருபையோடே ஏகீபவிக்குமவனை, நித்யம் க்ருபாவிஷயனாய்க் கொண்டு நித்யகைங்கர்யம் பண்ணும்படிக்கு ஸ்வரூபயோக்யனை வென்றபடி. அன்பன் - ஸஹ்ருதி, பகவதநுபவ ரஸிகத்வ ஸ்வபாவனை ஜீவன், அவன்கொள் - அவன்கொள்ளுமதான, இந்தஜீவன் தனக்கு மோக்ஷஸாதநமாக ஸ்வீகரிக்கும்படி இருக்கிற என்றபடி, உபாயம் ஸித்தஸாத்ய ரூபங்களான வுபாயங்கள், அமைந்த - அந்த ஜீவஸ்வரூபத்துக் கனுரூபமான, பயன் - பலம், மருளொன்றிய - அவித்தையையோடே கூடியிருக்கிற, வினை - கர்மங்களாகிற, வல் விலங்கு - த்ருடதரச்ருங்கலை, என்றிவையைந்து - இப்படி சொல்லப்பட்ட வர்த்த பஞ்சகத்தை, அறிவார் - ஸம்யக்காகத் தெளிந்தவரான வாசார்யர்கள், இருளொன்றிலாவகை - விபரீத ஜ்ஞாநாதிகளீஷத்து மில்லாதே போம்படி, எம்மனம் - மிதம்பசரான நம்முடைய மநஸ்ஸு, தேற - நிஸ்ஸம்சயமாகத் தெளியும்படி, இயம்பினர் - அருளிச்செய்தார்கள். இவ்வர்த்த பஞ்சகத்தையென்று அர்த்தாத் ஸித்திக்கிறது.

புருடன் மணிவர மாகப் பொன்னு மூலப்
பிரகிருதி மருவாச மான் றண்டாகத்
தெருண் மருண் வாண் மறை வாக வாங்காரங்கள்
சார்ங்கஞ் சங்காக மநந் திகிரியாக

இருடீகங்க ளீரைந்துஞ் சரங்க ளாக
விருபூத மாலை வந மாலையாகக்
கருடனுருவா மறையின் பொருளாங் கண்ணன்
கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின்றானே.

புருடன் - புருஷன், ஜீவனென்றபடி. மணிவரமாக - ஜீவதத்வாபிமானியான வொரு நித்தியஸூரி ஸ்ரீகௌஸ்துப மணிரூப விக்ரஹ யுத்தனு யிருக்கையாலே யவ் வபிமானி தேவதையுடைய வபேதத்தை விவக்ஷித்து ஜீவன் மணிவரமென்கிறது, இப்படி மேலும் தத்ததபிமானி நித்தியஸூரிகளாக யோஜித்துக்கொள்ளுவது. பொன்று - பொன்றுதல்-நசித்தல், நரியாததான, மூலப்பிரகிருதி - மூலப்ரக்ருதி, மருவாக - ஸ்ரீவத்ஸமாக, மான் - மஹான், மஹத்தத்வமென்றபடி. தண்டாக - தண்டமாக, கதையாகவென்றபடி. தெருள்மருள் - ஜ்ஞாநாஜ்ஞாநங்கள், வாள்மறைவாக - கட்கமும் அதினுறையுமாக, ஆங்காரங்கள் - அஹங்காரங்கள், சார்ங்கம் சங்காக - தாமஸாஹங்காரம் சார்ங்கமும் ஸாத்விகா ஹங்காரம் சங்கமுமாக வென்றபடி. மனம் - மனஸானது, திகிரியாக - சக்கரமாக, இருடீகங்கள் - ஹ்ருஷீகங்கள், ஈரைந்தும் - இருபஞ்சகமும், தசேந்திரியங்களு மென்றபடி. சரங்களாக - பாணங்களாக, இருபூதமாலை - த்விவிதபூதமாலை, தந்மாத்ராத்மநா ஸூக்ஷ்ம ரூபமாயும் ஆகாசாத்யாத்மநா ஸ்தூலரூபமாயுமிருந்துள்ள பூதஸமஷ்டியானதென்றபடி. வனமாலையாக - ஸ்ரீவைஜயந்தியாக, இவ்வாக்யங்களுக்கெல்லாம், மறையும்பொருளாமென்கிறத்தோடே யந்வயம். கருடனுருவாமறையின் "த்ரிவ்ருச்சிரோகாயத்ரம் சக்ஷு" ரித்யாதிகளில் அப்படி கெருடனுக்கு ரூபமாக நிற்கிற வேதங்களுடைய வேதவேத்யவிஷயத்தில் தாத்பர்யஸ்தாபந ஸங்ஷணத்தால்போல் வேதஜாதஸ்யவாஹநாவயவத்தாலும் ஸ்வஸ்வரூப ஸம்ரக்ஷணம் பலித்தமாகிறதென்றபிப்பிராயம், பொருளாம் கண்ணன் - ப்ரதாநார்த்தமாகாநிற்கிற க்ருஷ்ணன், இப்படி ஸர்வதத்வங்களும் தனக்கஸ்த்ரபூஷணதி ரூபேண வேதங்களால் ப்ரதிபாதிக்கப்படுகிற க்ருஷ்ணனென்று இவ்வாக்யங்களெல்லாத்துக்கும் ஸமுதிதார்த்தம். கரிகிரிமேல்நின்று - ஹஸ்திகிரிமேலேநின்று, குன்றுமேலே விளக்குபோலே ஸர்வருக்கும் காணலாம்படிநின்று என்றபடி. அனைத்தும் - ஸமஸ்தத்தையும், காக்கின்றான் - அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்திகளாலே ரக்ஷியாநின்றான். ஸர்வதத்வங்களும் அஸ்த்ரபூஷணதிருபேண தனக்கு யதேஷ்ட விநியோகார்ஹமான வுபகரணமானபடியையுமத்தாலே ஸர்வோத்க்ருஷ்டனாய் ஸ்ரேஷ்டனுமான படியையும் வேதங்கள் பரோக்ஷமாகச்சொல்லுகிற வளவேயாய்ப் போகாதபடி யபரோக்ஷமென்கிற ச்லோகத்தின்படியே ஹஸ்திகிரி மேலேநின்று ஸர்வர்க்கும் ப்ரத்யக்ஷமாகக் காட்டிக்கொண்டு விச்வத்தையும் உஜ்ஜீவிப்பியாநிற்கிறானென்று ஸமுதாயார்த்தம். (கக)

ஸோத்ரஸ்ம்ருதித்யாதியாக சதஸ்ர யவிஷயஸ்ருதி யிருந்தாலும் "ஏகமேவாத்விதீயம், நேஹநாநாஸ்தி, யத்ரத்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத்" இத்யாதியாக ப்ரஹ்மமொன்றையே தத்வமென்கிற விருத்தச்ருதிகளாலே ஸம்சயம் பிறவாநிற்க தத்வங்கள் மூன்றென்றிங்கு நிஷ்கர்ஷித்த தெங்ஙனே என்கிற சங்கையை பரிஹரியாநின்றுகொண்டு இவ்வதிகா ரார்த்தமெல்லாம் ஸம்ப்ரதா யாகதமென்று காட்டாநின்றுகொண்டு அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார். தேறவிதி.

அஅ-மூ.—தேற வியம்பினர் சித்தும சித்து மிறையுமென
வேறு படும்வியன் தத்துவ மூன்றும் வினையுடம்பில்
கூறு படுங்கொடு மோஹமும் தானிறை யாங்குறிப்பும்
மாற நினைந்தரு ளால்மறை நூல்தந்த வாதியரே. (கஉ)

மறைநூல் - வேதரூபசாஸ்த்ரத்தை, தந்த - தந்த, உபதேசித்தவர்களான, ஆதியர் - ஆத்யா:, பூர்வாசார்யர்களென்றபடி. அருளால் - க்ருபையாலே, "க்ருபயா நிஸ்ருதோ ஹ்யாவயோ:" என்கிறபடி. வ்யாதிஜாதிகளை கணிசியாதேயென்று கருத்து. இதுக்குத் தேறவியம்பினரொன்கிறத்தோடே யந்வயம். வினையுடம்பில் - கர்மஸம்பந்தியான தேஹத்தில், ஸத்யஜவிஷயபேதேஷு ஸ்தூலஸூக்ஷ்மாதிஜாதாக்யம் ஸம்ஸார ஸம்பவதீதி ஹாவ:, கூறுபடும் - கூறுகொள்ளப்படுகிற, நாளுக்குநாள் த்ருடீபவித்ததான என்றபடி. கொடு - க்ரூரமான நரகாத்யநர்த்தவஹமாய் பாரலௌகிக ச்ரேய: ப்ரதிரோதியுமான என்றபடி. மோஹமும் - ப்ரமமும், தேஹாத்மப்ரமமு மென்றபடி. தானிறையாங்குறிப்பும் - தான் ஸ்வதந்த்ரனும்படியான நிரூபணமும், தேஹாதிரிக்தனுன வாத்மா ஸ்வதந்த்ர னத்தனே போக்கி சேஷத்வபாரதந்த்ர்யாதிமா னன்றென்று குத்ருஷ்டிமதங்களா லுண்டாம் ப்ராந்தியு மென்றபடி. மாறநினைந்து - நிவ்ருத்த மாகவேணு மென்று கணிசித்து, இதுக்கும் தேறவித்யாதியோடே அந்வயம். சித்தும் - சேதநதத்வமும், அசித்தும் - அசேதநதத்வமும், இறையும் - ஈச்வரதத்வமும், என - என்றிப்படி, வேறுபடும் - பின்னமான, வியன் - விஸ்மயநீயமான, அந்யோந்யவிசித்ரா நேகஸ்வபாவஸ்லோகத்தாலே ஆச்சர்யாவஹங்களான என்றபடி. இத்தால் தத்வத்ரயஜ்ஞாநஸ்ய ப்ராந்திநிவர்தகத்வமாத்ரமன்றிக்கே புருஷார்த்தரூபத்வமு முண்டென்று ஸூசிதம். தத்துவம்மூன்றும் - தத்வங்கள் மூன்றையும், தேற - நாம் தெளியும்படி, ஏகமேவேத்யாதிகளான விருத்த ச்ருதிகளால் பிறக்கும் ஸம்சயாதிகள் தீரும்படி யென்கை. இயம்பினர் - சொன்னுர்கள். இயம்புகை-சொல்லுகை. மறைநூல் தந்த வாதியர் தேறவியம்பினர் என்கிறவித்தால் இந்தச்ருதிகளெல்லாத்துக்கும் ஸ்ரீபாஷ்யாதிகளிலே ஸமீசீநந்யாயங்களாலே ஸ்வாரஸ்யஹாநிலேசமு மன்றிக்கே விரோதசமனம்பண்ணி யுபதேசித்தார்க ளென்றதாய்த்து. (கஉ)

அநந்தரம் பரதேவதா பாரமார்த்யாதிகாரத்தில் ஸ்ரீமானுன நாராயணனே பரதேவதை யென்று ஸப்ரமாணமாக உபபாதித்து இதுக்கு பாரமைகாந்த்யசித்தித்வாரா அவ்யவதானென மோக்ஷம் பலமென்றருளிச்செய்து இந்த பரதேவதா பாரமார்த்திய ஜ்ஞாநத்துக்குக் கீழ்ச்சொன்ன விஷ்ட ப்ராப்திபோலே சில வநிஷ்டநிவ்ருத்தி விசேஷங்களும் ப்ரயோஜந மென்று காட்டாநின்றுகொண்டு அம்முகத்தாலே இதினுடைய வத்யந்தோபாதே யத்வத்தையும் வ்யஞ்ஜிப்பியா நின்றுகொண்டு இந்தபரதேவாபாரமார்த்த்யம் த்ரய்யந்தநிஷ்ணாதை: பூர்வாசார்யைரேவ ஸாதிதத்வாத் அவிசால்யம், (த்ரய்யந்தநிஷ்ணாதை: பூர்வாசார்யைரேவ ஸாதிதத்வாத் அவிசால்யம்) என்கிறுர். (வாதியரித்யாதியால்).

அகூ-மூ.—வாதியர் மன்னுந் தருக்கச்செருக்கின் மறைகுலையச்
சாதுசனங்க ளடங்கநடுங்கத் தனித் தனியே
ஆதியெ னுவகை யாரணதேசிகர் சாற்றினர்நம்
போதமருந் திருமாதுட னின்ற புராணனையே. (கங)

வாதியர் - துர்வாதிகள், இதுக்குத் தனித்தனியே ஆதியெனுவகை என்கிறத் தோடேயந்வயம். மன்னும் - ஸ்திரமான, துர்வாரமான என்றபடி. தருக்கச் செருக்கில் - தர்க்ககர்வத்தாலே, த்ருதீயார்த்தஸப்தமி. மறைகுலைய - "பிபெத்யல்பச்ருதாத்வேத:" பிபெத்யல்பச்ருதாத்வேத: என்கிறபடியே வேதங்கள் நடுங்கும்படி, சாதுசனங்கள் - ஸாதுஜநங்கள், தர்க்கபரிச்ரமாலஸராய் பரமாஸ்திகரா யிருந்துள்ள பகவத்பக்தரொன்றபடி. அடங்க - கார்த்ஸ்ந்யேந, நடுங்க - ஸாத்வஸ கம்பித ராம்படி; தனித்தனியே யாதியெனுவகை - துர்வாதிகள் தந்தாமுக்குத் தோற்றினபடி வேறே வேறே ஜகத்காரணவஸ்து வென்னுதபடி, அதாவது - ப்ரஹ்மா பரன், சிவன் பரன் இந்த்ரன் பரன், இத்யாதி ப்ரகாரேண சொல்லாதபடி யென்கை. இவ்வளவால் வேதாநாம் ஸாதுஜநாநாஞ்ச ஸாத்வஸநிவ்ருத்தியும் துர்விதக்த்த வாத நிவ்ருத்தியுமாகிற விவ்வநிஷ்டநிவ்ருத்திகளு மிந்த பரதேவதா பாரமார்த்யஜ்ஞாநத்துக்கு ப்ரயோஜந மென்றதாய்த்து. ஆரணதேசிகர் - வேதாந்தாசார்யர்களான நம்மாசார்யர்கள், நம் - ப்ரஸித்தனுன, நமிதிசப்த: ப்ரஸித்தபர:, பரத்வேந ஸர்வசாஸ்த்ர ப்ரஸித்தனுன என்றபடி. போதமரும் - புஷ்பத்திலே யமர்ந்திருக்கிற, போது - புஷ்பம். பத்மவாஸிநியான வென்றபடி. திருமாதுடன் - ஸ்ரீயாகிறயுவதியுடனே, நின்ற - ஸர்வர்க்கும் ப்ராப்யனும் சரண்யனுமாய் நின்ற, புராணனை - ப்ரஹ்மருத்ராதிகளைப்போலே யுத்பத்யாதிக ளுடையவனுகையன்றிக்கே "த்வமாதிதேவ: புருஷ: புராண:" த்வமாதிதேவ: புருஷ: புராண: இத்யாதிகளில் ப்ரசித்தனுனபுருஷனை என்றபடி. சாற்றினர் - "ஸத்யம்ஸத்யம் புநஸ்ஸத்யம்" ஸத்யம்ஸத்யம் புநஸ்ஸத்யம் என்கிறபடியே தட்டிச் சாற்றினுர்கள். தனித்தனியே ஆதியெனுவகை, இத்யேதத் ஸமபிவ்யாஹாராத் இவனையே யாதியாகச் சாற்றினரென்று தாத்பர்யமாகிறது. (கங)

கீழே ப்ரதானப்ரதிதந்த்ராதிகாரம் துடங்கி நாலுஅதிகாரத்தில் அருளிச்செய்த வர்த்தங்களெல்லாம் மொக்ஷோபாயாதிகாரத்வோப யுக்தங்க ளென்று நிரூபித்து இவ்வதிகாரத்தில் ப்ராதாந்யேந நிரூபிதமான ஸாம்ஸாரிகஸுக ஹெயத்வத்தையும் பகவதநுபவவைலக்ஷண்யத்தையும் பாட்டாலே ஸங்க்ரஹியாநின்றுகொண்டு இந்த ஹேயதாதிகளை ஸ்வப்ரயாஸத்தா லனுஸந்தானம் பண்ணுகிறமாத்ரம் கார்யகாரமாக மாட்டா தென்று வ்யஞ்ஜிப்பியாநின்றுகொண்டு மோக்ஷோப்யாதி காரியாகைக்கு ஸதாசார்யோபதேச ததநுக்ரஹங்கள் ப்ரதானகாரணங்க ளென்கிறுர். நின்றபுராணனிதி.

கூ0-மூ.—நின்றபுராண னடியிணையேந்து நெடும்பயனும்
பொன்றுதலேநிலை யென்றிடப் பொங்கும் பவக்கடலும்
நன்றிது தீயதிதென்று நவின்றவர் நல்லருளால்
வென்று புலன்களை வீடினைவேண்டும் பெரும்பயனே. (கச)

நின்ற - திருமாதுடனின்றவரான வென்றபடி. கீழதிகாரஸங்க்ரஹப்பாட்டில் திருமாதுடன் நின்றபுராணனையே யென்றிருக்கையாலே அந்தாதியா யிருக்கிற விப்பாட்டி லப்படி யர்த்தம் கொள்ளுகை யுசிதமிறே. புராணன்-அநாதி புருஷனுடைய, அடியிணையேந்தும் - சரணத்வந்தவத்தை யேந்துகையாகிற, அந்யோந்ய ஸௌஸாத்ருச்யத்தாலே நிரதிசய போக்யங்களான திருவடிகளை சிரஸாவஹித்து கைங்கர்யம் பண்ணுகையாகிற என்றபடி. நெடும்பயனும் - உத்தராவதி யன்றிக்கே உத்தரோத்தர மனுவர்த்திப்பதான புருஷார்த்தத்தையும், பொன்றுதலே நிலையென்றிட - நசிக்கையே யிதுக்கு ஸ்வாபாவிக தர்ம மென்று சொல்லும்படி, பொங்கும் பவக்கடலும்-

பாதகமாம்படி யடிக்கடி யுத்ரேகியாநிற்கிற ஸம்ஸார ஸமுத்ரத்தையும், நன்றிது - இதுநல்லது, இந்த நெடும் பயன் நல்லதென்றபடி. தீயதிது - இது பொல்லாதது, இந்த பவக்கடல் பொல்லாதது என்றபடி. என்று நவின்றவர் - என்றிப்படி யுபதேசித்த வாசார்யர்களுடைய, நல்லருளால் - நல்லக்ருபையாலே, இங்கு நன்மையாவது - பரோஜ்ஜீவனக ப்ரயோஜநத்வம். புலன்களை - இந்த்ரியங்களை, வென்று - ஜயித்து, சப்தாதி விஷயங்களில் நின்றும் நிவர்த்திப்பித்துஎன்றபடி. பெரும்பயன், மஹா புருஷார்த்த ரூபமான, வீடினை - வீடை மோக்ஷத்தை என்றபடி. வேண்டும்-அபேக்ஷிக்கும், பராவரதத்வவிவேகம் பெற்ற சேதநனிதி சேஷ:. (கச)

அதிகாரி விபாகாதிகாரத்தில் ப்ரத்யதிகாரிக்கும் முகபேதேந ப்ரபத்தி யுண்டென்று அருளிச்செய்து அகிஞ்சனனுக்கு பக்தியோக மில்லாமையாலே தத்ஸ்தாநே ப்ரபத்தி வேண்டினுலும் ஸகிஞ்சனனுக்கு பக்தியோகமே பரமபுருஷார்த்த ஸாதகமாக விருக்க விவனுக்கும் ப்ரபத்தி பண்ணவேண்டுவ தேதுக்காக வென்கிற சங்கையைப் பரிஹரியா நின்றுகொண்டு அதிகாரார்த்தத்தை பாட்டாலே ஸங்க்ரஹிக்கிரூர். வேண்டுமித்யாதி.

கூக-மூ.—வேண்டு பெரும்பயன் வீடென் றறிந்து விதிவகையால்
நீண்டுங் குறுகியு நிற்கு நிலைகளுக் கேற்குமன்பர்
மூண்டொன்றின் மூல வினைமாய்த் துதலின் முகுந்தனடி
பூண்டன்றி மற்றோர் புகலொன் றிலையென நின்றனரோ. (கரு)

வேண்டும் பெரும்பயன் - ப்ரார்த்த நீயமான மஹாபலம், வீடு - மோக்ஷம், என்றறிந்து—, நீண்டுங் குறுகியும் நிற்கும் நிலைகளுக்கு - சிரகால ஸாத்யமாயும் க்ஷண கால ஸாத்யமாயும் நிற்கு முபாயங்களுக்கு, விதிவகையால் - பூர்வஸுக்ருத வைசித்ரியாலே, ஏற்குமன்பர் - யோக்யரான பகவதநுபவேச்சுக்கள், சிலர் சிரகால ஸாத்யோபாயத்துக்கும் சிலர் க்ஷணகால ஸாத்யோபாயத்துக்கு மென்றிப்படி வ்யவஸ்த்திதமாக யோக்யரான ஸகிஞ்சநாகிஞ்சநாதி காரிகளென்றபடி. ஒன்றில் மூண்டு-இவ்விரண்டி லேதேனு மொன்றிலே யுத்யோகித்து, மூலவினை - ஸம்ஸாராநுவ்ருத்திக ளெல்லாத்துக்கும் மூலகந்தமான கர்மங்களை, உபாய விரோதியை யாதல் ப்ராப்திவிரோதியை யாதல் என்றபடி. மாய்த்துதலில் - நிவர்த்திப்பிக்கையில், முகுந்த னடிபூண்டன்றி - பகவச்சரணங்களை ஸாதரமாகப் பற்றியல்லது, தத்ப்ரபத்தியைப் பண்ணியல்லது என்றபடி. மற்று - வேறு, ஓர்புகல் - நிரபே க்ஷோபாயம், ஒன்றிலையென - ஒன்றுமில்லை யென்றும்படி, நின்றனர் - நின்றூர்கள், ஸகிஞ்சனனுக்கு பக்தியோகம் பரமபுருஷார்த்த ஸாதநமாக வத்தாலு முபாயவிரோதி நிவ்ருத்யம் சத்துக்கு வேறு நிரபேக்ஷ ஸாதந மில்லாமையாலே யகிஞ்சனனுக்கு ப்ராப்தி விரோதி நிவ்ருத்திக்காக ப்ரபத்தி வேண்டினுப்போலே உபாய விரோதி நிவ்ருத்திக்காக ஸகிஞ்சனனுக்கும் அது வேண்டுமென்று தாத்பர்யம். (கரு)

உபாய விபாகாதி காரத்திலே உபாயங்களை ஸித்தஸாத்ய ரூபங்களாகவும் ஸித்தோபாயத்தை பலப்ரதத்வ ப்ரஸத நீயத்வாதி விசிஷ்டமாகவும் ஸாத்யோபாயத்தை தத்ப்ரஸாதந மாத்ரரூபமாகவும் ஜ்ஞாந விகாஸ ரூபமாகவும் ப்ராப்தி ரூபஜ்ஞாந விலக்ஷண மாகவும் கர்ம யோகாத்யுபாயத்தை ஸத்வாரகமாகவும் யதாவஸ்திதஸ்வரூப கதனமுகேந பரஸ்பர விபக்தங்களாக நிரூபித்து இப்படி யிவ்வதிகாரத்திலே கர்மயோகத்தை யாத்மாவலோக நஸாதநமாகச் சொன்னது கூடுமோ, வைதிகரிலே சிலர் கர்மம் முமுக்ஷுவுக்கு விருத்தமென்றும் சிலரது மோக்ஷத்துக்கே யவ்ய வஹித ஸாதநமென்றுஞ் சொல்லவில்லையோ ; ஆத்மாவலோகநம் ஜ்ஞாநயோ

கமாத்ரத்தாலே தானே பிறவாதோ; கிஞ்ச, இது ஆத்மாவலோக நஸாதநமாகில் ஜ்ஞாநயோகம் வேண்டா தொழியாதோ; யதாதிகார மென்கைக்கு அதிகாரபேதம் துர்நிரூபமன்றோ; ஸாக்ஷாத்கார துல்ய நிரதிசய ப்ரீதிரூப த்ருவாநு ஸம்ருதியே மோக்ஷஸாதந மென்றது தான்கூடுமோ; ஸ்துதிகீர்த்தந நமஸ்காராதிரூப பக்தி யையும் மோக்ஷஸாதனமாகச் சிலர் சொல்லவில்லையோ; இனி ப்ரபத்தி மோக்ஷோ பாய மென்றதுதான் கூடுமோ; அத்யந்த லகுவான இது மோக்ஷோபாயமாகில் பக்திக் கத்யந்தோச்சேதம் ப்ரஸங்கியாதோ; இதில் சக்தரல்லாதார்க்கு ப்ரபத்தி யென்னில், கர்மயோகாதிகளுக்கு அத்யந்தோச்சேதம் ப்ரஸங்கியாதோ; பரம்ப ரோபாயத்திலும் சக்தரல்லாதாருக் கென்னத்தான் கூடுமோ; ஸர்வஸுகரமான நாமஸங்கீர்த்தநுதிகளிலும் சக்தரல்லாதாருண்டோ, என்கிற சங்கைகளைப் பரிஹ ரியா நின்றுகொண்டு இவ்வதிகாரார்த்தத்தைப் பாட்டாலே ஸங்க்ரஹிக்கிறார். நின் றவித்யாதி.

கூஉ-மூ.—நின்ற நிலைக்குற நிற்குங் கருமமு நேர்மதியால்
நன்றென நாடிய ஞானமு நல்கு முட்கண்ணுடையார்
ஒன்றிய பத்தியு மொன்று மிலாவிரை வார்க்கருளால்
அன்று பயன்தரு மாறு மறிந்தவ ரந்தணரே. (கசு)

நின்றநிலைக்கு - ஸ்திரமான நிஷ்டைக்கு, அஸ்கலிதமான வுபாயநிஷ்டைக் கெ ன்றபடி. உறநிற்கும் - உறும்படி நிற்கும், யோக்யமாய் நிற்கிற என்றபடி. கரும மும் - கர்மயோகத்தையும், கர்மயோக மில்லாதபோ தந்தஃகரண சுத்தி பிறவா மையாலும் ஜ்ஞாநயோக மநப்யஸ்த பூர்வதயா துஷ்கர மாகையாலும் - அப்யஸ்த் ஸஜாதீயதயா ஸுகரமான கர்மயோகமே ஸ்திரமான வுபாயநிஷ்ட்டைக்கு உபயுக்த மாகையா லிது முமுக்ஷுவுக்கு விருத்தமன்று, இப்படி யிது ஆத்மாவ லோகநமா த்ரோ விநியுக்தமாக சாஸ்த்ரேஷு நிர்ணீதமாகையால் மோக்ஷத்துக் கவ்யவஹித ஸாதநமாகவு மாட்டா தென்றுகருத்து. நேர்மதியால் - ஸூக்ஷ்மையான புத்தியா லே, துஷ்கர ஜ்ஞாநயோகத்தையும் நிஷ்ப்ரமாதமாக நிர்வஹிக்கவல்ல புத்தியாலே யென்றபடி. இத்தால் ஜ்ஞாநயோக கர்மயோகயோ ரதிகாரபேதம் ஸூசிதமாகை யாலே ஜ்ஞாநயோக வையர்த்யசோத்யம் பரிஹ்ருதம். நன்றென நாடிய - நல்ல தென்று தேடப்பட்ட, ஞானமும் - ஜ்ஞானயோகத்தையும், இங்கு நன்மையாவது ஆத்மாவலோகநத்துக் கந்தரங்கமா யிருக்கை. கர்மயோகம் ஸுகரோபாயமாகிலும் விஷயவ்யா பாரமிச்ரமா யிருக்கையால் அங்கனல்லாத ஜ்ஞாநயோகமே யாத்மாவ லோகனத்துக் கந்தரங்கொபாயமா யிருக்குமென்று கருத்து. நல்கும் - ஸ்நிஹ்யத் தான, உள்கண்ணுடையார் - அந்தர்த்ருஷ்டி யுடையவர்கள், ஆத்மஸ்வ ரூபஸ்ய பகவச் சேஷதை கரஸத்வாவ காஹிதயா ப்ரீதி ரூபாபன்னமான வாத்மாவ லோகந முடையவர்க ளென்றபடி. ஒன்றிய - ஏகிபூதராகப்பற்றின, நிரதிசய ப்ரிய மாகை யாலே நிரந்தரமாகப் பற்றின வென்றபடி. ஆகவித்தால் ஸாக்ஷாத் காரதுல்ய நிரதி சய ப்ரீதி ரூபாபன்ன நிரந்தர த்யாநரூபத்வம் சொன்னபடி. ததாச இதுவே மோ க்ஷஸாதநமென்று சாஸ்த்ரேஷு நிர்ணீதமாகையாலே கேவலஸ்துதி நமஸ்காராதி ரூபபக்தி மோக்ஷத்துக்கு ஸாக்ஷாதுபாய மன்றென்று கருத்து. பத்தியும் - பக்தியு மென்றபடி, ஒன்றுமிலா விரைவார்க்கு - இந்த கர்மயோகாதிக ளொன்றுமில்லாதவ ராய் த்வரிதருமா யிருக்கிறவர்க்கு, விரைவார் - த்வரிப்பார். கர்மயோகாத்ய ஸமர்த் தராய் அதாபி ஜந்மாந்தர விளம்பாஸஹருமா யிருப்பார் ப்ரபத்திக் கதிகாரிகள், தாத்ருச த்வராதிசய மில்லாதார் நாமஸங்கீர்த்தநுதிகளி லிழிவாரென்று கருத்து, இப்படி லகூபாயத்துக்கு அதிகாரிபேதம் கிடைக்கையால் குருபாய வையர்த்ய ப்ர

ஸங்க மில்லையென்று கருத்து. அன்று - இவர்கள் கோலினபோதே, அருளால் - கேவலக்ருபையாலே, பயன்தரும் - ஈச்வரன் பலன்தரும்படியான, ஆறும் - உபாயத்தையும், ப்ரபத்தியையு மென்றபடி. அறிந்தவர் - உக்தாகார விசிஷ்டங்களாகத் தெளிந்தவர், அந்தணர் - ப்ராம்மணர், வேதவித்துக்களென்றபடி. இப்படியறியாதெ இதுக்கு விபரீதமாக வறிந்தவர்கள் அனேக ச்ருதி ஸ்ம்ருத் த்யர்த்தாபலாபம் பண்ணினவராய் முடிகையாலே வைதிக ரன்றென்று கருத்து. (கசு)

ப்ரபத்தி யோக்யாதிகாரத்தில் "ப்ரபத்திலகுதரோபாயமாகையாலே இதில் அதிகார ஸம்பாதனம் லகுதரமாகையாலும் வர்ணாச்ரமாதிநியமம் இல்லாமையாலும், இது ஸர்வாதிகார மென்று அருளிச்செய்து "ப்ரத்திக்கு ஜாத்யாதி நியம மில்லாமையாலே ஸர்வாதிகாரத்வம் ஸித்த" மென்றிப்படி ஸர்வஜாதியர்க்கும் அதிகாரமும் துல்யமாகச் சொன்னது கூடுமோ; ஸர்வாதிகாரத்வ முண்டானாலும் ப்ராஹ்மணாதிக ளுத்க்ருஷ்ட ராகையாலும் சூத்ராதிகள் அபக்ருஷ்ட ராகையாலும் அதிகாரத்தில் கௌணமுக்யதாரதம்ய மில்லையோ; இவ்வம்சத்தில் ஸம்ப்ரதாயந்தானுண்டோ, வென்கிற சங்கையை பரிஹரியாநின்றுகொண்டு அதிகாரார்த்தத்னத பாட்டாலும் ஸங்க்ரஹிக்கிறார். அந்தணரித்யாதி.

கள-மூ.—அந்தணரந்திய ரெல்லையினின்ற வனைத்துலகும்
நொந்தவரே முதலாக நுடங்கிய நன்னியராய்
வந்தடை யும்வகை வன்றக வேந்திவருந்தியநம்
அந்தமி லாதியை யன்பரறிந்தறி வித்தனரே. (கஎ)

அந்தணர் - ப்ராஹ்மணர், அந்தியர் - அந்த்யர், ச்வபாக ரென்றபடி. எல்லையில் நின்ற - இவ்வுபயாவதி மத்யத்தில் நின்ற, அனைத்துலகும் - ஸர்வலோகங்களும், ஸர்வஜநங்களு மென்றபடி. நொந்தவரே முதலாக - ஸம்ஸாரார்த்தரே ப்ரதாநமாக, அவதாரணத்தால் ஜாத்யாதிகளை வ்யவச்சேதிக்கிறது. ஆர்த்தத்வ த்ருப்தத்வங்களையிட்டு பல விளம்பாவிளம்பங்கள் வருகையாலே தத்ப்ரயுக்தமான வதிகாரத்தில் கௌணமுக்ய தாரதம்ய மத்தனை போக்கி ஜாத்யாதி ப்ரயுக்தமாக வதில்லை யென்று கருத்து. நுடங்கி - அகிஞ்சநராய், நுடங்குகை - க்ருசராகை. அநன்னியராய் - அந்யரஹிதராய், அத்ர அந்யசப்தேந ப்ரயோஜநாந்தரம் சரண்யாந்தரஞ்ச விவக்ஷிதம். வந்து - உபாயாந்தர ப்ரயோஜநாந்தர சரண்யாந்தரேப்யஃ ப்ரத்யாவ்ருத்தரா யென்றபடி. வன் தகவு - வலியக்ருபையை, வலிமை - பலிஷ்டத்வம், மஹத்பிரப் யபராதைரப்ரகம்ப்யத்வ மென்றபடி. ஏந்தி - யாத்ருச்சிக ஸுக்ருதாதி வ்யாஜத்தைக்கொண்டு தரித்து என்றபடி. வருந்திய - வருந்துகை ப்ரயாஸப்படுகை. சேதநொஜ்ஜீவனரூப க்ருஷியில் ப்ரயாஸப் படுகின்ற, நம் மந்தமி லாதியை - நம்முடைய ஸ்வாமியாய் அனந்தனன ஜகத்காரணபூத னானவனை, இவ்விசேஷணங்க ளெல்லாம் சரண்யதைக்குபயுக்தங்களாகச் சொன்னபடி. அடையும்வகை - சரணம்புகும் ப்ரகாரத்தை, சரணம்புகலாம்படி யதிகாரிகளுக்குள்ள ப்ரகாரத்தை யென்றபடி. பரனை வரிக்கும் வகையென்று மேலதிகாரப் பாட்டில் சொல்லுகிறுப்போ லன்றிக்கே இப்பாட்டிலே யனைத்துலகு மென்றதிகாரிகளை ப்ரதானமாக நிர்தேசித்ததிறே. அன்பர் - ப்ரீதிமான்கள், குருவிஷயே பகவத்விஷயேச பக்திமான்களான வாசார்யர்க ளென்றபடி. அறிந்து அறிவித்தனரே, தாங்களு மாசார்யஸகாசாத் தெளிந்து நமக்கு முபதேசித்தார்க ளென்றபடி. (கஎ)

பரிகரவிபாகாதிகாரத்தில் ப்ரபத்தியின் பரிகரங்க ளிருக்கும்படியையும் அவைத்தின் உபயோக விசேஷத்தையும் மற்றும் ப்ரபித்ஸுவானவன் அறியவேண்டும்

விசேஷார்த்தங்களையும் அருளிச்செய்து சங்காபஞ்சக நிவாரகங்களான புருஷகார ஸம்பந்தாதிகளில் தெளிவு மதுக்கு விசேஷஸாமக்ரியான ஸதாசார்யகடாக்ஷ விசேஷமு மிவ்வதிகாரார்த்தங்களில் ஸாரதமங்க ளென்று காட்டாநின்றுகொண்டு இவ்வர்த்தங்களை தெளிவித்த வாசார்யர்கள் திறத்தில் க்ருதஜ்ஞதாநுஸந்தாநம் நித்ய கர்த்தவ்ய மென்கிற வபிப்ராயத்தாலே யந்தக்ருதஜ்ஞதாநு ஸந்தாநரூபமாக வொரு பாட்டருளிச்செய்யாநின்றுகொண்டு பரிகரவிபாகத்தையும் ஸங்க்ரஹேண ஸூசிப்பிக்கிறார். (அறிவித்தனரிதி).

கூச-மூ.—அறிவித்தன ரன்பரையம் பறையு முபாயமில்லாத்
துறவித்துனியிற் றுணையாம்பரனை வரிக்கும் வகை
உறவித்தனை யின்றியொத்தாரென நின்ற வும்பரைநாம்
பிறவித்துயர் செகுவீரென் றிருக்கும் பிழையறவே. (கஅ)

ஐயம் - ஸம்சயத்தை, பறையும் - சொல்லுவதான, ஜ்ஞாபிக்கும் ஸ்வபாவமான, உண்டாக்கு மதானஎன்றபடி. நம்மால் நிர்வஹிக்கப் போகாதோ வென்று ஸம்சயத்தை யுண்டாக்கும்படி துஷ்கரதமமான என்றுதாத்பர்யம். உபாயம் - பக்தி யோகாதிகள், இல்லாத் துறவி - இவை யில்லாமையாகிற தாரித்ரயம், ஆகிஞ்சந்ய மென்றபடி. துனியில் - அதடியாக வுண்டாகும் துக்கதசையில், துணையாம் - ஸஹாயமாகும் ஸ்வபாவனை, அபிமதத்தை நிர்வஹித்துக் கொடுக்கும் ஸ்வபாவனை என்றபடி. பரனை-ஸர்வோத்க்ருஷ்டனை, இங்கு பரசப்தத்தாலே பூர்வோக்த சங்கா பீஜபூதாகார யோகித்வமும் துணையா மென்கிறவித்தாலே தந்நிவர்த்தகாகார யோகித்வமும் ஸூசிதமாகிறது. வரிக்கும்வகை - உபாயாந்தர ஸ்தாந நிவேசியாம்படி வரிக்கும் ப்ரகாரத்தை, பரத்வமாத்ரத்தைக் கண்டு அகன்றுபோகாதே புருஷகாரஸம்பந்தவிசேஷ விசிஷ்டதயா ஸௌலப்யாதிசயத்தைத் தெளிந்து மஹாவிச்வாஸசாலிகளாய் அவனையே உபாயமாக வரிக்கும்படியை யென்றபடி. இதுக்கு அன்பரறிவித்தனர் என்கிறத்தோடே யந்வயம். உறவித்தனைமின்றி - பாந்தவ மீஷத்துமில்லாமல், சேஷசேஷிபாவாதி ஸம்பந்தங்களி லொன்றுமின்றிக்கே என்றபடி. ஒத்தாரெனநின்ற - ஸத்ருசரென்று சொல்லும்படி நின்ற, கர்மவச்யத்வாதிநா நமக்கு ஸஜாதீயரான என்றபடி. உம்பரை - தேவர்களை, ப்ரஹ்மருத்ராதிகளை யென்றபடி. நாம் - முமுக்ஷுக்களானநாம், பிறவித்துயர் - ஸம்ஸாரதுக்கத்தை, செகுவீரென்று- போக்குங்கோளென்று, பிழை - யாசிக்கையாகிற அநுசிதக்ருத்யம், இருக்கும் பிழையென்கிற பாடத்திலு மிப்படியே தாத்பர்யம். அற - அற்றுப் போம்படி, அதுக்கு ப்ரஸக்தியே யில்லாதே போம்படி யென்கை. அன்பர் - ஸ்நிக்தர், நம்பக்கல் அத்யந்த வத்ஸலரான வாசார்யர்க ளென்றபடி. அறிவித்தனர் - தெரியும்படி யுபதேசித் தனுக்ரஹித்தார்கள். ஆசார்யர்கள் புருஷகார ஸம்பந்தாதிகளாலே ஸௌலப்யத்தைத் தெளிவியாதபோது முமுக்ஷுக்களுக்கு ஸர்வேச்வரனுடைய பரத்வமாத்ரத்தைக் கண்டு அஞ்சி "ஸம்ஸாராஜ்ஞாநஸம்விஹ்ஷ" சங்சராத்ஜ்ஞாநமங்விச்சேத் இத்யாதிகளில் படியே தேவதாந்தரங்களை க்ஷிப்ரகாரித்வமடியாக ஜ்ஞாநவை சத்யாதிசய ப்ரதாநாதித்வாரா ஸம்ஸார நிவர்த்தநம் பண்ணவேணுமென்று யாசிக்கும்படி ப்ரஸங்கிக்குமிறே யென்று கருத்து. இங்கு துணையா மென்கிறவிடத்திலே ஆநுகூல்ய ஸங்கல்பமும் ப்ராதிகூல்ய வர்ஜநமு மௌசித்யத்தாலே ஸூசிதமாகிறது. துறவித்துனி யென்கிற விடத்திலே கார்ப்பண்யம் சொல்லித் தாகிறது. மத்ததிரண்டும் வரிக்கும்வகை யென்கிற விடத்திலே ஜ்ஞாபித மாகிறது. (கஅ)

ஸாங்கப்ர பதனுதி காரத்திலே, அங்கிஸ்வ ரூபத்தையும் ஸாங்கமாக அதை அனுஷ்டிக்கும் ப்ரகாரத்தையும் நிரூபித்து இப்படி நிரூபிதமான ஸாங்க ப்ரபத

நத்தினுடைய வநுஷ்டாநம் வ்யாஜமாத்ரம், சரண்யன் க்ருபையும் தத்ஸம்பந்தமும் ஸ்வரக்ஷணத்துக்கு ப்ரதான காரணம், அதிலு மாசார்ய ஸம்பந்தம் ப்ரதாநதம மென்று இவ்வநுஸந்தாநத்தோடே ப்ரபதநாநுஷ்டாநம் பெற்றவன் "ஸக்ருத்ரேவ சரணாரவிந்த" அக்ருத்ரி மத்வச்சரணாரவிந்த என்கிற ச்லோக தாத்பர்யத்தின் படியே யுத்தர க்ஷணந் தொடங்கி நிர்பரனுமாய் நிஸ்ஸம்சயனுமாய் நிர்பயனுமாய் ஹ்ருஷ்டமனவு மாவ னென்று காட்டுகைக்காக வந்த நிர்பரத்வாத்யநுஸந்தானம் பலிதமாய் ஸித்திக்கும்படியான காருண்யாதி ப்ராதாந்யா நுஸந்தான ரூபமாக வொரு பாட் டருளிச் செய்கிறார். (அறவே இத்யாதி.)

௬௫-மூ.—அறவே பரமென் றடைக்கலம் வைத்தன ரன்றுநம்மைப்
பெறவே கருதிப் பெருந்தகவுற்ற பிரானடிக்கீழ்
உறவே யிவனுயிர் காக்கின்ற வோருயி ருண்மையைநீ
மறவே லெனநம் மறைமுடி சூடிய மன்னவரே. (௧௬)

நம் - நம்முடையவர்களான, நமக் குஜ்ஜீவகர்களான என்றபடி. மறை முடி சூடிய - வேதங்களிலே மூர்த்தாபி ஷிக்தரான, மன்னவர் - ராஜர்கள், வேதார்த்த நிர்ணய துரந்தரர்களான பூர்வாசார்யர்க ளென்றபடி. இதுக்கு வைத்தனர் என்கிறத்தோடே அந்வயம். ஈச்வரன் ஸஹஜகாருண்யாதி சாலியாய் சேஷியாயிருக்க நாம்) "ஸஹஜஹூதாஸ்வொயநா:" கர்பபூதாஸ்த போதகு: என்னும் கணக்கிலே ஸ்தநந்தய ப்ராயராயிருக்க தாய்முலைப்பாலுக்கு கூலி கொடுப்பாளைப் போலே ஆத்மஸமர்பணம் பண்ணுகையும் ரக்ஷிக்கவேணுமென் றபேக்ஷிக்கையு மென்றுப்போலே யொன்றை யனுஷ்டிப்பது ஸ்வரூபத்துக்குப் பொருந்துமோ என்றிப் புடைகளிலே பிறக்கும் சங்காவாரணார்த்தம் மறைமுடி சூடிய இத்யாத்யுக்தி:, பாஷ்யகாராதிகளான பூர்வாசார்யர்கள் மஹாவிச்வாஸபூர்வக ப்ரார்த்தநாத்ம நிக்ஷேபாதிகளை தாங்களும் அநுஷ்டித் திவைத்துக்கு சாஸ்த்ரங்களையும் மூதரிப்பித்துக் கொண்டு உபதேச பரம்பரையையும் நடத்திப் போருகையாலே ஸஹஜகாருண்ய சேஷித்வ ஸம்பந்தாதிக ளிருந்தாலும் கர்மவச்யனை யொரு வ்யாஜத்திலே மூட்டியல்லது ரக்ஷியாமையால் ஸ்தநந்தயனுக்கு முலையுண்கிற வ்யாபாரம்போலே யிவனுக்குமொரு வ்யாஜம் வேணு மென்றும் அந்த ஸஹஜகாருண்யாதிகள் ப்ரதாநகாரணங்களா யிருக்கு மென்றும் ப்ரமாண ஸம்ப்ரதாய பலத்தாலே யங்கீகரிக்கவேணு மென்று கருத்து. உறவே - உறவினாலேதானே, சேஷத்வாதி ஸம்பந்தத்தாலே தானே, இவனுயிர் - இந்த ஜீவனுடைய ஸ்வரூபத்தை, காக்கின்ற - ரக்ஷியாநிற்கிற, சேஷத்வாதி ஸ்வரூப மழியாதபடி ஸ்வரூபப்ராப்தி புருஷார்த்த ப்ரதனாயிருக்கிற என்றபடி. ஒருயிர் - உலகங்களுக்கெல்லாம் ஓருயிர் என்கிறபடியே யத்விதீ யாத்மாவாயிருக்கிறவனுடைய, ஸர்வாந்தர்யாமியினுடைய என்றபடி. ஸம்பந்த க்ருபாதிகளோடொக்க ஸ்வாதந்த்ர்யமும் ப்ரதாந காரண மிதி த்யோதநார்த்த மிங்கு ஸர்வாந்தர்யாமி த்வோக்தி:. உண்மையை - ஸ்வபாவதை, ஸம்பந்தத்தினாலேதானே ரக்ஷணப்ரவணனா யிருக்கையாகிற ஸ்வபாவத்தை யென்றபடி. இத்தால் ஸம்பந்தமே ரக்ஷணத்துக்கு ப்ரதாநகாரணம், ப்ரபத்திவ்யாஜமாத்ர மென்கிற தாகிறது. நீ மறவே லென - அகிஞ்சனனானநீ மறவாதே கொள்ளென்று சிக்ஷித்து, இதுக்கும் வைத்தன ரென்கிறத்தோடே அந்வயம். மறவாதே யென்றவித்தால் இது அனுஷ்ட்டானகாலத்திலே அவச்யாநுஸந்தேய மென்றதாகிறது. பூர்வத்ர நம்மை யென்றும் உத்தரத்ர நம்மென்றும் பஹுவசநமாயிருக்க இங்கு நீயென்றேகவசனமாக ப்ரயோகித்து அஷ்டகர்ணோபதேச்யத் வஜ்ஞாபந முகேந இவ்வர்த்தத்துக்கு அத்யந்தகோபநீயத்வ

ளென்று தாத்பர்யம், சிறியார்-க்ஷுத்ரர்களுடைய, அல்பஜ்ஞரானவாதிகளுடைய, வழிகள் - மார்க்கங்களை, அழிப்பதும் - நசிப்பிக்குமதும், சிஷ்யேப்யஸ்ஸ்வமதோபந்யாஸ மாத்ரமன்றிக்கே பரமதநிரஸநமுமென்று ஸமுச்சயத்தாலே ஸித்திக்கிறது. இத்தால் "யதாஶக்தி நிக்ருண்ணீயாத் தேவதாகுருநிந்தகாந் வித்யாசோரோ குருத்ரோஹீ வேதேஶ்வரவிதூஷக: தஸ்தேபகுபாப்மாநஸ்ஸத்யோ தண்ட்யா இதி ஶ்ருதி:" (யதாசக்தி நிக்ருண்ணியாத் தேவதாகுருநிந்தகாந் வித்யாசோரோகுருத்ரோஹீ வேதேச்வரவிதூஷக: தஏதேபகுபாப்மாநஸ்ஸத்யோ தண்ட்யா இதி ச்ருதி:) என்கிறப்ரமாணங்களாலும் தத்வாத்யவஸாய ஸம்ரக்ஷணார்த்தம் ஜல்பவிதண்டே பீஜப்ரரோஹ ஸம்ரக்ஷணார்த்தம் கண்டகசாகாவரணவத் என்று கௌதமோக்த ப்ரகாரத்தாலும் விஜிகீஷுகதையிலே நின்று வேதோபப்லாவகபாஹ்யகுத்ருஷ்டிகளை நிராகரிக்கை ப்ராப்தமாகையாலேபூர்வோக்தகதா நிஷேதகப்ரமாணங்கள் வீதராகவைதிகரோடு கதையை நிஷேதிக்கிறன வென்று தாத்பர்யம் வ்யஞ்ஜிதம், அறியார்திறத்தில்-தத்வாத்யவஸாயவிகலரான சிஷ்யர்களிடத்திலே, அருள் - க்ருபையை, புரிந்து - வர்ஷித்து, இது பூர்வாந்வயீ, பரமதநிரஸநம் சிஷ்யாநுஜிக்ருக்ஷாமூலகமல்லது விஜிகீஷாமூலகமன்றென்று கருத்து. இதுக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார். தீங்கு - தோஷங்களை, கழிப்பதற்கு - நிரஸிக்கைக்கு, ஸ்வஸித்தாந்தமறியாத மந்தமதிகளுக்கு பரஸித்தாந்த ஜ்ஞாநமில்லா பரிஜ்ஞாநமூலமாக "அஜ்ஞஶ்சாஶ்ரத்ததாநஶ்ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி। நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மந:। ஸஸம்ஶயாந் ஹேதுபலாந் நாத்யாவஸதி மாதவ:" (அஜ்ஞச்சாச்ரத்ததாநச்சஸம்சயாத்மாவிநச்யதி-நாயம் லோகோஸ்தி நபர: நஸுகம்ஸம் சயாத்மந: ஸஸம்சயாந்ஹேதுபலாந் நாத்யாவஸதிமாதவ:) இத்யாதிகளில்சொன்ன தசைவாராமைக்காக வென்றபடி, அவதாரணத்தால் க்யாத்யாதிநாம் பலத்வவ்யுதாஸ:. (கo)

ககக-மூ—மீண்டுரைக்க விரகுதரும் தருக்கங்கொண்டே வேண்டுங்கால்
வேண்டுவதே விளம்புகின்றார், கண்டதற்கு விபரீதங்கத்து
கின்றார் காணுதகுறைமறையிற் காட்டநிற்பார், பண்டொருத்
தன் கண்டுரைத்தேனேனே யென்னப்பலவகையினு பாதிகளாற்
படிந்து வீழ்வார், கொண்டலொக்குந் திருமேனிமாயக் கூத்தன்
குரைகழல்சேர் விதிவகையிற் கூடாதாரே. (கக)

நாநாவித பரமதப்ரவ்ருத்தி மூலகத்வத்தை விசதீகரியா நின்றுகொண்டு ஸமுதாயதூஷணங்களை வெளியிடுகிறார் மீண்டுரைக்கவிதி. கொண்டல் - வார்ஷுகவலாஹகத்தோடே, ஒக்கும் - ஸத்ருசமான, திருமேனி - திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனை, மாயக்கூத்தன்-ஆச்சர்ய நாட்யத்தையுடையவனுடைய, வார்ஷுகவலாஹ கஸ்நிக்தச்யாமளகளேபரனாய் விஷமவிபாகவிசித்ர ஸம்ஸாரப்ரவர்த்தந ரஸிகனான வெம்பெருமானுடைய வென்றபடி. குரை - சப்தாயமானமான, கழல் - திருவடிகளை, சேர் - அடைகைக்கீடான, விதிவகையில் - பாக்யவிசேஷத்தில், கூடாதார் - கடியாதவர்கள், ஆபரணசிஞ்ஜித பகவச்சரணாரவிந்த ப்ராபகஸுக்ருத விசேஷசூந்யரான ஸம்ஸாரிசேதநரென்றபடி. மீண்டு - திரிப்பிக்கொண்டு, உரைக்க - சொல்லுகைக்கு, விரகு - உபாயத்தை, தரும் - கொடுக்குமவைகளான, தருக்கம் - தர்க்கங்களை, கொண்டே - அவலம்பித்தே, "தர்க்காப்ரதிஷ்டாநாதபி" என்கிறபடி-ஒன்றைச் சொன்னாலு மதுக்கும்மேலே திருப்பிக்கொண்டு சொல்லவழி கொடுக்குமவைகளான வப்ரதிஷ்டிததர்க்கங்களையே யவலம்பித்தென்றபடி. அவதாரணத்தாலாகமாநுஸாரவ்யவச்சேத:. வேண்டுங்கால் - வேண்டினபோது, வேண்டுவதே-வேண்டின வர்த்தங்களையே, விளம்புகின்றார் - சொன்னார்கள், பூர்வோத்தர விரோதத்தையும் பாராதேஸமயோசிதமாக ஜல்பித்தார்களென்றபடி. இது வேதவிருத்த கல்பனப்ரதானரான வைசேஷிகநையாயிகமீமாம்ஸகவையாகரணர்களைப்பற்றிச் சொன்னபடி. கண்டதற்கு - ப்ரத்யக்ஷத்துக்கு, விபரீதம் - விருத்தத்தை, கத்துகின்றார்-ஜல்

பித்தார்கள், இது ப்ரத்யக்ஷவிருத்த ப்ரபஞ்சமித்யாத்வபேதா பேதாதிவாதிகளான த்ர்விதாத்வைதிகளையும் கணிசித்துச் சொன்னபடி. மறையில் - வேதத்தில், காணாத- ஒருவராலு மறியப்படாத, குறை - அநிஷ்கர்ஷத்தை, காட்ட - காட்டுகைக்காக, நிற்பார் - ப்ரத்யவஸ்தாநம் பண்ணுவர்கள், இது அபௌருஷேயதயா நித்யநிர்தோஷங்களான வேதங்களிலத்யந்தாஸம்பவ நீயங்களான பௌருஷேயத்வாதி தோஷங்களை யுத்காடனம் பண்ணுமவரான சார்வாகஸௌகதார்ஹதரை நினைத்துச் சொன்னபடி. பண்டு - பூர்வகாலத்திலே, ஒருத்தன் - ஒருவன், கபிலஹிரண்ய கர்ப்ப பசுபதிகளில் அந்யதம னென்றபடி. நானே - நான்தானே, அவதாரணத்தாலாகம வ்யவச்சேதஃ கண்டு - ஸாக்ஷாத்கரித்து, உரைத்தேன் - ப்ரதிபாதித்தேன், என்ன - இப்படி சொல்ல, உரைத்தேன்னுனே யென்கிற விடத்திலே ஸந்தியிலே நகாரலோபஃ, பலவகையில் - நாநாப்ரகாரங்களிலே, உபாதிகளால் - தத்தத்கர்மோபாதிகளாலே, படிந்து - அழிந்து, வீழ்வார் - விழுந்துபோவர், இது கபிலஹிரண்ய பசுபதிகள் ஸ்வஸ்வ சாஸ்த்ராநு குணஸ்வஸ்வ ஸாக்ஷாத்கார மூலகத்வேநப்ரமாண தமங்களாக வுபதேசிக்கஅத்தை விச்வஸித்து தத்தச்சாஸ்த்ரோக்த தபோவேஷாசாராதிகளிலே யிழிந்தவரான ஸாங்க்ய ஹைரண்ய கர்ப்ப பாசுபதர்களை நோக்கிச் சொன்னபடி. (கக)

கசுஉ-மூ—கண்டது மெய்யெனிற்காணு மறையிலறிவு கண்டோம்
கண்டத லாததிலதெனிற் கண்டிலங் குற்றமிதில்
கண்டது போன்மறை காட்டுவதுங்கண்ட தொத்ததனுல்
உண்டது கேட்கு முலோகாயதரின்று மீறுவதே. (கஉ)

இப்படி பரமதங்களை ஸமுதாயே நிராகரித்து இனிமேலிவர்களை விசேஷித்து நிராகரிக்கத்துடங்கி முற்படப்ரத்யக்ஷ ப்ரமாணைகமூலமான சார்வாகமதத்திலே ப்ரதாநப்ரமேயத்தை யனுவதித்து தூஷிக்கிறுர் கண்டது மெய்யிதி. ப்ரத்யக்ஷஸித்த பதார்த்தங்களேயுள்ளது அநுமாநாகமங்கள் ப்ரமாணங்களன்ருகையாலே அலௌகிக பதார்த்தவ்யாபாரம் வ்யர்த்தமென்று சார்வாக மதப்ரக்ரியை, அத்தை யநுவதிக்கிறுர். கண்டது - காணப்பட்ட பதார்த்தமே, மெய்யெனில் - மெய்யென்று சொல்லில், காணும் - காணப்படாநிற்கிற, ச்ராவணப்ரத்யக்ஷ விஷயங்களான, மறையில்-வேதங்களாலே, த்ரிதீயார்த்தேஸப்தமீ. அறிவு - ஜ்ஞாநத்தை, கண்டோம் - மநஸ்ஸாலே ஸாக்ஷாத்கரித்தோம், ப்ரத்யக்ஷமாத்ர ப்ராமாண்யவாதிகளான சார்வாகர்களுக்கும் ப்ரத்யக்ஷ ஶ்ரு³திரர்த்ததீச்ச, என்கிறபடியே ச்ராவணப்ரத்யக்ஷ ஸித்தமான வேதமும் மாநஸப்ரத்யக்ஷ ஸித்தமான ஜ்ஞாநமும் அந்வயவ்ய திரேகஸஹக்ருத ப்ரத்யக்ஷ ஸித்தமான விவைகளுடைய ஹேதுஹேது மத்பாவமும் துரபந்ஹவ மாகையாலே வேதப்ராமாண்யமநிச்சயாபிஸ்வீகரிக்க வேணுமென்று கருத்து. அதுக்கு கண்டதலாததில் எனிலென் றந்வயம். அது-அந்தவேத ஜந்யஜ்ஞாநம், கண்டதலாததில் - காணப்படாத விஷயத்திலே, அதீந்த்ரியார்த்த விஷயகம், எனில்-இப்படி சொல்லில், ப்ரத்யக்ஷஸித்த வாதார்த்தங்களுக்கு பாரமார்த்ய மிசைந்தோமேயாகிலு மவைகளுக்கு கார்த்ஸ்ந்யேந பாரமார்த்ய மிசைந்தோமோநாம், சுக்திரூப்யாதிகள் ப்ரத்யக்ஷ ஸித்தமாணுலும் ப்ரமாணே தரஜ்ஞாந விஷயதயா அளீகங்களாகவிறே காணப்படுகிறன, ஆகையாலே வேதஜந்ய ஜ்ஞாநமும் ப்ரத்யக்ஷ ரூபமாணுலும் அதீந்த்ரியார்த்த விஷயத்வாதப்ரமாணம், அதின்விஷயங்களான தர்மாதர்மாதிகளுமளீகங்களென்று சொன்னுலோவென்று சங்காநுவாதத்துக்கு பிண்டிதார்த்தம். இதுக்குத்தரம்? கண்டிலங் குற்றமிதில் - இதி - இந்தவேதஜந்யஜ்ஞாநத்திலே, குற்றம் - ப்ரமவிப்ரலம்பாதிகாரணதோஷங்களையும் பாதகப்ரத்யயத்தையும், கண்டிலம்-ஸாக்ஷாத்கரித்தோமல்லோம், அதீந்த்ரியார்த்தவிஷயகத்வம் ப்ராமாண்ய பாதகத்வேந ஸம்ப்ரதி பன்னமன்று இந்துகாரண தோஷபாதகப்ரத்யயங்களே ததாவிதங்கள். அவைகள் தாமிங்கே நததாதோஷஃ, ததர்த்தஃ புநஃ "யதோ ஹ்யபௌருஷேயஸ்ய வேதஸ்ய கர்தா நாஸ்தி" (தர்மாதர்மபராவரோச்சவரமுகஃ ப்ரத்யக்ஷ ஸாத்யோநச) என்கிறபடியே ப்ரத்யக்ஷ ஸித்தங்களன்று, அநுமாநாதிகளுக்கு ப்ராமாண்யமில்லை யாகை

யாலொருபடியாலுங் குற்றஞ்சொல்லவொண்ணாத வாகமஜந்ய ஜ்ஞாநத்துக்கு ப்ராமாண்யம் துஷ்ப்ரகம்பமென்றபடி. இப்படி விஸம்வாத மில்லாமையாலே வேதப்ராமாண்யத்தை ஸாதித்து மேல்ஸம்வாதத்தாலே யத்தையே த்ருடீகரிக்கிறார். கண்டதுபோல்-ப்ரத்யக்ஷ த்ருஷ்டம்போலே, மறை-வேதத்தாலே, காட்டுவதும் - காட்டப்படாநிற்கிற பதார்த்தங்களை, "𑌤𑌸𑍍𑌮𑍈 𑌮𑍃𑌦𑌿𑌤𑌕𑌷𑌾𑌯𑌾𑌯 𑌤𑌮𑌸𑌃 𑌪𑌾𑌰𑌂 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍𑌸𑌨𑌤𑍍𑌕𑍁𑌮𑌾𑌰𑌃" (தஸ்மைம்ருதிதகாஷாயயதமஸঃ பாரம்தர்சயதி பகவாந்ஸநத்குமாரঃ) என்கிறபடியே வேதத்தாலே ப்ரத்யக்ஷங்கள்போலே விசதமாக ப்ரதர்சிதங்களான வதீந்த்ரியார்த்தங்களையு மென்றபடி. கண்டது - ப்ரத்யக்ஷங்களாலே, ஒத்து - சத்ருசங்களாக வங்கீகரித்து, ப்ரத்யக்ஷபதார்த்தங்கள்போல பரமார்த்தங்களென் றங்கீகரித்தென்றபடி. அதனால்-அந்த வங்கீகாரத்தாலே, உண்டது-புஜிக்கப்பட்டதுகளை, கேழ்க்கும்-, உலோகாயதிகர் - லோகாயதர், இன்று-, உறுவதே-வேதப்ராமாண்யத்தை யிசைந்து தச்சோதிதகர் மானுஷ்டாந ப்ரவணரான வைதிகராலே புஜ்யமானங்களானவைஹிக பசுபுத்ரவ்ருஷ்ட்யன்ன வைரிவதாதிரூப வைதிகமதேபிரங்கரமண ப்ரத்யக்ஷவத்ஸா ப்ரமா என்கிறபடியே சார்வாகர்களும் வைதிககர்மானுஷ்டாந பலங்களையபிலஷித்து வேதப்ராமாண்யத்தை யிசைந்து வைதிக கோஷ்டியிலேவந்து புகுவர்களென்றபடி. (௧௨)

௧௬௩-மூ—கண்டதனாற் காணாத தனுமிக்கின்றார் கண்டொருத்தனுரைத்த
தனைக் கவருகின்றார், உண்டுபசி கெடுமென்றே யுணர்ந்துண்
கின்றாரொன்றாலே யொன்றைத்தாஞ் சாதிக்கின்றார், பண்டு
முலையுண்டதனான் முலையுண்கின்றார் பார்க்கின்றார் பலரல்லாத்
தம்மை மற்றும், கண்டுயதி கெட்டநிலை காணகில்லார் காணா
தொன்றிலதென்று கலங்குவாரோ. (௧௩)

சார்வாக வ்யாபாரங்களுக்கு தத்ஸித்தாந்தத்தோடே வ்யாகாதத்தைக்காட்டாநின்றுகொண்டு தந்மதநிரஸநத்தை யுபஸம்ஹரிக்கிறார் கண்டதனாலிதி. காணாது - அப்ரத்யக்ஷவஸ்து, ஒன்று-, இலது-இல்லை, என்று-ஸ்பஷ்டம், கலங்குவார் - ப்ரமிப்பார்கள், சார்வாகரொன்றபடி. கண்டதனால்-ப்ரத்யக்ஷத்ருஷ்ட தூமாதிகளாலே, காணாதது - அப்ரத்யக்ஷவந்ஹ்யாதிகளை, அனுமிக்கின்றார் - அனுமித்தார்கள், ஒருத்தன்-ஒருவனாலே, கண்டு - ஸாக்ஷாத்கரித்து, உரைத்ததனை - சொல்லப்பட்டவர்த்தத்தை, கவருகின்றார் - ஆதரித்தார்கள், இப்படி யனுமான சப்தங்களாலே வ்யவஹரிக்கை ப்ரத்யக்ஷமாத்ர ப்ராமாண்ய ஸித்தாந்தத்தோடே வ்யாஹதமென்று கருத்து. உண்டு - உண்டால், லபித்தால், பக்ஷித்தால், பசி - க்ஷுத்பீடை, கெடும் - நசிக்கும், என்றே-இப்படியே, உணர்ந்து - அறிந்து, உண்கின்றார் - பக்ஷித்தார்கள், த்ருப்திஸாதநதாநிச்சயமூலகமான போஜநவ்யாபாரம் கார்யகாரணபாவ மாத்ராபலாப ஸித்தாந்தத்தோடே விரோதிக்குமென்று ஹ்ருதயம். தாம் - தாங்கள், ஒன்றாலே, ஒருஸாதநத்தாலே, ஒன்றை - ஒருஸாத்யத்தை, சாதிக்கின்றார் - ஸாதித்தார்கள், முன்பு ஸ்வார்த்தாநுமான சப்தங்களுக்கு தத்ஸித்தாந்தத்தோடே வ்யாகாதம் சொல்லித் தாய்த்து. இப்போது பரார்த்தாநுமான சப்தங்களுக்கு வ்யாகாதஞ் சொன்னபடி. பண்டு - பூர்வகாலத்திலே, பூர்வஜந்மத்திலே, முலையுண்டு-ஸ்தந்யபாநம்பண்ணி அதனால்-அந்தஸ்தந்யபாநத்தாலே, பூர்வஜந்மாப்யஸ்த ஸ்தந்யபானஜநித ஸம்ஸ்காரோத்போதத்தாலே யென்றபடி. முலையுண்கின்றார் - இந்த ஜந்மத்திலே ஸ்தந்யபாநம் பண்ணினார்கள், இந்த வீதராகஜந்ம தர்சனத்தாலே தேஹாதிரிக்தநித்ய ஸித்தியுண்டாகையாலே இது தேஹமேயாத்மா வென்கிற ஸித்தாந்தத்தோடு வ்யாகாதமென்று தாத்பர்யம். இப்படி தேஹாதிரிக்தாத்ம ஸத்பாவத்திலே வீதராக ஜந்மதர்சநாநு வர்த்தியை ப்ரமாணமாகக் காட்டி யிநிஸ்வாநுபவத்தையுங் காட்டுகிறார் மேல். மற்றும் - பின்னையும், பூர்வோக்தப்ரமாண மாத்ரமன்றிக்கே ப்ரமாணாந்தரமுமுண் டென்றபடி. பலரல்லா - பஹுக்களாகாத, தம்மை - தங்களாத்மஸ்வரூபங்களை, பார்க்கின்றார் - ப்ரத்யக்ஷீகரித்தார்கள், தேஹமேயாத்மா வென்கிற பக்ஷத்திலே சரீரப்ராண்யாதி ஸமுதாயாதிரிக்

தாவய விவாதமனுபலப்தி பராஹதமாகையாலே சிரஃபாண்யாதிகளுக்கேசைதன்யங் கொள்ளவேணும். அப்போது பஹுத்வாவகாஹி யன்றிக்கே அஹமேகஃ. என்கிற ஏகத்வாவகாஹியான வனுபவம் சேராமையாலே"பிண்டஃ ப்ருதக்யதஃ பும்ஸஃ சிரஃ பாண்யாதி லக்ஷணஃ" (பிண்டஃ ப்ருதக்யதஃ பும்ஸஃ சிரஃ பாண்யாதி லக்ஷணஃ) என்கிறபடியே. தேஹாதிரிக்தாத்மா துரபஹ்நவமென்று பாவம். கண்டு - இப்படி ஸ்வஸித்தாந்த விருத்தார்த்தங்களைக் கண்டு வைத்தும், மதிகெட்ட நிலை - அவைகளை த்தாங்கள் அபலபித்து புத்திகெட்டு நிற்கிற நிலையை, காண்கில்லார் - கண்டார்களி ல்லை, ஸ்வஸித்தாந்த ஸ்வப்ரவ்ருத்திவ்யா காதாக்யதோஷத்தை நிரூபித்தார்களில்லை யென்று நிர்களிதார்த்தஃ, (கங)

கசுச-மூ—காணாதிலதெனுங் கல்வியினாைக் கடிந்ததற்பின்
கோணார்குதர்க்கங்கள் கொண்டேகுழப்பும் பவுத்தர்களில்
நாணாதனைத்து மிலதென்றுநால்வகை யிதன்றென்றும்
வாணாளறுக்கின்ற மத்திமத்தான்வழி மாற்றுவமே. (கச)

சார்வாகமத நிரஸநத்தோடே மாத்யமிகமத நிரஸநத்துக்கு ஸங்கதியைக் காட்டா நின்று கொண்டு தந்மதாநுவாத பூர்வகமாகத் தந்மத நிரஸநத்தை யறுதியிடுகிறார் காணாதிலதெனுமிதி. காணாது - அதீந்த்ரியார்த்த வஸ்து, இலது-இல்லை, எனுங்கல்வியினாை - என்று சொல்லும் வித்யாவான்களை, கல்வி - வித்தை, அத்தையுடையவர்-கல்வியினார், அதீந்த்ரியாபலாபிகளான லோகாயததந்த்ர நிஷ்டரை யென்றபடி. இவர்களை கல்வியின ரென்றது ஸாபஹாஸோக்தி. கடிந்ததற்பின் - தூரதோ நிரஸித்தவநந்தரம், இதுக்கு மாற்றுவ மென்கிறத்தோடே யன்வயம். கோண் - கௌடில்யங்களாலே, ஆர் - பூர்ணங்களான, குதர்க்கங்கள் - குத்ஸிததர்க்கங்களை, நிரூபணதசையிலே குத்ஸிதங்களாய் முடியுமவ்வளவு மாத்ரமன்றிக்கே யாபாதப்ரதீதி தசையிலும் வக்ரங்களாகத் தோற்றுகிறதர்க்கங்களை யென்றபடி. கொண்டே - அவலம்பித்தே, அவதாரணத்தால் ஸத்தர்க்காவலம்ப நவ்யவச்சேதஃ. குழப்பும் - க்ஷோபிக்குமவர்களான, பவுத்தர்களில் - பௌத்தர்களிலே, மாத்யமிகயோகாசார ஸௌத்ராந்திக வைபாஷிகபேதேந சதுர்விதாநாம் பௌத்தாநாம் மத்யே என்றபடி. இதுக்கு மத்திமத்தானென்கிறத்தோடே யன்வயம். நாணாது - லஜ்ஜியாதே, ஸர்வஸம்ப்ரதிபன்ன ப்ரபஞ்சாபலாப ப்ரயுக்தஹ்ருதய ஸங்கோசமன்றிக்கே, அனைத்தும் - க்ருத்ஸ்ந ப்ரபஞ்சமும், இலதென்றும் - சூந்யமென்றும், இது-இந்த ப்ரபஞ்சம், நால்வகை- நாலுப்ரகாரமும், அன்றென்றும்-ஆகாதென்றும், "நஸந்நாஸந்நஸதஸந்நசாப்யநுபயாத்மகம். சதுஷ்கோடிவிநிர்முக்தம் தத்வம்மாத்யமிகாவிதுஃ" (நஸந்நாஸந்நஸதஸந்ந சாப்யநுபயாத்மகம் சதுஷ்கோடிவிநிர்முக்தம் தத்வம்மாத்யமிகாவிதுஃ.) என்கிறபடியே ஸத்து - அஸத்து - ஸதஸத்து, ஸதஸத்விலக்ஷணம் - என்கிற நாலு கோடியிலுங் கூடாதென்னு மென்றபடி. சொல்லுமவனான வென்று சேஷபூரணம். சார்வாகனைப்போலே ப்ரத்யக்ஷப்ரதிபந்தி சொல்ல வொண்ணாதபடி ஸர்வாபலாபியான வென்று ஸங்கதியை ஸூசிப்பித்தபடி. வாணாள் - வாழ்கிறநாளில், அறுகின்ற-அறுத்தவனான, ஸ்த்ரீயானவள் வாழுங்காலமான யௌவநத்தில் தாலியறுக்குமாப்போலே சாஸ்த்ராநுஷ்டான த்வாரா அபிலஷித புருஷார்த்தப்ராபணார்த்தமான மாநுஷஜந்மத்தை யடைந்தும் ஈச்வரதத்விபூத்ய பலாபத்தாலும்ஒருநாளும் புருஷார்த்தங்கிடையாதபடி நித்யஸம்ஸாரியான வென்றபடி. வாணாளென்கிற விடத்திலேழகாரலோபமும் நகாரத்துக் குணகாராதேசமும் ஸந்திப்ரயுக்தம். மத்திமத்தான் - மாத்யமிகனுடைய, வழி - மார்கத்தை, மாற்றுவம் - பஞ்ஜித்தோம். (கச)

கசுடு-மூ—மானமிலை மேயமிலையென்று மற்றோர் வாதநெறியிலைனென்னும்
வாதுட்டுண்ட, தானுமிலை தன்னுரையும்பொருளுமிலை தத்து
வத்தினுணர்த்திசயமில்லை யென்னும், வானவருமானவருமன
மும்வெள்கவளம் பேசுமதிகேடன் மத்திமத்தான், தேனநெ

றிகொண்டனைத்துந்திருடாவண்ணஞ் செழுமதிபோலெழும
தியால் சேமித்தோமே. (௧௫)

மாத்யமிகன் ஸர்வசூந்யதையைச் சொன்னபோதே கதாபரிகரங்களுமில்லையென்று பலிக்கையாலே யவனுக்கு வாதப்ரவ்ருத்தியத்யந்தவ்யாஹதையென்று காட்டாநின்றுகொண்டு ப்ரபஞ்சஸத்யதையைஸ்த்ரீகரிக்கிறார், மானமிலே - ப்ரமாகரணமில்லை, மேயமிலே - ப்ரமாவிஷயமுமில்லை, என்றும்-இப்படி சொல்லியும், ஸஹாநு-ஸம்விமெய-ஸம்வரணம்வாகிபுதிவாகிநியமஃ கயாவிஶேஷவ்யவஸா நிரூவ்யநிணயஃ" (ஸப்யாநுஸம்விதேயஸம்வரணம் வாதிப்ரதிவாதிநியமஃ கதாவிசேஷவ்யவஸ்த்தா நிரூப்யநிர்ணயஃ. என்கிறபடியே நாலுகதாபரிகரமுண்டு. அதில் வாதோபாயம் இல்லை என்று ஸ்பஷ்டம். இத்தால் ஸப்யாநுஸம் விதேயஸம்வரணமும் கதாவிசேஷவ்ய வஸ்தையுமில்லை யென்று பலிதமாய்த்து. வாது - வாதத்தை, பூண்ட - பூட்டிக்கொண்டவனை, வாதபரிகர சூன்யனாயிருந்து வைத்து ஶ்லோத்பாடி வாநரந்யாயத்தாலே நிர்பந்தஜடிலமானவாத நிகடத்திலே யகப்பட்டவனை யென்றபடி. தானும் - ஸ்வாத்மாவும், இலே - ஸ்பஷ்டம். இத்தால் வாதிப்ரதிவாதி நியமமில்லை யென்று ஸித்தம். தன்னுரையும் - தன்னுடைய வசநமும், பொருளும் - அதினர்த்தமும், இலே - ஸ்பஷ்டம். மேயமிலே யென்கிற விடத்திலே ப்ரமேயத்தை நிஷேதித்தது. தன்னுரையும் பொருளுமென்கிற விடத்தில் சப்தார்த்தங்களுக்கு வாச்யவாசக பாவாக்ய ஸம்பந்தத்தை நிஷேதிக்கிறது. இனிமேல் கதாபலத்தை நிஷேதிக்கிறது, தத்துவத்தின் - தத்துவத்தினுடைய, உணர்த்தி - ஞானமும், சயம் - ஜயமும், இல்லையென்றும் - ஸ்பஷ்டம். தத்வபுபுத்ஸுகதாபலபூத தத்வநிர்ணயமும் விஜிகீஷுகதாபலமான விஜயமுமில்லை யென்று என்றபடி. இதுக்கு வளம்பேசு மென்கிறத்தோடே யந்வயம். வானவரும் - தேவர்களும், மானவரும் - மனுஷ்யர்களும், மனமும் - ப்ரபஞ்ச சூன்யதாவாதியான தன்னுடைய மநஸ்ஸு தானும், வெள்க - அருவருக்கும்படி, வளம் - ஸம்பத்தை, பேசும் - சொல்லுமவனை, ஸர்வஜ்ஞரான தேவரும் பாமரரான மநுஷ்யரும் தன்னுடைய மநஸ்ஸுமருவருக்கும்படி கதாதத்பரிகரதத்பலசூந்யமாக ஸ்வஸித்தாந்தத்தினுடைய பெருமையைக் குலாவுமவனை யென்றபடி. மதிகேடன் - புத்திகெட்டவனை, மத்திமத்தான் - மாத்யமிகன். தேனநெறி - ஸ்தேனமார்க்கத்தை, ஸ்தேநஃ - சோரஃ, கபடயுக்திகளை யென்றபடி. கொண்டு - அவலம்பித்து, அனைத்தும் - ஸர்வப்ரபஞ்சத்தையும், திருடாவண்ணம் - திருடாதபடி, அபலபியாதபடி, செழு - அபிவ்ருத்தமான, மதிபோல் - சந்த்ரன்போலே, பூர்ணசந்த்ரன்போலே, எழு - எழும்பாநிற்கிற, மதியால் - ஞானத்தாலே, சேமித்தோம் - ரக்ஷித்தோம். சந்த்ரனுதித்தால் சோரர்க்கநவகாசமிறே. ()

௧௬௬-மூ—முற்றுஞ்சகத்திலதென்றேபகட்டியமுட்டரைநாம்
சுற்றுந்துறந்துதுறையினின்றேதுகளாக்கியபின்
மற்றொன்றிலதும்மதிபலவுண்டென்று வஞ்சனையால்
சற்றுந்துரந்தயோகாசாரனைச்சதிக்கின்றனமே. (௧௬)

இனிமாத்யமிகநிரஸநத்தோடேயோகாசாரமத நிரஸநத்துக்கு ஸங்கதிப்ரதர்சநார்த்தமாகத்தன் மதஸ்திதியை யநுவதித்துக்கொண்டு தன் நிரஸநத்தைக்சொல்லுகிறார் முற்றுமிதி, சகத்து - ஜகத்து, முற்றும் - க்ருத்ஸ்நமும், ஜ்ஞாநஜ்ஞேயஜ்ஞாத்ருரூபக்ருத்ஸ்ந ஜகத்துமென்றபடி. இலதென்றே - இல்லையென்றே, பகட்டிய - மயக்குபவரான, முட்டரை-மூடரை, மாத்யமிகரை, நாம் - ஸ்பஷ்டம், சுற்றும் - வளைவிலும்; துறந்து - வர்ஜித்து, துறையில் - ஸன்மார்க்கத்திலே, நின்றே-இருந்துதானே, துகளாக்கியபின் - சூர்ணங்களாக்கியபின்பு, மாத்யமிகமதஸகந்தமானமாயிமதம்போலன்றிக்கே மாத்யமிகமதஸ்பர்ச கந்தமில்லாத ஸ்வஸித்தாந்தத்திலேநின்று, ("வரஉஸகமதவாஸஞ்சோரலாவவிலாவ") (வரதஸங்கதபாசஞ்சோரலாவம்விலாவ்ய) என்கிறபடியே யிம்மதத்தைத் வம்ஸித்தபின்னென்றபடி. இதுக்கு சதிக்கின்றனமென்கிறத்தோடேயந்வயம். மற்றொன்றிலதென்கிறவிடத்திலிருக்கிற ஸமுச்சய

வாசகத்துக்குமதியோடேயந்வயம், பலமதியும் - அனுபவஸித்தங்களான நாநாஜ்ஞாநங்களும், உண்டு - ஸத்யங்கள், இத்தால் மாத்யமிகாத்வைதிகளுடைய மதவ்யாவ்ருத்தி:, மற்றொன்று - ஜ்ஞாநவ்யதிரிக்தஜ்ஞாத்ருஜ்ஞேயவஸ்து ஒன்றும், இலது - துச்சம், என்று வஞ்சனையால் - என்கிறவஞ்சனையாலே, சற்றும்-ஸத்துக்களையும், ஜ்ஞாநபின்னத்வேந த்ருடதரப்ரமாணஸித்தங்களான பதார்த்தங்களையுமென்றபடி. துறந்த - விட்டவனென, இத்தால். ஸௌத்ராந்திகமதவ்யுதாஸ:. மாத்யமிகனைப்போலே நாம் ப்ரபஞ்ச துச்சத்வாப்யுபகமம் பண்ணிலன்றோ தன்மததூஷணங்கள் நமக்கு ப்ரஸங்கிக்கலாவது, நாம் ஜ்ஞாநத்தை யங்கீகரித்தோம், அதுதானும் பலவகையாகையாலே, ஸுகதுக்காதி வ்யவஸ்தைகளுங் கூடுமே பரந்து; ஜ்ஞாத்ருஜ்ஞேயங்கள் மாத்ரம் துச்சங்களென்று ப்ரத்யவஸ்தாநம் பண்ணுமவனென வென்று திரண்டபொருள். யோகாசாரனை-யோகாசாரனை, சதிக்கின்றனம்-சதைத்துவிட்டோம். சகலீகரித்தோம்.

க௱எ-மூ—உளக்கதியை நாமுள்ளியுள்ளந் தேறி யுலகத்தாருகந்திசைய
வுலகுண்டென்றோம், இளக்கவரிதாகிய நற்றருக்கஞ் சேர்ந்த
வெழில் மறையிலீசனுட னெம்மைக் கண்டோம், விளக்கு
நிரைபோன் மதிகள்வேறாய் வேறொன் றறியாதே விளங்குமென
விளம்புகின்ற, களக்கருத்தன் கண்ணிரண்டு மழித்தோநாணுக்
காகம்போற் றிரிந்திவனென் கதறுமாறே. (கஎ)

யோகாசாரன் அபலபித்த தத்வத்ரயத்தை ஸோபபத்திகமாக ஸ்தாபியாநின்றுகொண்டு தந்மதத்தினுடைய நிராலம்பநதையைக் காட்டுகிறார் உளக்கதியையிதி, நாம் - பரீக்ஷகரானநாம், உளக்கதியை - உள்ளகதியை, ப்ரமாணஸித்த ப்ரகாரங்களை, உள்ளி - உண்டுபண்ணி, அபலபியாதே யங்கீகரித்து, உலகத்தார் - லௌகிகஜநங்களும், உள்ளம் - மநஸ்ஸிலே, தேறி - விஸ்ரம்பித்து, உகந்து - ஸந்துஷ்டராய், இசைய - அங்கீகரிக்கும்படி, உலகு - லோகங்களை, உண்டென்றோம் - ஸத்யங்களென்று ஸ்தாபித்தோம். பரீக்ஷகருக்கும் லௌகிகார்த்தத்திலே லௌகிகஜநாநுபவ விரோதமில்லாதே வ்யவஹரிக்கையிறே ப்ராப்தம். ஆகவித்தால் பாஹ்யார்த்த ஸத்தையை ஸ்தாபித்தாராய்த்து, இளக்க - இளக்கைக்கு, நெகிழ்த்துகைக்கு, அரிதாகிய - அசக்யங்களான, நல்தர்க்கம் - ஸமீசீநதர்க்கங்களோடே, சேர்ந்த - கூடினதான, எழில் - உஜ்வலமான, மறையில் - ச்ருதியிலே, ஈசனுடன் - ஈச்வரனோடேகூட, எம்மை - ஜீவர்களை, கண்டோம் - அறிந்தோம், சிதிலயிதும்சக்யங்களாம் ஸர்வாநுபவஸம்வாதிகளான தர்க்கங்களாலே ஸிம்மவநகுப்திந்யாயத்தாலே ரக்ஷிதங்களான ச்ருதிகளாலே ஈச்வரனையும் ததப்ருதக்ஸித்தரான ஜீவர்களையும் நிரூபித்தோமென்றபடி. பரிகாப்ராகாரகுப்தமான மஹாநகரத்திலேயிறே ஸபரிகரனான ராஜாவைக்காணலாவது. இத்தால் ஜீவர்களை ஸப்ரமாணமாக வுபபாதித்தாராய்த்து. மதிகள் - ஜ்ஞாநங்கள், விளக்கு நிரைபோல் - தீபஸந்ததிபோலே, வேறாய்-பின்னபின்னங்களாய், வேறொன்று - ஸ்வவ்யதிரிக்த பதார்த்தங்களை, அறியாதே - விஷயீகரியாதே, விளங்கும் - ப்ரகாசிக்கும், என-இப்படி, விளம்புகின்ற, சொல்லாநின்ற, க்ஷணிகநிர்விஷய நாநாஜ்ஞாநங்களுடைய ஸந்ததியே யாத்மாவென்று சொல்லுமவனென வென்றபடி. இப்பக்ஷத்திலாத்மஸ்தைர்ய ஸாதக ப்ரத்யபிஜ்ஞையும்காலாந்தரபாவி பலார்த்தப்ரவ்ருத்திகளும் கூடும்படி யெங்ஙனே யென்கிற சங்காவாரணார்த்தம் தீபத்ருஷ்டாந்தோபாதநம். "ஸைவேயம் தீபஜ்வாலா" என்கிற ப்ரத்யபிஜ்ஞாதிகள்போலே ஸந்தாநைக்யத்தாலே ஸர்வமுபபன்னமென்று கருத்து. களக்கருத்தன் - கள்ளமான தாத்பர்யமுடையவனுடைய, குடிலஹ்ருதயனான யோகாசாரனுடைய, யத்வா, ஸஸ்யங்களுக்குக் களைகள்போலே வேதமார்கத்துக்கு விருத்தமான ஹ்ருதயத்தையுடையவனுடைய, கண்ணிரண்டும் - கண்களிரண்டையும், அவனாலே ஸர்வஸித்தாந்த ஸாதகத்வேநபரிக்ருஹீதங்களான ப்ரத்யக்ஷாநுமாநாபாஸங்களை யென்றபடி. அழித்தோம் - நசிப்பித்தோம், இவன் - இந்த யோகாசாரன், நாணு-லஜ்ஜியாதவனென, காகம்போல்-காகாஸுரன்போலே, ஸங்கோசமின்றிக்கே பிராட்டிபக்கல் அபசரித்த காகாஸுரஸ்

போலே யென்றபடி. திரிந்து - மூன்றுலோகங்களிலும் பரிக்ரமித்து, கதறுமாறு- ஆக்ரந்தம் பண்ணுகிறபடியை, என்-நாம்என்ன சொல்லப்போகிறோம். வாதபராஜிதனாய் அவனுக்ரந்தனம் பண்ணும் ப்ரகாரம் துர்வசமென்று கருத்து. (கஎ)

கசு அ-மூ.—பொருளொன்றிலதென்றுபோதமொன்றுங் கொண்டபொய்யனை நாங், தெருள்கொண்டு தீர்த்தபின் காணவொண்ணுப் பொருள் தேடுகின்ற, மருள்கொண்ட சூதுரைக்குஞ் சௌத்திராந்திகன் வண்ணிக்கை நாம், இருள்கொண்ட பாழுங்கிணறென் றிகழ்ந்தோட வியம்புவமே. (கஅ)

யோகாசார மத நிரஸநத்தாலே ஸௌத்ராந்திக மதநிர ஸத்துக்கு ஸங்கதிப்ரதர்சனார்த்தம் தந்மதத்தை யனுவதித்து தன் நிராஸத்தைச் சொல்லுகிறார் பொருளிதி. பொருளொன்று - ஒருபொருளும், ஒருபாஹ்யார்த்தமும், இலதென்று - இல்லையென்று, போதமொன்றும் - போதமொன்றையே, கொண்ட - அங்கீகரித்தவரான, பொய்யனை - மித்யாவாதிகளை, க்ஷணிகஜ்ஞானமாத்ர வஸ்துவாதிகளான யோகாசாரனை யென்றபடி. நாம் - தந்மதமர்மாபிஜ்ஞரான நாம், தெருள்-ஜ்ஞானத்தை, கொண்டு- அவலம்பித்து, அந்யதாஸித்த ப்ரதீதிஸ்வாரஸ்யத்தைக் கைப்பிடித் தென்றபடி, தீர்த்தபின் - கழித்தபின்பு, இதற்கு இயம்புவ மென்கிறத்தோடே யந்வயம். காணவொண்ணு-த்ரஷ்டுமசக்யங்களான, பொருள்-வஸ்துக்களை, தேடுகின்ற-அந்வேஷணம் பண்ணுமவனை, இது ஸௌத்திராந்திகனுக்கு விசேஷணம். பாஹ்யார்த்த மில்லையென்று சொல்லிலன்றோ யோகாசார மததூஷணங்கள் நமக்கு ப்ரஸங்கிக்கும் நாம் பாஹ்யார்த்த ஸத்தையை அங்கீகரித்தோம். பரந்து; அவைகள் ஜ்ஞானகதங்களான நீலபீதகடபடாத்யாகாரங்களாலே யனுமேயங்களாய் ஜ்ஞானத்திலே ஸ்வாகாரங்களை ஸமர்ப்பித்து வைத்து நசிக்கையாலே க்ஷணிகங்களா யிருக்குமென்று ப்ரத்யவஸ்தானம் பண்ணுமவனை வென்று நிர்களிதார்த்தம்.காணவொண்ணுப் பொருள் தேடுகின்ற வென்கிற விடத்தில் அதீந்த்ரிய பாஹ்யார்த்த வாதிக்குகதாசிதபி பாஹ்யார்த்த ஸத்தை கிடையாதென்று த்யோதிதம். மருள் - அஜ்ஞானத்தை, கொண்ட - ஸ்வீகரித்ததான, சூது - கபடத்தை, உரைக்கும் - சொல்லுமவனை, ப்ராந்திஜநக குஹநாயுக்திகளை கல்பிக்குமவனை வென்றபடி. சவுத்திராந்திகன் - ஸௌத்ராந்திகனுடைய, வண்ணிக்கை - வர்ணநத்தை, உபபாதநப்ரகாரத்தை, இதுக்கிகழ்ந்தோட வென்கிறத்தோட ந்வயம். நாம்-பரஹிதப்ரவணரான நாம், இப்பாட்டி லிரண்டிடத்திலே நாமென்று ப்ரயோகித்தது தாத்பர்யபேத நிபந்தநமாகையாலே புநருக்தியில்லை. இருள் - அந்தகாரத்திலே, கொண்ட - க்ருஹீதமான, பாழ் - சூந்யமான, கிணறென்று - கூபமென்று, இகழ்ந்து - தூரதோவர்ஜித்து, ஓட - ஓடும்படி, ஜநங்களிதிசேஷ:, துர்க்ரஹ கபடயுக்திஜடிலமான ஸௌத்ராந்திக மதத்தை த்ருணகுல்மாவ்ருத நிர்ஜலகூபம்போலே அநர்த்த ஹேதுவாகப்பார்த்து ஜநங்கள் தூரத:பரித்யஜித்து பலாயநம் பண்ணும்படி யென்று தாத்பர்யம். இயம்புவம்-சொல்லுகிறோம். த்யாஜ்யதா ஹேதுக்களான தந்மததூஷணங்களை வெளியிடுகிறோ மென்றபடி. (கஅ)

கஅசு மூ.—நிலையில்லாப் பொருண்மதியைவிளைத்துத்தான்சேர் நிறங்கொடுத்துத்தா னழியுந்தன்னுல் வந்த, நிலையில்லா மதிதன்னினிறத்தைக்காணு மிதுகாணும் பொருள் காண்கையென்ற நீசன், முலையில்லாத்தாய் கொடுத்த முலைப்பாலுண்ணு முகமில்லா மொழியெனவே மொழிந்த வார்த்தை, தலையில்லாக்காளுருங் கணக்காய் நின்ற கட்டளை நாங்கண்டின்று காட்டினேமே. (கசு)

இனி ஸௌத்ராந்தி கோபபாதநப்ரகாரத்தை அத்யந்தாஸம்பாவித லௌகிகத்ருஷ்டாந்தத்தாலே பரிஹஸியா நின்றுகொண்டு ஹேயதமமென்று காட்டுகிறார் நிலையில்லா இதி.நிலையில்லா-ஸ்திதியில்லாததான, பொருள் - அர்த்தமானது, க்ஷணிகமான பாஹ்யார்த்தமான தென்றபடி. மதியை - ஜ்ஞானத்தை, விளைத்து - ஜநிப்பித்து,

சேர் - சேரும்படி, நிறம் - நீலபீத கடபடாத்யா காரங்களை, கொடுத்து - ஸமர்ப்பித்து, தான் - க்ஷணிகமானதான், அழியும் - நசிக்கும், பாஹ்யார்த்தங்கள் ஸ்வஜந்யஜ்ஞானங்களிலே ஸ்வாகாரங்களை ஸமர்பித்து நசிக்கு மென்றபடி. இப்படி யாகில் - பாஹ்யார்த்தங்கள் ப்ரத்யக்ஷங்களாகத் தோற்றும்படி யென்னென்னில், தன்னால் - அந்த பாஹ்யார்த்தங்களாலே, வந்த - உத்பாதிதமான, நிலையில்லா - க்ஷணிகமான, மதி - ஜ்ஞானமானது, தன்னில் - தன்னிடத்திலே, நிறத்தை - ஆகாரங்களை, முதல் தன் சப்தம் பாஹ்யார்த்த பரம். இரண்டாந்தன் சப்தம் சப்தபரம். காணும் - ஸாக்ஷாத்கரிக்கும், ஜ்ஞானமே யாத்மாவாகையாலே யதுதானே ஸ்வஸ்மிந்நர்த்த ஸமர்பிதாகாரங்களை யநுபவிக்கு மென்றபடி. இதுகாணும் - இந்த ஜ்ஞானகதார்த்தாகார தர்சநந்தான், பொருள் காண்கை - அர்த்ததர்சநம், தூமதர்சநமேவ வஹ்நிதர்சநமென்னுமாப்போலே கார்யகாரணயோரபேதோபசாரம். ஜ்ஞானகதார்த்தா காரங்களாலே யர்த்தங்களை யனுபவிக்கையாலவைகளுக்குப்ரத்யக்ஷ விஷயத்வமில்லை, ஜ்ஞானகதார்த்தாகார ஸாக்ஷாத்காரத்தையே யர்த்த ஸாக்ஷாத்காரமாக விவேகிகள் அபிமாநித்தார்களத்தனை போக்யதை தத்வஸ்திதியன்றென்றபடி. என்ற - இப்படி சொல்லுமவரான, இது நீசனுக்கு விசேஷணம். முலையில்லா - சூன்யஸ்தனையான, தாய்-மாதாவாலே, கொடுத்த - கொடுக்கப்பட்டதான, முலைப்பால் - ஸ்தநக்ஷீரத்தை, உண்ணும் - குடிக்குமவனான, நீசன் - நீசனாலே, க்ஷணிகமான வர்த்தத்துக்கு ஸ்வஜந்யஜ்ஞானத்திலே ஸ்வோத்பத்தி த்ருதீயக்ஷணபாவியான ஸ்வாகார ஸமர்ப்பணமும் க்ஷணிகமான ஜ்ஞானத்துக்கு ஸ்வோத்பத்தி த்ருதீயக்ஷணபாவியான ஸ்வஸ்மிந்நர்த்த ஸமர்பிதாகார தர்சநமும் நாஸதோத்ருஷ்டத்வாத் என்கிறபடியே அத்யந்தா ஸம்பாவிதமாகையாலே யவைகளை யிசைந்தவிவன் ஸ்தந சூன்யமாத்ருதத்த ஸ்தந்யபானத்தாலே வர்த்தித்தவனென்றும் சொல்லுமவனென்று பரிஹஸிக்கலாம்படியான ஸௌத்ராந்திகனாலே யென்று கட்டார்த்தம். இதுக்கு மொழிந்த வார்த்தை யென்கிறதோட ந்வயம். முகமில்லா - முகமில்லாததான, மொழி - வசநம், எனவே - என்று சொல்லும்படியாகவே, மொழிந்த - சொல்லப்பட்டதான, வார்த்தை - வார்த்தையானது, வர்ணோத்பத்தி ஸ்தாநமான முகமன்றிக்கே வார்தை பிறக்குமாப்போலே பரிஹாஸ்யமாம்படி ஸௌத்ராந்திகனாலே சொல்லப்பட்ட வார்தையான தென்றபடி. தலையில்லா - சிரோஹீநமான, கால் - பாதமானது, ஊருங்கணக்காய் - ஊரும் ப்ரகாரமாய், நின்ற கட்டளை-இருக்கிற ப்ரகாரத்தை, சிரஃப்ர ப்ருதியவயவஹீந பாததாவநம்போலே யத்யந்தா ஸம்பாவிதமாய் நின்றபடியை யென்றபடி. நாம் - ஸூக்ஷ்மதர்சிகளான நாம், இன்று - அத்ய, கண்டு - பார்த்து, காட்டினோம்-பிறர்க்குபதேசித்தோம். (கக)

கஎ0-மூ.—காண்கின்றவனில்லை காட்சியுங் கண்டது முண்டவைதான்
ஏண்கொண்டன வன்றிவற்றிற் குணமும் நிலையுமில்லை
சேண்கொண்ட சந்ததியார் சேர்ந்துமொன்றென நிற்குமென்று
கோண்கொண்ட கோளுரை வைபாடிகன்குறை கூறுவமே. ()

இனி வைபாஷிகமதத்தை விசதமாக வனுவதித்துக்கொண்டு தன் நிரஸநத்தை யறுதியிடுகிறார் காண்கின்றவனிதி. காண்கின்றவன்- த்ரஷ்டாவானவாத்மா, இல்லை-மித்யாபூதன், இத்தால் வைதிகமதவ்யாவ்ருத்திஃ, காட்சியும் - த்ருசியும், கண்டதும் - த்ருச்யமும், உண்டு - ஸத்யங்கள், ஜ்ஞாநஜ்ஞேயங்கள் ஸத்யங்களென்றபடி. இத்தால் மாத்யமிகமத யோகாசாரமதவ்யவச்சேதஃ. இங்கு ஜ்ஞேயத்தைக் கண்டதென்று நிர்தேசிக்கையாலதுக்கு ப்ரத்யக்ஷவிஷயத்வம் தோற்றுகையால் அதீந்த்ரியபாஹ்யார்த்தவாதி ஸௌத்ராந்திக மதவ்யாவ்ருத்திச்ச. அவைதான் - அந்த ஜ்ஞாநஜ்ஞேயங்கள் தானும், எண் - ஸங்க்யையை, கொண்டன வன்று - ஸ்வீகரித்தன வன்று, அஸங்க்யேயங்க ளென்றபடி. இவற்றில் - இந்த ஜ்ஞாநஜ்ஞேயங்களிலே, குணமும் - குணங்களும், நிலையும் - ஸ்திதியும், இல்லை - ஸ்பஷ்டம், நிர்விசேஷங்களாய் க்ஷணிகங்களாயிருக்கு மென்றபடி. குணநிஷேதத்தாலே பரமாணூநாம் பரஸ்பரஸம் யோக

பூர்வகத்வ்யணுகாதி கார்யாரம்ப நிஷேதமும் பலிக்கையாலே பரமாணுரூபங்களாயே யிருக்கு மென்றுர்வ்யஞ்சிதம். இப்படியாகி லநந்தகோடி பரமாணுரூபமாய் க்ஷண பங்குரமாயிருக்கிற கடத்திலே ஏகோகடஃ என்றைக்யாவகாஹியாயும் பூர்வேத்யுரதர சத்ருஷ்டோகடஃ ஏகஃ என்றுஸ்தைர்யாவ காஹியாயும் பிறக்கும் ப்ரத்யயங்களுக்கு கதியென்னென்னில், சேண் - உச்ராயத்தை, கொண்ட - ஸ்வீகரித்ததான, சேணென்று உச்ராயத்தைச் சொல்லுமதாயிங்கு தைர்க்யத்தை யுபலக்ஷிக்கிறது. இத்தால்-சிரகாலஸ்தாயித்வம் பலிதம். சந்ததியால் - ஸந்ததியாலே, சேர்ந்து - புஞ்ஜீபவித்து, ஒன்றென - ஒன்றென்கிற ப்ரத்யத்தாலே விஷயீகரிக்கலாம்படி, நிற்கு மென்று - இருக்கு மென்று சொன்னவனென, பரமாணுக்களநந்தங்களாகிலும் புஞ்ஜீபாவ விசேஷத்தாலே ஐக்யப்ரத்யயமும் க்ஷணிகங்களே யாகிலும் தீபஜ்வாலாந்யாயேநஸந்தாநைக்யத்தாலே ஸ்தைர்யப்ரத்யயமும் கூடுமென்று சொன்னவனென வென்றபடி. கோண் - கௌடில்யங்களை; கொண்ட - ஸ்வீகரித்ததான, கோள் - க்ரூரமான, உரை - வசநத்தையுடையவனென, வைபாடிகன் - வைபாஷிகனுடைய, குதர்க்கஜடிலாநர்த்தாவஹஜல்பிதனென வைபாஷிகனுடைய வென்றபடி, குறை - குற்றங்களை, கூறுவம் - சொல்லுகின்றோம். (உ0)

கஎக-மூ — கும்பிடுவாராரொன்று தேடுகின்றார் குணங்களையுந் தங்களுக்குக் கூறுகின்றார், தம்படியைத் தமர்க்குரைத்துப் படிவிக்கின்றார் தமக்கினிமேல் வீடென்று சாதிக்கின்றார், தம்புடவையுடல் குறித்து நெடிதெண்ணின்றார் சந்ததிக்குத் தவம்பலிக்கத்தாம் போகின்றார், செம்படவர் செய்கின்ற சிற்றினிப்பைச் சேவகப்பற்றுடனே நாஞ்சிதைத் திட்டோமே. (உக)

வைபாஷிக ஸித்தாந்தத்துக்கும் தத்வ்யாபாரங்களுக்கும் வ்யாகாதத்தைக் காட்டா நின்று கொண்டு தந்மதநிரஸநத்தை யுபஸம்ஹரிக்கிறார் கும்பிடுவாரிதி. ஆர் - எவர்கள், கும்பிடுவார்-ஸேவிப்பார்கள், என்று தேடுகின்றார்-என்று தேடுமவரான, க்யாதிலாப பூஜார்த்தமாக சிஷ்யஸங்க்ரஹ ப்ரவ்ருத்தரான வென்றபடி. இப்படி காலாந்தரபாவி பலார்த்தமான வ்யாபரம் க்ஷணிகவாதத்திலே கடியாதென்று கருத்து. தங்களுக்கு-ஸ்பஷ்டம், குணங்களையும் - சமதமவைராக்யா ஹிம்ஸாதி குணங்களையும், கூறுகின்றார் - சொல்லிக் கொண்டவரான, இப்படி யாத்மநஃ ஸகுணத் வோபபாதநம் நிர்குணவாதத்துக்கு சேராதென்று கருத்து. இனிமே லெல்லாம் க்ஷணிகவாதவ்யாகாதமே சொல்லுகிறது. தம்படியை - தங்களுடையரீதியை, தமர்க்கு - சிஷ்யர்களுக்கு, உரைத்து - உபதேசித்து, படிவிக்கின்றார் - படியப்பார்த்தவர்களான, தமக்கு - தங்களுக்கு, இனிமேல் - இதஃபரம், சரீராவஸாநத்திலே, வீடென்று-மோக்ஷமென்று, சாதிக்கின்றார் — ஸாதித்தவர்களான, தம் - தங்களுடைய, புடவை - வஸ்த்ரத்தையும், உடல் - சரீரத்தையும், குறித்து - உத்தேசித்து, நெடிது - தீர்க்கமாக, எண்கின்றார் - மதிக்குமவரான, அசநவஸநாதி ஸ்வசரீரரக்ஷணோபாயங்களிலே தீர்க்காலோசனையைப் பண்ணுமவரான வென்றபடி. சந்ததிக்கு - ஸந்ததிக்கு, புத்ரபௌத்ராதிகளுக்கு, தவம் - தபஸ்ஸானது, பலிக்க - பலிக்கும்படி, தாம் - தாங்கள், போகின்றார் - தபஸ்ஸுக்குப் போனவர்களான, புத்ரபௌத்ராதிகளுக்கு பலம் வருகைக்காகத் தாங்கள் தபச்சர்யையிலே யிழிந்தவர்க ளென்றபடி. இப்படி யவர்கள் ஸித்தாந்த மாகையாலே யத்தை யநுவதித்தபடி, செம்படவர் - மத்யக்ராஹிகளாலே, குதர்க்க வாகுரையாலே ஜநங்களை ஸ்வஸித்தாந்தத்திலே யாகர்ஷிக்கையாலே மத்ஸ்யக்ராஹிகள்போலே யிருக்கிற வைபாஷிகராலே யென்றபடி. செய்கின்ற-செய்யப்பட்டதான, சிற்றினிப்பை-க்ஷுத்ரரஸத்தை,பளிசாமிஷந்யாயத்தாலே யவர்கள் காட்டும் க்ஷுத்ரபுருஷார்த்தங்களை யென்றபடி. நாம்-ஸாராஸாரவிவேக குசலரான நாம், சேவகம் - பகவத்தாஸ்யத்திலே, பற்றுடனே - பக்தியோடே, பகவத்கைங்கர்ய ஸாம்ராஜ்ய மஹாரஸாஸ்வாத லோலுபதையோடே என்றபடி. சிதைத்திட்

டோம் - சகலீகரித்தோம், வைபாஷிகமதம் பலகந்த சூன்யமென்று ஸ்தாபித்தோ மென்றபடி. (உக)

களஉ-மூ.—வேதங்கள் மௌலிவிளங்கவியாசன் விரித்த நன்னூல்
பாதங்களான பதினாறிலீசன்படி மறைத்துப்
பேதங்களில்லை யென்றோர் பிரமப்பிச் சியம்புகின்ற
போதங்கழிந்தவனைப் புத்தர்மாட்டுடன் பூட்டுவமே. (உஉ)

இப்படி சதுர்விதரான பௌத்தர்களையும் நிரஸித்த பின்பு அவர்களைப்போலே நிர்விசேஷ ஜ்ஞாநாத்மத்வாப்யுபகமத்தாலே வேதப்ராமாண்ய மிசைந்தத்தோடு மிசையாதத்தோடும் வாசியில்லாதபடியவர்களுக்கு ஸயூத்யனான ப்ரச்சன்னபௌத்தனை நிராகரிக்கத் துடங்கியவன் மதத்தை யநுவதித்துக் கொண்டு பௌத்தைக ராச்யத்தை யறுதியிடுகிறார் வேதங்களிதி. வேதங்கள் - வேதங்களுடைய, மௌலி - மௌலிகள், விளங்க - விளங்கும்படி, வியாசன் - வ்யாஸபகவானாலே, விரித்த - விஸ்தரிக்கப்பட்டதான, நன்னூல் - நல்ல ஸூத்ரத்தினுடைய, ஆமூலாக்ரம் பகவத்கல்யாண குண ப்ரதிபாதகங்களான வேதாந்தங்கள் சங்காலேசமு மன்றிக்கே விசதமாக ஸ்வார்த்தத்தை ப்ரதிபாதிக்கைக்காக பரமகாருணிகனான பாதராயண ப்ரும்மர்ஷியாலே ப்ரணீதமான சாரீரகசாஸ்த்திரத்தினுடைய வென்றபடி, பாதங்களான பதினாறில - பதினாறான பாதங்களிலித்யந்வய:, நாலத்யாயங்களுக்கு முள்ளஷோடச பாதியிலே யென்றபடி. ஈசன் - ஈச்வரனுடைய, படி - ப்ரகாரத்தை, மறைத்து - அபலபித்து, சாரீரகசாஸ்த்ரத்தை உபநிஷதாந்நிர்விசேஷ சிந்மாத்ர ப்ரதிபாதகதா ப்ரகாரநிரூபண பரமாக்கி எம்பெருமானுடைய குணவிக்ரஹ விபூதிகளை யபலபித் தென்றபடி. இத்தால் வேதாந்தார்த்த விசதீகாரப்ரவ்ருத்தமான சாரீரக சாஸ்த்ரத்தை வேதாந்தார்த்தாபலாபபரமாக யோஜித்ததுநன்றாயிருந்ததென்று பரிஹாஸம் வ்யஞ்ஜிதம். பேதங்கள் - பேதங்கள், இல்லையென்று - மித்யாபூதங்களென்று, ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதங்கள் மித்யாபூதங்களென்று, இதுக்கு இயம்புகின்ற வென்கிறத்தோடே யந்வயம், இப்படியாகில் கடபடசைத்ரமைத்ராதி பேதாந்வயங்கள் தோற்றும்படி யெங்ஙனே யென்னில், ஓர் - அத்விதீயமான, பிரமம் - ப்ரும்மத்துக்கு - பிச்சு - ப்ரமத்தை, இயம்புகின்ற - சொன்னவனான, ப்ரும்மஸ்வரூபாச்சாதந விவிதவிசித்ர விக்ஷேபகரியான வவித்யையினுடைய மாஹாத்ம்யத்தாலே ஸர்வமும் உபபந்நமென்று சொன்னவனான வென்றபடி. போதங்கழிந்தவனை - புத்திகெட்டவனை, அத்வைத ஶ்ருத்யர்த்தத்தை நாம் அந்யதாக்ரஹித்தோ மென்று ம்ருத்பிண்ட ப்ராயனான தனக்கே ப்ரமகல்பநமுசிதமாயிருக்க ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாயிருக்கிற புருஷோத்தமனுக்கு ப்ரமத்தைக் கல்பிக்கையாலே யௌசித்யாநபிஜ்ஞனாய் "ஜ்ஞாநேந ஹீந: பசுபிஸ்ஸமாந:" (ஜ்ஞாநேநஹீந: பசுபிஸ்ஸமாந:) என்கிறபடியே பசுப்ராயனாயிருக்கிற மாயாவாதியை யென்றபடி. புத்தர் - பௌத்தராகிற, மாட்டுடன் - மாடுகளோடே, பூட்டுவம் - ஒருகண்ணியிலே கட்டுகிறோம் (பசூநாம் பசுபிஸ்ஸஹ) பந்தநமுசிதமிறே. மாயிமதஸ்ய பௌத்தமதைகராச்யதையை காட்டுகிறோ மென்றபடி. (உஉ)

களந-மூ. பிரிவில்லாவிருளொன்றுபிணக்கொன்றில்லாப் பெருவெயிலைம
றைத்து லகங்காட்டுமென்ன - அறிவில்லாவறிவொன்றையவித்
தைமூடி யகம்புறமென் றிவையனைத்து மமைக்குமென்பார்,
செறிவில்லாப்புத்தருடன் சேர்ந்துகெட்டார் சீவனையுமீசனை
யுஞ்சிதைக்கப்பார்த்தார் - நெறியில்லாநேர்வழியுந்தானேயானு
ன் கெடுமாலைநாமடைந்து நிலைபெற்றோமே. (உந)

மாயிமதத்தினுடைய வஸாமஞ்ஜஸ்யத்தை ஸத்ருஷ்டாந்தமாகக்காட்டா நின்று கொண்டு அவர்களிழிவைக்கண்டு சோகித்தவராய் தம்முடைய ஸமீசீநநிஷ்டாலாபத்தாலே ப்ரீதராகிறார் பிரிவில்லாவிதி. பிரிவில்லா - விச்லேஷமில்லாததான, அப்ருதக்ஸித்தமான, இருளொன்று - அந்தகாரமானது, பிணக்கொன்றில்லா-விவாதமில்லாதபடி ஸர்வலோக ப்ரகாசமான, பெருவெயிலை-பெரியதானவாதபத்தை, மறை

த்து-ஆவரித்து, உலகம்-லோகங்களை, காட்டுமென்ன - ப்ரகாசிக்குமாப்போலே, அறிவில்லா - ஜ்ஞாநமில்லாதிருக்கிற, அறிவொன்றை - அக்விதீயமான ஜ்ஞாநத்தை, ஜ்ஞாநாஶ்ரயமன்றிக்கே நிர்விசேஷசின்மாத்ரமானவத்வித்ய ப்ரஹ்மத்தை என்றபடி. அவித்தை - அவித்யையானது, மூடி - ஆச்சாதித்து, அகம் - ஆந்தரபதார்த்தங்கள், புறம் - பாஹ்யபதார்த்தங்கள், என்றிவை - என்று சொல்லப்பட்டவிவை, அனைத்தும் - ஸகலங்களையும், அமைக்கும் - ஸ்ருஜிக்கும், என்பார் - என்று சொல்லுவார்கள், மஹாந்தகார நிவர்த்தகமான மஹாதபத்தை யோரந்தகாரமான தாவரித்து ஸ்வயம் ப்ரகாசமான வாதபத்துக்குமாவாரகமான தான்தானே பராதீன ப்ரகாசங்களான கடபடாதிகளைக் காட்டுமென்கிறவசநம்போலே யத்யந்தாஸமஞ்ஜஸமாம்படி வித்யாப்ரதிபடமான ப்ரும்மத்தை யவித்யையாச்சாதித்து ஸ்வயம் ப்ரகாசகப்ரஹ்மணோபி ஆச்சாதகமான தான்தானே ஜ்ஞாத்ருஜ்ஞேய ஜ்ஞாநரூபவிவிதபதார்த்த பூர்த்தியை யுண்டாக்குமென்று சொல்லுமவரான ப்ரஹ்மாஜ்ஞாந வாதிகளென்று நிர்களிதார்த்தம். அறிவில்லாவென்கிற ப்ரும்மவிசேஷணத்தாலே ப்ரும்மணோஜ்ஞாநாச்ரயத்வமில்லையென்கிறபக்ஷத்திலே யஜ்ஞாநாச்ரயசவமும் கடியாது, ஜ்ஞாநாஜ்ஞாநயோஸ்ஸமநியதத்வாதிதி தர்கோவ்யஞ்ஜிதஃ செறிவில்லா - தெளிவில்லாதவரான, விவேகசூந்யரான, புத்தருடன் - புத்தரோடே, சேர்ந்து - கூடி, கெட்டார் - அழிந்தார், சிவனையும் - ஜீவாத்மாவையும், ஈசனையும் - ஈச்வரனையும், ஜீவப்ரும்மவிபாகத்தையென்றபடி, சிதைக்கப்பார்த்தார் - அழிக்கநினைத்தார்கள், தாங்களே கெட்டது தெரியாதே தத்வத்தைக்கெடுக்க நினைத்தார்களென்றபடி. நெறியில்லா - உபாயசூன்யங்களான, நேர்வழியும் - நேர்ந்துபோகிறமார்க்கங்களும், தானேயானான் - தான் தானேயாகா நின்றவனான, அநந்யதாஸித்த பரமாண மூலங்களல்லாமையாலே துர்பலங்களான தர்மதங்களுக்குத்தானே ப்ரவர்த்தகனான வென்றபடி. இங்குஸமுச்சயத்தாலே ஸம்மதாபரிக்ரஹஃ. நெடுமாலை -ஆஶ்ரிதவிஷயத்திலே தீர்க்கவ்யாமோஹனான வெம்பெருமானை, நாம் - உத்க்ருஷ்டஸ்ஸ க்ருதவிசேஷசாலிகளானநாம். அடைந்து-சரணம்புக்கு, நிலை-ஸமீசீநநிஷ்டையை, பெற்றோம்-ஸதஸந்மார்க ப்ரவர்த்தகனான வெம்பெருமானை யாச்ரயித்தவனாலே ஸந்மார்கத்திலே நிறுத்தப்பட்டோமென்றபடி. பகவத் வைமுக்யமிறே துர்மதாந்தகார ப்ரவர்த்தகமென்றுகருத்து. (உக)

களகூ-மூ. சோதனைவிட்டொருத்தன் சொல்ல மெய்யெனச் சோகதரை
சேதனையற்றவரென்று சிதைத்தபின் சீவர்கட்கோர்
வேதனைசெய்கைவெறுமறமென்று விளம்பிவைத்தே
மாதவமென்று மயிர்பறிப்பார் மயன்மாற்றுவமே, (உச)

இப்படி ப்ரகடா ப்ரகடரான ஸௌகதரை நிரஸித்தவாறே வேதபாஹ்யத்வஸாம்யத்தாலே யவர்களுக்கு ஸஜாதீயரானஜைநரை நிரஸிக்கமூண்டு முற்படவவர்க்குள்ள வேதபாஹ்யதையை வெளியிடா நின்றுகொண்டு தத்வாநுஷ்டானங்களுடைய வ்யாகாதத்தைக்காட்டுகிறார் சோதனையிதி, ஒருத்தன்-ஒருஸுகதன், சொல்ல - ப்ரபஞ்சமித்யாத்வாதிகளை யுபதேசிக்க, சோதனை - நிரூபணத்தை, விட்டு - த்யஜித்து, மெய்யென - ஸத்யமென் றங்கீகரித்தவரான, சோகதரை - ஸௌகதரை, பரீக்ஷகர்க்கும்பரமதங்களுக்கும் வாசியறப்ரத்யக்ஷாதி ஸகலப்ரமாணங்களாலும் ப்ரபஞ்சஸத்யத்வாதிகள் தோற்றாநிற்க விருத்தமாக ஒருவிப்ரலம்பகன் சொன்னவாக்யத்தை நிரூபியாதே விச்வஸித்தவரான ஸௌகதரை யென்றபடி, சேதனையற்றவர் - சைதந்யமில்லாதவர்கள், என்று - ஸ்பஷ்டம், சிதைத்தபின் - சகலீகரித்தபின்பு, சிதறும்படி நிரஸித்தபின்பு, இதுக்கு மாற்றுவமென்கிறத்தோடேயந்வயம். சீவர்கட்கு-ஜீவர்களுக்கு, ஓர் வேதனை - ஏதேனுமொருதுக்கத்தை, செய்கை - உண்டாக்குகை, ராகத்வேஷங்களாலே யாதல் விதியாலே யாதல்ஜந்து ஹிம்ஸை பண்ணுமதென்றபடி. வெறுமறம்-வ்யர்த்தமான தர்மம், வைதஹிம்ஸையும் ராகாதி ஜந்யஹிம்ஸை போலேவிபலையாய் ப்ரத்யுத அநர்த்தாவஹமாயிருக்குமென்றபடி. என்று விளம்பி

வைத்தே - இப்படி சொல்லியிருந்தே, மாதவமென்று - மஹாதபஸ்ஸென்று, மயிர் பறிப்பார் - கேசங்களைப்பிடுங்குமவருடைய, மஹாதர்மத்வப்ரமத்தாலே து:ர்விஷஹ து:க்கஜநககேசொல்லுஞ்சநத்தைய னுஷ்டிக்குமவரான ஜைநருடையவென்றபடி. மயல - மோஹத்தை, மாற்றுவம் - போக்குகிறோம், (உச)

கஎடு-மூ. சொன்னார் தாஞ்சொன்னதெல்லாந் துறவோமென்றுஞ் சொன்
னதுவே சொனனதலதாகுமென்றும் - தின்னாதுந்தின்னுமது
மேகமென்றுஞ் சிறியனுமாம் பெரியனுமாஞ் சீவனென்றும் -
மன்னாதுமன்னுமது வொன்றேயென்றும் வையமெல்லாம் விழு
கின்றதென்றுமென்றும் - தென்னாடும் வடநாடுஞ் சிரிக்கப்பே
சுஞ் சிநநெறியார் சினமெல்லாஞ் சிதைக்கின்றோமே. (உரு)

பதார்த்தங்களி லநேகாந்த்யாப்யுபகமத்தாலே பலிதமான ஜைநஸித்தாந்தத்தை விஸ்தரித்தநுவதியா நின்றுகொண்டு அதினுடைய பரிஹாஸ்யதையை வெளியிடுகிறார் சொன்னாரிதி.

சொன்னார்தாம்-வக்தாக்களான தத்தந்மதநிஷ்டர்களாலே, சொன்னதெல்லாம்-சொல்லப்பட்டவர்த்தங்களையெல்லாம், துறவோமென்றும் - விடோமென்றும், அங்கீகரிப்போ மென்றபடி என்று மென்கிற வதிகரணங்களுக்கெல்லாம் பேசுவோமென்சிறத்தோடேயந்வ்யம். “ஸ்யாதஸ்தி ஸ்யாந்நாஸ்தி ஸ்யாதஸ்தி ச நாஸ்தி ச - ஸ்யாதவக்தவ்யம் ஸ்யாதஸ்தி ச நாஸ்தி சாவக்தவ்யஞ்ச” (ஸ்யாதஸ்திஸயாந்நாஸ்திஸ்யாதஸ்திசநாஸ்திசஸ்யாதவக்தவ்யம் ஸ்யாதஸ்திசநாஸ்திசாவக்தவ்யஞ்ச) என்கிறபடியேபதார்த்தங்களிலேஸத்வமஸத்வம் அநிர்வசநீயத்வம் அஸத்வேஸத்ய நிர்வசநீயத்வம் ஸதஸத்வேஸத்யநிர்வசநீயத்வம் என்கிறபரஸ்பரவிருத்த ஸப்தபங்கியைக்காட்டுகிறதங்களைக் குறித்துவாவதூகரான பரமதநிஷ்டர்கள் மாத்யமிகோக்த பஞ்சமகோடியை யிவைகளோடுசேர்த்தும்.“ஸத்வேஸதி ஸதாஸத்வம்”(ஸத்வேஸதிஸதாஸத்வம்)என்று கோட்யந்தரங்களைக்கூட்டியும் வ்யவஹரிக்க ப்ரஸங்கிக்குமென்று பாதித்தால் துல்யந்யாயங்களான வவைகளையு மங்கீகரிப்போமென்று சொல்லவேண்டு மவரானவென்றபடி. ஸப்தபங்கிவாதிகளுக்கு ஸ்வாப்யுபகதஸப்தபங்கி பரித்ராணார்த்தமாக தத்தத்வாதிப்ரதிவாதிகல்பித கோட்யந்தரங்களையெல்லாம் அங்கீகரிக்கப்ராப்தமென்று நிர்களிதார்த்தம். இப்படி மேலும் பலிதார்த்தங்கள்கண்டு கொள்வது. சொன்னதுவே-சொல்லப்பட்ட வஸ்துவே, சொன்னதலது-சொல்லப்படாதது, ஆகுமென்றும்-பாத்யமே அபாத்யமென்று மென்றபடி. தின்னாதும் - அபக்ஷ்யமும், தின்னுமதும் - பக்ஷ்யமும், ஏகமென்றும் - ஏகமென்றும், சீவன் - ஜீவாத்மா, சிறியனுமாம் - அல்பபரிமாணனுமாவன், பெரியனுமாம் - மஹாபரிமாணனுமாவன், என்றும் - ஸ்பஷ்டம், க்ரமேண மசகமாதங்காதி சரீரங்களிலே ப்ரவேசிக்கிற ஜீவாத்மாதத்தச்சரீராநுரூபபரிமாணனாகபரிணமிப்பன் என்கிறதத்ஸித்தாந்தத்தையநுவதித்தபடி. மன்னாதும்-த்ருடமாகாதும், மன்னுமதும் - த்ருடமாவதும், ஒன்றேயென்றும்-ஸ்பஷடம், ஒன்றுதானே நித்யமாயுமநித்யமாயுமிருக்குமென்றபடி. என்றும் - ப்ரதிதிநம், வையமெல்லாம் - பூலோகமெல்லாம், விழுகின்றது என்றும் - ஸ்பஷ்டம், “பததி குருத்வாத் ப்ருத்வீ” பததிகுருத்வாத் ப்ரத்வீ என்றர் ஹதுபதிஷ்டரீத்யாப்ரதிதிநம்பூலோகம் கீழேபோகா நிற்குமென்றபடி. தென்னாடும் - தக்ஷிணதேசமும், வடநாடும் - உத்தரதேசமும் சிரிக்க - பரிஹஸிக்கும்படி, பேசும் - வ்யவஹரிக்குமவரான, பண்டிதபாமரஸாதாரணமாகஸர்வதேசத்து ஜநங்களும் பரிஹஸிக்கும்படி ஜல்பிக்குமவரான என்றபடி. சிந-ஜிநனுடை, நெறியார்-மார்கத்தையுடையவர்களுடைய, ஜிநோபதிஷ்டமார்கநிஷ்டரான ஜைநருடைய, சினமெல்லாம் - கோபத்தையெல்லாம், சிதைக்கின்றோம் - சகலீகரித்தோம். (உரு)

கஎசு மூ. ஐகாந்திகமொன்றுமில்லை யென்றுரைசையைத்தாமுடிப்பார்
சோகாந்தமாகத்துறப்புண்டபின்றெழில்வைதிகமென்

றேகாந்திகள்சொன்னவீசன்படியில்விகற்பமெண்ணும்
லோகாந்தவீணர்தம் வேதாந்தவார்த்தை விலக்குவமே. (உகூ)

இப்படியநைகாந்தவாதிகளான ஜைநரைநிரஸித்தபின்பு வேதப்ராமாண்யத்தை யிசைந்துவைத்தே யிவர்களைப் போலேயநேகாந்த வாதம்பண்ணுகையாலேஜைநகந் திவேதாந்தியென்று பேர்பெற்றிருக்கிற பாஸ்கரயாதவர்களை நிரஸிக்க வுபக்ரமித்தவர்கள்மதத்தை யநுவதிக்கிறார் ஐகாந்திகமிதி, ஆசையைத்தாமும்பார்-திகம்பரரான ஜைநர்கள், இதுக்கு துறப்புண்டபின்னெனகிறத்தோடே யந்வயம். ஒன்றும் - ஒருபதார்த்தமும், ஐகாந்திகமில்லை - ஏகஸ்வபாவமன்று, கிந்து - ஸர்வம் -பூர்வோக்தபரஸ்பரவிருத்த ஸ்வபாவஸப்தகயுக்தமென்றுகருத்து, என்று - இப்படிசொல்லி, சோகாந்தமாக - சோகாந்தகாரமாக, துறப்புண்டபின் - வர்ஜிக்கப்பட்டபிற்பாடு, ஸப்தபங்கியைப்ரதிஜ்ஞைபண்ணி தன்நிர்வாஹாசக்தியாலே வாதகோஷ்டிபராஜயபக்நோத்ஸாஹராய்பலாயிதரான பின்பென்றபடி. வைதிகம் - வேதவிசாரமே, தொழில் - வேலை, என்று - ஸ்பஷ்டம், நாங்கள் வேதவிசாரவ்யாபாரத்திலே யதிக்ருதரென்றுவ்யபதேசித்துச்சொன்னபடி, ஏகாந்திகள் — ஏகாந்திகளாலே, சொன்ன - சொல்லபப்பட்டதான, ஈசன்படியில் - ஈச்வரனுடைய ஸ்வபாவத்தாலே, விகற்பம் - பேதாபேதாதி விகல்பங்களை, எண்ணும் - சிந்திக்குமவரான, ஏகஸ்வரூபமமலமித்யாதிகளில்படி ஏகரூபப்ரும்மவாதிகளான பராசாரதிகளாலே யுபதிஷ்டமான வீச்வரஸ்வரூபத்திலே பேதாபேதங்களையும் உபாதிஸம்ஸர்கப்ரயுக்தங்களாயுமுள்ள தோஷங்களையும் கல்பிக்குமவ்ரானவென்றபடி. லோகாந்த - லோகாந்தரான, பேதாபேதங்களுக்கு தேஜஸ்திமிரந்யாயத்தாலே ஸார்வலௌகிகப்ரதீதிஸித்தமானவிரோதத்தை யறியமாட்டாதவரான வென்றபடி. வீணர்தம் - வீணர்களுடைய, வ்ருதாஜல்பாகரான பாஸ்கரயாதவப்ரகாசர்களுடைய வென்றபடி. வேதாந்தவார்த்தை-வேதாந்தவார்த்தைகளை, வேதாந்தப்ரதிபாத்யங்களாகவவர்கள் காட்டினவர்த்தங்களை யென்றபடி. விலக்குவம் – நிராகரிக்கிறோம். (உகூ)

ளளஎ மூ. ஒன்றெனவும் பலவெனவுந் தோற்றுகின்ற வுலகெல்லாமொரு பிரமந்தானேயாக்கி, நன்றெனவுந்தீதெனவும்பிரிந்ததெல்லாநன் றன்றுதீதன்றேயெனநவின்றார், கன்றுமலர் பசுவுமலராகின் றே கன்றாகிப் பசுவாகி நின்றவண்ணம், இன்று மறைமாட்டுக்கோரிடையனனவேகாந்தியறிந்திடாமியம்பினேமே. (உ௲)

ஒன்றெனவும்-ஜாதிரூபேணகாரணரூபேண சாபின்னங்களாகவும்,பலவெனவும் வ்யக்திரூபேண கார்யரூபேணச பின்னங்களாகவும், தோற்றுகின்ற - ப்ரதீயமானங்களான, உலகெல்லாம் – லோகத்திலுள்ள பதார்த்தங்களையெல்லாம், ஒரு பிரமந்தானேயாக்கி - ஒரு ப்ரும்மமாகத்தானேபண்ணி, ஸகலபதார்த்தங்களும், "வஜெ்ணா ஃ-டணஸூமளஃ வடிஸூாாவஸூ்ஜஃ" (கண்டோமுண்டச்சகௌஃ, கடச்சராவச்சம்ருத்) என்று ஜாதிகாரணரூபேணஅபின்னங்களாயும் வ்யக்திகார்யரூபேணபின்னங்ளாயும்தோற்றும்இவைகளில் சேதநருக்கும் ப்ரும்மத்துக்கும்பேதம்ஸ்வாபாவிகம் அபேதமௌபாதிகம்,அசேதநங்களுக்கும்ப்ரும்மத்துக்கும் பேதம்ஸ்வாபாவிகம் அபேதமௌபாதிகம், அசேதநங்களுக்கும் ப்ருமத்துக்கும்பேதாபேதங்களிரண்டுகளும் ஸ்வாபாவிகமென்றுபாஸ்கரபக்ஷம், சேதநருக்கும் ப்ரும்மத்தோடே பேதாபேதங்களிரண்டுகளும் ஸ்வாபாவிகங்களென்று யாதவபக்ஷம். இவைத்தையெல்லாமிப்பாட்டின்ப்ரதமசரணத்திலே யனுவதித்தபடி. இப்படிபேதாபேதாப்யுபகமத்திலே பலிதமானவர்த்தத்தை யருளிச்செய்கிறார்மேல், நன்றெனவும் - நல்லதுகளென்றும், தீதெனவும்-பொல்லாததுகளென்றும், பிரிந்ததெல்லாம்-விபக்தங்களான பதார்த்தங்களையெல்லாம். நன்றன்று-நல்லதுகளுமன்று, தீதன்று-பொல்லாதுகளுமன்று, எனநவின்றார்-இப்படி சொன்னவர்கள், சாஸ்த்ரங்களாலே ஹேயத்வேநோபாதேயத்வேநசவிபக்த

ங்களான பதார்த்தங்களாலே ஸ்வபாவஸங்கரத்தைச்சொன்னபாஸ்கரயாதவர்களென்றபடி. கன்று மலர் - வத்ஸங்களுமன்று, பசுவுமலர் - கோக்களுமன்று, ஆகிநின்றே - இப்படியாயிருந்துவைத்தே, கன்றாகி - வத்ஸங்களுமாய், பசுவாகி - கோக்களுமாய், நின்ற வண்ணம் - நின்றப்ரகாரத்தை, இன்று - இன்றைக்கு, இதுக்கியம்பினோமே யென்கிறத்தோடே யந்வயம். மறை - வேதமாகிற, மாட்டுக்கு - கோவுக்கு, ஓர் - அத்விதீயனான, இடையனான - கோபாலனான, ஏகாந்தி - ஏகஸ்வபாவனானவீச்வரன், அறிந்திட - அங்கீகரிக்கும்படி, நாம் - ஸ்பஷ்டம், இயம்பினோமே - ஸகல வேதார்த்தபரிரக்ஷண ப்ரவர்த்தகனான வெம்பெருமான் கீதாதிகளா லருளிச்செய்த வர்த்தங்களோடு ஸம்வதிக்கும்படிபாஸ்கரயாதவமதாஸமஞ்சஸதையைச் சொன்னோமென்றபடி. (உஎ)

களஅ-மு—சாயாமறைகளிற் சத்தந்தெளிந்திடச் சாற்றுதலால்
தூயாரிவரென்று தோன்றநின்றே பலசூதுகளால்
மாயாமதமு மறுசினவாதும் பவுத்தமுஞ்சேர்
வையாகரணர் சொல்லும்மறுமாற்றங்கண் மாற்றுவமே. (உஅ)

சாயா - ஸ்வரஸகதிகளான, மறைகளில் - வேதங்களிலே, சத்தம் - சப்தங்கள், தெளிந்திட - தெளியும்படி, அதீந்திரியார்த்த விஷயங்களாகையாலே லௌகிகவாக்யவார்த்தாநு ரூஞ்யேகநேது மசக்யங்களாய் சப்தஸ்வாரஸ்யைக நிர்ணயார்த்தங்களான வேதங்களில் ப்ரயுக்தங்களான சப்தங்கள் விசதமாக ஸ்வார்த்தங்களைப் போதிக்கும்படி யென்றபடி. சாற்றுதலால் - உத்கோஷிக்கையாலே, ப்ரக்ருதி ப்ரத்யய விபாகாதிகளாலே ஸர்வஸுகமமாக சப்தங்களை சிக்ஷிக்கையாலேயென்றபடி. இவர்- இந்தவையாகரணர்கள், தூயார்-நிர்தோஷர், வேதவிரோதிகளன்று; ப்ரத்யுதவேதோபகாரகர்கள், என்று தோன்றநின்றே-இப்படி லோகத்தாருக்கு தோற்றும்படி யிருந்துவைத்தே, இதுக்கு சேரென்கிறத்தோடே யந்வயம். பல - நாநாவிதங்களான, சூதுகளால் - கபடங்களாலே, மாயாமதமும் - மாயாவாதிபக்ஷத்தையும், மறுசினவாதும் - மற்றையொருஜைநவாதத்தையும், பவுத்தமும் - புத்தமதத்தையும், சேர் - சேர்த்துக்கொள்ளுமவரான, மாயாவாதிரீத்யா ப்ரபஞ்சமெல்லாம் சப்தப்ரும்ம விவர்த்த மென்றங்கீகரிக்கையாலும் வஸ்துக்களிலே அத்யந்தாநு பலப்தஸப்தபங்கியைக் காட்டுமவரான ஜைநர்களைப்போலே, "நஸொஸ்திப்ரத்யயோலோகே யஃ ஸ்ரஸவ்ராநுமாதருதே। அநுவித்தமிவஜ்ஞாநம் ஸர்வஸப்தேந ருஹ்யதே" (நஸோஸ்திப்ரத்யயோலோகேயச்சப்தாநுகமாத்ருதே। அநுவித்தமிவஜ்ஞாநம் ஸர்வசப்தேக்ருஹ்யதே) என்றத்யந்தாநு பலப்தசப்தாநு வேதத்தைக் காட்டுகையாலும் சப்தாத்யாஸ வாதிகளான பௌத்தர்களைப்போலே ப்ரதிபாவாக்யார்த்த வாதம்பண்ணுகையாலும் மாயிஜிந பௌத்தமதஸமஷ்டியை ஸ்வமதமாக ஸ்வீகரித்தவர்களான வென்றபடி. யத்வா, மறுசினவாதும் - ப்ரச்சன்ன ஜைநவாதத்தையும், ப்ரபஞ்சமெல்லாம் சப்தப்ரும்ம பரிணாமமென்கையாலே ப்ரும்மஸ்வரூப பரிணாமவாதியாதவ ப்ரகாசமதத்தையும் சேர்த்துக்கொள்ளுமவரான வென்று கருத்து. வைதிகஜந விஸ்ரம்பார்த்தமாக ஸாத்வஸாது சப்தநிரூபணத்தை பஹி ருத்கோஷித்தார்களாகிலு மந்தர் வேதவிருத்த ப்ரக்ரியைகளை பரிசீலிப்பவர்களென்று நிர்களிதார்த்தம். வையாகரணர் - வையாகரணர்களாலே, சொல்லும் - சொல்லப்பட்டவையான, மறுமாற்றங்கள் - ப்ரகாராந்தரங்களை, மாற்றுவம் - பஞ்ஜிக்கிறோம், இவர்கள் சப்தப்ரக்ரியா நிரூபணத்திலே யுபஜீவ்யரானாலும் அர்த்தவர்ணநத்திலே யநர்த்தகர்த்ருத் வேநாநுபஜீவ்யராகையாலே தூரபரிஹரணீயர்களென்று கருத்து. (உஅ)

களகூ-மு—கலகத்திற் கலங்கிவருங்காணிக்கெல்லாங் கண்ணாறு சதிரவழி
கட்டுவார்போல், உலகத்தின் மறைசேர்ந்தவுணாகள் தன்னு
லொருபிழையும் சேராமலுபகரித்தார், பலகத்தும் பவுத்தர்
முதலான பண்டைப் பகற்கள்ளர் பகட்டழிக்கப்பரவும் பொய்

யாம், சிலகத்துச் சித்தாந்தமறியகில்லாச் சிறுவரினிமயங்காம
சேமித்தோமே. (உகூ

வேதவிருத்த ப்ரக்ரியாபரத்வேந ப்ரதீதங்களான வையாகரண வசநங்களுக்கு
கதஞ்சி துசிததாத்பர்யவர்ணநத்தாலே வேதாவிரோதேந நிர்வாஹம்சக்யமாயிருக்கவ
யந்த வேதோபகாரகர்களான விவர்களைநிரஸித்தது அநுபபன்ன மன்றோவென்னில்
அப்படியே யுசிததாத்பர்யத்தைக் காட்டாநின்றுகொண்டு தாத்பர்யநிரூபணக்ஷமமந்
புத்திவ்யாமோஹ சமனார்த்தமாக விவர்களை நிரஸித்ததாக வ்யவஹரித்தோ மென்
றுர் கலகத்திலிதி. கலகத்தில் - விவாதத்தாலே, த்ருதீயார்த்தே ஸப்தமி. கலங்கி
ஸந்திக்தங்களாய், வரும் - பாரம்பர்யேண சிரகாலாநுவ்ருத்தங்களான, காணிக்கெ
ல்லாம் - க்ஷேத்ரங்களுக்கெல்லாம், கண்ணறு - கண்ணறென்று பேர்பெற்றிருக்கி
சதிரவழி - சதுரமார்கத்தை, கட்டுவார்போல் - நிர்மிப்பார்கள்போலே, மமேத
மமேதமென்று சிரதராநுவ்ருத்த விவாதத்யாஸித க்ஷேத்ரங்களுக்கு ருஜுதர்மா
கண்ணறு முதலான மர்யாதையைக் கல்பித்து விவாதத்தை சமிப்பிக்கும் மத்யஸ்
ர்கள்போலே யென்றபடி. இதுக்கு பரிஹரித்தா ரொன்கிறத்தோடே யன்வயம். உ
கத்தில் - லோகத்திலே, இதுக்கொரு பிழையுஞ் சேராம லென்கிறத்தோடே யந்
யம். மறைசேர்ந்த - வேதங்களோடே கூடினவையான, வேதங்களிலே ப்ரயுக்தங்
ளான வென்றபடி. உரைகள் தன்னால் - சப்தங்களால், ஒருபிழையும் - ஒருதப்பு
சேராமல் - வராதபடி, உபகரித்தார் - உபகரித்தவர்களுடைய, ஸவிசேஷ நிர்வி
ஷாதிவஸ்து பரதயா விவாதாத்யாஸிதங்களான வைதிக சப்தங்களாலே லோகத்
ருக்கொருவ்யாமோஹமும்வாராதபடி ப்ரக்ருதி ப்ரத்யயஸ்வராதி விவேசநத்தாலே
யர்த்த வைசத்யத்தை யுண்டாக்கி தந்முகேந விவாதசமநாக்ய மஹோபகாரத்தை
பண்ணினவர்களான வையாகரணருடையவென்று கட்டளர்த்தம். இதுக்குசிலகத்து
சித்தாந்த மென்கிறத்தோடே யன்வயம். பலகத்தும் - நாநாவிதமாக ப்ரலபிக்கும
ரான, பவுத்தர் முதலான - பௌதத ப்ரப்ருதிகளான, பண்டை - ப்ராசீநங்களான
பகல்கள்ளர் - திவாசோரர்களுடைய, அநங்யதாஸித்த ப்ரமாண ப்ரதிஷ்டாபித பத
த்த பச்யதோஹரர்களுடைய வென்றபடி. பகட்டு - க்ஷோபத்தை, அழிக்க - நி
குகைக்கு, பரவும் - ப்ரஸரியாநிற்கிற, பொய்யாம்-பாதிதார்த்தங்களான, சிலகத்
ஜல்பங்களுடைய, சித்தாந்தம் - ஸித்தாந்தத்தை, தாத்பர்யவிஷயார்த்தத்தை, அறி
கில்லார் - அறியமாட்டாதவரான, சிறுவர் - அல்பர்கள், இனி - இதஃபரம், மயங்கா
மல் - வ்யாமோஹியாதபடி, சேமித்தோம் - ரக்ஷித்தோம், சப்தம் - ப்ரமாணமன்
அதுதானுமத்யாஸ கல்பிதமென்றிப் புடைகளிலே சொல்லுமவரான பௌத்தசா
வாகாதிகளாலே வந்த ஜநக்ஷோபார்த்தமாக சப்தமே ப்ரும்மம், ப்ரபஞ்சமெல்ல
மதினுடைய பரிணமமே, ஸர்வப்ரத்யயமும் சப்தாநுவித்த மென்றிப்புடைகளிலே
"அபீஷ்டார்த்தவ்யயேநாபிஜயதிக்ஷேத்ரஹாரிணம் । லப்தக்ஷேத்ரைர்நதுஷ்ப்ராபஸ்ஸ்யாதர்தஇதிநிச்சயாத்" (அபீஷ்டார்த்தவ்யயேநாபிஜயதிக்ஷேத்
ஹாரிணம் லப்தக்ஷேத்ரைர்நதுஷ்ப்ராபஸ்ஸ்யாதர்தஇதிநிச்சயாத்)என்கிறந்யாயத்
லேவைபவவாதங்களாக ப்ரவ்ருத்தங்களான சிலவையாகரண கல்பங்களுடைய தா
பர்யாநபிஜ்ஞர் கலங்காதபடி யவைகளுடைய யதார்த்தத்தை நிருபித்தோ மென்
னிர்களிதார்த்தம். (உ

கஅ0-மூ—கண்டதலாதன கட்டுதலால் கண்டுவிட்டதனால்
பண்டுளதான மறைக்குப்பழமையை மாற்றுதலால்
கொண்டதுபீசனைக் கொள்ளாவகையென்று கூறுதலால்
கண்டகராய்நின்ற காணுதர்வாதங் கழற்றுவமே. (ந

இப்படி யப்ராமாணிகதந்த்ர நிஷ்டர்களை நிரஸிக்கிறுர் பதவாக்யஸ்போட
யுபகந்த்ருவையாகரண க்ஷோபநிவர்தநாநந்தரம் அவயவிபரமாணு ஸமவாயாத்யப்
மாணிக பதார்த்தாப்யுபகந்தாக்களான கணாததந்த்ரநிஷ்டர்களை நிரஸிக்கிறுர். அ
செய்யுமிடத்தில் நிதசிதீச்வராங்கீகாரிகளான விவர்களை நிரஸிக்கை யநுபபன்ன ம

ரூவென்று சங்கியாமைக்காக விவர்களால் வந்தவுபப்லவத்தைக் காட்டுகிறார் கண்
-தலாதன விதி. கண்டதலாதன - கண்டதாகாதவஸ்துக்களை, கட்டுதலால் - கல்பிக்
கையாலும், ப்ரத்யக்ஷர்த்யநுபலப்த ஸாமாந்யவிசேஷ ஸமவாயாவயவிபரமாணு சித்
ரூபாதிகளைக் கல்பிக்கையாலு மென்றபடி. கண்டு - ப்ரத்யக்ஷீகரித்து, விட்டத
ல் - த்யஜிக்கையாலும், வாய்வாதிகளுக்கு ப்ரதீதிஸ்வாரஸ்ய ஸித்தமான ப்ரத்ய
க்ஷத்வத்தை யபலபிக்கையாலு மென்றபடி. இது மற்றுமுள்ள ஸத்வாதி குணப
ாபல ஙகளுக்கு முபலக்ஷணம். பண்டு - பூர்வமே, உளதான - வித்யமாநமான,
றைக்கு - வேதத்துக்கு, பழைமையை - ப்ராசீநத்வத்தை, மாற்றுதலால் - பஞ்ஜி
கையாலும், அநாத்யவிச்சின்னஸம்ப்ரதாயஶ்ருதிநாம் பௌருஷேயத்வ கல்பனையாலு
மென்றபடி. ஈசனை - ஈச்வரனை, கொண்டதும் - அங்கீகரித்ததும், கொள்ளாவகை -
வதாந்திகளங்கீகரியாதபடி, என்று கூறுதலால்-இப்படி சொல்லுகையாலும், நாங்க
ளீச்வரனை யங்கீகரித்தோமே யாகிலும் வேதாந்திகள் சாஸ்த்ர யோநித்வாதிகரணத்தி
ல நிர்ணயித்தபடியே யாகமைக வேத்யனாக வங்கீகரித்தோ மல்லோம், கிந்து அனு
ான வேத்யனாகவென்று சொல்லுகையாலு மென்றபடி. யத்வா நாங்களீச்வரனை
வதாந்திகள்போலே யுபாதாநமாக வங்கீகரித்தோ மல்லோம், கிந்து நிமித்தமாத்ர
ாக வென்று சொல்லுகையாலு மென்றபடி. கண்டகராய் நின்ற "காணாதசாக்யபா
ஷண்டை ஸ்த்ரயீதர்மோவிலோபிதঃ" என்கிறபடியே வைதிக கண்டாபத கண்ட
ாயமாநராய் நின்று ப்ரத்யவஸ்தாநம் பண்ணுகிற, காணாதர் - காணாதர்களுடைய,
ாதம் - வாதத்தை, கழற்றுவம் - சிதிலிக்கிறோம். (௩௦)

அக-மூ—ஆகமத்தை யனுமான மென்கையாலு மழியாத மறையழிக்க
நினைத்தலாலும், போகமற்ற புலம்போலக் கிடைக்கைதானே
புண்ணியர்க்கு வீடென்று புணர்த்தலாலும், மாகமுற்ற மணி
வண்ணன் படியைமாற்றி மற்றவனுக் கொருபடியை வகுத்தலா
லும், காகமொத்த காணாதன் கண்ணைவாங்கிக் காக்கைக் கா
ன்றலத்தல் காட்டினோமே. (௩௧)

காணாதாநாம் வைதிக ப்ரக்ரியாவிஷயகோ பப்லவப்ரதர்சநபுரஸ்ஸரமாக தத்
ிஷயத்திலே தாம் செய்தருளினசிக்ஷையைவெளியிடுகிறார் ஆகமத்தையிதி. ஆகமத்
்த - சப்தப்ரமாணத்தை, அனுமான மென்கையாலும் - அநுமான ப்ரமாணமென்று
சால்லுகையாலும், இமாநிபதாநிஸம்ஸர்கஜ்ஞாநபூர்வகாணி-ஆகாங்க்ஷாதிமத்வாத்)
ன்கிற பதபக்ஷகாநு மானத்தாலே யாதல் ஏதேபதார்த்தாঃ பரஸ்பரஸம்ஸ்ரு
ஷ்டாঃ ஆகாங்க்ஷாதிமத்பதஸ்மாரிதத்வாத்) என்கிற ப்தார்த்த பக்ஷகாநுமாநத்தாலே
ாதல் ஸம்ஸர்கம்ஸித்திக்கும்போது சப்தங்கள் பக்ஷங்களாயாதல் பக்ஷோபஸ்தாப
ங்களாயாதலுபயோகிக்கு மத்தனைபோக்கி ப்ரதக் ப்ரமாணங்களன்றென்று சொல்
லுகையாலு மென்றபடி. உக்தஹேதுக்களுக்கெல்லாம் காகமொத்த வென்கிறசதோ
டயன்வயம். இப்படி சப்தஸாமாந்யத்திலேயிவர்கள்செய்தவுபப்லவத்தை யருளிச்செ
தினிமேல் சப்தவிசேஷத்திலே செய்தவுபப்லவத்தை யருளிச்செய்கிறார். அழி
ாத - அபௌருஷேயதயா நித்யமான, மறை - வேதத்தை, அழிக்க - பௌருஷே
த்வேந அநித்யமாக்க, நினைத்தலாலும் - சிந்திக்கையாலும், இப்படி ப்ரமாணத்திலே
ந்த உபப்லவத்தை யருளிச்செய்தினிமேல் ப்ரமேயத்தில் வந்த உபப்லவத்தை யரு
ளிச் செய்கிறார். போகமற்ற - போகமில்லாததான, புலம்போல - க்ஷேத்ரம்போலே,
ிடைக்கைதானே - இருக்கைதானே, புண்ணியர்க்கு - புண்யசாலீகளுக்கு, வீடென்று-
மோக்ஷமென்று, புணர்த்தலாலும் - சொல்லுகையாலும், பாஹ்யாதி பலகந்தமன்றிக்
கே பாழாய்க்கிடக்கிற க்ஷேத்ரம்போலே ஜ்ஞாநாத்யகில விசேஷகுணைச் சேதத்தா
லே பாஷாணகல்பராய் கிடக்கைதான் மோக்ஷோபாய நிஷ்ணாதருக்கு ஸித்திக்கும்
மோக்ஷமாவது என்று சொல்லுகையாலு மென்றபடி. இப்படி யீசிதவ்ய விஷயமாக
ந்த வுபப்லவத்தைக்காட்டி யினிமேலீச்வர விஷயமாக வந்த வுபப்லவத்தைக் கா
ட்டுகிறார். மாகம் - மஹாகம், பரமாகாசமென்று பேர்பெற்றிருக்கிற வைகுண்ட

தை, உற்ற - அடைந்தவனுன, மணிவண்ணல் - இந்த்ர நீலச்யாமள ஸ்ப்ருஹணீய ஞன வீச்வரனுடைய, அப்ராக்ருதவிக்ரஹவத்வ நிரதிசயாநந்தத்வ ஜகதுபாதாநத்வா கமைகவேத்யத்வாதி கல்யாணகுணங்களை யபலபித்து தத்விபரீதமாக வவனுக்கு சரீரசூந்யத்வ ஸுகசூந்யத்வ கேவல நிமித்தத்வாநுமானவேத்யத்வாதிகளைகல்பிக்கை யாலு மென்றபடி. காகம் - காகாஸுரனேடு, ஒத்த - ஸமாநாபராதனுன, காணுதன், காணுதனுடைய, கண்ணை - கண்களை, ததீயப்ரமாண தர்க்கங்களை, வாங்கி - பிடுங்கி, காக்கைக்கு - ரக்ஷிக்கைக்கு, ஆர்-எவர், சக்தரிதிசேஷ:. என்றலத்தல்-ப்ரும்மா ஸ்வயம்பூச்சதுராநநோவா ருத்ரஸ்த்ரிநேத்ரஸுரிபுராந்தகோவா! இந்த்ரோமஹேந் த்ரஸ்ஸுரநாயகோவாத்ராதும்நசக்தாயுதிராமவத்யம்) என்கிறபடியே போக்கற்றநி ற்கிற நிலையையென்றபடி. காட்டினேம்-ஸ்பஷ்டம், லோகத்தார்க்கிதிசேஷ: ()

கஅஉ-மூ. கோதமநூல்களைக்குற்றமில்லாவகைகூட்டலுமாம்
கோதுகழித்தொரு கூற்றிற்குணங்களைக் கொள்ளவுமாம்
யாதுமிகழ்ந்தொரு நீதியையாமே வகுக்கவுமாம்
வேதியர் நன்னய வித்தரமென்பது மெய்யுளதே. (கூஉ)

இப்படி காணுதர்தந்த்ரத்தை நிரஸித்து இனிமேலி த்தொடேஸமாநதந்த்ரமாக ஸங்க்ருஹீதமான ந்யாயதந்த்ரத்தை நிரஸிக்கிருர். நநு புராணந்யாயமீமாம்ஸா தர்மசாஸ்த்ராங்கமிஶ்ரதா:। வேதாஸ்தாநாநிவித்யாநாம் தர்மஸ்யசசதுர்தச என்றுமன்வாதி மஹர்ஷிபரிக்ஷதா தர்மவித்யாஸ்தாநத்வேநபரிகணிதமாய் ‘‘ஶிக்ஷாயாம்வர்ண-ஶிக்ஷாபதஸமதிகமோவ்யாக்ரியா நிர்வசோப்யாம்ஸந்தச்சந்தச்சிதௌஸ்யாத்கமயதிஸமயம்ஜ்யௌதிஷம்ரங்கநாத। கல்பேநுஷ்டாநமுக்தாவுசிதகமதயோர்ந்யாயமீமாம்ஸயோஸ்யாதர்த்தவ்யக்தி:புராணஸ்ம்ருதிஷுததநுகாஸ்த்வாம் விசிந்வந்திவேதா:’’ சிக்ஷாயாம் வர்ணசிக்ஷாபதஸமதிகமோ வ்யாக்ரியாநிர்வசோப்யாம் - சந்தச்சந்தச்சிதௌஸ்யாத்கமயதிஸமயம் ஜ்யௌதிஷம் ரங்கநாத கல்பேநுஷ்டாநமுக்தாவுசிதகமதயோர்ந்யாயமீமாம்ஸயோஸ்யா தர்த்த வ்யக்தி: புராணஸ்ம்ருதி ஷுததநுகாஸ்த்வாம் விசிந்வந்திவேதா:) என்று ஸ்ரீபட்ட பராசரபாதை: பரதத்வநிர்த்தாரணேபாயபூதவேதோபகாரகத்வேநபரிகணிதமாநந்யாயவிஸ்தரத்தைநிரஸிக்கையநுசிதமன்றே; அப்போது பதினுலிலொருவித்யாஸ்தாநமழிந்து போகாதோவென்னிலருளிச்செய்கிருர். கோதமநூல்களை-கௌதமஸூத்ரங்களை, குற்றமில்லாவகை-தப்பில்லாதபடி, வேதவிரோதமில்லாதபடி, கூட்டலுமாம் - யோஜிக்கவுமாம், கௌதமருடைய மாஹாத்ம்யத்தையும் ந்யாயவிஸ்தரத்தையும் ரக்ஷிக்கைக்கென்றபடி. கௌதமஸூத்ரங்களையாமூலசூடம் வேதாவிருத்தங்களா கபலாத்காரேணயிப்பிக்கையுசிதமென்றபடி. சிலஸூத்ரங்கள் கதஞ்சிதபிநேதுமசக்யங்களானுலோ வென்னில், கோது - அஸாராம்சத்தை, கழித்து - பரித்யஜித்து, வேதவிருத்தாம்சத்தை விட்டென்றபடி. ஒரு கூற்றில்-ஒருபாகத்திலே, குணங்களை-குணங்களை, கொள்ளவுமாம் - பரிக்ரஹிக்கவுமாம், அவிருத்தாம்சத்தை பரிக்ரஹிக்கவுமாமென்றபடி. கௌதமதந்த்ரம்க்ருத்ஸ்நமும் காணுததந்த்ரப்ரக்ரியாபரமென்று தத்க்ரந்தநிஷ்டர்கள் சொல்லுகையாலிதுதானு மசக்யமன்றேவென்னில், யாதும்-க்ருத்ஸ்நகௌதமஸூத்ரங்களையும், இகழ்ந்து - பரித்யஜித்து, யாமே- நாம்தாமே, ஒருநீதியை -ஒருந்யாயநிபந்தத்தை, வகுக்கவுமாம் - நிஷ்கர்ஷித்து ரசிக்கவுமாம், ‘‘பகவந்நாதமுநிபி: ந்யாயதத்வஸமாஹ்வயா। அவதீர்யாக்ஷபாதாதிந்யபந்திர்ந்யாயபத்ததி:’’ (பகவந்நாதமுநிபி: ந்யாயதத்வஸமாஹ்வயா। அவதீர்யாக்ஷபாதாதிந்யபந்திர்ந்யாயபத்ததி:) என்கிறபடியே பகவந்நாதமுநிபி: ப்ரணீதந்யாயதத்வ சாஸ்த்ரப்ரதர்சிதமார்கத்தாலே, நாந்தாமேயொருந்யாயவிஸ்தரத்தை லோகவேதவ்யவஹாராநு குணமாகவிரசித்து வித்யாஸ்தாநஸங்க்யாபூரணம் பண்ணிக்கொள்ளவுமாமென்றுகருத்து. இக்கட்டளையெல்லாம்-ஸ்ரீமந்யாயபரிசுத்தியிலே விசதமாகக்காணலாம். வேதியர் - வைதிகர்கள், நல்நயவித்தரம்-நல்லநயவிஸ்தரம், என்பது - என்று சொல்லுமது, மெய்யுளதே - ஸத்யமேயாயிருக்கும், ந்யாயவிஸ்தரவிஷயமாகவிப்படி

ப்ரகாரத்ரயம் ஸம்பவிக்கையாலே மந்வாதி மஹர்ஷிபரிகணிதமான ந்யாயவிஸ்தரா க்யவித்யாஸ்தாநத்துக்கு ஒருபடியாலு மொருகாலத்திலும் ஸ்வரூபலோபப்ரஸக்தி யில்லையென்று பிண்டிதார்த்தம். (கூஉ)

கஅகூ-மூ. நான்மறைக்குத்துணையாக நல்லோரெண்ணு நாலிரண்டிலொன் றான நயநூறன்னில், கூன்மறைத்தல் கோதுளதுகழித்தல் மற் றோர் கோணுதகோதில்வழி வகுத்தலன்றி, ஊன்மறைத்த வுயி ரொளிபோலொத்ததொவ்வாதுயரில்லாக்காணுதமுரைத்ததெல் லாம் வான்மறைக்க மடிக்கோலும் வண்ணமென்றேமற்றிதற்கார் மறுமாற்றம் பேசுவாரே. (கூகூ)

கௌதமகாணுததந்த்ரயோராக கண்ட்யாபிமாநிகளான தார்க்கிகாநிரஸிக்கைக் காக வந்தந்ததந்த்ரங்களுடைய வைதிகபரிக்ரஹண பரித்யாகங்களாலும் வேதாநு கூல்யப்ராதிகூல்யங்களாலுமுண்டானவைலக்ஷண்யத்தைக்காட்டுகிறார் நான்மறைக் கிதி. நான்மறைக்கு - நாலுவேதங்களுக்கு, துணையாக-ஸஹகாரிகளாக, நல்லோர் - நல்லவர்களாலே, ஆப்ததமரான மந்வாதிகளாலே, எண்ணும் - பரிகணிதமான, நாலி ரண்டில் - ஆறுகளிலே, ஷட்ஸங்க்யோபலக்ஷிதாகம் தசஸங்க்யோபலக்ஷணார்த்தம். வே தபரிகரத்வேநபரிகணிதவித்யாஸ்தாநதசகத்தில் அந்யதமமானவென்று நிஷ்கர்ஷம். ந்யாயவிஸ்தரமானது சிக்ஷாகல்பவ்யாகரண நிருக்தஜ்யோதிஷச் சந்தோவிசித்யாக்ய வேதாங்கஷட்காந்தர்த்த மல்லாமையாலே யதாச்ருததங் கூடாதிறே. யத்வா - நாலி ரண்டி லென்கிறபதம் அஷ்டஸங்க்யாபரம், அப்போது புராணதர்ம சாஸ்த்ரங்கள் வேதவாக்யார்த்தாநுவாதிதயா வேதவாக்யார்த்த ப்ரதீதியிலுபகாரகத்வேந விவ க்ஷிதங்களல்லாமையாலே தத்வ்யதிரிக்தமான வேதபரிகராஷ்டகத்தில் அன்யதமமான வென்று பொருளாகக்கடவது. நயநூல் தன்னில் - ந்யாயஸூத்ரத்திலே, கூன் - கௌடில்யத்தை, மறைத்தல் - ஆச்சாதிக்கை, கோதுளது - அஸாரமாக விருந்தவம் சத்தை, கழித்தல் - பரித்யஜிக்கை, மற்றோர் - வேறொன்றான, கோணுத - ருஜுதர மான, ப்ரதமபக்ஷாக்தரீத்யா பலாத்காரேண வேதமார்க்கத்திலே யிழுக்கும்படியன் றிக்கே வேதமார்க்கத்திலே ஸ்வரஸஸப்தமானவென்றபடி. கோதில்-அஸாராம்சரஹி தமான, த்விதீயபக்ஷவத் பரித்யாஜ்யாம்சத்தோடு கலக்காதிருக்கிறவென்றபடி. வழி- மார்கத்தை, வகுத்தல் - நிஷ்கர்ஷித்து ரசிக்கை, அன்றி - இப்படிபூர்வோக்தங்க ளான விரோதப்ரசமன விருத்தாம்சத்யாகாபூர்வநிர்மாணங்களில் ஒன்றைச்செய்தா லல்லது, ஒத்தது - ஸத்ருசத்தோடே, ஒவ்வாது - ஸத்ருசமாகாது, ந்யாயசாஸ்த்ரமிதி சேஷஃ. பூர்வோக்த ப்ரகாரத்ரயத்திலொன்றைப் பண்ணினுலல்லது ப்ரதாநபூதமான வேதத்தோடே கார்த்த ப்ரதீதிஸாதகத்வமாகிற ஸாத்ருச்யத்தை யடையமாட்டாதெ ன்று பிண்டிதார்த்தம். அத்ர த்ருஷ்டாந்தஃ ப்ரதர்சயதே, ஊன்மறைத்த வுயிரொளி போல் - ஊன் - சரீரத்தாலே, மறைத்த - ஆச்சாதிதமான, உயிர் - ஜீவனுடைய, ஒளிபோல் - தர்மபூதஜ்ஞாநம்போலே, கரணகளேபரவிஷமித ப்ரஸாரமான பத்த ஜீவஜ்ஞாநம் நிரங்குச ப்ரஸரைகாகாரமான முக்தஜ்ஞாநத்தோடே ஸத்ருசமாகா தாப்போலே பூர்வோக்த ப்ரகாரத்ரயத்திலொன்றிலில்லாதபோது வேதவிருத்தகல் பனுதந்த்ரமான கௌதமஸூத்ரம் நாராயணைக ப்ரவணமான வேதத்தோடொக்க லாமாகாதென்றபடி. உயரில்லா - உச்ரயமில்லாத, வைதிகபரிக்ரஹரூபோத்கர்ஷ சூன்யமான, காணுதம் - காணுதசாஸ்தரத்தாலே, உரைத்ததெல்லாம் - சொல்லப்ப ட்டப்ரமேயமெல்லாம். என்றே - ஏதேனுமொருநாள், வான் - ஆகாசத்தை, மறை க்க-ஆச்சாதிக்கைக்கு, மடிக்கோலும் வண்ணம் - மடிகட்டுமாப்போலே, அஸங்கத மிதிசேஷஃ. ந்யாயசாஸ்த்ரம் பூர்வோக்த ப்ரகாரத்ரயத்திலொன்றாலே வேதைககண் ட்யமா பாதயிதும் சக்யமாயிருக்கும், காணுதசாஸ்த்ரந்து; ஆமூல சூடம் வேதவிருத்த மாய் வைதிகாபரிக்ருஹீதமாய் அவைதிக பரிக்ருஹீதமாயிருக்கும், அவை யன்றி க்கே "தர்மம்வ்யாக்யாஸ்யாமஃ। யதோப்யுதயநிச்ரேயஸஸித்திஸ்ஸதர்மஃ, தத்வசநா தாம்நாயஃப்ரமாண" மென்று வைதிகதர்மநிருபணமாத்ரோபக்ஷீணமாய் தலைக்கட்டு

கையாலே ஆகாசாச்சாதநார்த்தமாக மடிகட்டுகைபோலேயஸங்கதமாயிருக்குமென்று நிர்களிதார்த்தம். மற்று - வேறே, ஆர் - எவர்கள், இதற்கு - இந்தவர்த்தத்துக்கு, மறுமாற்றம் - ப்ரகாராந்தரத்தை, பேசுவார் - சொல்லுவார்கள், ந்யாவிஸ்தரம் கதஞ்சித் ஸங்கதம், காணுதம் "கணாநாஹக்ஷயெஸ்காரஂ ஶாஹிஷாணிஉயீநிவா। யாக்தியாக்தஜா ஶுஜுஜோநத தஜாகஂஶளாவாஸ" கணுந்வாபக்ஷயேத்காமம் மாஹிஷாணிதநிவா। யுக்தியுக்தந்துக்ருண்ஹிமோநது தத்வாக்ய கௌரவாத், என்று பூர்வர்களுபஹஸித்தபடியே ஸர்வதைவாஸங்கதம், என்கிற நிர்வாஹத்திலே ப்ருஹஸ்பதிஸஹஸ்ரத்தாலும் மாருட்டஞ் சொல்லவொண்ணுதென்றுகருத்து. ()

க௮௪-மூ—ஈசனுமற்றணங்கு மிலதென்றெழினான் மறையில்
பேசியநல்வினையாற் பெரும்பாழுக்கு நீரிறைக்கும்
நீசனைநீதிகளல் நிகமாந்தத்தி னூல்வழியே
மாசின்மனங்கொடுத்தும் மறுமாற்றங்கண் மாற்றுவமே. (௯௪)

இப்படி ந்யாயவிஸ்தர விரோதத்தை நிஸ்தரித்து அவயவிபரமாண் வாத்யப்யுபகமத்தாலே நையாயிகஸஜாதீயரான மீமாம்ஸகாந்யரை சிக்ஷித்து ஜைமினிஸூத்திரத்தையும் பாதராயணஸூத்ராநுகுணமாக யோஜிக்கையே நிபுணக்ருத்ய மென்கிறார் ஈசனுமிதி. ஈசனும் - ஈச்வரனும், மற்று - வேறே, அணங்கும் - தேவதையும், ஈசனும் மற்றணங்கு மென்கிற விடத்திலே மகாரலோபோ த்ரமிடஸந்தி ஸ்வாபாவ்ய நிபந்தநஃ. இலதென்று - இல்லையென்று, ஸர்வகர்மஸமாராத்ய பரதேவதையும் தத்வாரபூதாக்நீந்த்ராதி அர்வாசீந தேவதைகளுமில்லை"விக்ரஹோஹவிராதாநம்யுகபத்கர்ம்மஸந்நிதிஃ। ப்ரீதிஃ ஃபலப்ரதாநஞ்சதேவதாநாம் நவித்யதே" (விக்ரஹோஹவிராதாநம்யுகபத்கர்ம்மஸன்னிதிஃ। ப்ரீதிஃ பலப்ரதாநஞ்சதேவதாநாம் நவித்யதே) என்கிறபடியே யிவைகளுக்கு விக்ரஹாதிகளுமில்லை, கிந்து சப்தமே தேவதை க்ரியாஜந்யா பூர்வமே பலப்ரதமென்று ப்ரமித்தென்றபடி. இதுக்கு பெரும்பாழுக்கு நீரிறைக்கு மென்றத்தோடே யந்வயம். எழில் - ப்ரமாண ஸார்வபௌமத்வே நோஜ்வலங்களான, நான்மறையில், நாலுவேதங்களிலே, பேசிய - சொல்லப்பட்டதான, விதிக்கப்பட்டதான, நல் - ஸமீசீநமான, பகவத் ப்ரீணநதயாபல ஸாதநமான வென்றபடி. வினையால் - கர்மத்தாலே, பெரும் - விஸ்தீர்ணமான, பாழுக்கு- ஊஷரக்ஷேத்ரத்துக்கு, நீர் - ஜலத்தை, இறைக்கும் - இறைக்குமவரான, நீசனை- நீசர்களை, கர்மாராத்யனாய் பலப்ரதனை வீச்வரனை யபலபித்து சேதநேதரமான வபூர்வம்பலப்ரதமென்று விச்வஸித்து ததர்த்தமாக பஹுவிதத்ரவ்யாயாஸ ஸாத்யமானகர்மத்திலே நிஷ்கம்பமாக மூளுகையாலே யத்யந்தோஷர க்ஷேத்ரம் பலிக்குமென்று ப்ரமித்து ததர்த்தமாக நிரந்தரகடயந்த்ரோ க்ஷேபக்லேசானுபவம் பண்ணுவாரைப்போலே யதிமந்த மதிகளான மீமாம்ஸகரை யென்றபடி. இதுக்கு மறுமாற்றங்கள் மாற்றுவ மென்கிறத்தோடே யந்வயம். த்விகர்மகத்வம் த்ரமிடவ்யவஹார ஸ்வாபாவ்யாத், நீதிகளால் - ந்யாயங்களாலே, நிகமாந்தத்தின் நூல்வழியே-நிகமாந்த ஸூத்ரமார்காநு குணமாகவே, மாசில் - அழுக்கில்லாததான, மாசு - மாலின்யம், மாசின்மன மென்கிற விடத்திலே லகாரத்துக்கு நகாராதேசஸ் ஸந்திக்ருதஃ. மனம்-மனஸ்ஸை, கொடுத்து-ஸ்பஷ்டம், "ஸஏநம்ப்ரீதஃ ப்ரீணாதி" த்யாதிஶ்ருதமான தேவதாதத்ப்ரீத்யாதியைவிட்டு அபூர்வமே பலப்ரதமென்று கல்பிக்கில் "சேதநஸ்த்வேகஏவேதிமதிர்யாகேவலக்ரியா। பலதீதிமதிஸ்தேத்வே வேதாப்ராமாண்யபுதிஜே" என்று ஸ்ரீக்ருஷ்ணமுநிகள் அருளிச்செய்தபடியே ஶ்ருதஹாநா ஶ்ருதகல்பநா ராத்ரி ஸத்ரந்யாய விரோதாதி தோஷங்கள் ப்ரஸங்கிக்கையாலே "பலமத உபபத்தேஃ" என்கிற சாரீரக சாஸ்த்ராநுகுணமாக "க்ரியாதஶ்சக்திவாஶக்ஶவிதஶுவஷுவஷுஂ விதஶுஹஶவஶுஸாதொவாகதஃ ஹவஉஜதிரஂமெஸகாஉஶுஶஃ। கூஉவெஷாவஷுஷெ ஹவஶவிஹவகவஷூணநஶிதி தஶுயீவஶுஸாஷுதஶிபிரவிஹவகஷி வஶுஶணஶிதி" (க்ரியாதச்சக்திர்வா கிம்பிததபூர்வம்பித்ருஸர ப்ரஸாதோவாகர்த்துஃ பலதஇதிரங்கேசகுத்ருசஃ। த்வதர்சேஷ்டாபூர்த்தேபலமபி பவத்ப்ரீணநமிதித்

ரயீவ்ருத்தாஸ்தத்தத்விதிரபிபவத்ப்ரோணமிதி) என்று பட்டபராசரர் நிர்வஹித்த படியே ஈச்வரனே கர்மாராத்யன் தத்ப்ரஸாதமேத்வாரமென்று ஸமீசீநபுத்தியையுண் டாக்கி யென்று நிஷ்கர்ஷம். மறுமாற்றங்கள் - ப்ரகாராந்தங்களை, மாற்றுவம்-போக் குகிறோம். (ரு௪)

௧௮௫-மூ—கனைகடல்போலொரு நீராஞ்சூத்திரத்தைக் கவந்தனையுமிராகு வையும் போலக்கண்டு, நினைவுடனே நிலைத்தருமமிகழ்ந்து நிற் கு நீசர்நிலை நிலைநாடாவண்ண மெண்ணி, வினைபரவு சைமினி யார் வேதநூலை வேதாந்தநாலுடனே விரகாற்கோத்த, முனை யுடைய முழுமதிநம் முநிவர்சொன்ன மொழிவழியே வழியெ ன்று முயன்றிட்டோமே. (ரு௫)

பூர்வோத்தர மீமாம்ஸைகளுக்கு சாஸ்த்ரைக்யதையை ஸம்பரதாயோப பத்திக ளாலே ஸமர்த்தியா நின்றுசொண்டு நிரீச்வரமீமாம்ஸக மதநிராஸநத்தை நிகமிக்கிறார் கனைகடலிதி. கனைகடல்போல் - சப்தாயமான ஸமுத்ரம்போலே, ஒருநீராம் - ஏக ஜலமானபடியான, சூத்திரத்தை, ஏகோதகமான ஸமுத்ரம்போலே ஏகசாஸ்த்ரமான பாகத்வயாத்மகமான மீமாம்ஸாதந்த்ரத்தை யென்றபடி. ஏகோதகாநாஞ்சதுர்ணும பிஸமுத்ராணும் ப்ராச்யோதீச்யாவாந்தர பேதங்கள் ஏகாவயவித்வ விரோதிகளல் லாதாப்போலே த்வயோரபி மீமாம்ஸயோஃ வேதாந்த விசாராத்மகத்வரூபை கோ பாத்யவச்சின்னயோஃ காண்டாத்யவாந்தர பேதங்க ளேகாவயவித்வ விரோதிகளன் றென்று ஸமுத்ரத்ருஷ்டாந்தத்தாலே விவக்ஷிதம். கவந்தனையும் இராகுவையும்போ லே - கபந்தனையும் ராஹுவையும்போலே, கண்டு - பார்த்து, பூர்வோத்தர பாகங் களைக் கபந்தராகுக்களைப்போலே யத்யந்த பின்னுவயவிகளாகப்பார்த்தென்றபடி. சாஸ்த்ரபேத மங்கீகரிக்கில் சாஸ்த்ரத்வயமு மத்யந்த ஸாகாங்க்ஷத்வேந பர்யவஸித மாய் முடியுமென்று கபந்தராஹு த்ருஷ்டாந்தத்தாலே ஸ்போரிதம். நினைவுடனே- புத்திபூர்வகமாகவே, நிலைத்தர்மம்-ஸ்திரதர்மத்தை, இகழ்ந்து நிற்கும்நீசர்நிலை நிலைநா டாவண்ணம் எண்ணி-, ப்ரலோபித்து ஸத்வாரகமாகவு மத்வாரகமாகவும் ஸர்வகர்ம ஸமாராத்யனுய் பலப்ரதனுகையாலே (க்ருஷ்ணம்தர்மம்ஸநாதநம்) என்கிறபடியே ஸித்ததர்ம பூதனுன வீச்வரன் ஶ்ருதீதிஹாஸ புராணங்களாலே யஸக்ருத்குஷ்யமா ணு யிருக்க வாஸரஸ்வபாவத்தாலே யவனையபலபித்து சேதநேதரமான கர்மமே பலப்ரதமென்றிருக்கும் நிரீச்வரமீமாம்ஸகருடைய மதம்ப்ரதிஷ்டிதமாகாதபடி யுபா யத்தை சிந்தித்தென்றபடி. இதுக்கு கோர்த்தவென்கிறத்தோடே யந்வயம். வினை- கர்மங்களாலே, பரவு - விஸ்தீரணமான, சைமினியார் - ஜைமினியுடைய, வேத நூல் - வேதவ்யாக்யாநரூபமான ஸூத்ரத்தை, நாநாவித கர்மவிதாயக கர்மபேதேதி கர்த்தவ்யதா பூத ஜைமினிதந்த்ரத்தை யென்றபடி. சைமினியாரென்கிற பஹுவசந த்தாலே வ்யாஸசிஷ்யத்வ ப்ரும்மஸம்வாத தார்ட்யாதிகளாலே பரமாஸ்திகதயா ப்ர ஸித்தரான விவருக்கு ஸ்வாசார்யாபிப்ராய விருத்தமான ஶ்ருதிஸஹஸ்ர சூடாமணி பூதேச்வராபலாபத்திலே தாத்பர்யகல்பநம் மதிமாந்த்ய ப்ரயுக்தமென்று வ்யஞ்ஜிதம். வினைபரவுமென்கிற ஸூத்ரவிசேஷணத்தாலே தேவதாநிராகரண பரத்வேநப்ரதீத ங்களான சிலநாவமிக ஸூத்ரங்களும் "[Grantha script quotation] "(அபீ ஷ்டார்த்தவ்யயேநாபிஜயதிக்ஷேத்ரஹாரிணம் லப்தக்ஷேத்ரைர்நதுஷப்ரபஸ்யாதர்த் தஇதிநிச்சயாத்) என்கிறந்யாயத்தாலே கர்ம்மண்யச்ரத்தா வாரணுய கர்மப்ரரோசநார் த்தா ந்வாருஹ்யவாத ரூபங்களாகையாலே அந்யபரங்களென்றுத்யோதிதம். விர கால் - உபாயத்தாலே, வேதாந்தநூலுடனே - வேதாந்தஸூத்ரத்தோடே, கோர்த்த- சேர்த்தவர்களான, பூர்வோத்தர.தந்த்ரங்களுக்காபாததஃ ப்ரதிபந்நங்களான விரோத ங்களை ஸம்யங்ந்யாயங்களாலே சமிப்பித்து சாஸ்த்ரைச்ய ஸமர்த்தநம் பண்ணினவர்க ளான வென்றபடி. இதுக்கு முனிவரென்கிறத்தோடே யந்வயம். முனையுடைய-தை க்ஷண்யத்தையுடையதான, முழு - புஷ்கலமான, மதி - க்ஞானத்தையுடையவரான,

நம்முனிவர் - நம்முடையமுநிகளாலே, தத்விரோத ப்ரசமனுநாநுகூல தைக்ஷண்ய சாலி ஸர்வவ்யாபகப்ரக்ஞுன பகவத்போதாயந யாமுநபாஷ்யகாராதிகளாலே யென்றபடி. முழுமதி யென்கிற வித்தாலே கபந்தாஹு மீமாம்ஸகவசனைக தந்த்ர மாத்ர விச்ராந்தஜ்ஞான வ்யுதாஸ:. சொன்ன - சொல்லப்பட்ட, மொழிவழியே-ஸூக்திமார்கமே, வழியென்று - மார்கமென்று, முயன்றிட்டோம் - ப்ரதிபாதிதம்தாய. ()

௩அசு-மூ. முக்குணமாய் நின்றமூலப்பிரகிருதிக் கழியார்,
அக்குணமற்றவருத்துணை மற்றதற்கீசனில்லை,
யிக்கணனைப் படியையைந் துமெண்ணின்முன்முத்தியென் னும்,
பக்கணவீரர் பகட்டைப் பழுதாக்குவமே. (௩௬)

இப்படி மீமாம்ஸக நிராஸநாநந்தர மீச்வராபலாபத்தாலே யிவர்களுக்கு ஸஜாதீயரான நிரீச்வரஸாங்க்யரை நிராகரிக்கிறுர் முக்குணமிதி முக்குணமாய்நின்ற - ஸத்வரஜஸ்தமோலக்ஷண குணத்ரயரூபமாயிருந்த, மூலப்பிரகிருதி - மூலப்ரக்ருதிக்கு, ஸத்வரஜஸ்தமோ ரூபங்களான மூன்றுத்ரவ்யங்கள் ஸமாவஸ்த்தாபன்னங்களான போதுமூலப்ரக்ருதியென்று பேர்பெற்றிருக்குமென்று ஸாங்க்யமதப்ரக்கியா, த்ரவ்யங்களான ஸத்வாதிகளிலபியுக்தாநாம் குணசப்தப்ரயோகம் பரஸ்பரா ப்ரதக்ஸித்தி மாத்ரத்தாலே யௌபசாரிகமென்று தேஷாமாசய:. அழியா - அநச்வரமான, நித்யமான, இது - அருவுக்குவிசேஷணம், அக்குணம் - அந்தகுணங்களாலே, அற்று - சூன்யமான. அரு - ஸூக்ஷ்மபதார்தம். ஜீவனென்றபடி, துணை - ஸஹாயம், கர்த்ரியான மூலப்ரக்ருதி மஹதாதிரூபேண விகரிக்கும்போது குணத்ரயசூந்யனுய் நித்யநிர்லேபனுன ஜீவன் ஸஹகாரியென்றபடி. அதற்கு - அந்தப்ரக்ருதிக்கு, மற்று ஈசனில்லை - வேறே ஈச்வரனில்லை, பயோம்புபச்வந்த்தலோஹாயஸ்காந்தந்யாயேந ப்ரக்ருதிபுருஷாப்யாமேவ ஸர்வவிதபரிணமமுமுப்பன்னமாயிருக்க ப்ரக்ருதி ப்ரேரகனுன வீச்வரனென்றொருவனைக்கல்பிக்கை கௌரவ பராஹதமென்று இப்படி தன் மததத்வப்ரக்கியையை யனுவதித்தினி யுபாயபுருஷார்த்தங்களை யனுவதிக்கிறுர், இக்கணனைப்படி - இந்த காபிலதந்த்ரோக்த கணனுப்ரகாரத்தாலே, ஐயைந்தும்- இருபத்தைந்தும், "மூலப்ரக்ருதிரவிக்ருதிர்மஹதாத்யா: ப்ரக்ருதிவிக்ருதயஸ்ஸப்த । ஷோடசகஸ்து விகாரோ ந ப்ரக்ருதிர்ந விக்ருதி: புருஷ:" (மூலப்ரக்ருதி ரவிக்ருதிர்மஹதாத்யா: ப்ரக்ருதி விக்ருதஸ்ஸப்த ; ஷோடசகச்சவிகார: நப்ரக்ருதிர்நவிக்ருதி: புருஷ:) என்று ஸாங்கியபரிகணிதையான தத்வபஞ்சவிம்சதியை யென்றபடி. எண்ணில் - விசதமாகவிவேசித்தால், முன்முத்தி - பூர்வஸித்தமான மோக்ஷம், ஸர்வகார்யவாதிகளான விவர்களுக்கு மோக்ஷமாவது பூர்வஸித்தஸ்வருபாவிர்ப்பாவ ரூபமாகையாலே முன்முத்தியென்றது. யத்வாமுத்தி - மோக்ஷமானது, முன் - எதிரே நிற்கும், ஸுலபதமமென்றபடி. என்றும் - இப்படி சொல்லுமவரான, பக்கணவீணர்-சபராலயவர்த்திகளான வ்யர்த்தஜல்பாகர்களுடைய, பக்கணச் சபராலாய:. ஆபாதருடம் வேததந்கங்களாலே யுத்குஷ்யமாணனுன வீச்வரனை யறியாமையாலே சபராலயவாஸ்தவ்யஜநங்கள் போலேயதிபாமரராய் வேதமர்யாதாலே சமறியாதே வ்ருதாகபிலதந்த்ரபரிச்ராந்தரான ஸாங்கயர்களுடைய வென்றபடி. பழம் பகட்டை - அனுதியான வ்யாமோஹத்தை, பழுதாக்குவம் - வ்யர்த்தமாக்குகிறோம். அவர்களுடைய குஹேதோபதேசத்தை யொருவரும் விச்வஸியாதபடி பண்ணுகிறோமென்றபடி. (௩௬)

௩அஎ-மூ. ஈசனிலனென்பதனுலென்றுஞ் சீவரெங்குமுளரிலருணர் வை
யென்ற வைத்தால் பாசமென்றும் பிரகிருதிதன்னுலென்னும்பல
மூமிலை விடுமிலையென்னும பண்பால் காசிநீர்முதலான காரிய
ங்கள் கச்சபத்தின்கால் கைபோலென்னுங்கத்தால் நாசமிலதி
லைகாணுஞாலத்துள்ளீர் நாமிசையாச்சாங்கியத்தை நாடுவார்
க்கே. (௩எ)

ஸாங்க்யதர்சநத்திற்கு ச்ருதிவிரோத பூர்வாபரவசநவிரோத யுக்தி விரோதைஃ ப்ரதியுத அனுதரணீயதையைக்காட்டுகிறார், ஈசனிதி. ஈசன் - ஈச்வரன், இலன் - இல்லை, என்பதனால் - என்று சொல்லுகையாலும், சிவர்-ஜீவர்கள், என்றும் - ஸ்பஷ்டம், எங்கும்-ஸர்வத்ர, உளர்-இருப்பார்கள், நித்யவிபுக்களென்றபடி. உணர்வையில ரென்றுமாறியந்வயிப்பது. ஜ்ஞானசூந்யரென்றுபொருள். என்றவத்தால் - என்கிற வந்தவசனத்தாலும், ச்ருதிஸித்தேச்வராபலாபத்தாலும் அணுத்வேத ஜ்ஞாத்ருத்வேவசச ச்ருதிப்ரதிபன்னரான ஜீவரை விபுக்களாகவும் ஜ்ஞானமாத்ரஸ்வரூபராகவும் சொல்லுகையாலுமென்று ப்ரதமசரணார்த்தம். இத்தால் ச்ருதிவிரோதஃ ப்ரதர்சிதஃ. இந்த ஹேதுக்களுக்கெல்லாம் நாமிசையாச்சாங்கியத்தோடந்வயம். பாசமென்றும் - புருஷனுக்கு பந்தகதயாப்பாசமென்று சொல்லப்படுமேதான, பிரகிருதி தன்னால் - ப்ரக்ருதியாலே, என்றும்-ஒருவனாலும், பலமுமில்லை - பலபர்யாயமான ஸம்ஸாரபோகமுமில்லை, வீடுமில்லை - மோக்ஷமுமில்லை, என்னும்பண்பால் - என்கிற காதையாலும், புருஷஸ்யதர்சனார்த்தம் கைவல்யமென்று தொடங்கி புருஷபந்தமோக்ஷஹேது ப்ரக்ருதியென்று சொல்லிவைத்தே "தஸ்மாந்ந பத்யதேநாபிமுச்யதே நாபிஸம்ஸரதிகச்சித்" என்று புருஷனுக்கு பந்தமோக்ஷங்களில்லையென்று சொல்லுகையாலும் என்று த்விதீயசரணார்த்தஃ. இத்தால் "விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்" என்கிற ஸூத்ரத்தின் படியே பூர்வோத்தரஸ்வவசந விரோதம் சொன்னபடி. காசினிநீர்முதலான-ப்ருதிவீ ஸலிலப்ரப்ருதிகளான, காசினி - ப்ருதிவீ, காரியங்கள் - கார்யங்கள், கச்சபத்தின் - கச்சபத்தினுடைய, கால்கைபோல் - பாதபாணிகள்போலே, என்றுங்கத்தால் - என்கிற ஜல்பத்தாலும், ஆமையுடைய சரீரத்திலே பாதாத்யவயவங்கள் பூர்வஸித்தங்களாயாகுஞ்சித ப்ரஸாரிதங்களாகிறாப்போலே மஹதாத்யவஸ்தாகார்யங்களும் நித்யஸித்தங்களாய் ப்ரளயஸர்க்கதசைகளிலே ஸங்கோச விகாஸசாலிகளாயிருக்குமல்லது கதாசிதபி அபூர்வாவஸ்த்தாந்தராபத்தி யில்லை என்கிற வபிவ்யக்த்திபக்ஷாங்கீகாரத்தாலுமென்று த்ருதீயசரணார்த்தஃ. இத்தாலபிவ்யக்த்தி பக்ஷத்திலாரம்பணாதிகரணபாஷ்யோக்தயுக்திவிரோதஸ்ஸூசிதஃ. ஞாலத்துள்ளீர் - பூமண்டலவர்த்திகளே, இதுஸம்போதநம், நாம் - ப்ரதிபுத்தரான நம்மாலே, இசையா - அங்கீகரிக்கப்படாததான, சாங்கியத்தை - ஸாங்க்யத்தை, நாடுவார்க்கு - தேடுவார்க்கு, நாசமிலது - நாசமில்லாத, பலம் - மோக்ஷம், இலைகாணும் - கிடையாது கிடீர். (௬எ)

கசஅ மு—தாவிப்புவனங்கள் தாளிணைசூட்டிய தந்தையுந்திப்
பூவிற்பிறக்கினும் பூதங்களெல்லாம் புணர்த்திடினும்
நாவில்பிரிவின்றி நாமங்கைவாழினு நான்மறையில்
பாவித்ததன்றி யுரைப்பதுபாறும் பதர்த்திரளே. (௬அ)

இப்படி நிரீச்வரஸாங்க்யமதத்தை நிரஸித்து இனிமேல் ஸேச்வரஸாங்க்ய ஸம்ஜ்ஞஹைரண்யகர்ப்ப பக்ஷத்தை நிரஸிக்கிறார். அதுசெய்யு மிடத்தில் ஹிரண்யகர்ப்பன் பகவதௌரஸபுத்ரனாய் ஸர்வஸ்ரஷ்டாவாய் வாக்தேவதா வல்லபனாகையாலே யவனுக்கு ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸாகரணபாடவங்களுக்கு ஸம்பாவனையில்லாதிருக்க தத்ப்ரணீதமான யோகதந்த்ரத்துக்கு அப்ராமாண்யங்கொள்ளுகை யனுபபன்ன மன்றோவென்று பிறக்கும் சங்கையை யனுவதித்துப் பரிஹரிக்கிறார் தாவியிதி. புவனங்கள் - புவனங்களை, தாவி - தாவனம்பண்ணி, தாளிணை - சரணயுகளத்தை, சூட்டிய - சிரஸ்ஸிலே யலங்காரமாக விந்யஸித்தவனான, தந்தை - பிதாவினுடைய, உந்திப்பூவில் - உதரபுஷ்பத்திலே, நாபீகமலத்திலே யென்றபடி. பிறக்கினும் - ஜநித்தாலும், லோகவிக்ரமணதசையிலே ஸர்வஜநங்களுடைய சிரஸ்ஸிலேயு மருணஸரஸிஜகுமாரங்களான திருவடிகளை யனுலோசித விசேஷமாக விந்யஸித்தலங்கரித்தவனான ஸர்வஜகதவ்யயபிதாவினுடைய நாபீகமலத்திலே யுத்பன்னனானாலுமென்று நிஷ்கர்ஷஃ. இத்தால் யோகசாஸ்த்ரவக்தாவான ஹிரண்யகர்ப்பன் பகவதௌரஸபுத்ரனாகையாலே யிவனுக்கு ப்ரமப்ரமாத ஸம்பாவனையில்லையென்று வ்யஞ்ஜிதம். பூதங்களெல்லாம்-ப்ராணிகளை யெல்லாவற்றையும், புணர்த்திடினும் - ஸ்ருஷ்டித்தாலும், இத்தால் லோகஸ்ரஷ்டாவான விவனுக்குத் தன் ப்ரஜைகள் விஷயத்திலே விப்ர

லிப்ஸை யஸம்பாவிதமென்று த்யோதிதம். நாவில்-ஜிஹ்வையிலே, பிரிவின்றி - ஒருநாளும் விச்லேஷ மன்றிக்கே, நாமங்கை - வாக்தேவதை, வாழிலும் - வஸியாகின்றலும், இத்தாலவனுக்கு அந்யஸ்மிந்வக்தவ்யேந்யஸ்யவசநமாகிற கரணபாடவம் அஸம்பாவிதமென்று த்வநிதம். நான்மறையில் – நாலுவேதங்களில், பாவித்ததன்றி – பாவிதமான ப்ரமேயமன்றிக்கே, உரைப்பது - சொல்வது, ஹிரண்யகர்ப்பனாலே இதி சேஷ꞉. வேதவிருத்தங்களான நிமித்தோபாதானபேதாதி யோகசாஸ்த்ரப்ரமேய மென்றபடி. பாறும் - பறந்து போகாநிற்கிற, பதர்த்திரள் - துச்சதாந்யபுஞ்ஜங்கள், யோகசாஸ்திரத்திலும் வேதவிருத்தாம்சம் பரித்யாஜ்ய மென்றபடி. ஹிரண்யகர்ப்பன் க்ஷேத்ரஜ்ஞனாகையாலும் விஷமவிபாகதந்த்ர ஸம்ஸாரப்ரவர்த்தனதிக்ருதனாகையாலும் அவனுக்கு ப்ரமவிப்ரலிப்ஸைகள் கூடுகையாலும் தத்ப்ரணீத சாஸ்த்ரத்திலே யப்ராமாண்யமுண்டாகலாமென்று ஹ்ருதயம். (௩அ)

க அ௯-மூ—காரணனாயுலகளிக்குங் கண்ணன்தேசைக் கண்ணாடிநிழல்போலக் காண்கையாலும், தாரணையின் முடிவானசமாதிதன்னைத் தனக்கேற்றும் விளக்கென்று தனிக்கையாலும், காரணமாமது தனக்குப் பயனாஞ்சீவன் கைவலியநிலையென்று கணிக்கையாலும், கோரணியின் கோலமெனக் குறிக்கலாகுங் கோகனதத் தயன் கூறுஞ்சமபக்கூறே. (௩௯)

யோகசாஸ்த்ரத்துக்கு நான்மறையில் பாவித்ததன்றியென்று முன்பு ஸாமான்யேநதர்சிதமான வேதவிரோதத்தை விசேஷித்துக் காட்டாநின்று கொண்டு இது விப்ரலிப்ஸாமூலகமே யாகவேணுமென்கிறார் காரணனாயிதி. காரணனாய் – ஜகந்நிமித்தோபாதாநபூதனாய், உலகு - லோகங்களை, அளிக்கும்-ரக்ஷிக்குமவனான, கண்ணன்-க்ருஷ்ணனுடைய, தேசை-தேஜஸ்ஸை, இது மற்றுமுள்ள ஜ்ஞாநாதிகளுக்கு முபலக்ஷணம். கண்ணாடிநிழல்போல-தர்ப்பணத்தில் தோற்றின ப்ரதிபிம்பத்தைப்போலே, காண்கையாலும்-நிரூபிக்கையாலும், "பராஸ்யசக்திர்விவிதைவ ச்ரூயதேஸ்வாபாவிக்ஜ்ஞானபலக்ரியாச" இத்யாதிச்ருதிகள் பகவத் கல்யாணகுணங்கள் ஸ்வாபாவிகங்களென்றுத் கோஷியாநிற்க வவைகள் முகாத் யாபிமுக்யோபாதிக தர்பணச்சாயாந்யாயத்தாலே ப்ரக்ருதிபுருஷாபி முக்யோபாதிகங்களென்று சொல்லுகையாலு மென்று தாத்பர்யம். இது மற்றுள்ள நிமித்தோபாதாநங்களுக்கு முபலக்ஷணம். இத்தாலித்தந்த்ரத்துக்கு தத்வாம்சத்திலே வேதவிரோதம் சொன்னபடி. தாரணையில்-தாரணையில், முடிவான-பர்யவஸாயியான, சமாதிதன்னை-ஸமாதியை, தனக்கு-ஸ்வாத்மதர்சநார்த்தமாக, ஏற்றும் - கொளுத்தப்பட்டதான, விளக்கென்று - தீபமென்று, தனிக்கையாலும்-பிரிக்கையாலும், த்ருவாநுஸ்ம்ருதி பர்யவஸாயியாய் அந்தர்பாவித தீப பரமாத்மதர்சந ப்ரதாநமான மோக்ஷோபாயோபாஸநத்தை ஜீவாத்மதர்சநப்ரதானமாக வேகதேசத்திலே விச்ரமிப்பிக்கையாலு மென்றபடி. இத்தாலுபாயாம்சத்திலே வேதவிரோதம்சொன்னபடி. காரணமாமதுதனக்கு-காரணமாமதுக்கு, உபாயமான உபாயத்துக்கென்றபடி. சீவன்-ஜீவனுடைய, கைவலியநிலை-கைவல்யஸ்த்திதி, பயனாம்-பலமாம், என்று கணிக்கையாலும் - எனறு கணிக்கையாலும், த்ருவாநுஸ்ம்ருதி ரூபதயாத்யந்ததுஷ்கரமான ஸமாதிக்கு மலைகல்லியெலிபிடிக்குமாப்போலே அல்பரசமான ப்ராக்ருதிவியுக்தஜீவஸ்வரூபானுபவம் பலமாமென்று சொல்லுகையாலு மென்றபடி. இத்தால்புருஷார்த்தத்திலே வேதவிரோதம் சொன்னபடி. கோகநதத்து - கோகநதோத்பன்னனான, அயன் - அஜனாலே, கூறும் - சொல்லப்பட்டதான, சமயக்கூறு - ஸமயவார்த்தை, ஹிரண்யகர்ப்போக்த யோகஸமயவசநம், கோரணியின்-நர்த்தநத்தினுடைய, கோலம் - அலங்காரம், என - என்று, குறிக்கலாகும் - சொல்லலாம், ஸாமாஜிகவ்யாமோகனார்த்தநடபூமிகாபரிக்ரகந்யத்தாலே மந்தமதிவ்யாமோகநார்த்த விப்ரலம்பவசநமென்று நிச்சயிக்கலாமென்று கருத்து. (௩௯)

க௯௦-மூ—சாதுசனங்களெல்லாஞ்சச்சையென்னுஞ்சலம்புணர்த்தார்
கோதமசாபமொன்றாற்கொடுங்கோலங்கள்கொண்டிலகில்

பூதபதிக்கடியாரெனநின்றவன்பொய்யுரையால்
வேதமகற்றிநிற்பார் விகற்பங்கள் விலக்குவமே. (௪0)

இப்படி யோகஸித்தாந்த நிஷ்டரைநிரஸித்து நிமித்தமாத்ரேச்வர வாதத்தாலே இவர்களுக்கு ஸஜாதீயரான பாசுபதரை பஹிஷ்கரிக்கிறார். சாது சனங்களெல்லாம்-ஸாது ஜநங்களெல்லாரும், சச்சையென்னும் - அஸாரமென்று சொல்லும்படியான, சலம் - சலத்தை, ச்சலமாவது - வக்து ரநபிமதார்த்தாரோபேண தூஷணம். இங்கு ச்சலசப்தத்தாலே மித்யாதோஷாரோபம் விவக்ஷிதம். புணர்த்தார் - சொன்னவர்களான, இது வேதமகற்றி நிற்பார்க்கு விசேஷணம். உத்கடாபத்தசையிலே ஸர்வவித ரக்ஷகனான கௌதமமஹர்ஷி விஷயத்திலே க்ருதக்நதையாலே தங்களை சிஷ்டரெல்லாரும் கர்ஹிக்கும்படி குருபாதகமான கோஹத்தியையாரோபித்தவர்களான வென்றபடி. கொதமசாபமொன்றால்-ஒருகௌதமசாபத்தாலே, கொடும் - க்ரூரங்களான, கோலங்கள் - வேஷங்களை, கொண்டு-ஸ்வீகரித்து, "த்ரிபுண்ட்ரதாரிணோயூயம் பஸ்மோத்தூளநதத்பரா:। பவிஷ்யதத்ரயீபாஹ்யாமித்யாஜ்ஞானப்ரலாபிந:" என்கிறகௌதமருடைய சாபத்தாலே பரிபூதராய் ஜடா பஸ்ம ருத்ராக்ஷ தாரணாதிகளாலே பயங்கர வேஷரா யென்றபடி. த்வாதசவார்ஷிகதுர்ப்பிக்ஷத்திலே கௌதமராலேரக்ஷிதரான வஷ்டாசத்வாரிம்சத்ஸஹஸ்ரப்ராஹ்மணர்கள் முடிவிலே போகிறபோது கௌதமரிடத்திலே கோஹத்தியையாரோபித்து குபிதரானவவராலே சப்தராய் பாஷண்டரானார்களென்று ஸ்ரீமத்வாராஹபுராணாதிகளிலேப்ரஸித்தம். உலகில் - லோகத்தில், பூதபதிக்கு - பூதபதிக்கு, அடியாரென - தாஸரென்னும்படி, நின்று-இருந்து, யச்சீலஸ்வாமிகயாயத்தாலே பூதபதிதாஸாநாம் பூதபதிவத் பயங்கரவேஷத்வம் ப்ராப்தமிறே. அடியாரென நின்றென்கிறவித்தால் மகாரார்த்த பூதரான விவர்களுக்கு பகவத்சேஷத்வமே ஸ்வாபாவிகம், பூதபத்யாதி சேஷத்வம் சாபமூலகமாக வந்ததென்று ஸூசிதம். அவன் - அந்தபூதபதியுடைய, பொய்யுரையால்-மித்யாபாஷணத்தாலே, தத்ப்ரணீதவ்யாமோகனார்த்த பாசுபததந்த்ரத்தாலே யென்றபடி. வேதம்-வேதத்தை, அகற்றி - பரித்யஜித்து, நிற்பார் - நிற்குமவருடைய, வேதவிருத்த பகாஸநஸ்த் தாத்மத்யாந ஸூராகும்பஸ்தாபந தத்ஸ்த்த தேவதார்ச்சனாத்யாசாரநிஷ்டரான பாசுபதருடைய வென்றபடி. விகற்பங்கள், கபாலிக காளாமுகாத்யவாந்தர மதபேதந பரஸ்பரவிருத்தார்த்தங்களை யென்றபடி. விலக்குவம்-நிராகரிக்கிறோம், பஹிஷ்கரிக்கிறோம். (௪0)

௯௬௧-மூ— மாதவனே பரனென்று வையங்காண மழுவேந்தி மயல்தீர்க்க வல்லதேவன், சைதவமொன்று கந்தவனைக் கடியசாபங் கதுவியநயதின்பலத்தை கருதிப்பண்டை, வேதநெறியணுகாத விலங்குதாவி வேறாகவிரித்துரைத்த விகற்பமெல்லாம், ஓதுவது குத்திரத்துக் கென்றுரைத்தா னோதாதேயோதுவிக்கு மொருவன்தானே. (௪௧)

ஸர்வஜ்ஞத்வேந ப்ரஸித்தனான பசுபதிக்கு ப்ரமாதிஸம்பாவனை யில்லாதபடியாலே யவன்பொய்யுரையால் என்றது பபன்னமோ; ப்ரமமில்லையே யாகிலும் கௌதமசாப பகவதாஜ்ஞாதிமூலக விப்ரலிப்ஸா நிபந்தநமாகையாலே பொய்யுரை யென்னலாமென்னில் அப்போது தத்வாக்யம் பலிக்கும்படி யெங்ஙனே யென்று பிறக்கும் சங்கையை சபலபுருஷசித்த வ்யாமோஹநார்த்தமாக சிலஸத்ய வசநங்களு முண்டாகையாலே பலிக்கலாமென்று கருத்தாலே பரிஹரியா நின்றுகொண்டு இவ்வர்த்தம் பகவத்வசநஸித்த மென்கிறார். ஓதாதே - ஸ்யமக் அத்யயநம்பண்ணாதேதானே, ஓதுவிக்கும் - பரருக்குபதேசிக்குமவனான, ஒருவன்தானே-அத்விதீயனான வீச்வரன்தானே, "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம் யோவைவேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை" என்கிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கும் வேதோபதேஷ்டாவாகையாலே தனக்கு மேலொரு குருவில்லாதபடி ஸ்வதந்த்ரகுருவான நாராயணன் தானே யென்றபடி. இதுக்குரைத்தானென்கிற வாக்யாந்தக்ரியையோடே யந்வயம். பகவத் வாசக சப்தாந்தரங்களிருக்கச்செய்தே பகவானை ப்ரதமகுருவாக நிர்தேசித்தது பசுபதிப்ரணீத

தந்த்ரத்தில் காட்டில் தத்பரமகுருவான பகவானுடைய தத்தந்த்ரஹேயதாப்ரதிபா தக வாக்யத்துக்கு ப்ராமாண்யம்ஸ்வதஸ்ஸித்தமென்று ஸூசநார்த்தம். மாதவனே - மாதவனொருவனே, பரன் - ஸர்வஸ்மாத்பரன், அவதாரணத்தால் தேவதாந்தரவ்யு தாஸ:. என்று-இப்படி, வையங்காண - லோகமெல்லாங் காணும்படி, மழு-மழுவெ ன்கிற வாயுதத்தை, ஏந்தி - எடுத்து, மயல் - ப்ரமத்தை, தீர்க்கவல்ல - நிவர்த்திப்பி க்க ஸமர்த்தனுன, தேவன்-தேவனாலே, பாத்மோத்தரகண்டத்திலே சபதபூர்வகமாக பகவத்பாரம்யத்தை யுபதேசிக்கையாலே இவன் மழுவேந்தினது லோகங்களுக்கு தேவதாந்தர பாரம்ய நிவர்த்தனார்த்தமாக தப்தாய:பிண்ட தாரணம் பண்ணினபடி யோ வென்றுத் ப்ரேக்ஷிக்கும்படி யிருக்கிற மஹாதேவனாலே யென்றபடி. இதுக் குரைத்த வென்கிறத்தோடேயன்வயம். கைதவமொன்று - ஒருகபடத்தை, உகந்தவ ரை-அபிலஷித்தவர்களை யென்றபடி. கௌதமரிடத்திலே மித்யா தோஷாரோபிகளா ன ப்ராம்மணர்களை யென்றபடி. உகந்தவரையென்கிற வித்தால் ருசிபூர்வக பாபபலம் க்ரூரதம மென்று ஸூசிதம். கடியசாபம்-க்ரூரசாபத்தை, ததுவியனுய்-அடைவிக்க கடவனாய், அதின்பலத்தை-அந்த சாபத்தினுடைய பலத்தை, கருதி - நிர்த்தாரித்து, கௌதம மஹர்ஷி சப்தப்ராஹ்மணர்க்கு க்ரூரதம தத்சாப பலானுபவார்த்தமாக அதோகதிப்ராபக பாஹ்யதந்த்ரங்களை ரசிப்போமென்று நிச்சயித் தென்றபடி. இது க்கு உரைத்த வென்கிறத்தோடே யன்வயம். பண்டை - அநாதியான, வேதநெறி - வேதமார்கத்தை, அணுகாத - கிட்டாதபடி, விலங்கு - ச்ருங்கலையை, தாவி - அதிக்ர மித்து, வேருக - ப்ருதக்காக, விரித்து-விஸ்தரித்து, உரைத்த-சொல்லப்பட்டதான, விகற்பமெல்லாம் - விவிதகல்பங்களை யெல்லாம், ஸர்வவைதிகதுர்மோச வேதமர்யா தா நிகளநிர்களந பூர்வகமாக "நிச்வாஸஸஹிதாயாஸ ரக்ஷாமாதாப்ரமாணத:" இத் யாதிகள்படியே யத்யந்தவிஸ்தாரிதமாய் வேதவிருத்த ப்ரக்ரியா ப்ரதிபாதகமாய் சைவபாசுபத காபாலிக காளாமுகாத்யவாந்தரபேத பிந்நமான பசுபதிதந்த்ரத்தை யென் றபடி, ஓதுவது - அத்யயநம்பண்ணுவது, குத்திரத்துக்கு-க்ஷுத்ரபலத்துக்கு, என்று ஸ்பஷ்டம். உரைத்தான்-சொன்னான், ஸ்ரீமத்வராகபுராணுதிக ளிலிதிசேஷ:. (சக)

கக௨-மூ—கந்தமலர் மகள்மின்னுங் காரார்மனிக் கருணைமுகிற் கண்ட
கண்கண் மயிலாயாலும், அந்தமில் பேரின்பத்திலடியரோடேய
டிமையெனும் போகமுத மருந்திவாழத், தந்தமதியிழந்தரனார்
சமயம்புக்கு தழல்வழிபோய்த் தடுமாறித் தளர்ந்து வீழ்ந்தீர்,
சந்தநெறிநேரறிவார்சரணஞ்சேர்ந்து சங்கேதத்தவமுநீர் தவிர்
மினீரே. (ச௨)

ஸ்வரூபோசித புருஷார்த்த ப்ராபணார்த்தமாக வீச்வரன்கொடுத்த வைதிகதர்ச நத்தை விட்டு பாஹ்யஸமயத்தைப் பற்றினவர்களுடைய விழவை ததனு பவஸாக்ஷி கமாகவே காட்டாநின்று கொண்டு உத்வேலக்ருபாவம்சவதரா யவர்களுக்கு ஹிதோப தேசம் பண்ணுகிறார். கந்தமலர்மகள் - கந்த யுக்த புஷ்பத்தினுடைய பெண்ணான பிராட்டியானவள், மின்னும் - மின்போலே விளங்கும்படியான, கார் - நைல்யத்தா லே, ஆர் - பூர்ணமான, மேனி - சரீரத்தையுடைய, கருணைமுகில் - க்ருபாஜலபூர் ணமேகத்தை, கண்டகண்கள்-பார்த்தநேத்ரங்கள், மயிலாய் - மயூரங்களாய், ஆலும்- ஆடாநிற்கிற, அந்தமில் - அவதியில்லாததான, பேரின்பத்தில் - பெரியவானந்தத்தி லே, "வைகுண்டேதுபரோலோகே ஸ்ரியாஸர்த்த" மித்யாதிகளில்படியே தாமரஸ ஸௌரபந்தான் வடிவுகொண்டாப்போலே யதிபோக்யபூதையான பிராட்டியாகிற மின்னலோடே கூடி கருணையாகிறஸலிலத்தை வர்ஷியாநிற்கிற வெம்பெருமானாகிற வலாஹகத்தைக்கண்டு நித்யமுக்த்தர்களுடைய கண்களாகிற மயூரங்க ளானனந்த நர்த்தனம் பண்ணும்படி யத்யாஹ்லாதகரமாகையாலே ஆநந்த வடிவுகொண்டாப் போலே யிருக்கிற திருமாமணிமண்டபத்திலே யிருக்கிற வென்றபடி. அடியரோடே- நித்யமுக்தர்களோடேகூட, அடிமையெனும்-கைங்கர்யமென்று சொல்லப்பட்டதான போகமுதம் - போக்யமானவம்ருதத்தை, அருந்தி - அடைந்து, வாழ - வாழ்கைக் கு, "அநாவ்ருத்திச்சப்தாதநாவ்ருத்திச்சப்தாத்" என்கிறபடியே நித்யமாகவாழ்கைக்கு;

தந்த - ஈச்வரனாலே கொடுக்கப்பட்டதான, மதி - புத்தியை, இழந்து - அடையமாட்டாதே, வைதிகமர்யாதா ப்ரவேசசூர்யரா யென்றபடி. அரனார் - ஹரனுடைய, இங்கு ஹரனைபஹுவசனாந்தபதத்தாலே நிர்தேசித்தது ததீயோபதேசம் விப்ரலிப்ஸாமூலகமல்லது ஸஹ்ருதயமன்றென்று ஸ்போரணார்த்தம். சமயம் - ஸமயத்தை, புக்கு - ப்ரவேசித்து, தழல் - க்ரூரமான, வழி - மார்க்கத்திலே, போய் - நடந்து, தடுமாறி - பரிதஸ்ஸ்க்கலிதராய், தளர்ந்து - பரிச்ராந்தராய், எழுந்தீர் - ஸ்பஷ்டம். துஷ்கரதம தபச்சர்யா வேஷாசாரயுக்த பசுபதிஸமயப்ரவேசத்தாலே ஸுகலேசமன்றிக்கே ப்ரத்யுத "சைவாந்பாசுபதாந்ஸ்ப்ருஷ்ட்வா ஸசேலஸ்நாநமாசரேத்" இத்யாதி தர்மசாஸ்த்ரநிந்த்யராய் பாதித்யத்தை யடைந்து போனநீங்க ளென்றபடி. இனி - இதஃபரம், இப்பாடுபட்ட பிற்பாடாகிலு மென்றபடி. நீர் - நீங்கள்; சந்தநெறி - ச்சந்தோமார்கத்தினுடைய, நேர் - ஆர்ஜ்ஜவத்தை, அறிவார் - அறிந்தவர்களுடைய, சரணம் - சரணங்களை, சேர்ந்து - அடைந்து, வேதமார்கமர்மஸ்பர்சிகளான வைஷ்ணவர்களுடைய சரணாரவிந்தத்தை ஸூத்ரவிகளிதாபிமாநராய் சரணமாகப்பற்றியென்றபடி. வைதிகாபாஸவ்யாவ்ருத்யர்த்தம் நேரறிவா ரென்றது. லோகேபிவழிதட்டினால் வழியறிந்தவனை சரணீகரிக்கையுசிதமிறே. சங்கேத்த்தவம்-பசுபதிசந்த்ர பரிக்ராஹித தபோவேஷாசாராதிகளை யென்றபடி. தவிர்மினீர்-விடுங்கோள், இனி மேலாகிலும் விவேகம்பிறவாதோ வென்று ஹ்ருதயம். (௬௨)

௧௬௩-மூ—யாதுமிலாதவன்றும் யாவர்க்கு நன்றியெண்ணியநம்
மாதவனார்வதநத்தமுதுண்ணும்வலம்புரிபோல்
வாதுகளாலழியாமறைமௌலியின்வான்பொருளே
ஓதியபஞ்சராத்திரமுகவாரைபொழுக்குவமே. (௬௩)

இப்படி தந்த்ராந்தரங்களை நிரஸித்தவாறே பகவத்சாஸ்த்ரத்திலும் தந்த்ரத்வஸாமாந்யத்தாலே ப்ரஸக்தமான வப்ராமாண்ய சோத்யத்தை பரிஹரிக்கிறார். யாதும் ஒரு பதார்த்தமும், இலாதவன்றும்-இல்லாத காலத்திலேயும், மஹாப்ரளயத்திலேயும், யாவர்க்கும்-எல்லாசேதநருக்கும், நன்றி-நன்மையை, எண்ணிய - ஸங்கல்பித்தவனான, நம்மாதவனார்-நம்முடைய ஸ்வாமியான மாதவனுடைய,மாதவனாரிதிபூஜோக்திஃ பகவத்சாஸ்திரப்ரணயந வேதோபதேசாதி முகேந தத்வஜ்ஞானப்ராபகத்வரூப பரமகுருத்வநிபந்தநம். இத்தால் "மாதாபிதாப்ராதாநிவாஸச்சரணம் ஸுஹ்ருத், ஸர்வஸ்யசரணம் ஸுஹ்ருத்" என்கிறபடியேஸுபால ச்வேதாச்வதரச்ருதியின்படியே பரோக்ஷாபரோக்ஷவிபாகமற ஸர்வாவஸ்த்தையிலும் ஸர்வஜந்துநிஸர்க்கஸுஹ்ருத்தாய் "ஸுமஜ்ஜாநயே" என்கிறபடியேநித்யமஜ்ஞாதநிக்ரஹையான பிராட்டிக்கு வசம்வதனான ஸர்வசேஷிக்கு ஸ்வதோவிப்ரலிப்ஸை கூடாமையாலே தத்ப்ரணீதசாஸ்த்ரஸ்யப்ராமாண்யம் துரவபஹ்நவமென்றுவ்யஞ்ஜிதம். வதனத்து-வதனத்தினுடைய, அமுது - அம்ருதத்தை,உண்ணும்-புஜியாநிற்கிற,வலம்புரிபோல்-தக்ஷிணாவர்த்தசங்கம்போலே, இதுக்கு ஒழுக்குவமென்கிற க்ரியை யோடே யந்வயம். பகவத்வதநாம்ருதாஸ்வாதப்ரீதரான ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வார் "ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்" என்கிறபடியே விரோதிஹ்ருதயவிதாரணம் பண்ணுமாப்போலே ஸாக்ஷாத்பகவந்முகோத்கத ஸ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரார்த்த ஸுதாஸ்வாதாப்யாயித ப்ரஜ்ஞாபூர்ணரான நாமும் விரோதி நிரஸநம் பண்ணமாட்டுவோ மென்று ஹ்ருதயம். இத்தால் தமக்கத்யந்த்பாரதந்த்ர்யம் க்யாபிதம். இவ்வர்த்தத்தை "𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍍𑌪𑌟𑍍𑌟𑌭𑌦𑍍𑌰𑍈𑌰𑍍𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑌵𑌿𑌵𑌿𑌧𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌸𑍇𑌵𑌾𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑌾 [illegible] ," என்றதிகரண ஸாரவல்யந்தத்திலே தாமே யருளிச்செய்தாரிறே. வாதுகளால்-வாதங்களாலே, அழியா - க்ஷோபிக்கவரிதான, மறைமௌலியின் - வேதமௌலியுடைய, வான் - அழகான, ஸாரபூதமான, பொருளே-அர்த்தத்தையே, அவதாரணத்தால் வேதவிருத்தாம்சவ்யுதாஸஃ. ஓதிய - ப்ரதிபாதியாநிற்கிற, பஞ்சராத்திரம் - ஸ்ரீபாஞ்சராத்ரத்தை — உகவாரை - ச்லாகியாதவரை, ஒழுக்குவம் - ஒழுகும்படி பண்ணுகிறோம், த்ரவீகரிக்குறோம். த்ரவீக்ருத

சித்தராய் பாஞ்சராத்ரப்ராமாண்யத்தை இசையும்படி பண்ணுகிறேனென்று நிர்களிதார்த்தঃ. மறைமௌலியின் பொருளென்கிறவித்தால் வேதானுஸாரித்வம் ஸித்திக்கையாலே ஸ்ரீபஞ்சராத்ரம் புத்தாகமாதிகள்போலே ஔபாதிகவிப்ரலிப்ஸா மூலகமன்றென்று ஸூசிதம். பொருளே என்கிற வவதாரணத்தால் ஸ்ரீபாஞ்சராத்ராதிகரணபாஷ்யோக்தரீத்யா வேதவிரோத லேசமுமில்லை யென்று ஸித்திக்கையாலே ஸ்ரீபாஞ்சராத்ரஸ்ய ஸாங்க்யாதி சாஸ்த்ரவ தேகதேச வேதவிரோதாப்யுபகந்த்ரு சங்கராதி மதவ்யுதாஸஸ்ப்போரிதঃ. வானென்கிறபொருளின் விசேஷணத்தாலே “வேதாந்தேஷு யதாஸாரம் ஸங்க்ருஹ்யபகவாந்ஹரிঃ। பக்த்தாநுகம்பயாவித்வாந் ஸஞ்சிக்ஷேபயதாஸுகம்” என்றுபரமஸம்ஹிதோக்தரீத்யா திவிதத கஹந கம்பீர நிகம சதசிகரித பரமபுருஷார்த்த ததுபாய ததிதிகர்த்தவ்யதாஸ்வநாயேஸேநவேத்யஸித்யர்த்தமாக பகவானாலே ஸங்க்ருஹீதமாகையாலே ஸ்ரீபஞ்சராத்ரஸ்ய வேதாந்தை ரக்ருதகரத்வ சங்காநிரஸோத்வநிதঃ. ஓதிய வென்கிற வத்யயந பர்யாயபதப்ரயோகத்தாலே வேததுல்யகக்ஷ்யத்வம் ஸித்திக்கையாலே பகவத்யாமுநமுனிபி ராகமப்ராமாண்யப்ரதர்சித ஸ்ரீபாஞ்சராத்ராதிகரணத்ரிதீய வர்ணகோக்தரீத்யா ஸ்ரீபாஞ்சராத்ரத்துக்கு வேதவிரோதத்தையப்யுபேத்யசிந்தித்தாலும் வேதத்தோடு விகல்பமல்லது பாதம் கூடாதென்று வ்யஞ்ஜிதம். (௪௩)

௧௯௪-மூ — பூவலருந்திருவுந்திப்புனிதன்வையம் பொன்னடியாலளந்திருவர்போற்றநின்ற நாவலருங்கலைகளெல்லாந்தன்னைநாட நாடாத நன்னிதியர் நணுகுநன்னாதன் கோவலனைய் நிரையளித்த நிரைபோல்வேதங் கோவாகக்கோமானு யதின்பால்சேர்த்துக் காவலிதுநல்லுயிருக்கென்று காட்டுங் கார்த்தயுகக்சதிகண்டோங் கரைகண்டோமே. (௪௪)

ஸ்ரீபாஞ்சராத்ரசாஸ்த்ரத்துக்கு வேதாந்தஸாரார்த்தப்ரதிபாதகத்வத்தை ஸத்ருஷ்டாந்தோபபத்திகமாக வுபஸம்ஹரிக்கிறார். பூ - தாமரஸபுஷ்பம், அலரும் - விகஸிக்கும்படியான, திருவுந்தி-ஸ்ரீமந்நாபியுடையவனான, புனிதன் - பாவநதமனான, சதுர்முகஜநந ஸ்தாநபூத கமலவிகாஸமஹாஹ்ரதாயமாநநாபிகனாய் பவித்ராணாம் பவித்ரனென்றபடி. இத்தால் ஜகத்காரணத்வமும் ஸர்வலோகபரமபாவநகங்கோத்பாதநமுகேந சிவப்ரப்ருதி ஸர்வஜந்தூஜ்ஜீவகத்வ ரூப ரக்ஷகத்வமும் சொன்னபடி. வையம் - லோகங்களை, பொன்னடியால்-ஸ்ப்ருஹணீயதமாங்க்ரியாலே; அளந்து-ஸ்பஷ்டம் இருவர்-சதுர்முகத்ரிநேத்ரர்கள், போற்ற-ஸ்துதிபண்ணும்படி, நின்ற-நின்றவனை, இத்தால் ஜகத்ஸ்வாமித்வம் விவக்ஷிதம். நாவு-ஜிஹ்வையிலே, அலரும்-விகஸியாநிற்கிற, கலைகளெல்லாம்-வித்யாஸ்தாநங்களெல்லாம், தன்னை-தன்னுடைய ஸ்வரூபகுணாதிகளை, நாட-தேடச்செய்தே, நாடாத-தேடப்படாத, நல்நிதியர்-நல்லநிதியையுடையவர்களாலே, “ஸக்ருத்த்வதாகாரவிலோகநாசயா த்ருணீக்ருதாநுத்தம புக்தி முக்திபிঃ” என்கிறபடியே பகவத்ப்ராவண்யாதிசயத்தாலே த்ருணீக்ருதமஹாநிதி ப்ரப்ருதைச்வர்யரானவநந்யப்ரயோஜநர்களாலே யென்றபடி. நணுகும்-கிட்டியாஸ்ரயிக்கப்படுமவனான, நன்னாதன்-நல்லநாதனானவன், இங்கு நாதனுக்கு நன்மையாவது பரத்வே ஸதிஸௌலப்யம். கீழ்ச்சொன்ன விசேஷணங்களித்தை ஸ்புடீகரிக்கிறன. கோவலனாய் - கோபாலனாய், நிரை - பங்தியை, கோபங்தியை, அளித்த - ரக்ஷித்த, நிரைபோல் - பங்திபோலே, ஸௌலப்ய வாத்ஸல்ய ஸௌசீல்யாதி குணவ்ருத்தியாலே கோபாலக்ருத்யம் பண்ணுமாப்போலே யென்றபடி. வேதம்-வேதங்கள், கோவாக-கோக்களாக, கோமானாய் - கோமானாய், கோபாலனாய், அதின்பால் - அந்த வேதகோக்களுடைய க்ஷீரத்தை, சேர்த்து - திரட்டியெடுத்து, “இதம்சதஸஹஸ்ராத்திபாரதாக்யாநவிஸ்தராத்। ஆவித்யமதிமந்தாநம் தத்நோக்ருதமிவொத்த்ருதம்” என்கிறபடியே தயிரைக்கடைந்து வெண்ணெயெடுக்குமாப்போலே வேதஸாரார்த்தத்தைத் திரட்டியெடுத் தென்றபடி. இது - இந்த வேதஸாராம்சம், நல்லுயிருக்கு - நல்ல ஜீவனுக்கு, பகவச்சேஷதைக ஸ்வபாவமான ஜீவஸ்வரூபத்துக்கு, காவல் - ரக்ஷணம், தேவதாந்தரஸம்பந்தாக்ய ஸ்வரூபநாசநிவர்த்தகதிவ்யௌஷத மென்றபடி.

லோகத்திலே சுவ்யரஸம் ப்ரஜாஜீவநாதிநிதானமாயிருக்குமிறே. என்று-ஸ்பஷ்டம். காட்டும்-காட்டப்படாநிற்கிற, "இதம்ஶ்ரேயஇதம்குஹ்யமிதம்ஹிதமநுத்தமம்! பவிஷ்யதிப்ரமாணம்வைஏததேவாநுசாஸநம்" இத்யாதிப்ரகாரேண பகவானாலே ப்ரதர்சிதமான வென்றபடி. கார்த்தயுகக்கதி - கார்த்தயுககதியை; அபிகமனாதிரூபசுத்தபகவத்தர்மங்களை யென்றபடி. ஆதிக்ருதயுகே சுத்தபகவத்தர்ம ப்ரவ்ருத்திர் மஹாபாரதேப்ரபஞ்சிதா. கண்டோம் - பகவச்சாஸ்த்ரத்தாலே விசதமாகவறிந்தோம், கடை - ஸம்ஸாரார்ணவபாரத்தை, கண்டோம் - ஸ்பஷ்டம். (௫௪)

௧௩௫-மூ—நமக்கார் துணையென நானென்றருள் தருநாரணனார்
உமக்காறிவை யென்றடி யிணைகாட்ட வுணர்ந்தடையும்
எமக்கோர் பரமினியில்லா திருவினை மாற்றுதலில்
தமக்கே பரமென்று தாமுயருந்தரஞ் சாற்றுவமே. (௫௫)

இப்படி பகவச்சாஸ்த்ரஸ்ய ஸார்வபௌம ப்ராமாண்ய ப்ரதிஷ்டாபந பர்யந்தமாக பரமதஸித்தப்ரக்ரியைகளை விஸ்தரேண ப்ரபஞ்சித்து இனிமேல் தத்தத்ஸம்க்ஷிப்தமான பரமதஸித்தோபாயப்ரக்ரியா நிரஸநத்தை ப்ராதாந்யேந வுபக்ரமியாநின்றுகொண்டு ஸ்வமதே பரமததோஷாணு மப்ரஸங்கார்த்தமாக முற்படஸ்வமதோபாயப்ரக்ரியையை வெளியிடுகிறார். நமக்கு-ஸம்ஸாரதுர்திநாந்ததமஸ்ஸிலே தடுமாறுகிற நமக்கு, ஆர்-எவர், துணை-ஸஹாயபூதர், என-என்று சொல்லவே, ஸம்ஸாரிகளிப்படி சோகிக்கும்தசையிலே என்றபடி. நான்-நான்தான், (துணை)என்று-ஸ்பஷ்டம், அருள்தரும்-க்ருபையைக் கொடுக்குமவனான, நாரணனார்-நாராயணனானவன், நாரணனாரென்கிற பூஜாயாம் பஹுவசநம் "மாமேகம்சரணம்வ்ரஜ" என்று ஸ்வஸ்யஸ்வோபாயத்வோபதேசக்ருத குருத்வநிபந்தநம். இவை-இந்த சரணங்கள், உமக்கு - சோகிக்கிற வுங்களுக்கு, ஆறு-உபாயம், மதீயசரணங்களே உங்களுக்கு துணையாக நிற்கச்செய்தே இவைகளை யெவைகளாகநினைத்து நீங்கள் வேறேதுணை தேடுகிறீர்கள், இவைகளே யிறே உங்களுக்கு ஸர்வவிதோஜ்ஜீவநோபாயங்க ளென்றபடி. என்று - இப்படி தாத்பர்யத்தாலே, அடியிணை - சரணயுகளத்தை, காட்ட - உபதேசிக்க, உணர்ந்து - அந்தப்ரகாரம் விச்வஸித்து, அடையும் - சரணம்புக்கு நிற்கிற ஸம்ஸாரிகளுக்கு, ஓர்பரம் - ஒருபரமும், யத்கலேசமும், இல்லாது - இல்லாதபடி, இனி - சரணம் புகுந்தபின்பு, இருவினை - புண்யபாபரூபேண த்விவிதமான கர்மத்தை, மாற்றுதலில் - போக்குகையிலே, தமக்கே - ஸர்வலோகசரண்யனான தமக்கே, பரமென்று-பரமென்று, ந்யஸ்த பரனான சேதநனுடைய வநிஷ்டநிவர்த்தீஷ்டப்ராப்த்யநுகுண ஸர்வவ்யாபாரங்களையும் நானே நடத்துகிறே னென்றபடி. தாம் - அந்த நாரணன் தானே, உயருந்தரம் - உச்ருதனும்படியை, லோகத்திலே அந்யதீயபரத்தை தன்தலையிலெடுத்துக் கொள்ளுமவன் ஸர்வதோ புக்நகாத்ரனாயிருக்கும், ஸர்வேச்வரனோ ஸர்வசேதநருடைய பரங்களையு மெடுத்துக்கொண்டு இரட்டித்தவ்யாப்தியுடையவனாகிறா னென்று விஸ்மயகர்ப்பமிதம். சாற்றுவம்-கோஷிக்கிறோம். ஆகவித்தால் ஸ்வஸித்தாந்தத்திலே ஸர்வேச்வரன் ஸித்தோபாயம், சரணவரணம் ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் ஸாத்யோபாய மென்று நிர்ணீதமாய்த்து. சாற்றுவமென்கிற வுத்கோஷ பர்யாய பத ப்ரயோகத்தாலே யிவ்வுபாயப்ரக்ரியை ஸ்வகோஷ்டீமந்த்ரபாடமாத்ர ஸித்தையல்ல, கிந்து; ஸர்வவைதிககண்டாபதஜோகுஷ்யமாணமாயிருக்கும், இதில் பரமதோபாயப்ரக்ரியாயாம் வக்ஷ்யமாணதோஷங்களுடைய கந்தமாகிலும் ப்ரஸங்கிக்குமோ வென்று நிரூபணநிபுணர்கள் பரிக்ஷியுங்கோ ளென்றுத்வநிதம். (௫௫)

௧௩௬-மூ—பலத்திலொரு துவக்கற்ற பதவிகாட்டிப் பல்லுயிருந்துடுமாறப்
பண்ணுகின்ற, கலித்திரளின் கடுங்கழுதைக் கத்து மாற்றிக்
கண்ணுடையார் கண்டுரைத்த கதியைச்சொன்னோம், வலத்தி
லகு மறுவொன்றுன் மறுவொன்றில்லா மாமணியாய் மலர்மா
தரொளியாமநல், நலத்திலொரு நிகரில்லாநாதன்பாத நல்
வழியா மல்வழக்கார்நடத்துவாரோ. (௫௬)

பரமதோபாயாநுபபத்தியை யுபஸம்ஹரியா நின்றுகொண்டு ஸ்வமதோபாயத்தை ஸம்ப்ரதாயோபபத்திகளாலே ஸ்திரீகரிக்கிருர்.

பலத்தில் - பலத்திலே, ஒருதுவக்கு - ஏதேனுமொரு ஸம்பந்தமும், அற்ற-இல்லாததான, ஸாக்ஷாத்வா பரம்பரயாவா ஐஹிகஸ்யவா ஆமுஷ்மிகஸ்யவா கஸ்யாபி பலஸ்ய ஸாதநமன்றிக்கே யிருக்கிற வென்றபடி. பதவி - மார்கத்தை, காட்டி - காண்பித்து, பல்லுயிரும் - நாநாசேதநரும், இங்கு ஸமுச்சயத்தாலே பண்டிதபாமர விபாகமன்றிக்கே யென்று விவக்ஷிதம். தடுமாற - தடவும்படி, அந்த நிஷ்பலமார்கத்திலே விழுந்து சுஷ்கக்லேசங்களை யனுபவிக்கும்படி யென்றபடி. பண்ணுகின்ற - பண்ணினவைகளான, இது கழுதைக்கு விசேஷணம். கலித்திரளின் - பாபராசியுடைய, கடும் - க்ரூரங்களான, கழுதை - கர்தபங்களினுடைய, அசேதனபாபராசிகள்தான் க்ரஹீதசரீரங்களானுப்போலே க்ரூரங்களாய் வித்யாபார பராக்ராந்தராகையாலே கர்தபப்ராயரான பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய வென்றபடி. கத்து - ஜல்பங்களை, மாற்றி - பஞ்ஜித்து, கண்ணுடையார் - ஸமீசீந ஜ்ஞாநத்ருஷ்டியுடையவரான நம்மாசார்யர்களாலே, கண்டு - ஸாக்ஷாத்கரித்து, உரைத்த - உபதேசிக்கப்பட்டதான, கதியை - கதியை, உபாயத்தை, சொன்னேம்-ஸ்பஷ்டம். அந்த உபாயத்தை விசேஷித்துக் காட்டுகிறது மேல். வலத்து-வக்ஷோதக்ஷிணபார்ச்வத்திலே, இலகும் - ப்ரகாசியாநிற்கிற, ஸந்தௌமாகாரலோபஃ மறுவொன்றுல் - ஸ்ரீவத்ஸாக்ய மறுவொன்றுலே, மறுவொன்றில்லா-மாலிந்ய லேசமில்லாததான, ஸ்ரீவச்ஸமாகிற மறுவொழிய வேறே யொருமறுவில்லை; அந்தமறுத்தானும் ப்ரக்ருத்யதிஷ்டாத்ரு தேவதாரூபதயா நிகர்ஷாதாயகமன்று, ப்ரத்யுத நிரங்குசைச்வர்யாதாயகமா யிருக்கு மென்றபடி. மாமணியாய்-மஹாமணிபோலே போக்யபூதனை, மலர்மாதர்-புஷ்பத்திலே யிருக்கிற ஸ்த்ரீ, பிராட்டி, ஒளியாம் - ப்ரபையாம்படியான, மணிப்ரபாந்யாயத்தாலே பிராட்டியோடே நித்யஸம்ச்லிஷ்டனை வென்றபடி. அந்நல்நலத்தில் - அந்த நல்ல வாநந்தத்திலே, ஒருநிகரில்லா - ஒருஸத்ருசவஸ்து இல்லாதவனை, ஆநந்தாதி கல்யாண குணங்களாலே ஸமாப்யதிகதரித்ரனை வென்றபடி. ஆக இவ்விசேஷணங்களாலே ஹேயப்ரத்யநீகத்வமும் ஸர்வாவஸ்தையிலும் லக்ஷ்மீவைசிஷ்ட்யமும் உபாயத்வோபயுக்த கல்யாணகுணகண பௌஷ்கல்யமும் ப்ரதிபாதித மாகையாலே த்வயத்தில் ஸவிசேஷண நாராயணபதம் வ்யாக்யாத மாய்த்து. நாதன் - நாதனுடைய, பாதம் - திருவடிகளே, நல்வழியாம் - ஸித்தோபாயமா மென்றபடி. இத்தால் சரணசப்தம் வ்யாக்யாதம். ஆர் - எவர், அல்வழக்கு - தூர்வ்யவஹாரத்தை, நடத்துவார் - ப்ரவர்த்திப்பார்கள், எம்பெருமான் ஸித்தோபாய மென்கிற வர்த்தத்திலே யொருவராலும் வைபரீத்யம் சொல்ல வொண்ணு தென்றபடி. (௪௬)

௧௬௭-மூ—எல்லார்க்கு மெளிதான வேற்றத்தாலு மினியுரைக்கைமிகை
யான விரக்கத்தாலும் சொல்லார்க்கு மளவாலு மமைதலாலும்
துணிவரிதாய்த் துணைதுறக்குஞ் சுகரத்தாலும் கல்லார்க்குங்
கற்றூர்சொற் கவர்தலாலுங் கண்ணனுரை முடிசூடிமுடித்த
லாலும் நல்லார்க்குந் தீயார்க்கு மிதுவே நன்று நாரணர்க்கே
யடைக்கலமாய் நல்குவீரே. (௪௭)

இப்படி ஸ்வஸித்தாந்தத்திலே ஈசுவரன் ஸித்தோபாய மானுலும் சரணுகதியே ஸாத்யோபாயமென்று முன்புசொன்னது பபன்னமோ, பக்தி யென்னுமொரு ஸாத்யோபாயம் சாஸ்த்ரங்களிலே விஹிதமன்றே வென்று பிறக்கும் சங்கையை பக்த்யபேக்ஷயா சரணுகதிக்கு வைலக்ஷண்யத்தைக் காட்டா நின்றுகொண்டு பரிஹரிக்கிருர்.

எல்லார்க்கும்-த்ரைவர்ணிகாதி விபாகமற ஸர்வஜநங்களுக்கும், எளிதான-ஸுலபமாகையாகிற, ஏற்றத்தாலும், உத்கர்ஷத்தாலும், இத்தால் சரணுகதிக்கு த்ரைவர்ணிகமாத்ராதிகாரபக்த்யபேக்ஷயா ஸர்வாதிகாரத்வமாகிற வுத்கர்ஷம் சொன்னபடி. இனி - இதஃபரம், ஸக்ருத்பரந்யாஸம்பண்ணினபின்பு, உரைக்கை - சொல்லுகை, மிகையான-அதிகமானபடியான, இரக்கத்தாலும்-சித்தத்ரவீபாவத்தாலும், புநஃ ப்ரப

த்தி வாக்யோச்சாரண மநபேக்ஷிதவ்யாபாரமாம்படி ஸக்ருதநுடாநத்தாலே தானே பகவத்க்ருபோத்தம்பக மாகையாலு மென்றபடி. இத்தாலாப்ரயாணு தஹரஹ ரநுவர்த்தநீய பக்த்யபேக்ஷயா ஸக்ருதநுஷ்டானமாகிற வைலக்ஷண்யம் சொன்னபடி. சொல் - உக்தி, ஆர்க்குமளவாலும் - பூர்ணமானமாத்ரத்தாலும், அமைதலாலும் - பர்யாப்தமாகையாலும், அங்காங்கிவிஷயவைசத்யமில்லாதபோது ஸமுதாயஜ்ஞாநபூர்வக ப்ரபத்திவாக்யொச்சாரணபூர்த்திமாத்ரத்தைக் கொண்டாகிலும் பலஜநகசக்தமாகையாலு மென்றபடி. இத்தால் ஜ்ஞாநசக்திபௌஷ்கல்ய நைரபேக்ஷ்யமாகிற உக்தி நிஷ்டாப்ரயுக்த வைலக்ஷண்யம் சொன்னபடி. இப்படி சரணாகதிக்கு பக்த்யபேக்ஷயா ஸௌகர்யம் சொன்னதுகூடுமோ; கலவெளளுக்கட்டுப்போய் கலவெண்ணெயாயாய்த் தென்கிறபடியே யத்யந்ததுஷ்கர மஹாவிச்வாஸ கடித மாகையாலே பக்த்யபேக்ஷயா தௌஷ்கர்யமே கொள்ளுகை யுசித மன்றோவென்ன, அருளிச்செய்கிறார். துணிவு - விச்வாசம், அரிதாய் - துஷ்கரமாய், துணை - ஸஹகாரிகளை, ஜ்ஞாநயோககர்மயோகாத்யங்கங்களை, துறக்கும் - பரித்யஜிக்கையாகிற, சுகரத்தாலும்-ஸுகரத்தாலும், பாவப்ரதாநோ நிர்தேசஃ. ஸௌகர்யத்தாலு மென்றபடி. மஹாவிச்வாஸமத்யந்த துஷ்கரமேயாகிலும் ஸ்ரீமத்பரிகரவிபாகாதிகார ப்ரபஞ்சித ரீத்யா சங்காபஞ்சகநிவர்த்தக ஸதாசார்ய ஸம்ப்ரதாயாதிகத ஸவிசேஷண நாராயண சப்தார்த்த பராமர்சத்தாலே யது ஸுகரதரமாய் முடிகையாலே ஸர்வப்ரகார துஷ்கரஜ்ஞாந கர்மயோக கடித பக்த்யபேக்ஷயா ஸௌகர்ய மிதுக்கு தாரவபந்ஹவமென்று திருவுள்ளம். கல்லார்க்கும் - அப்யஸியாதவர்களுக்காகவும், கற்றூர்-அப்யஸித்தவர்களுடைய, சொல் - உக்தியை, கவர்தலாலும் - ஆதரிக்கையாலும், ப்ரபத்தி வித்யோபதேசமில்லாமையாலே பூர்வோக்த நிஷ்டையிலும் அநதிகாரிகளான வைஷ்ணவர்களுக்குங் கூட வுபதேச பூர்வகப்ரபத்திவாக்யோச்சாரணம் பண்ணுமாசார்யர்களுடைய மதீயத்வோக்தி மாத்ரத்தையே யாதரித்து சரண்யன் பலம்கொடுக்கும்படியிருக்கையாலு மென்றபடி. இத்தால் "சாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி" யென்கிறபடியே கர்த்தரு மாத்ராநுபாவ்ய பக்த்யபேக்ஷயா ஒருவனநுஷ்டித்தால் மற்றொருவனுக்கு பலங்கொடுக்கையாகிற வாசார்யநிஷ்டா வைலக்ஷண்யம் சொன்னபடி. கண்ணன் - ஸ்ரீகிருஷ்ணனுடைய, உரை - ஸூக்திகளுடைய, முடி - சிகையை, சூடி - அலங்கரித்து, முடிதலாலும் - பர்யவஸிக்கையாலும், ஸ்ரீகீதாக்ய புரந்த்ரிக்கு சிரோபூஷணமாய் தலைக்கட்டுகையாலு மென்றபடி. ஸ்ரீகீதையிலுபாயோபதேச பரம்பரா பர்யவஸாந பூமித்வேந சரமோபாய மாகையாலுமென்று நிஷ்கர்ஷம். இத்தால் ஸ்ரீகீதாசார்யனுக்கிதுவே யத்யந்த ஹ்ருதயங்கமமான வுபாயமென்கிற வைலக்ஷண்யம் சொன்னபடி. நல்லார்க்கும் - நல்லவர்களுக்கும், ஸுக்ருதிகளுக்கும், தீயார்க்கும், பொல்லாதவர்களுக்கும், துஷ்க்ருதிகளுக்கும், இதுவே - இந்தசரணாகதியே, நன்றும்-நல்லதாகும், ஹிதமென்றபடி. இத்தால் பக்திவிரோதி பாப நிவ்ருத்யர்த்தமாகபக்திநிஷ்டனுக்கு மிதுவே யபேக்ஷணீய மாகையாலே சரணாகதியை ஸ்வஸித்தாந்தத்திலே ஸாத்யோபாய மென்று சொல்லத் தட்டில்லை யென்று பரிஹாரம்ஸூசிதம். இதுவே நன்றுமென்று ஸாமாந்யதோ நிர்திஷ்டத்தை விசேஷிக்கிறார் மேல். நாரணர்க்கே-நாராயணனுக்கே, அடைக்கலமாய்-ரக்ஷ்யவஸ்துவாய், அவன் திறத்தில் பரந்யாஸம் பண்ணி யென்றபடி. நல்குவீரே - ப்ரீதராகுங்கோள், நிஸ்ஸம்சயராய் ஹ்ருஷ்டமநஸ்கராய் மாரிலே கைவைத்துக்கொண்டு நித்ரை பண்ணுங்கோளென்றபடி. இப்பாட்டாலே சரணாகதி சப்தோபச்லிஷ்டக்ரியாபதம் வ்யாக்யாதமாய்த்து. ()

௧௬அ-மு—பண்டை மறைக்குப் பகையென நின்ற பரமதங்கள்
கொண்டவர் கொள்ளும் பயனென் றிலதெனுங் கூர்மதியால்
வண்டுவராக் கரசான நம்மாயனை வானுலகில்
கண்டு களிப்ப தெனுங் காத லொன்றைக் கருதுவமே. (சஅ)

இப்படி த்வயத்தினுடைய பூர்வகண்டத்திலும் சரமச்லோகத்தினுடைய பூர்வார்த்தத்திலும் ஸித்தஸாத்யரூபத்வேந ப்ரதர்சிதங்களான ஸ்வமதோ பாயங்களை விசதமாக வுபதேசியாநின்றுகொண்டு பரமதோபாயப்ரக்ரியைகளை நிரஸித்தபின்பு அவை

களுடைய உத்தரகண்டத்திலும் உத்தராத்தத்திலும் விவக்ஷிதமான புருஷார்த்தமை பரமத புருஷார்த்த ப்ரக்ரியா நிராஸ பூர்வகமாக வெளியிடுகிறார். பண்டைமறைக்கு - அநாதிகளான வேதங்களுக்கு, பகையென - விரோதிகளென்னும்படி, நின்ற - நிற்குமவையான, பரமதங்கள் - பரமதங்களை, கொண்டவர்-அங்கீகரித்த வாதிகளாலே, கொள்ளும் - க்ரஹிக்கப்படுமதான, அடையத்தக்கதான வென்றபடி. பயன் - பலமானது, ஒன்றிலது - ஒன்றுமில்லை, ஐஹிகமாத லாமுஷ்மிகமாத லொன்றுமில்லை யென்றபடி. எனும் கூர்மதியால்-என்கிற தீக்ஷ்ணபுத்தியாலே, "யா வேதபாஹ்யா ஸ்ம்ருதயோ யாச்ச காச்ச குத்ருஷ்டய.। ஸர்வாஸ் தாநிஷ்பலாஃ ப்ரேத்ய தமோ நிஷ்டா ஹி தா ஸ்ம்ருதாஃ" என்கிற மனுவசனத்தின்படியே பாஹ்ய குத்ருஷ்டிமதங்கள் ஸர்வப்ரகார நிஷ்பல மென்கிற நிரூபணத்தாலே யென்றபடி. இதுக்குக் கருதுவ மென்கிறத்தோடே யன்வயம். வண் - ஸுந்தரமான, துவரை - த்வாரகாபுரத்துக்கு, ஸந்தியிலே தகாரஸ்ய டகாராதேசஃ. அரசான - ராஜாவான, நம்மாயனை - நமக்கு ஸ்வாமியா யாச்சர்ய சேஷ்டிதனை க்ருஷ்ணனை, வானுலகில் - ஸ்ரீவைகுண்டத்திலே, கண்டு - அனுபவித்து, களிப்பது - வர்த்திப்பது, என்னுங் காதலொன்று - என்கிற வபிலாஷ மொன்றையே, பரிபூர்ண ப்ருஹ்மானுபவ பரிவாஹ கைங்கர்யாதிராஜ்யம் கதா ப்ராப்ஸ்யாமி என்கிற ப்ரத்யாசை யொன்றையே யென்றபடி. கருதுவம் - எண்ணுகிறோம். (௬௮)

௧௧௬-மூ.—கலந்திகழும் போகங்கள் கண்டுவெள்கிக் காரியமுங் காரணமுங்கடந்துநாம்போய்க், குலந்திகழுங் குருக்களடி சூடிமன்னுங் குற்றேவலடியவர்தங் குழாங்கள்கூடி, வலந்திகழுந் திருமகளுமற்றிடத்தே மன்னியமண்மகளாரு நீளையாரும், நலந்திகழ வீற்றிருந்தநாதன் பாதம் நமக்கிதுவே முடியென்ன நண்ணினோமே. (௬௯)

பரமத புருஷார்த்தாநாம் ஆபாஸத்வ விசதீகரணார்த்தமாக ஸ்வமதத்திலே ஸித்திக்கும் புருஷார்த்தத்தினுடைய ஸ்ப்ருஹணீயதமமான பர்வக்ரமத்தை யருளிச்செய்கிறார். நாம்-பகவந் நாதமுநி யாதி தர்சனநிஷ்டரான நாம், கலந்திகழும்-கலந்துப்ரகாசியாநிற்கிற, ப்ரதிபந்த ஜடிலங்களான வென்றபடி. போகங்கள்-போகங்களை, கண்டு-பார்த்து, வெள்கி - லஜ்ஜித்து, "சம்பா சலம் பஹுளதுக்க மநார்த்த ஹேது நல்பியஃ" என்னும்படியான ப்ரஹ்மாத் யைச்வர்ய ஸுகத்தை நிரூபித்ததில் நின்றும் ஜுகுப்ஸித் தென்றபடி. இத்தால் ஸ்வஸித்தாந்தத்திலே பரிபூர்ண விவேக நிர்வேத விரக்தி பீதி ரூபமான வுபாய பரிக்ரஹ பூர்வபாவி பலவர்கம் சொன்னபடி. இனிமேல் ததுத்தர பாவி பலவர்கம் சொல்லுகிறது. காரியமும் - கார்யங்களையும், காரணமும் - காரணங்களையும், கடந்து - அதிக்ரமித்து, கரண களேபர ப்ரஹ்மாண்டததாவரண ரூப கார்யங்களையும் மூலப்ரக்ருதி ரூப காரணத்தையும், அர்ச்சிராதியாலே யதிக்ரமித்து ஸ்ரீவைகுண்டதிவ்ய நகரத்திலே போ யென்றபடி. குலம் - ஸங்கமாக, திகழும் - விளங்காநிற்கிற, குருக்கள் - குருக்களுடைய, அடி - திருவடிகளை, சூடி - சிரஸிலே வஹித்து, மன்னும் - த்ருடமான, குற்றேவல் - கைங்கர்யத்தையுடையவரான, அடியவர்தம் - தாஸர்களுடைய, குழாங்கள்-ஸங்கங்களோடே, கூடி - கலந்து, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த ராகையாலே நித்யகைங்கர்ய சாலிகளான நித்யஸூரிகளுடைய ஸங்கங்களோடே "மாயப்பிரா னடியார்கள் குழாங்களுடன் கூடுவதென்று கோலோ" வென்று சிரகாலாநுவ்ருத்தமான வத்கடாபிலாஷம் மாறும்படி கலந்தென்றபடி. வலம்-தக்ஷிண பார்ச்வத்திலே, திகழும்-விளங்காநிற்கிற, திருமளும் பெரியபிராட்டியாரோடும், மற்றிடத்தே - மற்றொரு ஸ்தலத்திலே, இடப்பார்ச்வத்திலே யென்றபடி. மன்னிய - ஸ்திரையான, மண்மகளாரும்-பூமிப்பிராட்டியோடும், நீளையாரும் - நீளைப்பிராட்டியாரோடுங்கூடி, நலம் - ஆநந்தமானது, திகழ - உன்மஸ்தகமாய் ப்ரகாசிக்கும்படி. வீற்றிருந்த - வீறு தோற்றும்படி யிருந்தவனான, வீறு - ஆதிராஜ்யம், நாதன் - ஸ்ரீவைகுண்ட நாதனுடைய, பாதம் - திருவடிகளை, இதுக்கு நண்ணினோ மென்கிற க்ரியையோடே யன்வயம். நமக்கு - தாஸபூதரான நமக்கு,

இதுவே - இந்த திருவடிகளே, முடி - சிரோபூஷணம். என்ன - என்னும்படி, கண்ணினோம் - அடைந்தோம். ஸம்ஸ்ருதிதசையிலே தானே யபவர்கம் ஸித்தப்ராய மென்று பூத வ்யபதேசா பிஸந்தி:. இத்தால் ஸ்வஸித்தாந்தத்திலே பத்நீ பரிஜந விபூத்யாதி விசிஷ்டனான ஸர்வேச்வரன் ஸித்தோபாயம். உத்தரகண்டத்திலே நமச்சப்தத்திலும் எம்மாவீட்டு திருவாய்மொழியிலும் சோதித ஸ்வரூபமான ததநுபவ பரிவாஹ பூத கைங்கர்யம் உபாயபல மென்று சொல்லித்தாய்த்து. (௪௯)

௨௦௦ மூ— மானங்களின்றி வகுத்துரைக்கின்ற மதங்களெல்லாம்
தானங்களன்று தருமநெறிக் கென்று சாற்றியபின்
வானங்கவர்ந்து மறைமுடி சூடிய மாதவத்தோர்
ஞானங்க ளொன்ற நடக்கின்ற நல்வழி நாடுவமே. (௫௦)

இப்படி பரமதங்களெல்லாம் பக்னங்களான பின்பு ஸ்வரூபோசித புருஷார்த்தாபிலாஷிகளுக்கு பகவந்நாதமுநி யதிராஜாதி ஸஞ்சார க்ஷுண்ண கண்டகமான மார்கமே சரண மென்று நிகமித்தருளுகிறார். மானங்களின்றி - ப்ரமாணங்களில்லாதே, வகுத்து - பிரித்து, உரைக்கின்ற - தத்தத்வாதிகளாலே சொல்லப்பட்டவையான, மூலபூத ப்ரமாண மில்லாதே வாத்யுத்ப்ரேக்ஷாமாத்ரத்தாலே பகுவிதங்களாக பரிகல்பிதங்களான வென்றபடி. மதங்களெல்லாம் - ஸித்தாந்தங்களெல்லாம், தருமநெறிக்கு - தர்மமார்கத்துக்கு, தானங்களன்று - ஸ்தாநங்களன்று, தர்மவித்யோப யோகிகளன்று, என்று சாற்றியபின் - இப்படி யுத்கோஷித்த பிற்பாடு, வானம்-பரமாகாசாபரபர்யாயமான ஸ்ரீவைகுண்டத்தை, கவர்ந்து-ஆதரித்து, அபிலஷித்து, முமுக்ஷுக்களாயென்றபடி. மறைமுடி-வேதாந்தத்தை, சூடிய-சிரோபூஷணமாகக்கொண்ட, மாதவத்தோர்-மஹாதபஸ்விகளாலே, ஸர்வாதிசாயி ந்யாஸதபோநிஷ்டரான நம்மாசார்யர்களாலே யென்றபடி. ஞானங்கள் - ஜ்ஞாநங்கள், ஒன்ற-ஏகீபவிக்கும்படி, நடக்கின்ற-நடக்கப்பட்டதான, ஜ்ஞாநாநுஷ்டாநங்க ளேகரூபமாம்படி ப்ரவர்த்திதமான வென்றபடி. நல்வழி - ஸமீசீநமார்கத்தை, நாடுவம் - தேடுகிறோம், சரணீகரிக்கிறோம். (௫௦)

௨௦௧-மூ—தன்னடிக்கீழுலகேழையும்வைத்த தனித்திருமால்
பொன்னடிக்கேர்க்கின்ற புண்ணியர்கேண்மின் புகலறிவார்
முன்னடிபார்த்து முயலுதலாலவர்சாயையெனப்
பின்னடிபார்த்து நடந்து பெரும்பதமேறுவமே. (௫௧)

இப்படி பரமதங்கள் ஸமஸ்தங்களும் பக்நங்களானபின் தத்ர சிதிலாபிருசிகளாய் புருஷார்த்தாபிலாஷையா லேதேனுமொரு ஸன்மார்கத்தை யுபாதித்ஸுக்களான பராக்ரஹிஜநங்களுக்கு காருண்யபாரவச்யத்தாலே கர்த்தவ்யாம்சத்தை யுபதேசிக்கிறார். தன்னடிக்கீழ்-தன்னுடைய திருவடியின் கீழே, உலகேழையும்-ஸப்தலோகியையும், வைத்த-நிவேசித்தவனான, ப்ரஹ்மாண்டகோடிகளையும் ஸ்வபாதச்சாயையிலே நிறுத்தி யாளுமவனான வென்றபடி. தனி-அத்விதீயனான, திருமால்-ஸ்ரிய:பதியுடைய, பொன்னடிக்கு-ஸ்ப்ருஹணீயங்களான திருவடிகளுக்கு, ஏர்க்கின்ற-யோக்யனான, புண்ணியர் - புண்யத்தையுடையவர்களே, பகவச்சரணாரவிந்த ப்ராப்த்யநுகுண ஸுக்ருத விசேஷசாலிகளே யென்று ஸம்போதித்தபடி. கேள்மின்-நான் சொல்லுகிற ஹிதத்தைக் கேளுங்கோள். புகழறிவார் - உபாயஜ்ஞரானவர்கள், பதவாக்யேஷ்வாபாதத: ப்ரதீயமாந விரோத ப்ரசமநாநுகுண ந்யாயாபிஜ்ஞரான நம்மாசார்யர்களென்றபடி. முன்னடி-முன்னே பதந்யாஸம் பண்ணுமிடத்தை, பார்த்து-நிரூபித்து, முயலுதலால் - ப்ரவர்த்திக்கையாலே, நாநாவேதவாக்யார்த்தங்களை ஸம்யங் ந்யாயங்களாலே நிரூபித்து ததநந்தரம் தத்நுகுணாநுஷ்டாநத்திலே மூளுகையாலே யென்றபடி. அவர் - அந்த வாசார்யர்களுடைய, சாயையென - சாயை யென்னும்படி, பின்னடிபார்த்து-பின்னே நின்று தத்பதந்யாஸங்களைப் பார்த்து, நடந்து - ஸஞ்சரித்து, பெரும்பதம்-அத்யுந்நதமான ஸ்தாநத்தை, ஏறுவம்-ஆரூடராகுவோம். (௫௧)

௨௦௨-மூ—வையமெல்லாமிருணீக்கும்மணிவிளக்காய் மன்னியநான்மறை
மௌளிமதியேகொண்டு மெய்யலதுவிளம்பாதவியாசன்காட்டு
ம் விலக்கில்லாநல்வழியேவிரைந்துசெல்வீர் ஐயமறவறுசமயக்

குறும்பறுத்தோ மணியரங்கரடியவர்க்கே யடிமைசெய்தோம்
மையகடல்வட்டத்துண் மற்றுந்தோற்றும் வாதியர்தம் வாய்ப்
பகட்டை மாற்றினோமே. (௫௨)

இப்படி இப்ப்ரபந்தத்தாலே பரமதபஞ்சநம் பண்ணவேணுமோ; சாரீரக த்வீதீயாத்யாயத்தில் ஸமயபாதத்திலே பகவத்பாதராயண பாஷ்யகாராதிகளாலே தானே ஸர்வமும் க்ருதமன்றோ, என்றுபிறக்கும் சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு கதாநிஷேதகப்ரமாணநாம் முன்பு சொன்னபடியே வீதராகவைதிகவிஷயத்வத்தையும் ஸ்மரிப்பியாநின்றுகொண்டு நாநாவித ச்ருதிசிக ரோபப்ரும்ஹண ப்ரவ்ருத்தாப்ததம பாதராயண ப்ரதர்சித கண்டாபதமே ஸாத்விகஜநங்களுக் குபாதேயமென்றுபஸம்ஹரிக்கிறார். வையமெல்லாம்-ஸகலலோகங்களிலும், இருள்-அந்தகாரத்தை,நீக்கும்-நிவர்த்திப்பியா நிற்கிற, மணிவிளக்காய்-ரத்நதீபமாய்,மன்னிய-ஸ்திரமான, இது மதிக்குவிசேஷணம், இத்தால் பவநோதரமாத்ர தமோநிவர்த்தக வாத்யாதி விநாச்ய ப்ரஸித்த தீபாபேக்ஷயா ஜ்ஞாநதீபத்துக்கு வைலக்ஷண்யம் சொன்னபடி. நான்மறைமௌலி - நாலுவேதமௌலிகளுடைய, மதியே - ஜ்ஞாநத்தையே, வேதாந்தசதுஷ்டயஜந்ய ஜ்ஞாநத்தை யென்றபடி, கொண்டு - அவலம்பித்து, அவதாரணத்தால் பாஹ்யமதாவலம்பநவ்யுதாஸः. இதுக்குச்செல்வீ ரென்கிறத்தோடே யந்வயம். வேதாந்ததீபத்தைக் கைபிடித்தாலும் வேதாந்தத்தாலே தானே நாநாமார்சங்கள் தோற்றுகையாலே யவைகளில் ப்ரதாரகனன்றிக்கே கண்டாபதத்தை யுபதேசிக்குமவனான வொருதேசிகன் வேண்டாவோ வென்னில், மெய்யலது - ஸத்யமல்லது, விளம்பாத - சொல்லாதவனான, அந்ருதவசந கந்த ரஹிதனான வென்றபடி. இத்தால் ப்ரதாரகத்வ வ்யுதாஸः. பகவத் குணவிபூத்யாதிகளிலே மித்யாத்வத்தை யிசையாதவனான வென்று த்வநிதம். வியாசன்-ஸ்ரீமத்வ்யாஸபகவானாலே, காட்டும் - ப்ரதர்சிதமான, விலக்கில்லா - ப்ரதிபந்தகமில்லாததான, ஸர்வப்ரமாணைக கண்டயோக ஸ்வரஸகதியாகையாலே விரோதலேச ரஹிதமான வென்றபடி. நல்வழியே-ஸமீசீநமார்கத்திலே தானே, விரைந்து - உகந்து, செல்வீர் - நடவுங்கோள், அய்யம் - ஸம்சயமானது, அற-சின்னமாம்படி, அறுசமயம்,-ஷட்ஸமயங்களுடைய, சார்வா

காமார்ஹதஞ்சைவ ததாபௌத்தசதுஷ்டயம்। பாஹ்யஷட்ஸமயாஹ்யேதே வேதாந்த பரிபந்திநः. கபர்தாஹ்வீ மீமாம்ஸே ஸாங்க்யம் பாசுபதந்ததா। காணாதவையாகரணௌ குத்ருஷ்டிஸமயா இமே (சார்வாகமார்ஹதஞ்சைவ ததாபௌத்த சதுஷ்டயம் । பாஹ்யஷட்ஸமயாஹ்யேதே வேதாந்தபரிபந்திநः. கபக்ஷராஹ் மீமாம்ஸே ஸாங்க்யம் பாசுபதந்ததா। காணாதவையாகரணௌ குத்ருக்ஷட்ஸமயாஇமே) என்று பரிகணிதங்களாய் ப்ரத்யேகமாறுவகைகளான பாஹ்யகுத்ருஷ்டி மதங்களுடைய வென்றபடி. குறும்பு - அபிமாநத்தை, அறுத்தோம்-இத்தால் பரமதபஞ்சனத்துக்கு விஜயம் பலமன்று, கிந்து; ஹ்ருதயக்ஷோபநிவ்ருத்தியே பலமென்று பூர்வோக்தம் ஸ்மாரிதம். இப்படி பரமதநிஷ்டர்கள் நிரஸநீயரானால் தாஸ்யம் வஹிக்க விஷயமேதென்னில்; அணியரங்கர் - அலங்க்ருதமான ஸ்ரீரங்கதிவ்யநகரத்திலே வஸிக்குமவரான பெரியபெருமாளுடைய, அடியவர்க்கே - தாஸர்களுக்கு, அடிமை - கைங்கர்யத்தை, செய்தோம் - பண்ணினோம், இத்தால் கதாநிஷேதக பரமாணங்கள் பகவத்தாஸ்ய ரஸிகரான வதிகாரிகளோடு கதையை நிஷேதிக்கிறனவல்லது பாஹ்யகுத்ருஷ்டிகளோடும் கதையை நிஷேதிக்கிறன வன்றென்று விஷயவ்யவஸ்தா ஸூசிதா. கிஞ்ச; இத்தால் நாமிந்த ப்ரபந்த நிர்மாணத்தாலே பரமதபஞ்சனம்பண்ணினது துர்வாதி ஹ்ருதய புடபாக வ்யதாஹேதுவானாலும் பகவத்தாஸ்ய ரஸிக ஸ்ரீவைஷ்ணவஜந ஹ்ருதயொல்லாஸகர மாகையாலே நமக்கு ப்ரத்யவாயகரமல்லாத மாத்ரமன்றிக்கே ஸ்வரூபோசித புருஷார்த்த ரூபமான கைங்கர்யரூபமாயு மிருக்குமென்று த்வநிதம். மைய்ய - அஞ்சநம் போலே யதிநீலமான, கடல் - ஸமுத்ரங்களுடைய, வட்டத்துள்-சக்ரத்தினுள்ளே, ஸமுத்ரபரிவ்ருத திக்சக்ரவாள மத்யத்திலே யென்றபடி. மற்றும் - பூர்வநிரஸ்தங்களன்றிக்கே வேறேயும், தோற்றும் - உத்பன்னராகிற, வாதியர்தம்-வாதிகளுடைய,வாய்

ப்பகட்டை-வாயாலுண்டான மயக்கத்தை, மாற்றினேனும்-பஞ்சித்தோம், இத்தால் சாரீரகஸமயபாத நிரஸ்தங்களான மதங்களையே யுக்திகளாலே ஸ்தாபிக்கிறேமெ ன்று தேசாந்தர காலாந்தரங்களிலே முளைக்கும் அவ்வோவாதிகளுடைய வ்யாமோஹ நிரஸநார்த்தமாக விப்ரபந்த மவச்யநிர்மாதவ்யமென்று சொல்லித்தாய்த்து. (ருஉ)

௨0௩-மூ. கோதவமொன்றில்லாத தகவேகொண்ட கொண்டலெனவந்து லகிலைவர்க்கன்றோர், தூதுவனுயொருகோடி மறைகளெல்லாந் துடர்ந்தோடத்தனியோடித் துயரந்தீர்த்த, மாதவனுர்வடகொ ங்கில்வானியாற்றின் வண்ணிகைநன்னடங்கண்டு மகிழ்ந்துவா ழும், போதிவைநாம்பொன்னயிந்தைநகரின்முன்னுட் புணரா தபரமதப்போர்பூரித்தோமே. (ருரு)

இந்த பரமதபங்கப்ரபந்தத்தைத் திருவஹீந்த்ரபுரத்திலே தேவநாயகனை மங்க ளாசாஸநம்பண்ணிக்கொண்டிருக்கிறபோது நிர்மித்தோ மென் றுபஸம்ஹரிக்கிறுர். கோது - அஸாரம், அவம் - தோஷம், ஒன்றில்லாத - இவையொன்றுமில்லாத தான, தகவே - க்ருபையையே, கொண்ட - ஸ்வீகரித்ததான, க்ருபைக்கு கோதா வது ஸ்வப்ரயோஜநஸாபேக்ஷதை, அவமாவது விஷயீகரித்தபின்பு தோஷதர்சனத் தாலே கைவிடுகை. கொண்டலென - வலாஹகமென்னும்படி, நிருபாதிக நிஷ்கம் பா நுகம்பாரஸத்தையே ஜலமாகக் கொண்டிருக்கிற ஸ்நிக்த ச்யாமள வலாஹக மென்னலாம்படி யென்றபடி - உலகில் - இந்தலோகத்திலே, வந்து - அவதரித்து, ஐவர்க்கு - பஞ்சபாண்டவர்க்கு, அன்று-பாரதஸமரஸங்ராஹபூர்வஸமயத்திலே, ஓர் தூதுவனுய் - விலக்ஷண தௌத்ய சாலியாய், ஒருகோடி - ஒரு கோடி ஸங்க்யாகங் களான, மறைகளெல்லாம்-வேதங்களெல்லாம், துடர்ந்தோட-பரிஜனங்கள்போலே யநுஸரித்து தாவநம்பண்ண, தனி - அஸஹாயராக, ஓடி - ஸ்வயம் பாதங்களாலே தாவனம்பண்ணி, ஓடி யென்கிறவித்தால் ப்ரேஷகபாரதந்த்ர்யப்ரயுக்த த்வராதிச யம் ஸூசிதம். துயரம் - துக்கத்தை, தீர்த்த - போக்கடித்தவரான, தான் தௌத்யா ர்த்தமாக நடக்கும்போது லோகத்தார்க்கு ஸஹாயரஹிதனுகதோற்றுநின்றுகொண் டே ஸ்வ கல்யாணகுண ஸ்துதி பாடக வந்தி ப்ருந்த ஸ்தாநீய வேத நிகுரும்பங்களா லே யநுகம்யமானராய் தௌத்யத்தைப் பண்ணியும் மற்றும்ஸாரத்ய கீதோபதேசாதி களைப் பண்ணியும் ரக்ஷித்தவரான வென்றபடி. மாதவனுர் - ஸ்ரீயஃபதியானவர், மாத வனுனென்கிறபூஜோக்தி கீதோபதேசநிபந்தநாசார்யத்வப்ரயுக்தா. இதுக்கு மகிழ்ந்து வாழும்போதென்கிறத்தோடே யந்வயம். பொன் - ஸ்ப்ருஹணீயமான, அயிந்தைநக ரில் - அஹீந்த்ரபுரத்திலே, வடகொங்கில் - உத்தரபார்ச்வத்திலே, வானியாற்றின் - வாஹிநியாயிருக்கிற நதியினுடைய, கருட நதியினுடைய, வண்ணிகை - வர்ணநீய மான, நன்னடம் - நல்லநடத்தை, பாவப்ரதாநோநிர்தேசஃ. நல்லநாட்யத்தையெ ன்றபடி. கண்டு - பார்த்து, மகிழ்ந்து வாழும்போது - ஸுகமாக வஸிக்கும்போது பூர்வோக்த ஸௌலப்ய ஸௌசீல்யாதி கல்யாணகுண பரிபூர்ணரான ஸ்ரீக்ருஷ்ணன் திருவஹீந்த்ரபுர மென்கிற திவ்யதேசத்திலே அர்ச்சையாக வவதரித்து தேவநாயக னென்று பேர்பெற்று ஸ்வாது ஸதாவதாத ஸுபக ஸ்வாநுகம்பா பரம் போலே ஸ்வோத்தரபார்ச்வத்திலே ப்ரவஹிக்கிற கருடநதியினுடைய ச்லாகநீயதரங்கநாட் யத்தைக் கடாக்ஷித்துக்கொண்டு விரஜாபூர பரிஷ்க்ருத பரமவ்யோமத்திலே போ லே யதிப்ரீதனுய் வஸிக்குங்காலத்திலே யென்றபடி. நாம் - இப்படிப்பட்ட தேவ நாயகனுடைய ஸேவையாலே யுந்மஸ்தகாநந்தசாலிகளான நாம், முன்நாள் - பூர்வ காலத்தில், புணராத - ரசிக்கப்படாதவையான, இவை-இந்த, பரமதப்போர்-பரமத யுத்தங்களை, பரமதபங்கங்களை யென்றபடி. பூரித்தோம் - ஸம்பூர்ணமாக்கினேம், பர மதப்ரமேயங்களிலே சாரீரகசாஸ்த்ராதிதூஷிதாம்சமன்றிக்கே மற்றும் ஸம்பாவிதங் களான தூஷ்யாம்சங்களையும் தூஷித்து சேஷபூரணம் பண்ணினேனே மென்று திருவுள்ளம் பற்றினார். நிர்களி தார்த்தம்- (ருரு)

௨0௪-மூ. திகிரிமழுவுயர் குந்தந்தண்டங்குசம் பொறிசிதறுசதமுக வங்கி வாள்வேலமர்ந்தநும் தெளிபணிலசிலைகண்ணி சிரங்கசெவ்விடி

ச்செழியகதைமுசலந் திரிசூலந்திகழ்ந்ததும், அகிலவுலகுகள் கண்ஒடையா யோரலங்கலில் லடையவடைவி லிலங்கவாசின்றி நின்றதும், அணியுமருகணையுமலவாமென்னநின்றடியடையு மடியரையன்பினலஞ்சலென்பதும், மகிழுமமரர்கணங்கள்வானங்கவர்ந்திட மலியுமசுரர்கொணர்ந்தமாயந்துறந்ததும், வளரணிமணிகண்மின்னவானந்திகொண்டிட மறைமுறைமுறைவணங்கமாறின்றிவென்றதும், சிகிபிரவிமதியுமிழுதேசுந்தவெண்டிசைத்திணி மருள்செகவுகந்து சேமங்கள்செய்ததும், திகழரவணையரங்கர் தேசென்ன மன்னியத் திரிசுதர்சனர் செய்யவீரெண்புயங்களே. (௫௪)

இப்படி பரமதங்களை பஞ்சித்து இனிமேல் விரோதி நிரஸநாதிக்ருதரா யுபக்ரமத்திலே தம்மாலே யஷ்டபாஹுத்வேந அநுஸம்ஹிதரான ஸ்ரீஸுதர்சனாழ்வாருடைய ப்ரபாவத்தாலே யிம்மதங்கள் பக்நங்களாயின வென்கிற க்ருதஜ்ஞதாப்ரயுக்தமான உகப்பாலே யவருடைய ஷோடச புஜங்களைக்கொண்டாடுகிறார். திகழ்-விளங்காநிற்கிற, அரவு - ஸர்பமாகிற, திருவநந்தவாழ்வானாகிற, அணை - சய்யையையுடையவரான, அரங்கர் - ஸ்ரீரங்கநாதனுடைய, தேசென்ன - தேஜஸ்ஸென்று சொல்லும்படியாக, மன்னி - ஸ்திரரான, "வ்யூஹ ஸ்தேஜோபிமாநீ நரகவிஜயிநு:" என்கிறபடியே பகவத்திவ்யதேஜோபிமானி தேவதையாகையாலே பகவத்தேஜஸ்ஸுதான் புஞ்சீபூத மென்னலாம்படி ப்ரதிஷ்டிதரான வென்றபடி, திருசுதர்சனர் - ஸ்ரீஸுதர்சநாழ்வாருடைய, செய்ய - சிவந்தவைகளான, தாமரஸாருணங்களான வென்றபடி. யத்வா-செய்ய - ருஜுக்களான, ஈர்-த்விகுணிதையான, எண்-அஷ்டஸங்க்யைகளை யுடையவைகளான, ஷோடசஸங்க்யாகங்களான வென்றபடி. புயங்களே - புஜங்களே, இதுக்கு மேல் க்ரியையோடே யந்வயம். திகிரி - சக்ரம், மழு - பரசு, உயர் - உச்ச்ருதமான, குந்தம் - குந்தம், தண்டு-தண்டம், அங்குசம்-அங்குசம், பொறி - ஸ்புலிங்கங்கள், சிதறு - பரிதோ விப்ரகீர்ணங்களாம்படியான, சதமுகம் - சதமுகமான, அங்கி-அக்நி, ஸர்வதஸ் ஸமுத்பதத் ஸ்புலிங்கசதஸஹஸ்ராகுல விஷ்வங்முக லேலீஹாந ஜ்வாலாமாலா ஜடிலமான வக்நியை யென்றபடி. தாத்ருசாக்னிரூபாயுதமென்று நிர்களிதார்த்தம். வாள் - கட்கம், வேல்-பல்லம், அமர்ந்ததும் - இவைகளை யமரும்படி தரித்ததும். ஈரெண்புயங்களே யென்று ஸம்பந்தம். இப்படி மேல்க்ரியைகளுக்கும் கண்டுகொள்வது. தெளி - நிர்மலமான, பணில-சங்கம், சிலை - தநுஸ்ஸு, கண்ணி - பாசம். சீர் - ஸீரமாகிற, அங்க-அங்கம், ஸீரமாகிற சிந்ஹ மென்றபடி. ஸீரம்-கலப்பை. அங்கம்-சிந்ஹம். செவ்விடி - சிவந்ததாந வசநி, செழிய - அபிவ்ருத்தையான, சதை - கதை, முசலம் - முஸலம், திரிசூலம்-த்ரிசூலம், திகழ்ந்ததும் - ப்ரகாசித்ததும், ஈரெண்புயங்களே. அகில - ஸகலங்களான, உலகுகள் - லோகங்கள், கண்டையாய் - கண்டையாய், ஒரலங்கலில் - ஒருமாலையிலே, அடைய - கார்த்ஸ்ந்யேந, அடைவில் - க்ரமேண, இலங்க-விளங்கும்படி, வாசின்றி-வாஸமன்றிக்கே, ஆவிகையன்றிக்கே, நின்றதும்-ஸ்பஷ்டம். அகில புவனாத்மககண்டாஸ்ரேணீ கும்பிதையான வீரகண்டாமாலையை தரித்துக்கொண்டு ஆலீடாதி விசேஷத்தோடேகூட விரோதி நிரஸநோத்யமம் தோற்றும்படி நின்றது மென்றபடி. ஈரெண்புயங்களே. இங்கு பாதவ்யாபாரமான ஸ்திதிவிசேஷமும் புஜபராக்ரமவிஜ்ரும்பணபரிவாஹமாகையாலே யத்தை புஜதர்மமாக வுபசரித்தபடி. அணியும்-அலங்காரமும், அருகணையும் - அர்ஹணையும், ஆராதனமும், அல்ல - இல்லாதிருக்கவுமாம், ஆம் - உண்டாயிருக்கவுமாம், என நின்று - என்னும்படி நின்று, இதுக்கஞ்சலென்பது மென்கிறத்தோடே யந்வயம். அடி-திருவடிகளை, அடையும் - சரணமாக வாஸ்ரயிக்குமவரான, அடியரை - தாஸர்களை, அன்பினால் - ப்ரீதியால், வாத்ஸல்யத்தாலே, அஞ்சல் - பயப்படவேண்டாம், என்பதும் - என்று சொல்லுமதுவும், ஈரெண்புயங்களே. பூஷணமும் கந்தபுஷ்பாதிபி ரர்சநமும் உண்டானாலு மில்லாவிட்டாலும் தத்ஸத்பாவாஸத்பாவங்களைப் பாராதே கேவலக்ருபையாலே தாஸாநாமபயதாநம் பண்ணு

மதுமென்றபடி. இனிமேல் பயநிவர்த்தநப்ரகாரத்தையே விஸ்தரிக்கிறது. மகிழ் - ஹர்ஷியா நிற்கிற, அமரர்கணங்கள் - அமரகணங்கள், வானம் - ஸ்வர்க்கத்தை, கவர்ந்திட - ஆதரிக்கைக்கு, ஸுகமாக வாண்டுகொள்ளும்படி யென்றபடி. இதுக்கு துறந்ததுமென்கிறத்தோடே யந்வயம். மலியும் - ஸங்கீபவியாநிற்கிற, அசுரர்-அஸுரர்களாலே, கொணர்ந்த - உத்பாதிதங்களான, மாயம் - மாயைகளை, துறந்ததும் - நிவர்த்திப்பித்ததும். ஈரெண்புயங்களே. தேவாஸுரஸங்கரத்திலே ஸர்வதேவ கபளீக்ருதிக்ஷமைகளாய் அஸுரப்ரயுக்தைகளான மாயைகளை க்ஷணத்திலே நசிப்பித்ததுமென்றபடி. வளர்-வர்த்தியா நிர்க்கிற, அணிமணிகள் பூஷணரத்நங்களாலே, மின்னு - உஜ்வலிதமான, வான் - ஆகாசமானது, அந்தி - ஸந்த்யையை, கொண்டிட-அங்கீகரிக்கும்படி, ஸ்வபூஷணகநமணி கிரண ரஞ்ஜிதமான வாகாசம் ஸந்த்யாராக பூரிதம்போலே விளங்கும்படியென்றபடி. மறை - வேதங்கள், முறைமுறை - பர்யாயம் பர்யாயமாக, வணங்க-ஸேவித்திருக்கும்படி, வந்திகள்போலே யொன்று விஶ்ரமித்தாலொன்று துடங்கி ஸ்த்ரோத்ரம் பண்ணும்படி யென்றபடி. மாறின்றி - திரும்பாதபடி, முன்னேவைத்தகால் பின்னே வாங்காதபடி யென்றபடி. வென்றதும்-ஜயித்ததும், விரோதிகளை யிதிசேஷ:. ஈரெண்புயங்களே. எண்டிசை-எட்டுதிக்குகளும், எண்டிசை என்கிறவிடத்திலே ஸந்தௌ தகாரஸ்ய டகாராதேச:. சிகி-அக்நி, இரவி - ஸூர்யன், மதி - சந்த்ரன், உமிழும் - உத்கீர்ணங்களான, தேசு-தேஜஸ்ஸுக்களை, உந்த - எந்தும்படி, தரிக்கும்படி, "ஸோமஸூர்ய தஹந ப்ரபோஜ்வலம் சக்ரமேததிதம்மஹாமுநே" என்றஹிர்புத்ந்யஸம்ஹிதோக்த யுக்த்யா திசாஷ்டகமும் தேஜஸ்த்ரயீமுகபடலீவ்யாப்தமென்றபடி. திணி - த்ருடமான, மருள்-அஜ்ஞாநம், செக - நசிக்கும்படி, பாஹ்யதமஸ்ஸுபோலே தேஜஸ்த்ரயீதுர்நிராஸமான வவாந்தர தமஸ்ஸுங்கூட நசிக்கும்படி யென்றபடி. உகந்து-ப்ரீதி புரஸ்ஸரமாக, சேமங்கள்-க்ஷேமங்களை, செய்ததும்-பண்ணினதும், ஈரெண்புயங்களே. ஆஶ்ரிதாநாம் பாஹ்ய குத்ருஷ்டிமதமூலக பஹுவித க்ஷோபநிவர்த்தந பூர்வக ஸம்யக் ஜ்ஞாநோத்பாதநத்தாலே யுஜ்ஜீவிப்பித்துமென்றபடி. (௫௪)

[illegible] (௪)

[illegible] (௫)

[illegible] (௬)

[illegible]

[illegible]

வதுளாபரணீய பரமதபங்கவ்யாக்யானம்

முற்றிற்று.

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாய நம:.

# ஸ்ரீ ஹஸ்திகிரி மஹாத்ம்யம்.

[illegible]

மூ.—வாழியருளாளர் வாழிபணியத்திகிரி
வாழியெதிராசன் வாசகத்தோர்-வாழி
சரணுகதியென்னுஞ்சார்வுடன்மற்றென்றை
யரணுகக்கொள்ளாதாரன்பு. (க)

ஸகலலோகஹிததமவிஷய விவித வேதாந்தோபப்ரும்ஹணங்களான புராணங்களில் முக்யதமமாகையாலே முற்பட வெண்ணப்பட்ட ப்ரஹ்மாண்டபுராணத்தில் ஸத்யவ்ரதக்ஷேத்ர மாஹாத்ம்ய முகத்தாலே ஸந்தர்சிதமான பேரருளாளன் அருளின்பெருமையை பாவுகரான பகவந்நிஷ்டருடைய ஹ்ருதயரஞ்ஜநார்த்தமாக மநஸ்ஸிலே பாவமும் வாக்கிலே ராகமும் கரத்திலே தாளமுமாக பாவராக தாளங்களை வகுத்த பரதசாஸ்த்ரத்தின்படியே பண்ணுமிசையில் இகழும்படி வெளியிடக்கோலி முற்பட, “[illegible]” என்கிற ச்லோகத்தாலே ஸந்த்யா தாண்டவ ரஸிக சம்பு கபர்தா போக விச்ருங்கல விஹாரகுதூஹலாவிஷ்ட நதீஸார்வபௌம மந்தாகிநீஜநகபவநத்வத்யோதித பாவநத்வாதிசயத்தாலும் ஸஸம்ப்ர மாவநம்ர ப்ருந்தாரககுடும்ப நிகுரும்பொத்தமாங்க தாரித பாரிஜாதப்ரஸூந தாம பரிகர்மிதத்வ வ்யஞ்ஜித போக்யதாதிசயத்தாலும் மஹதாம்மஹநீயமாய் ஸகலவேததாத்பர்ய விச்ராந்தி பூமிபூதமான பேரருளாளனுடைய சரணாரவிந்தத்தை ஸதாஸேவிக்கக்கடவோமென்று மங்களத்தையாசரித்து, தந்முகேந, இப்ரபந்தத்துக்கு பரமகாருணிகரானபேரருளாளன் பரமவிஷயபூதர், ஈடஸ்துதன என்கிறதாதுவிலே லோடுத்தம பகுவசநாந்ததயா நிஷ்பந்நமான ஈடாமஹே யென்கிற பதத்திலே விவக்ஷிதமாய் “[illegible]” என்கிற ச்ருதிஸித்தமான பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டேத்துகை பரமப்ரயோஜநம், மஹத்துக்களதிகாரிகளென்று விஷயப்ரயோஜநாதிகாரிகளை ப்ரகாசிப்பித்தினிமேல் மஹத்சப்தநிர்திஷ்டரான வதிகாரிகளை விசேஷித்துக்கொண்டு ப்ரபந்தத்துக்கு பரமவிஷயத்தோடேகூட வவாந்தரவிஷயத்தையு மவாந்தரபலத்தையும் காட்டுகிறார்.

அருளாளர் - பேரருளாளர், வாழி - வாழக்கடவர், இத்தால்ப்ரபந்தத்துக்கு பரமவிஷயத்தைக்காட்டினபடி. அணி - அலங்காரபூதமான, சிகண்டபூதமான வென்றபடி. அத்திகிரி - ஹஸ்திகிரியானது, வாழி - வாழக்கடவது, இத்தாலவாந்தரவிஷய

விஷயத்தை வெளியிட்டபடி. எதிராசன்-எதிராஜனுடைய, வாசகத்தோர் - வாசகத்தையுடையவர்கள், பகவத்பாஷ்யகார ஸூக்திநிஷ்டரான வநந்யதேவர்கள் என்றபடி, வாழி - வாழக்கடவர்கள், இத்தால் மஹச்சப்த நிர்திஷ்டரான வதிகாரிகளை விசேஷித்தபடி. சரணாகதியென்னும் - சரணாகதியென்று பேர்பெற்றிருக்கிற, சார்வுடன் - அபாச்ரயத்தோடே, மற்றொன்றை - வேறே யேதேனுமொன்றை, அரணாக - ரக்ஷகமாக, கொள்ளாதார் - அவலம்பியாதவருடைய, அன்பு - பிரேமம், சரணாகதி வித்யாவஷ்டம்ப தார்ட்யத்தாலே ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரலேசத்திலு மந்வயமில்லாத வநந்யோபாயருடைய ப்ரேமமென்றபடி, வாழி - ஸ்பஷ்டம், இத்தால் சரணாகத்யதிகாரமான வநந்யோபாயத்வமும் தத்கார்யமான சரணாகதியும் நிருபாதிக பகவத்ப்ரேமமு மிப்ரபந்தத்துக் கவாந்தரப்ரயோஜந மென்று தர்சிதமாய்த்து.

மூ.—எண்டிசையுங் கடலேழு மலைகளேழு மீரேழுவையகமும் படைத்திலங்கும், புண்டரிகத்தயன்புணர்த்த பெரியவேள்விப்புனிதநறும்போக்கியதையுகந்துவந்து, தொண்டையெனு மண்டலத்தி னடுவிற்பாரிற் றூநிலமெய்விரதத்திற் றோன்றிநின்ற, கொண்டலருட் குணமேநாங்கூறுகின்றோங் கூர்மதியீர் குறிப்பாகக் கொண்மினீரே. (௨)

இப்படி மங்கலாசரணமுகத்தாலே விஷயப்ரயோசனாதிகாரிகளை தர்சிப்பித்தினிமேல் ப்ரபந்தப்ரதியாத்ய கதாசங்க்ரஹ பூர்வகமாக சிகீர்ஷித ப்ரதிஜ்ஞையை பண்ணிக்கொண்டு ஸஹ்ருதயரை ஸ்வப்ரபந்தவிஷயக ஸாவதாந பர்யாலோசனத்தை யப்யர்த்திக்கிறார்.

எண்டிசையும் - எட்டுதிக்குகளையும், கடல்எழும் - எழுகடல்களுமென்றந்வயம். ஸப்தசாகரங்களையு மென்றபடி, மலைகளேழும் - சப்தகுலாசலங்களையும், ஈரேழு-த்விகுணித சப்தசங்க்யாகங்களான, சதுர்தசஸங்க்யங்களான வென்றபடி. வையகமும்-லோகங்களையும், படைத்து - ஸ்ருஷ்டித்து, இலங்கும் - விளங்காநிற்கிற, க்ருத்ஸ்ந பதார்த்தவ்யஷ்டி ஸ்ருஷ்ட்யதிகாரியான வென்றபடி, இத்தாலிவனுக்கு சக்த்யதிசய ஸ்ஸூசிதஃ. புண்டரிகத்து-புண்டரீகத்திலுத்பன்னனான, இத்தால் ஜந்யோத்கர்ஷோ தர்சிதஃ. அயன்-அஜனாலே, புணர்த்த-அனுஷ்டிதமான, பெரிய - மஹத்தரமான, ஸுக்ருதோத்கர்ஷ தாரதம்ய விச்ராந்தி பூமியானவென்றபடி. வேள்வி-யாகத்திலே, அச்வமேதத்திலே யென்றபடி, புனித - பாவநமான, நறும்- சுத்தமான, போக்கியத்தை-போக்யத்தை, பாவந ஸுரபி ஸ்வாது வான வபா ரூப ஹவிஸ்ஸை யென்றபடி. உகந்து - அபிலஷித்து, வந்து-பரமவ்யோமத்தில்நின்றும் திவ்யமங்களவிக்ரஹ விசிஷ்டனாய் வந்து, பாரில் - பூமியிலே, தொண்டையெனும்-துண்டீரமென்று ப்ரசித்தமான, மண்டலத்தில் - மண்டலத்திலே, நடுவில் - மத்யத்திலே, தூநில - பரிசுத்தஸ்தலமான, மெய்விரதத்தில்-ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே, தோன்றி-அபிவ்யக்தமாய், நின்ற ப்ரதிஷ்டிதமான, சிலகாலமபிவ்யக்தமாய் பின்பு திரோஹிதமாகையன்றிக்கே “வேகவத்யுத்தரேதீரே புண்யகோட்யாம் ஹரிஸ்ஸ்வயம்|வரதஸ்ஸர்வ பூதாநா மத்யாபிபரித்ருச்யதே” என்கிறபடியே ஸகலநயநவிஷயதாங்கதமாய் சிரகாலவாஸம் பண்ணுமதான வென்றபடி. கொண்டல்-வலாஹகத்தினுடைய, இங் கநாலோசித விசேஷா சேஷலோக மஹாவதான்யராய் ஸகலஸந்தாப நிச்சேஷநிர்வாபகரான பேரருளாளனாவலாஹகமாக வத்யவஸித்தபடி, அருள்-கிருபையாகிற, குணமே - குணத்தையே, யத்வா - அருள் - க்ருபையினுடைய, குணமே - குணங்களையே. நிருபாதிகத்வ ஸர்வவிஷயத்வா ல்பவ்யாஜமாத் ரஸாபெக்ஷத்வாதி க்ருபா குணங்களை யென்றபடி, நாம்-காருண்யை காந்திகளானநாம், கூறுகின்றோம்-ப்ரதிபாதிக்கிறோம், கூர்மதியீர் - ஹே ஸூக்ஷ்மமதிகளே, குறிப்பாக - ஸாவதானமாக, கொள்மினீர் - அங்கீகரியுங்கொள், பரிசீலியுங்கொளென்றபடி. (௨)

மூ.—வம்மின் புலவீரருளாளப் பெருமாளென்றுமருளாழி, அம்மானென்றுந் திருமகளைப்பெற்றுமென்னெஞ்சங் கோயில்கொண்ட, பேரருளாளரென்றும் வியப்பாவிருதூதும்படிகரைபுரண்ட, கருணைக்கடலை யெவ்வண்ணம் பேசுவீரீதென்னபாங்கே. (௩)

கொண்டலருள்குணமே நாம் கூறுகின்றோ மென்று பரதிஜ்ஞைபண்ணினது அநுபன்னமன்றோ, தத்கருணைக தேசமுங் கூடவதிவிஸ்மயநீயமாய் வாங்மநஸா பரிச்சேத்யமாக விறே காணப்படுகிறதென்று ப்ரபந்தாரம்பத்தையாக்ஷேபியாநின்று கொண்டு இவ்வர்த்தத்தையே வாதிகளைக்கொண்டுஸம்வதிப் பிக்கைக்காக வவர்களைக் குறித்து உபபாதிக்கிறார்.

புலவீர் - வித்யாசாலிகளே. வம்மின் - வாருங்கள், இந்தஸம்போதநம் வக்ஷ்ய மாணார்த்த ஸம்வாதனார்த்தம். அருளாளப்பெருமாளென்னும் - அருளையாளுமவரா னபெருமாளென்றும், யத்வா - அருளாலே லோகங்களை யாளுமவரானபெருமாளெ ன்றும், என்றுமென்கிறபதத்ரயத்துக்கும் விருதூதும்படி யென்கிறவிடத்திலே யந் வயம். இப்படி ஸர்வஸாதாரண பகவத்க்ருபாஸ்வரூபத்தைக்காட்டி யினி இதி னுடைய பரிச்சேத்யத்வாசோஷ்யத்வா க்ஷோப்யத்வநிருபாதிகத்வாதிகளைக் காட் டுகிறார், அருளாழி க்ருபாஸாகரபரிதரான, அம்மானென்றும், ஸ்வாமியென்றும், இங் குஸ்வாமித்வோக்தியாலே தத்க்ருபாயா நிருபாதிகத்வமும் ஸாகரத் வோக்தியாலே யபரிச்சேத்யத்வாதிகமும் பலிதம். இனிவிஷயத்தில்நிம்நோந்நதபாவப்ரயுக்த தார தம்யராஹித்யத்தைக் காட்டுகிறார். திரு - பிராட்டியாகிற, மாமகளை-மஹாஸ் திரீயை, இங்குபிராட்டிக்கு மகத்வமாவது பகவந் நாராயணபிமதானுரூப ஸ்வரூபரூப குண விபவைச்வர்ய சீலாத்ய நவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணவத்வம். பெற்றும் லபித்தும், பெற்றுமென்கிற நிர்தேசத்தாலே அத்யுத்க்ருஷ்ட விஷயலாபேஸத்சய நிக்ருஷ்ட விஷயஸ்வீகாரணம் துர்கட மென்று விரோதஸ்ஸூசிதஃ. என்-வித்வேஷ மாநமதராக விலோபமோஹாத்யாத்மாபிமான பூமியான வென்னுடைய, நெஞ்சம்- மனஸ்ஸை, கோயில்-தனக்காஸ்பதமாக, கொண்ட - ஸ்வீகரித்தவரான, அதிஹேய மான வென் மநஸ்ஸிலேயுங்கூட "அங்குஷ்டமாத்ரஃ புருஷோ மத்ய ஆத்மநி திஷ் டதி, ஈசாநோ பூத பவ்ய ஸ்ய நததொவிஜுகுப்ஸதே" என்கிறபடியே பரமவ்யோம க்ஷீரார்ணவ மார்த்தாண்டமண்டலங்களில் போல போக்யதாபுத்தியாலே வஸிக்கும வரானவென்றபடி. பேரருளாளரென்றும் - ஸ்பஷ்டம். வியப்பா - விஸ்மயநீயமாக, விருது-விருதத்தை, ஊதும்படி - ஆதிராஜ்யஸூசக த்மாதவ்யவாத்யவிசேஷமுகத்தா லே வதிப்பிக்கும்படி, கரை-வேலையை, புரண்ட-அதிக்ரமித்ததான, கருணைக்கடலை- கருணாமஹாசாகரத்தை, அருளாழி யென்கிறவிசேஷணத்தாலே க்ருபாஸாகரத்வமா த்ரம் சொல்லிற்று, இங்கு ததநுவாதேந வேலாதிலங்கித்வ விதி யாகையாலே புநருக் தியில்லை, எவ்வண்ணம் - எந்தப் பிரகாரத்தாலே, பேசுவீர் - வர்ணிப்பீர்கள், ஈது- இது, என்னபாங்கு - என்னபரிபாகம், பகவத்கருணா வர்ணநாநுகுண சக்தி யெவ்வ ளவென்றபடி. (ரு)

மு.—ஒன்றேபுக லென்றுணர்ந்தவர் காட்டத்திருவருளால்
அன்றேயடைக்கலங்கொண்ட நம்மத்திகிரித்திருமால்
இன்றேயிசையிலிணையடி சேர்ப்பரினிப்பிறவோம்
நன்றேவருவதெல்லா நமக்குப்பரமொன்றிலதே. (ச)

இப்படி ப்ரபந்தாரம்பத்தை யாக்ஷேபித்து இனிமேல் அத்யாத்மஸாரவேதிக ளான வாசார்யராலே பகவதி ந்யஸ்தபரராய் அதஏவபகவதாஸ்வீக்ருதபரரான தம க்கு பகவத்கருணாகுணவர்ணநம் யதாவத் கர்த்துமசக்யமானாலும் யதாசக்தி தத்வர்ண நம் ப்ரத்யவாயாவஹமன்று, ப்ரத்யுத; இதுபரந்யாஸாவ்யவஹிதொத்தர க்ஷணமே யபவர்கப்ரதாநம் பண்ணவல்ல வீச்வரன் ப்ராரப்த வைசித்ரீமூலகருசிவிசேஷத் தாலே தேஹாவஸானத்திலே யபவர்கத்தை யிசைந்த நம்மிடத்தில் அனுக்கிரகாதிசய த்தாலே சபலகால யாபநார்த்தமாக பண்ணுவிக்கும் வ்யாபாரமாகையாலே பாரதந் த்ர்யபரிகர்மித சேஷவ்ருத்திரூபமாயிருக்கும், ஆகையால் நம்முடைய யத்நத்தில் வருவதொரு நிர்பந்தமில்லை யென்கிற வபிப்ராயத்தாலே ப்ரபந்தத்தை அவதரிப் பிக்கிறார்.

இப்பாட்டு ஸ்ரீமத்ரஹஸ்யரத்நாவலியிலே கிஞ்சித்பாடபேதேநபடிதமாய் ஸ்ரீமத் ரஹஸ்யரத்நாவலீஹ்ருதயத்திலே யாசார்யசரணைஃஸ்வயமேவ ப்ரபஞ்சேந வ்யாக்

யுதமே யாகிலு மிங்கு மித்தைப்ரகரணானுருணதாத்பர்ய வர்ணநே ஸங்கரஹித்து விவரிக்கிறோம். உணர்ந்தவர்-ப்ரதிபுத்தாதிகாரிகள், அர்த்தபஞ்சகத்தையும் ஸம்பந்த விசேஷத்தையும் திருந்தக் கண்டவரென்றபடி. ஒன்றேபுகல் - ஏகமே யுபாயம், "ததேதததிதுக்காநா மதாஸ்புதேத்ரபவார்ணவே। பவதாம்கத்யதேஸத்யம் விஷ்ணு ரேவபராயணம்" இத்யாதிஸஹஸ்ரப்ரமாணங்கள்படியே ஸ்ரீமன்நாராயண னொருவ னேஸித்தோபாயமென்றென்றபடி. என்றுகாட்ட - இப்படியுபதேசிக்க, "ஸர்வயோ ச்யமநாயாசம் அப்ரமாதமநூபமம்। ப்ரபன்னார்த்திஹரம் விஷ்ணும் சரணம் சந்துமர் ஹஸி" என்கிறவுபதேசத்தாலே நம்மைக்கொண்டு பரந்யாசம் பண்ணுவிக்க வென்ற படி. யத்வா - ஒன்றேபுகலென்றுணர்ந்தரென்றந்வயம். அநந்யோபாயத்வாத்யவசாய சாலிகளென்றபடி. காட்ட-"ஆத்மாத்மீயஞ்சயத்கிஞ்சித்துர்பரம் துஸ்த்யஜம் மயா।தத் ஸர்வம் தவ விந்யஸ்தம் சுபயோ: பாதபத்மயோ:" என்கிறபடியே நம்மைபகவச்சர ணாரவிந்தங்களிலே ஸமர்ப்பிக்க வென்றபடி. திருவருளால்-ஸ்ரீக்ருபையாலே, ஸ்வா ர்த்தநிரபேக்ஷக்ருபையாலே. அன்றே- பரந்யாஸகாலத்திலே தானே, அடைக்கலம்- ரக்ஷ்யவஸ்துவாகக்கொண்ட - ஸ்வீகரித்தவரான, நம் - நம்முடையஸ்வாமிகளான, அத்திகிரி - ஹஸ்திகிரியிலே வஸிக்குமவரான, திருமால் - லக்ஷ்மீவல்லபரான பேர ருளாளர், இன்றே - இப்போதுதானே, இசையில்-அங்கீகரிக்கில், ப்ரந்யாஸோத்தர க்ஷணத்திலேதானே ஸம்ஸாரநிவ்ருத்தியை யப்யுபகமித்தோ மாகிலென்றபடி. இணை யடி - யுகளீபூதங்களான திருவடிகளை, சேர்ப்பர்- அடைவிப்பர், நம்மை இதிசேஷ:. இசையில் சேர்ப்பரென்கிற நிர்தேசத்தா லிவர் சேராதொழிந்தது நம்முடைய அநப்யுபகமத்தாலல்லது அவனுடைய அநௌதார்யத்தாலே யன்றென்று த்வநிதம். இனி - இந்ததேஹாவஸாநாநந்தரம், பிறவோம் - ஸம்ஸரியோம், இப்படிப்ராரப்த வைசித்ரீமூலக ருசிவிசேஷத்தாலே தேஹாவஸாநபர்யந்தம் ஸம்ஸாரத்திலேவர்த் திக்கு மாகி லிருந்தால் நாம்செய்யும் தொழிலேதென்ன வருளிச்செய்கிறார். வருவ தெல்லாம் - பகவத்ஸங்கல்பத்தாலே வருமவையெல்லாம், நன்றே - நல்லவைகள், இங்கிருந்தநாள் அநுகூலங்களாகவும் ப்ரதிகூலங்களாகவும் வருமவையெல்லாம் ப்ரா ரப்த புண்ய பாபரூப நிகளவிகடன ப்ரவ்ருத்தனான வீச்வரனுடைய அநுக்ரஹ பலமாகையாலே யிஷ்டதமங்களென்றபடி. நமக்கு இப்படி ந்யஸ்தபரரான நமக்கு, பரமொன்று - ஒருபாரமும், இலதே - ஆத்மதேகயாத்ராநுகுணமாக கர்த்தவ்யலேசமு மில்லையென்றபடி. பிறவோம் - நமக்கென்கிறபஹுவசந நிர்தேசத்தாலே யநுபந் திபர்யந்த நைர்ப்பர்யம் ஸூசிதம். ஆகவித்தால் பகவத்தநுக்ரஹபலத்வேநாயத்ந ஸித்தமாக வருமதான யதாசக்தி பகவத்கருணாகுணவர்ணத்தில் நின்றும் அநர்ஹதா நுசந்தானத்தாலே நாம் நிவர்த்திக்க வேண்டுவதில்லை யென்றுப்ரபந்தாரம்பம் ஸமர் த்திதமாய்த்து. (௪)

மூ.—வம்பவிழ்போதமர் மாதருகந்த வம்மாநிதியைத்
தன்பலமேகொண்டு காணக்கருதியதாமரையோன்
முன்பலகுற்றத்து வல்வினைமொய்க்க முகிழ்மதியாய்
அம்புலிவேண்டிய பாலனைப்போலவழுதனனே. (௫)

இப்படி யிப்ரபந்தத்தை யவதரிப்பித்து கதையை யுபக்ரமித்து ஸமஷ்டிவ்யஷ்டி ஸ்ருஷ்டி களைப்ரதிபாதித்து வ்யஷ்டிஸ்ருஷ்ட்யதிகாரியான சதுர்முக னபிஜந வித்யாவ்ருத்தகர்வங்களாலும் ஸ்வாதந்த்ர்யச்செருக்காலும் ஸர்வஸந்ததஸந்நிஹிதத் வேபி ஸர்வதுர்க்ரஹமான பரமாத்மஸ்வரூபத்தை ஸ்வஸாமர்த்யஸாத்யஸாமாதி யாலே ஸாக்ஷாத்கரிக்கமூண்டு அநாதிகாலப்ரவ்ருத்தாநந்ததுஸ்தர ஸமாதிவிரோதி கர்மஸஞ்சய ரூபாவித்யா ப்ரபாவத்தாலே குண்டிதத்ருஷ்டியாய் நிர்விண்ணனான படியை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச் செய்கிறார்.

வம்பு-பரிமளத்தாலே, அவிழ்-விகஸியாநிற்கிற, போது - புஷ்பத்திலே, அமர்- வஸிக்குமவளான, மாதர் – ஸ்த்ரீயாலே, உகந்த - ஆச்ருதமான, விஸ்ருமர யரிமள பரித பத்ம வாஸ்தவ்யையான பிராட்டியாலே ஸந்தத மனுபூயமாநமான வென்ற படி. இத்தால் நிரதிசய போக்யத்வம் பலிதம், அம்மாநிதியை - அந்த மஹாநிதியை,

உபநிஷத் கோஷிதமான மஹாநிதியை யென்றபடி. இங்குநிதிக்கு மஹத்வமாவது தேசகாலவஸ்துபரிச்சேதராஹித்யம். ஈச்வரனைநிதியாக நிர்த்தேசித்ததாலே "யதாஹிரண்யநிதிம்நிஹிதம் க்ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ நவித்தேயுரேவமேவேமா: ப்ரஜா அஹரஹர்கச்சந்த்ய ஏதம்ப்ரஹ்மலோகம்நவிந்தந்தி" என்கிறபடியே ஸர்வதா ஸந்நிஹிதத்வெபி ஸித்தாஞ்ஜநஸம்ஸ்கார விகலநயனைரிவ யோக பரிபாக விகலாந்தகரணைர் துராலக்ஷ்யத்வம் ஸூசிதம். தன்பலமே - தன்னுடையபலத்தையே, அவதாரணத்தால் பகவதநுக்ரஹாவலம்பநவ்யுதாஸ:. கொண்டு - அவலம்பித்து, காண-ஸாக்ஷாத்கரிக்க, கருதிய - மனோரதித்தவனை, தாமரையோன் - தாமரஸபுஷ்பஸம்பவனை சதுர்முகன்; முன் - ப்ராசீனங்களான, பல - பஹுவிதங்களான, குற்றத்து - அபராதங்களுடைய, வல் - த்ருடங்களான, ப்ராயச்சித்த பலாநுபவேதரதுச்சமங்களான வென்றபடி. வினை - கலுஷங்கள், மொய்க்க - மதுமக்ஷிகந்யாயெநநிரந்தரமாகவாக்ரமித்து இருக்கையாலே, அத்ரகுற்ற சப்தத்தாலே சேதநனுடைய சாஸ்த்ரநிஷித்த கரணத்ரய வ்யாபாரங்கள் விவக்ஷிதங்கள். வினைசப்தத்தாலே தஜ்ஜநித பகவந்நிக்ரஹங்கள் விவக்ஷிதங்கள். அகாத்யாஜ்ஞாதிலங்கன ஜநிதாநந்த துச்சம பகவந்நிக்ரஹ வ்யாவெஷ்டநத்தாலே யென்றபடி. முகிழ் - முகுளிதமான, மதியாய்-புத்தியையுடையனாய், அம்புலி - சந்த்ரனை, வேண்டிய - அபிலஷித்தவனை, பாலனைப்போல - மௌட்யத்தாலே சந்த்ரக்ரஹணத்திலுத்யோகித்து ததலாபத்தாலேவிஷண்ணனான பாலனைப்போலே யென்றபடி. அழுதனன் - ரோதநம் பண்ணினான். (௫)

மூ.—அடங்காக் கரணங்களைந்துடனாறு மடக்கிமுன்னம்
நெடுங்காலமிந்நிலமேநிலையாப்பூண்டு நீடுறைவான்
சடங்காற்பெரிய தவங்கள்செய்தேனென்னதன்மையிதென்
றிடங்காத்திருந்ததிசைமுகன்றன்னையிகழ்ந்தனனே. (௬)

ப்ராக்தந தபச்சரண தசானுபூத காயக்லேச பாஹுள்ய தத்பலபல்குத்வாதி பராமர்சத்தாலே நிர்விண்ணனான சதுர்முகன் ஸ்வாத்மகர்ஹணம் பண்ணின ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

இந்நிலமே-இந்தஸ்தானத்தையே, ஸம்ப்ரத்யநுபூயமாந மானவண்டாதிபதி பதத்தையென்றபடி. இந்நிலம் என்கிறநிர்த்தேசத்தாலே ஸ்வபதத்துக்கு ஸ்வானுபவஸித்தங்களான ஸ்வரூபதொத்யல்பரஸத்வ பஹ்வபாயாஸவிரஸத்வமதுகைடபப்ரப்ருதி ப்ரயுக்த பரஸ்ஸஹஸ்ர விபத்பரம்பரா ஜடிலத்வாதிகள் தர்சிதங்கள். நிலையா - ஸ்திதியாக, பூண்டு - பூட்டிக்கொண்டு, வைராக்யம்பிறந்தபோது விடவொண்ணாதபடி ஸ்திரதரச்ருங்கலம்போலே யிருக்கிற வதிகாரத்திலே யகப்பட்டென்றபடி. நீண்டு-சிரகாலம், உறைவான் - வாஸம்பண்ணுகைக்கு, உறைவானென்கிறது துமுநந்தபர்யாயபதம். இதுக்கு தவங்கள்செய்தே னென்கிறதோடே யந்வயம். முன்னம் - பூர்வம், நெடுங்காலம் - தீர்ககாலம், யுககோடிஸஹஸ்ரங்களிலே யென்றபடி. அடங்கா - நியமயிது மசக்யங்களான, கரணங்கள் ஐந்துடன் - ஐந்துகரணங்களுடனென்றந்வயம். பஞ்செந்த்ரியங்களோடே, ஆறும் - காமக்ரோத லோபமோஹ மதமாத்ஸர்யரூப அரிஷட்வர்கத்தையும், அடக்கி-நியமித்து, இங்கரிஷட்வர்க நியமநோக்தியாலே யந்தரிந்த்ரியநியமனம்பலிதம். பாஹ்யெந்த்ரிய பஞ்சகத்தோடேகூட வந்தரிந்திரியத்தை நிக்ரஹித்தென்று பிண்டிதார்த்தம். இங்குகரணங்களைந்துடனென்று பாஹ்யகரணங்களுக்கு பஸர்ஜநத்வநிர்தேசத்தாலே "இந்த்ரியெப்ய: பராஹ்யர்த்தா அர்த்தேப்யச்ச பரம் மந:" என்று கடவல்லியில் வசீகார்ய பரம்பரையிலே சொன்னபடியே வசிகார்யதாயா மந்தரிந்த்ரியத்துக்கு ப்ராதான்யம் த்வநிதம். யத்வா கரணங்களைந்துடன் - வாக்பாணிபாத பாயூபஸ்தரூப கர்மேந்த்ரிய பஞ்சகத்தோடே, ஆறுமடக்கி-க்ராணரஸந சக்ஷுஸ்த்வக்ஶ்ரோத்ரமனோரூப ஜ்ஞாநெந்த்ரியஷட்கத்தையும் நிக்ரஹித்தென்றபடி. இந்த யோஜனையிலே நிக்ராஹ்யதாயாம் கர்மேந்த்ரியாபேக்ஷயா ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கு ப்ராதான்யம் பலிதமாம். சடங்கால் - அங்கங்களாலே, பெரிய - மஹத்தரங்களான, தவங்கள் - தபஸ்ஸுகளை, செய்தேன் - ஆசரித்தேன், இது-இந்த தபச்சரணம், என்னதன்மை - என்னஸ்வபாவம். எலிபிடிக்க மலை கல்லுமாப்

போலே அசார்த்தசத கர்புரிதா த்யல்பரஸ பலோத்தேசேந துர்நிக்ர ஹேந்த்ரிய நிக்ரஹ பூர்வகம் சிரகாலஸாத்யா நந்தேதிகர்த்வ்யதாஜடில தபச்சரண க்லேசா நுபவம் பண்ணின தென்னஸ்வபாவ மென்றபடி. என்று - இப்படி, இதுக்கு வாக் யாந்தக்ரியையோடேயந்வயம். திசைமுகன்-திங்முகன், சதுர்முகனென்றபடி. இடம்- ஸ்தலத்தை, காத்திருந்த - காத்துக்கொண்டிருந்தவனை, நிதி ரக்ஷா பிசாச ந்யாயேந அண்டாதிபதிபதத்தை யாக்ரமித்துக் கொண்டிருக்குமவனான வென்றபடி. தன்னை- ஸ்வாத்மாவை, இகழ்ந்தனன்-லஜ்ஜித்தான், கர்ஹித்தானென்றபடி. "யச்சராமம்நபச் யேத்யஞ்சராமொ நபச்யதி। நிந்திதஸ்ஸவஸெல்லோகே ஸ்வாதமாப்யெநம்விகர் ஹதே" என்கிறபடியே பகவதநுபவவிகலனான தன்னைத்தானே வெறுத்துக்கொண் டானென்றபடி. (சு)

மூ.—விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மையாலும் வேதங்களீரிரண்டும் விரித்தலாலும், கண்ணனைநான் கருத்துறவே காண்பனென்னக் காணு மல்விலக்கிய தன் வினையைக்காணு, எண்ணியநற்புவனங்க ளேழு மாறு மிருமூன்றுதிவமுமெட் டிடமும்விட்டு, பண்ணியநல் விரத மெல்லாம் பலிக்குமென்று பாரதத்தைப் பங்கயத்தோன் படிந்திட் டானே. (எ)

இப்படி நிர்விண்ணனான சதுர்முகன் மநஃகஷாயசமனார்த்தமாக ஸாத்விகதபச் சரணத்திலே யுத்யோகித்து ததநுகுணமான தேசத்தை நிரூபித்து பூமிவ்யதிரிக்த த்ரயோதசலோகியையும் தத்ராபி ஜம்பூத்வீபவ்யதிரிக்தத்வீபஷட்கத்தையும்தத்ராபி பாரதவர்ஷவ்யதிரிக்த வர்ஷாஷ்டகத்தையும் போகபூமித்வேந உபேக்ஷ்ய ஸர்வதர்மா னுஷ்டானயோக்யமான பாரதவர்ஷத்திலே வந்துபுகுந்தானென்கிறார்.

விண்ணுலகில் - ஊர்த்வலோகத்திலே, சதுர்தசபுவநமத்யே மேல்பட்டதான ஸத்யலோகத்திலே யென்றபடி. வீற்றிருந்த - உத்கர்ஷந்தோற்றும்படியிருந்த, மேன் மையாலும் - உன்னதியாலும், அண்டாதிபத்ய ஐச்வர்ய கர்வத்தாலுமென்றபடி. ஈரி ரண்டு வேதங்களு மென்றந்வயம். ஈரிரண்டு - சதுஸ்ஸங்க்யாகங்களான, வேதங்க ளும் - வேதங்களையும், விரித்தலாலும் - விஸ்தரிப்பிக்கையாலும், விஷ்வங்முக வே தப்ரவர்த்தநகர்வத்தாலுமென்றபடி. நான் - இப்படி அதிசயி தாதிகாரம் பெற்றி ருக்கிற, நான், கண்ணனை - க்ருஷ்ணனை, கருத்து - மநஸ்ஸானது, உறவே - அடையும்படியாகவே, காண்பன் - ஸாக்ஷாத்கரிப்பன், மநஸ்ஸா பகவத் விஷயத் திலே ஸ்திரமாம்படி ஸாக்ஷாத்கரிப்பனென்றபடி, என்ன - இப்படி யுத்யோகிக்க, காணுமல் - காணவொட்டாதபடி, பகவத் ஸாக்ஷாத்காரம் பிறவாதபடி, விலக்கிய- ப்ரதிபந்தித்ததான, தன்வினையை- தன்னுடையகர்மத்தை, காணு - அறியாதவனான, ஸ்வ ஸமாதி விரோதி துரிதாநபிஜ்ஞனான வென்றபடி. தத் பரிஜ்ஞாநெஹி ததுசித ப்ரதிபதோக்தப்ராயச்சித்த மநுஷ்டிக்க லாவ தென்று ஹ்ருதயம். பங்கயத் தோன்- பங்கஜ ஸம்பவனான சதுர்முகன், எண்ணிய - புராணதிகளிலே புவனகோசப்ரஸ் தாவத்திலே ஸங்க்யாதங்களான, நல்-ஸமீசீநங்கலான, சுத்தபூமிகளான வென்றபடி. புவனங்கள் - புவனங்களை, ஏழும் - ஏழுகளையும், ஆறும் - ஆறுகளையும், அதல விதல நிதல தலாதல மஹாதல ஸுதல பாதாள பேதேந சப்தபேதங்களான வதோ லோகங்களையும் புவஸ்ஸுவர் மஹர் ஜநஸ்தபஸ்ஸத்யபேதெந ஷட் விதங்களான வூர்த்வலோகங்களையு மென்றபடி, இருமூன்று - த்விகுணிதத்ரிஸங்க்யாகங்களான, ஷட்ஸங்க்யாகங்களான வென்றபடி, தீவமும் - த்வீபங்களையும், ப்லக்ஷசால்மலிகுச க்ரௌஞ்சசாகபுஷ்கரத்வீபங்களையு மென்றபடி. எட்டிடமும் - எட்டுஸ்தலங்களையும், கிம்புருஷ ஹரிவர் ஷேளாவ்ருதரம்ய ஹிரண்யக குரு பத்ராச்வ கேதுமால பேதே நாஷ்டவிதங்களான வர்ஷங்களையுமென்றபடி. விட்டு - த்யஜித்து, போகபூமிகளெ ன்று பெக்ஷித்தென்றபடி. பண்ணிய - அனுஷ்டிதங்களான, நல் - ஸமீசீநங்களான, விரதமெல்லாம் - வ்ருதமெல்லாம், பலிக்கும் - பலாவினுபூதங்களாம், என்று-இப்படி நிரூபித்து, கர்மபூமித்வேந நிரூபிதென்றபடி. பாரதத்தை - பாரதவர்ஷத்தை, படிந் திட்டான் - அடைந்துவிட்டான். (எ)

மூ.—எத்திசையிலனுமெய்தி யருந்தவஞ்செய்தவந்நாள்
சத்தியவிரதஞ்செல்வாயென்றதோ ருரையின்சார்வால்
அத்திசைசென்றழைத்தங் கமரரில்லெடுப்பான்றன்னை
உத்தரவேதிசெய்யென் றுரையணங்கிறையுரைத்தான். (அ)

இப்படி பாரதவர்ஷத்திலே ஒருக்ஷேத்ரவிசேஷத்திலே சென்று துஷ்கரதபச்சரணப்ரவ்ருத்தனாய் தத்ராபி மாலிந்யம் கழியாமையாலே யதிவிஷண்ணனான சதுர்முகன் தத்காலஸமுன்மிஷிதாசரீரிவாக்காலே நியுக்தனாய் ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திலே சென்று அச்வ மேதாநுஷ்டாந பத்தசரத்தனாய் விச்வகர்மாவை யழைத்து யஜ்ஞசாலா நிர்மாணார்த்தமாக வாஜ்ஞாபித்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

உரையணங்கு - வாக்தேவதையுடைய, இறை - ஈச்வரன், வாக்தேவதா வல்லபனான சதுர்முகனென்றபடி. எத்திசை - ஸகலதிக்வர்த்திகளான, நிலனும் - ப்ரதேசங்களையும், எய்தி - அடைந்து, அரும் - துஷ்கரமான தவம் - தபஸ்ஸை, செய்த வந்நாள் - அனுஷ்டித்த வந்தகாலத்திலே, இங்கு நாநாதேசங்களையும் விட்டு பாரத வர்ஷத்தி லொருக்ஷேத்ரத்திலே தபஸ்ஸு பண்ணுகிற சதுர்முகனை நாநாதேசங்களையடைந்தவனாக நிர்தேசித்தது தத்தத் தேசங்களை புத்தியாலேபற்றி நிரூபித்து விடுகையாலே யென்று கண்டுகொள்வது. சத்தியவிரதம்-ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தை, செல்வாய்-அடையக்கடவை,என்றது - இப்படி போதித்தான, ஓர்-விலக்ஷணமான, சரீரவிநாஸம்பூதமான வென்றபடி. உரையின் - வசனத்தினுடைய, சார்வால்-அவலம்பத்தாலே, ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே போகச்சொன்ன வசரீரிவாக்கில் விஸ்ரம்பதார்ட்யத்தாலே என்றபடி. அத்திசை - அந்ததிக்கிலே, சென்று - போய், அங்கு - அந்த ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே, அமரர் - அமரருக்கு, இல் - க்ரஹங்கள் - எடுப்பான் தன்னை - நிர்மிக்குமவனை, தேவக்ருஹநிர்மாதாவான விச்வகர்மாவை யென்றபடி, இத்தாலிவனுக்கு ஜடிதி விசித்ரபுரநிர்மாணஸாமர்த்யம் ஸூசிதம். அழைத்து - ஆஹ்வாநம்பண்ணி, உத்தரவேதி-உத்தரவேதியை, இங்கு உத்தரவேத்யுபாதாநம் ப்ரதாநயாகாநுஷ்டாநதேசத்வ ப்ரயுக்தாப்யர்ஹித்வாபிப்ராயகம். இது மற்றுமுள்ள ஹவிர்த்தாந ஸதஃப்ரசம்ஸா திவைதிகதேசங்களுக்கும் வாபீகூபதடாகபரிகாப்ரகார நகராகாராதி போகஸ்தானங்களுக்கு முபலக்ஷணம். செய்-நிர்மிப்பாய், என்றுரைத்தான்-என்றுசொன்னான். (அ)

மூ —உத்தம வமர்த்தல மமைத்த தொரெழிற்றநு வுயர்த்தகணையால்
அத்திரவரக்கன் முடி பத்து மொருசொத்தெனவுதிர்த்ததிறலோன்
மத்துறுமிகுத்ததயிர்மொய்த்தவெணெய்வைத்ததுணுமத்தனிடமாம்
அத்திகிரி பத்தர்வினை தொத்தறவறுக்கு மணியத்திகிரியே. (௯)

இப்படி சதுர்முகனாலே யாஜ்ஞப்தனான விச்வகர்மாவும் யதாநியோகம் ஸ்ரீஹஸ்திகிரியை யுத்தரவேதியாக ஸமந்ததஃதக்ஷணம்பண்ணி இது ஸர்வேச்வரன் ஸந்நிதிபண்ணுகைக் கிடமாமென்று மநஸ்ஸிலே விசாரித்தபடியையருளிச்செய்கிறார்.

உத்தம - உத்தமமான, அமர்த்தலம் - யுத்தஸ்தலத்துக்கு, அமைத்தது - பர்யாப்தமான, உசிதமான வென்றபடி. மஹாரதாதிஷ்டித ரணரங்கயோக்யமான வென்றபடி. இது தநுஸ்ஸுக்கு விசேஷணம். ஓர் - அத்விதீயமான, எழில் - உஜ்வலமான, தனு-தனுஸ்ஸிலே, உயர்த்த-உச்ரிதமான, ஸந்தாநம்பண்ணப்பட்டதானவென்றபடி. கணையால் - பாணத்தாலே, இதுக்கு உதிர்த்தவென்கிறத்தோடே யந்வயம். அத்திர-அஸ்த்ரயுக்தனான, அரக்கன் - ராக்ஷஸனுடைய, ஸர்வாஸ்த்ரப்ரயோக குசலனான ராவணனுடைய வென்றபடி, முடிபத்தும் - சிரோதசகத்தையும், ஒருகொத்து - ஒருகோர்வை, என - என்னும்படி, ஏகநாளோத்கத பரிணத பலப்ருந்த மென்னலாம்படி யென்றபடி. உதிர்த்த - விழத்தள்ளினதான, ராவணனுடைய சிரோதசகத்தையும் பவநாவதூதபரிணதசிதிலபந்தந தாலபல ஸ்தபக ந்யாயே நாநாயாஸேந ஒருக்ஷணத்திலே விழும்படி பண்ணினதான வென்றபடி. திறலோன் - பராக்ரமத்தையுடையவனான, இத்தால்துஷ்டநிக்ரஹ சீலத்வமும் பரத்வமும் தர்சிதம். மத்து-மதநதண்டத்தாலே, உறு-உறத்தப்பட்டதான, கடையப்பட்டதான வென்றபடி. மிகுத்த

அதிகமான, மதநதண்ட ஸம்க்ஷோப கல்லோலிதமான வென்றபடி. தயிர் - ததியிலே, மொய்த்த - நிபிடவ்யாப்தமான, தார்வக்நி திலதைல சேதநாசேதந ந்யாயே நாப்ரதக்ஸித்தமாக ததியிலே வ்யாப்தமான, இத்தால் நவநீதஸ்யமதநநிஷ்பந்நத்வம் பலிதம். வெணெய்-நவநீதத்தை, வைத்தது - சிக்யத்திலே நிஹிதத்தை யெல்லாம், உணும்-புஜிக்குமவனை, இத்தால் சௌர்யம் பலிதம், அத்தன் - ஆப்தனுக்கு, இங்கு ஆபிரபல்லீ லுண்டித ஹய்யங்கவீந புக்ஷிம்பரியான க்ருஷ்ணனை யாப்தத்வேந நிர்தேசித்தது விஸ்மயகரம். இத்தால் ஆச்ரிதரக்ஷண சீலத்வமும் ஸௌலப்யஸௌசீல்யாதிகளும் த்யோதிதங்கள். இடமாம்-வாஸஸ்தானமாம்படியான, அத்திகிரி-ஹஸ்திகிரியானது, பத்தர் - பக்தருடைய, வினை - கர்மத்தை, தொத்து - ஸங்க்ரமணம், அற - இல்லாதபடி, புந ரங்குரியாதபடி யென்றபடி. அறுக்கும்-சேதிக்கும், இப்படி ஸ்ரீஹஸ்திகிரிதானே விரோதிநிரஸநம் பண்ணுமாகில் விரோதிநிரஸநாதிக்ருதனை திருவாழியாழ்வானுக்கு பயோக மேதென்னில் வாக்யசேஷம் ப்ரவர்த்திக்கிறது. அத்திகிரி-அந்தச்சக்ரமானது, அணி-அலங்காரமாத்ரம். திவ்யாஸ்த்ரபுஷ்பிதசதுர்புஜமெ மென்கிறபடியே பகவத்பாணிபல்லவாலங்காரஸ்தபகமா யிருக்கையே யுபயோக மென்றபடி. (௯)

மூ.—திண்மணிகள்பொன்னுடனே சேர்தலாலுஞ் சிதையாதநூல்வழியிற்
சேர்த்தியாலும், வண்மையெழுமிரிரண்டு வண்ணத்தாலும் வானவர்
க்கும் வியப்பான வகுப்பினாலும், உண்மையுடைவாசியொளி யோ
சையாலு மொருகாலு மழியாத வழகினாலும், மண்மகளார்க் கலங்கா
ரமென்ன மன்று மதிட்கச்சிநகர் கண்டு மகிழ்ந்திட்டானே. (௧௦)

சிந்தித விச்வகர்மாவாலே நிர்மித்து தர்சிதமான யஜ்ஞசாலாகர்பதிவ்யநகரத்தைக் கண்டு தனக்கு பஹுமதி விஷயமாகையாலே யிந்தநகரத்துக்கு காஞ்சியென்று பேராக்கின சதுர்முகன் இந்நகரத்தினுடைய ஸர்வப்ரகார ஸம்ருத்தியாலே யாநந்தித்தபடியை யருளிச்செய்கிறார்.

திண் - த்ருடங்களான, மணிகள் - ரத்நங்கள், பொன்னுடனே - காஞ்சனத்தோடே, சேர்தலாலும் - கூடியிருக்கையாலும், மஹார்ஹ மணிதப்தஜாம்பூநத ஸம்ஸர்க ஜநித சோபாதிசயத்தாலுமென்றபடி. சிதையாத - சலியாததான, நூல்வழியில் - ஸூத்ரமார்கங்களிலே, சேர்த்தியாலும் - ஸந்நிவேசத்தாலும், ஸௌத க்ருஹ வீதிகாதிகள் ருஜுதர ஸூத்ரமார்கம் தப்பாமே ஸந்நிவிஷ்டங்களாகையா லென்றபடி, வண்மை - அழகாலே, எழும் - வர்த்தியாநிற்கிற, ஈரிரண்டு - சதுஸ்ஸங்க்யாகங்களான, வண்ணத்தாலும் - வர்ணங்களாலும், ஸ்வஸ்வ மார்காநதிக்ரம மநோஹர ப்ராஹ்மணாதி வர்ணசதுஷ்டயத்தாலு மென்றபடி. வானவர்க்கும் - ஸ்வர்கவாஸிகளான பேருக்கும், வான்-ஸ்வர்கம். இங்கு - தேவர்களை ஸ்வர்கவாஸித்வேந நிர்தேசிக்கையாலே யவர்களுக்கு அதிமாநுஷ விவித விசித்ரஸந்நிவேச போகஸ்தாநாதி பரிசயசாலித்வம் த்வநிதம். வியப்பான - விஸ்மயநீயங்களான, வகுப்பினாலும்-அஸக்ருதநுபூதாதிமானுஷ விவித விசித்ர சில்ப கௌசலாதிசயரான தேவர்களுங்கூட ககந கந்தர்வ நகரேந்த்ரஜால தர்சநந்யாயேந உத்வேல விஸ்மய ரஸோர்மிள மநஸ்கராம்படி விலக்ஷணங்களான கோபுர மண்டப ப்ராகார க்ருஹ ஸௌத குட்டிம வாபீகூப தடாகாதி விபாகங்களாலு மென்றபடி. வானவர்க்கு மென்கிற நிர்தேசத்தாலே கிம்புந ரபரித்ருஷ்ட வைசித்ர்யாதிசயாநாம் மானுஷாணா மிதி கம்யதே. உண்மையுடை-யாதார்த்யத்தையுடையவைகளான, வாசி - வாஜிகளுடைய, ஒளி-ப்ரகாசமான, ஓசையாலும் - கோஷங்களாலும், சாஸ்த்ரோதித சுப லக்ஷணாலங்க்ருத துரக ஹேஷிதங்களாலு மென்றபடி. இதுமற்றுமுள்ள மதாவள ப்ரும்ஹித பூஷணசிஞ்சிதவீணா க்வணிதாதிகளுக்கு முபலக்ஷணம். ஒருகாலும் - ஒருகாலத்திலேயும், அழியாத - நசியாததான, அழகினாலும் - ஸௌந்தர்யத்தாலும், நவநவஜ்ரும்பமாண ஸமுதாய சோபையாலு மென்றபடி. மண்மகளார்க்கு - பூமியாகிறபெண்ணுக்கு, அலங்காரமென்ன - அலங்கார மென்னும்படி, மன்னும் - ப்ரதிஷ்டிதமான, மதிள் - ப்ராகார பரிவ்ருதமான, கச்சிநகர் - காஞ்சீநகரத்தை யென்றபடி. "கஇதி ப்ரஹ்மணோ நாம தேந தத்

ரஞ்சிதோ ஹரி:|தஸ்மாத் காஞ்சீதி விக்யாதா புரீ புண்ய விவர்தநீ'' என்று வ்யுத்பாதித காஞ்சீ நாமகமான நகரத்தையென்றபடி. கண்டு - பார்த்து, மகிழ்ந்திட்டான் - ஆநந்தித்தான், சதுர்முகனிதி சேஷ:. (௰)

மூ.—காமங்கள் பலகொண்ட வேதங்கொண்டு கைதவமே செய்வார்க்குக் காணகில்லா, பூமங்கை கேள்வனை நான்கண்டு போற்ற ப்புண்ணியத்தி னிகரில்லா விரதம் பூண்டேன், சாமங்கள் கழிவதன் முன் சடக்கெனப் போய்த் தன்னாற்றிற் றனியிருந்து தவஞ்செய்கின்ற, நாமங்கை வந்திட நீயழைப்பாயென்று நன்மகனை நான்முகன்றானவினிட்டானே. (௧௧)

இப்படி காஞ்சீநகர நிர்மாணாநந்தரம் மரீசிமுதலான மஹர்ஷிகளை ருத்விக்குகளாகக்கொண்டு ஸ்ரஸ்வதி யென்கிறவாற்றில் தபஸ்ஸு பண்ணுகிற தன்ப்ரதான பத்நியான ஸரஸ்வதியை யழைத்துக்கொண்டுவருவா யென்று ஸ்ரீவஸிஷ்டபகவானுக்கு அநுசாஸித்தபடியை, யருளிச்செய்கிறார்.

காமங்கள்பலகொண்ட - பலகாமங்கள் கொண்ட வென்றந்வயம். பலகாமங்கள் - நாநாவித பலங்களை, கொண்ட - க்ரஹித்ததான, வைரிவத புத்ர பசு வ்ருஷ்ட்யந்ந ப்ருஹ்மவர்ச்சஸ ஸ்வர்கா த்யைஹிகாமுஷ்மிக தத்தத் புருஷாபிருசித நாநாபுருஷார்த்த ஸாதந பூத நாநா கர்ம விதாயகமான வென்றுநிஷ்கர்ஷம். வேத - வேதத்தை, கொண்டு - அவலம்பித்து, கைதவமே - கைதவத்தையே, கைதவம் - கிதவவ்யாபார:. வஞ்சநேதியாவத். செய்வார்க்கு - பண்ணுமவர்க்கு, ''குஸீதமேகே விஹரந்தி ஸர்வே ய ஆசீர் வதந்தோ ததத் யத்ர கிஞ்சித்'' என்றுஶ்ருதியி லோதுகிறபடியே வார்த்துஷிகன் பகுதந க்ரஹணார்த்தமாக வல்பதநத்தைப் பொலிசைக் கிடுமாப்போலே அதிககாலாநுபாவ்யபலாபிஸந்தியாலே அல்பகால ஸாத்ய கர்மங்களை யநுஷ்டிக்கும் கணிகா நுராக வ்ருத்திகளான த்ரைவர்கிகர்களென்று நிர்களிதார்த்தம். கைதவமேயென்கிற வவதாரணத்தால் கதாசிதப் யநபிஸம்ஹித பலகர்மா நுஷ்டாந வ்யவச்சேத:. காண - ஸாக்ஷாத்கரிக்க, கில்லா-அசக்யனான, பூமங்கை - தாமரஸவாஸிநி யான பிராட்டியினுடைய, கேள்வனை - நாதனை, ஶ்ரிய: பதியான ஸர்வேச்வரனை யென்றபடி. நான் - அதிநீசனான நான், யத்வா அண்டாதிபத்ய ப்ரட்ருதி ஜுகுப்ஸித புருஷார்த்தங்களில் நின்றும் விரதாபிஸந்திகனான நான், கண்டு - ஸாக்ஷாத்கரித்து, போற்ற - ஸ்துதிக்க, ஸ்தோத்ர நாமார்ச்சநா த்யுபசாரங்களாலே யாராதிக்கைக்கென்றபடி. புண்ணியத்தில் - புண்ணியங்களிலே, நிகரில்லா- ஸத்ருசமில்லாததான, விரதம் - வ்ருதத்தை, பூண்டேன் - பூட்டிக்கொண்டேன். ப்ரஹ்மஹத்யா ச்வ மேதாப்யாம் புண்யபாபக்ருதோவிதி: என்கிறபடியே ஸமஸ்த புண்ய கர்ம ஜாத ப்ரகர்ஷ ச்ரம ஸ்தாநமான வச்வமேதாக்ய மஹாவ்ரதத்திலே மூண்டு விட்டேனென்றபடி. பூண்டேனென்கிற நிர்தேசத்தாலே வ்ரதஸ்ய த்ருடதர நிகளபந்தவந் மத்யே துர்மோசத்வம் த்வநிதம். இத்தால் ப்ரஹ்மாதானேவரவேண்டியிருக்க மனுஷ்ய ப்ரேஷணம் பண்ணுவதேதோ வென்கிறகோபத்துக்கவகாசமில்லை யென்று ஸூசிதம். சாமங்கள் - யாமங்கள், கழிவதன்முன் - அதிக்ரமிக்கைக்குமுன்பே, சடக்கென-சீக்ரமாக, போய்-நடந்து, காலவிளம்பம்பண்ணாதேபோ யென்றபடி. தன்னாற்றில் - தன்னுடைய நதியிலே, தன்னாலே யதிஷ்டிதையான நதியிலே யென்றபடி. தனியிருந்து - அஸஹாயையாயிருந்து, தவம் - தபஸ்ஸை, செய்கின்ற - பண்ணுமவளான, பதிவிநாக்ருத பத்நிக்கு தபஸ்ஸிலே யதிகார முண்டாகிலும் பத்நீ விநாக்ருத பதிக்கு க்ரதுவில் அதிகாரமில்லை யிறேஎன்றுதாத்பர்யம். நாமங்கை-நாவில் வஸிக்குமவளான. ஜிஹ்வாக்ர வர்த்திநியான ஸரஸ்வதியென்றபடி. வந்திட - வந்துவிடும்படி, ப்ரணயகலஹ கலுஷிதையான ஸரஸ்வதி ப்ரஸந்நையாய் ஜடிதிவரும்படி என்றபடி. நீ-ஸாந்த்வவாதகுசலனான நீ, அழைப்பாய்-ஆஹ்வானம் பண்ணுவாய், என்று-இப்படி, நன்மகனை - நல்லபுத்திரனை, தனக்கு விதேயபுத்ரனான வஸிஷ்டபகவானை யென்றபடி. இங்கு வஸிஷ்டபகவானை தன் நாமத்தாலே நிர்தேசியாதே சதுர்முக புத்ரத்வேந நிர்தேசித்தது ''ஆத்மாவை புத்ர நாமாஸி'' என்கிற

படியே ஸ்வஸ்மாதநதிரிக்தனான புத்ரனை ப்ரேஷிக்கையாலே ஸ்வய மநாகமன ப்ரயுக்தாநாதரசங்கா ப்ரஸக்தியில்லை யென்று த்யோதநார்த்தம். நான்முகன்தான் - சதுர்முகன்தான், நவின்றிட்டான் - சொன்னான், சொல்லியனுப்பினா னென்றபடி. (௧௧)

மூ.—அன்னவடிவா ளசையு மன்ன நடையா ளுயரு மன்னவர சேறிவருவாள், அத்தனய னத்தனய னுத்திதனை யத்தெனவுத்தி புரியாள், நன்னடைவிடாநடமிதென்னநடவா நடுவுநண்ணு குடகேறியிழிவாணற்பதிகளற்பதிகள் கற்புரள வற்புதமருக் கதியினால், கன்னடைவிடாவிடமி லுன்னதி சிறு விகட மன்றுகிரிகூட மிடியக் கட்டவிடை யிற்றுவிழ மூற்றும் விழியுற்றடைய விட்டருகுற, அன்னநயசீரயனிதென்னென விழாவமரர்மன்னுபதியேறிமகிழ வச்சுதனணைத்தனுவி லத்திசை வரத்தகையவற்றணுகினாள். (௧௨)

இப்படி ப்ரஹ்மாவாலே நியுக்தனான வஸிஷ்டபகவான் ஸரஸ்வதிபக்கல் சென்று உபசாரபுரஸ்ஸரமாக பரக்ருத வ்ருத்தாந்தத்தை யறிவிக்க ப்ரணய கலஹ கலுஷிதையான ஸரஸ்வதி வாராதவளவில் ப்ரஹ்மா ஸ்வித்ரீ முதலான பத்நிகளைக் கொண்டு யஜ்ஞம்பண்ணத் தொடங்க தேவஸத்காரகுபிதரான அசுரர்களிந்தயஜ்ஞத்தைக் குலைக்கநினைத்துச் சென்று ஸரஸ்வதிக் கறிவிக்க வவளும் அதிகுபிதஹ்ருதையயாய்க் கொண்டு தக்ஷிணாபதத்திலே பேர்ந்து வேறேயொரு மஹாநதியாய்ப் பெருகி ப்ரஹ்மாவினுடைய யஜ்ஞ பூமியை யழிப்பதாக வுபக்ரமித்து ஸாடோப விச்ருங்கல கதியாய்ப்புறப்பட இதைக்கண்டு நம்முடைய யஜ்ஞம் மத்யே விசீர்ணமாய்த் தென்றத்யந்தமவஸந்ந மநஸ்கனான ப்ரஹ்மாவாலே சரணமாக வரிக்கப்பட்டவனாய் ஆஸ்ரிதபாரதந்த்ர்யம் தோற்ற யதோக்தகாரியென்று பேர்பெற்று மத்யே மார்கம் அநந்தசாயியாய் ஸேதுவாக வாவிர்பவித்த ஸர்வேச்வரனாலே நிருத்தவேகையா யுபசமித்தபடியை யருளிச்செய்கிறார்.

அன்னவடிவாள் - ஹம்ஸம்போலே யிருக்கிற வடிவையுடையவளான, வடிவு-அவயவஸன்னிவேசஃ. ஹம்ஸம்போலே அத்யந்த தர்சநீயாக்ருதியான வென்றபடி. யத்வா - ஹம்ஸம்போலே சுத்தஸ்படிகாக்ருதியான வென்றபடி, ஸரஸ்வத்யாச் சுத்தஸ்படிக ஸங்காசத்வம் ப்ரஸித்தமிறே. அசையும் - மந்தசாரியான அன்ன - ஹம்ஸம்போலேயிருக்கிற, நடையாள் - கமநத்தையுடையவளான, ஸ்பந்தமான மராளீமத கேல கமனையான வென்றபடி. உயரும்-உச்ச்ரிதமான, அன்னவரசு-ஹம்ஸஸ்ரேஷ்டத்தை, ஏறி - ஆரோஹித்து, வருவாள் - வருமவளான, அதி ஸௌகுமார்யேண பாதசாராஸஹிஷ்ணுதயா ராஜஹம்ஸசாரிணியான வென்றபடி. இங்கு ஹம்ஸஸமானாகாரத்வம் ஹம்ஸகமநத்வம் ஹம்ஸவாஹனத்வம் என்கிறவிசேஷண த்ரயமும் ஸரஸ்வதிக்கு நதீபாவாவஸ்தாயாஃ ப்ராக்ஸித்தம், இதை இங்கேயனுவதித்தது க்ரமேண தத்விருத்தமான பங்ககலுஷ நதீரூபத்வ ஸாடோப விகட கமநத்வ சர்க்கராசதகர்க்கச துங்ககிரி கூடாரோஹித்வ ரூப வக்ஷ்யமாண விசேஷணத்ரயத்தினுடைய வைசித்ர்ய ப்ரதர்சநார்த்தம். அத்தன் - ஆப்தனான, தீர்க்க கோபமூலாபராத சூன்யனான வென்றபடி. அயன் - அஜனனுடைய, அத்தனயன் - அந்த தநயனுடைய, சிஷ்டாக்ரேஸரத்வேந ப்ரஸித்தனாய் ப்ரஹ்மபுத்ரனான வஸிஷ்டனுடைய வென்றபடி. உத்திதனை - உத்தியை, அத்து - இது - என - இதி பதச்சேதஃ. இது - அத்து. என-இத்யந்வயஃ. இது - இந்தவர்த்தம், அத்து-அஸ்து, அங்கீக்ருதம். என - என்று, உத்தி-உத்தியை, புரியாள் - கொடாதவளான, சொல்லாதவளான வென்றபடி. ஸாந்த்வ ப்ரயோககுசலனான வஸிஷ்டபகவானாலே விஜ்ஞாபிதமான வர்த்தத்தைக்கேட்டு அஸ்து என்று அப்யுகம த்யோதகமாக வொருவசநம் சொல்லாதவளான வென்றபடி, சிரகாலதாராவாஹி படுதர மன்யுவான வென்றுபலிதார்த்தம். நன்னடை-நல்லநடையை, சீக்ரகதியை யென்றபடி. விடா-விடாததான, சீக்ர கதியோடே கூடினதான வென்றபடி. நடமிது - பாவப்ரதாநோநிர்தேசஃ. நாட்யமிதென்றபடி. என - என்னும்படி, த்வரித தாவந ஸம்வலித நாட்ய மிதென்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படி யென்றபடி. இதுக்கு ஏறியிழிவாளென்கிறத்தோடந்வயம். நடவா - கந்து மசக்யமான, நடுவு-

மத்யத்திலே, கண்ணு - ப்ராப்தங்களான, குடகு - குடகங்களை, உபலராசி: குடகு பதேநோச்யதே. ஏறி - ஆரோஹித்து, இழிவாள் - இறங்குமவளான, துர்கதர மார்க மத்ய கதங்களான வுபல ராசிகளை யெல்லாம் நிரங்குசமாக வேறி யிறங்குகை யாலே த்வரித கமந மிஸ்ரித நாட்யம் பண்ணுமவ ளென்று த்ப்ரேக்ஷணீயையான வென்று நிர்களிதார்த்தம். குடகேறி யிழிவா ளென்கிற நிர்தேசத்தாலே மார்க்கத்திலே யத்யுந்நதமான கதி ப்ரதிபந்தக மிருந்தாலு மேறிப் போமதத்தனைபோக்கி வழிவிலகிப்போவதில்லை யென்றுத்வநிதம். இங்கு ஸரஸ்வதீதிசேஷ:. நற்பதிகள் ஸமீசீனஸ்தாநங்களிலேயும், அற்பதிகள் - அஸமீசீந ஸ்தாநங்களிலேயும், ஸமப்ரதேசங்களிலேயும் விஷமப்ரதேசங்களிலு மென்றபடி. கற்புரள - கல்புரள இதிச்சேத:. கல் - சிலைகள், புரள - உருளும்படி, வேகாதிசயத்தாலே ஸமவிஷம ப்ரதேச விபாகமில்லாதே கந்தரசிலைகள் விலுண்டநம் பண்ணும்படி யென்றபடி. அற்புத-அத்புதையான, மருக்கதியினல்-மருகதியாலே, மரு-நிர்ஜலப்ரதேச:. யத்வா - மருக்கதியினல் - மருத்கதியாலே, வாயுகதியாலே யென்றபடி. இதுக்கு இடியவென்கிறத்தோடேயந்வயம். கன்னடை- கல்நடையிதிச்சேத:. சிலாகமநத்தை, விடா விடம்-ப்ரவர்த்திப்பியாத ஸ்தலம், இங்கு நடையை விடுகையாவது த்யஜிக்கையன்று, கிந்து அச்வம் விடுகை ஸர்பம் விடுகை யென்கிறவிடத்தில் போலே ப்ரவர்த்திப்பிக்கை. இல்-இல்லாதவையான, இதுகிரிகூடங்களுக்கு விசேஷணம். விஷம ஸங்கட ஸ்கலித சிலா கமனம் பண்ணுத ப்ரதேச மில்லாதவையான வென்றபடி. தாத்ருச கமனமே பண்ணு மிடங்களானவென்று பலிதார்த்தம். உன்னதி-உன்னதியாலே, சிறு - அல்பீபவியாதவையான, சிறுமை - அல்பீபவிக்கை, நிரதிசயோன்னதி சாலிகளானவென்றபடி. விகட - விகடங்களான, அதிவிசாலங்களான வென்றபடி. மன்னு - த்ருடதரங்களான, கிரிகூடம் - கிரிகூடங்கள், பர்வத சிகரங்களென்றபடி. இடிய - இடிந்து விழும்படி, கட்ட - கஷ்டங்களான, துர்தம கடோரங்களான வென்றபடி. விடை- வ்ருஷபங்கள், இற்று - நசித்து, விழ - பதிதங்களாம்படி, அநாயாஸேந மஹாநதீ தரண ஸமர்த்தங்களான மஹோக்ஷங்களும் கூட வவஸந்ந ப்ராணங்களாய்பதிதங்களாம்படி யென்றபடி. முற்றும் - ஸர்வத்ர, விழி-வீக்ஷணத்தை,உற்று-அடைந்து, ஸர்வதோ த்ருஷ்டிகளை ப்ரசரிப்பித்தென்றபடி. அடைய - காத்ஸ்ந்யேந, விட்டு-பரித்யஜித்து, அருகு - ஸமீபத்தை, உற - அடையும்படி, ஜநங்கள் ப்ரளய பாராவார ந்யாயெ நாபூதபூர்வமான மஹாநதீ ஸம்ப்ரமத்தைக்கண் டிதி கர்த்வ்யதாமூடங்களாய் க்ரத்வநுஷ்டாநவ்யக்ரனை ப்ரஹ்மாவினுடைய ஸமீபத்திலேதாவனம்பண்ணும்படி யென்றபடி, அன்ன - ஹம்ஸயுக்தனை வென்றபடி. நய - ந்யாயயுக்தனை, ஸரஸ்வத்யநுநயார்த்தமாக வஸிஷ்டபகவானை ப்ரேஷிக்கையாலே ப்ரதாநபத்ந்ய திக்ரமரூப துர்நய ரஹிதனை வென்று தாத்பர்யம். சீர்-கல்யாணகுணயுக்தனை, யாகாநுஷ்டாநோபயுக்த மந: ப்ரணிதான வாங்நியமாதி யுக்தரான வென்றபடி. அயன் அஜன், இதென் - இதெது, என - என்னும்படி, கிமிதம் என்று ஸம்ப்ராந்தனும்படி யென்றபடி. விழா - உத்ஸவத்திலே யிருக்கிற, அமரர் - அமரர்கள், மன்று - ஸ்திரமான, பதி - ஸ்தானத்தை, ஏறி - ஆரோஹித்து, மகிழ - ஆனந்திக்கும்படி, ஹயமேதோத்ஸவ தர்சந ஸமாகதரான தேவர்களித்தைக்கண்டு அதிபீதராய் ஜடிதி ஸ்வர்கத்தை யாரோஹித்து தங்களுடைய ப்ராணத்ராணத்தாலே புநர்ஜாதம் மந்யராய் ஸந்தோஷிக்கும்படி யென்றபடி. அத்திசை - அந்ததிக்கிலே, அச்வமேதாநுஷ்டான ப்ரதேசத்திலே யென்றபடி, வர - வரச்செய்தே, அச்சுதன் - அச்யுதன், நச்யவந்தே ஸ்மாதாஸ்ரிதா இத்யச்சுத: என்கிற வ்யுத்பத்தியாலே பகவத ஸ்ஸர்வப்ரகாராஸ்ரித ரக்ஷண சீலத்வம் தர்சிதம். அணைத்தனுவில் - சயனபோகத்திலே, ஸ்வசயநபூதமான திருவனந்தாழ்வான் திருமேனியாலேயென்றபடி. ஆவிர்பவித்திதிசேஷ:. தகைய-ப்ரதிபந்திக்க, "ஏஷஸேதுர் விதரணஏஷாம் லோகாநாம்ஸம்பேதாய" என்கிறபடியே ஸகலஜக தேகஸேதுவான ஸர்வேச்வரன்தானே சரணுகத சதுர்முக யஜ்ஞஸம்ரக்ஷணர்த்தமாக வநந்தபோகி போகசாயியா யாவிர்பவித்து யஜ்ஞவிகாதோத்யதமான மஹாப்ரவாஹத்துக்கு துரதிக்ரமமாக வோரணைபோட்டாப்போலே ப்ரதிபந்தம்

பண்ணுகையாலே யென்றபிண்டிதார்த்தம். வற்று - சோஷணத்தை, அணுகினாள், அடைந்தாள். கிஞ்சித்லஜ்ஜிதையாய் சிதிலிதவேகையாய் உபசாந்தையாறு ளென்றபடி. (௧௨)

மூ.—அன்றுநயந்த வயமேத மாவேள்விப்
பொன்றவுரையணங்குபூம்புனலாய்க்—கன்றிவர
ஆதியனுக்கருள் செய்தணையானான்
தாதையரவணையான்றான். (௧௩)

கீழ்ப்பாட்டிலருளிச்செய்த வர்த்தத்தையே ஸர்வேச்வரனுடையவாச்ரிதபாரதந்த்ர்ய ப்ரகாசனார்த்தமாக புநராநுஸந்திக்கிறார்.

அன்று - அந்ததிநத்திலே, நயந்த - அநுஷ்டிதமான, அயமேத - ஹயமேதமென்று ப்ரஸித்தமான, மாவேள்வி-மஹாயஜ்ஞமானது, பொன்ற - நசிக்கும்படி, உரையணங்கு - வாக்தேவதை, பூம்புனலாய் - புஷ்பஜலமாய், கமலகுமுதகல்ஹாரோத்பலராத்யலங்க்ருத மஹாநதியா யென்றபடி. கன்றி - விவர்ணீபவித்து, கோபஜ்வலநதஹ்யமான ஹ்ருதயையா யென்றபடி. வர - வரும்போது, ஆதி-ஜகத் ஸ்ருஷ்ட்யதிகாரியான வென்றபடி. அயனுக்கு - அஜனுக்கு, அருள்செய்து-க்ருபைபண்ணி, தாதை - பிதாவான, ஜகத்ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கும் பிதாவான வென்றபடி. இங்கீச்வரனை ப்ரஹ்ம பித்ருத்வேந நிர்தேசித்தது வாத்ஸல்ய ஹிதப்ரவர்த்தகத்வாதி ப்ரதர்சநார்த்தம். அரவணையான் - போகிசயனன், தான் - ஸ்வயமேவ, அணையானான் - ஸேதுவானான். (௧௩)

மூ.—தரணியின்மன்னியயனார்தனித்தவங்காத்தபிரான்
கருணையெனுங்கடலாடித்திருவணைகண்டதற்பின்
திரணரகெண்ணிய சித்திரகுத்தன் றரித்து வைத்த
சுருணையிலேறியசூழ்வினை முற்றுந் துறந்தனமே. (௧௪)

இப்படி ஸகலலோகைகஸேதுவான ஸர்வேச்வரன் ஸரஸ்வதி ப்ரவாஹமத்யத்திலே யரவணையோடே கூட வணையாகக் கிடந்தவளவில் கண்ணும் மனமுங் களிக்கக் கண்டு நின்ற த்ரைலோக்யவர்த்திகளும் பேசினபாசுரத்தையருளிச்செய்கிறார்.

தரணியில் - தரணியிலே, மன்னி - த்ருடீபவித்து, த்ருட விகட கிரிகூட பேதியான ஸரஸ்வதீ ப்ரவாஹத்துக்குங் கூடவணுக வொண்ணுதபடி பூமியிலே ஸீமாசலம் போலெ கண்வளர்ந்தென்றபடி. இதுக்குக் காத்தபிரானென்கிறத்தோடே அந்வயம். அயனார் - அஜனுடைய, அயனாரென்கிற பூஜோக்தியாலே சதுர்முகனுருவனிடத்திலுள்ள பகவத்வாத்ஸல்யத்தால் நிகிலலோகமும் பகவத்ஸாக்ஷாத்காரம் பெற்றுஜ்ஜீவிக்கும் படியாய் த்தென்று மஹோபகாரத்வ ப்ர்யுக்தகௌரவாதிசயஸ் ஸூசிதஃ. தனி - அஸஹாயமான, ஸத்ருசாந்தர ரஹிதமான வென்றபடி. யத்வா - தனி அநாதமான, பகவத்வ்யதிரிக்த ரக்ஷக சூந்யமான வென்றபடி. தவம் - தபஸ்ஸை, பஹுவிதவ்யய காயக்லேச ஸாத்யமான வச்வமேதத்தை யென்றபடி, காத்த - ரக்ஷித்தவனான, பிரான் - உபகாரகனுடைய, கருணையெனும் - கருணையென்று பேர் பெற்றிருக்கிற, கடல் - ஸமுத்ரத்திலே, ஆடி - அவகாஹித்து, திருவணை - ஸ்ரீமத்ஸேதுவை, வேகாஸேதுவான ஸ்ரியஃபதியை யென்றபடி. கண்டதற்பின் - ஸாக்ஷாத்கரித்தபின், இதுக்கு துறந்தன மென்கிறத்தோட ந்வயம். பகவத் கருணு விஷயரல்லாதார்க்கு பகவத் ஸாக்ஷாத்காரம் துர்லப மென்று த்யோதநார்த்தம். இங்கு பகவத்கருணு ஸமுத்ராவகாஹத்துக்கு பகவத்ஸாக்ஷாத்கார பூர்வபாவ நிர்தேசஃ. லோகத்திலும் ஸமுத்ரத்தில் விழுந்து துளைந்தவனிறே கரைகாண்பது. இத்தால் ஸமுத்ரத்தி லவகாஹித்து ராமஸேதுதர்சனம் பண்ணினவனிறே ப்ரஹ்மஹத்யாதி மஹாபாதகங்களைப் போக்குவதென்று தர்மசாஸ்த்ர ப்ரக்ரியாபி ஸூசிதா. திரணரகு-திரள் - நரகு-இதிச்சேதஃ. திரள் - ராசிபூதங்களான, நரகு - நரகங்களை, எண்ணிய. கணைபண்ணுமவனான, தத்தத்புருஷக்ருத பாபராசி பலபூத நரக ராசிகளுடைய கணனுவிலேகநங்களிலே யதிக்ருதனான வென்றபடி. சித்திரகுத்தன் - சித்ரகுப்தனாலே, தரித்து - அறிந்து, வைத்த - நிவேசிதமான, கணனு பூர்வகமாக விலேகித்து பலப்ரதாநார்த்தம் ரக்ஷிதமான வென்றபடி, சுருணையில் - கணக்கோலைச்சுருளில்,

ஏறிய - ஆரூடங்களான, சூழ் - ஆவாரகங்களான, வினை - கர்மங்களை, முற்றும் - க்ருத்ஸ்நங்களையும், துறந்தனம் - பரித்யஜித்தோம், சித்ரகுப்த லிகிதைகளான வஸ்மத்பாபராசிலிபிகளை காத்ர்த்ஸ்ந்யேந கிறுக்கி விட்டோ மென்றபடி. லோகத்திலும் பல வதவஷ்டம்ப முடையவனிடத்திலே துர்பலன் கையில் ருணபத்ரம் கார்யகர மன்றிறே. (௧௪)

மூ.—சுகலேசமெண்ணிய சூழ்வினைதீர்க்கத் துணிந்தயனார்
அகலாதவன்புடன் கொண்ட வயமேத வேதியின்மேல்
புகலோங்கு பொன்மலை யென்றதோர் புண்ணியகோடியுடன்
பகலோன் பகல்விளக்காகப் பரஞ்சுடர் தோன்றியதே. (௧௫)

இப்படி வேகவதியாய் வந்த ஸரஸ்வதியுடைய கோபவேக மடங்கும்படி வெஃகாவில் துயிலமர்ந்த வெம்பெருமான் கடாக்ஷிக்கக் கலக்கமற்றுவந்த ஸரஸ்வதியையும் கூட்டிக்கொண்டு ப்ரஹ்மாவச்வமேதயாகத்தை நடத்தப்ராதஸ்ஸவநகாலிகமான வபாஹோமம் ப்ரவ்ருத்தமான வளவிலே யாயிரங்கோடி யாதித்தியர்க ளுதித்தாப்போலே உத்தரவேதி மத்யத்திலே ஒருமஹாதேஜஸ்ஸு தோன்றினபடியை யருளிச்செய்கிறார்.

சுகலேசம் - ஸுகலேசத்தை, எண்ணிய - அபிலஷிக்குமவையான, சூழ்வினை- ஆவாராககர்மங்களை, தீர்க்க - நசிப்பிக்க, துணிந்து - நிச்சயித்து, காடாந்தகாரசலித கத்யோதகல்பா நந்த துக்கஸ்ரோதோந்தர்கத வைஷயிக ஸுகலேசத்திலே புருஷார்த்ததா புத்தி ஜநகங்களான வநந்தப்ராசீந துரிதங்களைக் கழிக்க த்ருடஸங்கல்பத்தைப்பண்ணி யென்றபடி. அயனார் - அஜனாலே, அகலாத - விச்லேஷியாததான, த்ருடதரமான வென்றபடி. யத்வா -அவ்யபிசாரியானவென்றபடி. அன்புடன்- ப்ரேமத்தோடே, கொண்ட - ஸ்வீக்ருதமான - அநுஷ்டிதமான வென்றபடி. அயமேத - ஹயமேதத்தினுடைய, வேதியின்மேல் - வேதிகையின்மேலே, உத்தரவேதி மத்யத்திலே யென்றபடி. புகல் - ப்ரபைகள், ஓங்கு - ஊர்த்வ வ்யாப்தைக ளாம்படியான, ஊர்த்வமுகவ்யாபி மயூக படலீ சாலியான வென்றபடி, பொன்மலை - ஹிரண்ய பர்வதம், என்றது-என்னும்படியான, ஓர்-விலக்ஷணமான, புண்ணியகோடியுடன்- ஸ்ரீபுண்யகோடி விமாநத்தோடே கூட, பகலோன் - அஹஸ்கரனனவன்-பகல்விளக்காக-திவாதீபமாம்படி, நிரதிசய ஸ்வதேஜோபிபூதனன ஸூர்யன்திவாதீபம்போலே நிஸ்தேஜஸ்க னும்படி யென்றபடி. பரஞ்சுடர் - பரஞ்ஜோதிஸானது, "அதயததஃ பரோதிவொ ஜ்யோதிர் தீப்யதே,நதத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்,நேமா வித்யுதோ பாந்தி குதோ ய மக்நிஃ, தஸ்ய பாஸா ஸர்வ மிதம் விபாதி, தமேவ பாந்தமநுபாதி ஸர்வம், தஸ்யாதித்யோகா முபயுஜ்ய பாதி" என்கிற ஸ்ருதிப் ரசித்தமாய் ஸர்வதேஜஸா மபிபாவகமாய் ஸர்வதேஜஸா முபஜீவ்யமான பரஞ்ஜ்யோதிஸ்ஸான தென்றபடி. தோன்றியது - ஆவிர்பவித்தது. (௧௫)

மூ.—பெருமையுடை யத்திகிரிப்பெருமாள் வந்தார் பேராதவருள்பொழியும் பெருமாள்வந்தார், அருமறையினுச்சிதனினின்றார்வந்தார் அங்கமுடனவையாகும்பெரியோர்வந்தார்,திருவுரையாய்த்தாம்பொருளாய் நிற்பார்வந்தார் திருவருளாற்செழுங்கடலைக்கடந்தார்வந்தார், மருவிலர்க்கு மயக்குரைத்து மாயோர்வந்தார் வானேறவழி தந்தார் வந்தார் தாமே. (௧௬)

இப்படி ஸ்ரீபுண்ய கோடி விமாநத்தோடே யாவிர்பவித்தருளின பேரருளாளனைக்கண்டு உந்மஸ்தகாநந்த பரிதரானநித்யஸூரிகளுடைய முகத்தாலே யாத்மாதமான வாதிராஜ்ய சிம்ஹ திவ்யகாஹளத்தினுடைய ரஹஸ்யத்ரயப்ரதிபாத்யகல்யாண குணகர்பமானநாதமிருக்கும்படியை திருச்சின்னமாலை யென்றொரு ஸ்வதந்த்ர ப்ரபந்தமாகச் செய்தருளினார். அதினுடையபாதார்த்த வர்க்யார்த்தங்களிருக்குங் கட்டளையெல்லாம் நாம்ஸ்வதந்த்ரமாகவேவிவரித்தோம். இங்கு ததபேக்ஷயா பின்ன பூர்வார்த்த பாடையான இக்காதையை விவரிக்கிறோம்.

பெருமையுடை - மாஹாத்ம்யத்தை யுடையவரான, அத்திகிரி - ஹஸ்திகிரி வாஸ்தவ்யரான, பெருமாள் - ஸ்பஷ்டம், வந்தார் - ஆவிர்பவித்தார், இப்படி மேலும் கண்டுகொள்வது. பேராத - சலியாததான, அருள் - க்ருபையை பொழியும் - வர்ஷிக்குமவரான, பெருமாள்வந்தார்-ஸ்பஷ்டம், அரு - துர்போதங்களான, மறையின்-வேதங்களுடைய, உச்சிதனில் - சிரஸ்ஸுக்களிலே, நின்றார் - ப்ரதிஷ்டித ரானவர், அதிகஹந கம்பீர ஸகலவேதாந்த ப்ரதிபாத்ய ரென்றபடி. அங்கமுடன்-சிக்ஷாகல்பாத்யங்கங்களோடே கூட, அவை - அந்தவேதங்கள், ஆகும் - ஆகுமவரான, ஸாங்க ஸகல வேத நிர்வாஹகரான வென்றபடி. பெரியோர் - மஹிமயுக்தர், திரு - பிராட்டி, உரையாய் - வாணியாய், தாம் - ஸ்வயம், பொருளாய் - அர்த்தமாய், நிற்பார்-நிற்குமவர், "ஔத்பத்திகஸ்து சப்தஸ் யார்த்தேந ஸம்பந்த:" என்கிற ஜைமினி ஸூத்ர தர்சிதா ப்ரதக்ஸித்ய பிப்ராயத்தாலே "அர்த்தோ விஷ்ணு ரியம்வாணீ" என்று துடங்கி பராசர ப்ரஹ்மர்ஷி ப்ரபஞ்சித்த படியே ஸர்வாவஸ்தையிலும் பிராட்டியோடு ஸம்ச்லிஷ்டரான வரென்றபடி. திருவருளால்-ஸ்ரீக்ருபையாலே, செழும்-அபிவ்ருத்தைகளான, கலைகள்-வித்யைகளை, தந்தார் - கொடுத்தவர், முன்பு - வித்யாஸ்தான வக்த்ருத்வம் சொல்லிற்று, இப்போது தத்ப்ரதாத்ருத்வம் சொல்லுகையாலே புநருக்தியில்லை, மருவலர்க்கு - ப்ரேமசூன்யர்க்கு, மயக்கு - வ்யாமோஹந சாஸ்ரங்களை, உரைக்கும் - உபதேசிக்கு மவரான, மாயோர் - வஞ்சகர், வான் - வைகுண்டாக்ய பரமாகாசத்தை, ஏற-ஆரோஹிக்க, வழி-மார்க்கத்தை, தந்தார்-கொடுத்தவர், தாமே - ஸ்வயமேவ, வந்தார் - ஆவிர்ப்பவித்தார். (கசு)

மூ.—அத்திகிரியருளாளப்பெருமாள்வந்தார் ஆனைபரிதேரின்மேலழகர்வந்தார், கச்சிதனிற்கண்கொடுக்கும்பெருமாள்வந்தார்கருதவரந்தருந்தெய்வப்பெருமாள்வந்தார், முத்திமழைபொழியுமுகில்வண்ணர்வந்தார் மூலமெனவோலமிட வல்லார்வந்தார், உத்தரவேதிக்குள்ளே யுதித்தார்வந்தார் உம்பர்தொழுங்கழலுடையார்வந்தார்தாமே. (கஎ)

இந்தபாட்டின்வ்யாக்யானத்தை திருச்சின்னமாலையில்காண்பது. (கஎ)

மூ.—திருபரிதிசைந்தமகுடமும் எழின்மதிதிகழ்ந்தவதனமும்
இருவகையிலங்குகுழல்களி லெதிர்பொரவுகந்தமகரமும்
ஒருதகவுயர்ந்ததிருமக ளொளிமருவின்மன்னுமகலமும்
உருவருவுமிழ்ந்தவுதரமும் உலகடையநின்றகழல்களும்
மருவினிடையோங்குபுனலென மலைகுனியநின்றமலையென
மருளறவிளங்குமொளியென மலரயனுகந்தபயனென
வுருவிலுறைகின்றவுயிரென வடியவருகந்தவமுதென
அருமறைகளொன்றியடிதொழ வருள்வரதர்நின்றபெருமையே.(கஅ)

இப்படியாவிர்ப்பவித்தருளின பெருமாளுடைய மஹாதேஜஸ்ஸிலே ப்ரமமேறியோடின ப்ரஹ்மாவும் தேவர்களும்மகர்ஷிகளும் வருந்தி குறித்துப் பார்த்து அத்தேஜோமண்டலத்துக்குள்ளே புண்யகோடி விமாநத்தையும் அவ்விமானமத்யத்திலே ஹவிர்கர்ப்பமுகரான பெருமாள் காந்திவர்ஷியாயிருப்ப தொரு காளமேகம்போலே நின்றருளினபடியையுங் கண்டுஹர்ஷவிஸ்மயபரவசராய்க் கொண்டு பேசினபடியை யருளிச்செய்கிறார்.

திரு - ஸ்ரீமானான, பருதி - ஸூர்யனோடே, இசைந்த - ஸத்ருசமான, தீதிதி ஸஹஸ்ர பாஸ்வர பாஸ்கர ஸத்ருசமான வென்றபடி. மகுடமும் - மகுடத்தோடும், எழில் - உஜ்வலனான, மதி-சந்த்ரன்போலே, திகழ்ந்த - விளங்காநிற்கிற, வதனமும்-வதநத்தோடும், இருவகை - இரண்டுப்ரகாரமாக, இலங்கு - விளங்காநிற்கிற, குழல்களில் - குந்தளங்களிலே, எதிர்பொர-அபிமுகமாக ப்ரவர்த்திக்க, உகந்த - ப்ரீதங்களான, மகரமும் - மகரங்களோடும், லலாட ப்ராந்த த்வய லம்பி திவ்யாளகங்களிலே க்ரஸந ஸந்நத்தங்கள் போலே யிருக்கிற மகரகுண்டலங்களோடு மென்றபடி. ஒரு - விலக்ஷணமான, தகவு - க்ருபையாலே, உயர்ந்த - துங்கையான, திருமகள் - பிராட்டியானவள், ஒளி - உஜ்வலமான, மருவில் - ஸ்ரீவத்ஸாக்ய சின்ஹத்தோடே

மன்னும் - ஸ்திரீபவிக்குமிடமான், அகலமும் - விசாலஸ்தலத்தோடும், நிரவதிக கருணா ரஸ நிர்பரையான பிராட்டிக்கு ஸ்ரீவத்ஸத்தோடே கூட நித்ய ப்ரதிஷ்டாஸ்பத பூதமான விசங்கட வக்ஷஸ்தலத்தோடு மென்றபடி. உரு - ரூபவத்துக்களையும், அரு - ஸூக்ஷ்மங்களையும், ஸ்தூலங்களான வசேதநங்களையும் ஸூக்ஷ்மங்களான சேதநங்களையு மென்றபடி. உமிழ்ந்த - உத்கிரணம்பண்ணினதான, ஸ்ருஷ்டித்ததான வென்றபடி. உதாரமும் - உதாரத்தோடும், உலகு - லோகங்கள், அடைய - அநாயாஸேந சரணமாக வாஶ்ரயிக்கும்படி, நின்ற - எதிரே ஸௌலப்யேந நின்றவையான, கழல்களும் - திருவடிகளோடும், "ஸர்வபோக்யமநாயாஸம்" என்கிறபடியே ஸர்வ ஸமாஶ்ரயணார்ஹங்களான திருவடிகளோடு மென்றபடி. யத்வா - உலகு-லோகங்களிலே, அடைய - க்ருத்ஸ்நங்களிலேயும், நின்ற - நின்றவையான, கழல்களும் - திருவடிகளோடும், த்ரிவிக்ரமதசையிலே ஸர்வலோகங்களையும் வ்யாபித்து நின்ற திருவடிகளோடு மென்றபடி. அரு - போக்து மசக்யங்களான, மறை - வேதங்கள், ஒன்றி - ஏகீபவித்து, ஏகங்களா யென்றபடி. அடி - திருவடிகளை, தொழ - ஸேவித்திருக்கும்படி, "ஸர்வெவேதா யத்பதமாமநந்தி" இத்யாதிகள்படியே ஸர்வவேதங்களு மேககண்டங்களாய் ஸ்வஸ்வரூபகுணாதிகளை வந்திகள் போலே யுத்கோஷிக்கும்படி யென்றபடி. அருள்வரதர் - க்ருபையாலே வரப்ரதரான பேரருளாளர், நின்றபெருமை - ஸ்ரீஹஸ்திகிரி மூர்த்தாவிலே புண்யகோடிவிமானமத்யத்திலே நின்றருளினவதிசயம், மருவின் - மருப்ரதேசத்தினுடைய, இடை - மத்யத்திலே, ஓங்கு - எழும்பாநிற்கிற, புனலென - ஜலம்போலே, எனவென்கிறபதம் ஸாத்ருசய வாசகமா யுத்ப்ரேக்ஷாத்யோதகம். அகிலஹேயாஸ்பத த்ரிகுண த்ரய காம்பித ஜட விபூதிமத்யத்திலே, அகிலஹேயப்ரத்யநீக சுத்தஸத்வ ஸ்யம்ப்ரகாச விக்ரஹ விசிஷ்டரான பேரருளாள ரவதரித்தது மருகாந்தார மத்யத்திலே ஸ்வச்ச ஸ்வாது தோய பூரோதயம்போலே யென்றபடி. இப்படி மேலு முசிதமாகக் கண்டுகொள்வது. மலை - பர்வதமானது, குனிய - வணங்கும்படி, நின்ற - மலைமேல்நின்றதான, மலையென - பர்வதம்போலே, ஒரு மலைமே லொருமலை நின்ருப்போல் என்றபடி. மருள் - அஜ்ஞாநாந்தகாரம், அற - உச்சின்னமாம்படி, விளங்கும் - ப்ரகாசியாநிற்கிற, ஒளியென - ஜ்யோதிஸ்ஸுபோலே, ஸ்வதந்த்ராத்மப்ரம தத்கார்யா த்யுச்சேதார்த்தமாக வத்யாத்ம வித்யைதான் மூர்த்திபவித் து இத்தாப்போலே யென்றபடி. மலர் - புஷ்போத்பன்னனான, அயன் - அஜனாலே, உகந்த - அபிலஷிதமான, பயனென - பலம்போலே, உருவில் - சரீரத்திலே, உறைகின்ற - வஸிக்குமவனான, உயிரென - ஜீவாத்மாபோலே, அடியவர் - தாஸராலே, உகந்த - அபிலஷிதமான, அமுதென - அம்ருதம்போலே, பூர்வோக்த திவ்யபூஷண திவ்யாவயவ விசிஷ்டரான பேரருளாளருடைய கரிகிரி மூர்த்தாவில் புண்யகோடி விமாநாவஸ்தாந மிப்படி ஷட்ப்ரகாரமாக வுத்ப்ரேக்ஷிக்கும்படி யிருக்கிறதென்று பிண்டிதார்த்தம். (௧௮)

மூ.—சித்தசித்தென விரித்துரைத்தன வனைத்தமைத்துறையு மிறைவனார்
சிறியபெரியவுரு வடைய வுடலமென நடலமில்திலசுநிலையினர்
சித்திரத்தொழிலை யொத்தபத்தரொடு முத்தர்பித்தியெனு முணர்வினர்
சிஷ்தவின்மறைநெறியிலெறியவுருமுறைகண் முறியசிறையரியசிறைவினர்
கத்துவிக்கவல கத்துவித்தைவழி கற்றவர்க்கசைவின்மாயனார்
கபிலர்கணசரணர் சுகதர்சமணரபர் வழிகளழியுமருண் மொழியினர்
கத்திலக்கிலு மருக்குலத்திலு மசித்திலொக்கு மொருமுதல்வனார்
கர்ணமிடுகடிய பகிஞரிருடிகமு மடைய முடியு மடியிருடியார்
ஒத்தனைத்துலகு மொற்றியொற்றிவரு மிப்பவத்திசையு மிசைவினர்
உருவமருவமெனு முலகின்முடகிலணி லுவமையிலதிலகுதலைவனார்
உத்தமப்படி வகுத்தவித்தைகளி லுத்தரிக்கவுணர் குணவனார்
உரியகிரிசைகளி லகியதொருவிரகு தெரியவினையுமவர் பரிவினர்

சித்தசித்தனு மனைத்தனைத்தவினை தொத்சறுக்கவல துணிவினர்
செரியுமளவினுரி யவவையறிவரிய தமனிநெறிசொருகு விரகினர்
தத்துவத்திரளு தைத்துரைத்தடைவு தத்துவிக்குமவர் தலைவனார்
தருகவுணருமவர் சரணமணுகவிட லரி வருள்வரத ரடியமே. (௧௯)

இவ்வண்ண மாச்சர்யரஸத்தாலும் பக்திப்ரகர்ஷத்தாலும்ப்ரேரிதரான ப்ரஹ்மாதிகள் தொழுவதொழுவதா யிவர்க்குநாமடியோமாகப் பெறுவதே யென்று வேதாந்தஸாரமானவர்த்தத்தை விண்ணப்பஞ் செய்தபடியை யருளிச்செய்கிறார்.

இப்பாட்டில் அத்யாய சதுஷ்டயாத்மக சாரீரகசாஸ்த்ர ஷோடசபாதீ ப்ரதிபாத்யங்களான பதினாறு கல்யாணகுணங்க ளடைவே பதினாறுசரணங்களாலே ப்ரதிபாதிக்கப்படுகின்றன. சித்து - சித்தத்வம், அசித்து - அசித்தத்வம், என - என்று, விரித்து - விஸ்தரித்து, உரைத்தன - சொல்லப்பட்டவையான, அனைத்து - ஸமஸ்தவஸ்துக்களையும், அமைத்து - ஸ்ருஷ்டித்து, உறையும் - அவைத்திலே வஸிக்குமவரான, இறைவனார் - ஈச்வரபூதனான, நியந்த்ருபூதனான வென்றபடி. சேதநாசேதநரூபேண விபஜித்து தத்ராபி தேவதிர்யகாதி மஹதஹங்காராதி பஹுவிதாவாந்தர வைசித்ரீசாலித்வேந சாஸ்த்ரங்களிலே ப்ரதிபாதிதங்களான ஸகல வஸ்துக்களையும் ஸ்ருஷ்டித்து "தத்ஸ்ருஷ்ட்வா,ததேவாநுப்ராவிசத்" என்கிறபடியே அவைத்திலனுப்ரவேசித்து நியமிக்குமவரான வென்றபடி. இத்தால் சாரீரக சாஸ்த்ர ப்ரதமபாத ப்ரதிபாதிதமான சிதசித்ஸ்ரஷ்ட்ருத்வாக்ய கல்யாணகுணம் ப்ரதிபாதித மாய்த்து. சிறிய - ஸூக்ஷ்மங்களான, பெரிய - ஸ்தூலங்களான, உரு - ரூபங்களான வஸ்துக்களென்றபடி. அடைய - கார்த்ஸ்ந்யேந, உடலமென - சரீரமென்னும்படி, நடலம் - அவத்யம், இலது - இல்லாதபடி, இலகு - விளங்காநிற்கிற, நிலையினர் - ஸ்திதியையுடையவரான, ஸூக்ஷ்ம ஸ்தூல சப்தித நிகில சேதநாசேதந சரீரகராயிருந்து வைத்து தத்ப்ரயுக்ததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டராய் ததந்தஸ்ஸ்திதரானவென்றபடி. இத்தால் சிதசித்ப்ரபஞ்ச சரீரகத்வமாகிற த்விதீயபாதப்ரதிபாத்யகுணம் ப்ரகாசிதமாய்த்து. இங்கு நடலமிலதென்கிற வித்தால் "ஸம்போக ப்ராப்தி ரிதி சேந்ந வைசேஷ்யாத்" என்கிற ஸூத்ரத்தின்படியே "அநச்நந்நந்யோ அபிசாகசீதி" என்கிற ச்ருதியாலே தர்சிதமான சரீர ஸம்பந்த ப்ரயுக்த ஸுகதுக்கபாக் ஜீவ வைலக்ஷண்யத்தைக் காட்டினபடி. சித்திரத்தொழிலை-சித்ரவ்யாபாரத்தோடே, ஒத்த - ஸத்ருசமான, இது பத்த முக்த நித்யர்க்கு விசேஷணம். பத்தரொடு - பத்தரோடு; முத்தர் - முக்தருக்கு, இங்கு முக்தபதத்தாலே அநாதிமுக்தர் ஸாதிமுக்த ரிருவரும் விவக்ஷிதர்கள். பித்தியெனும் - பித்தியென்றும்படியான, உணர்வினர் - ஞானத்தையுடையவரான, தார்யதைக ஸ்வபாவதயா சித்ர ரேகா ஸ்தாநீயரான பத்த முக்த நித்ய ரூபத்ரிவித சேதநர்க்கும் தாரகதைகஸ்வபாவதயா பித்திஸ்தாநீயமான ஸங்கல்பத்தை யுடையவரானவென்றபடி. அத்ரத்ரிவிதசேதநதாரகத்வோக்தியாலே "அக்ஷரமம்பராந்தத்ருதே:" என்கிற ஸூத்ரோக்தமான மூலப்ரக்ருதி பர்யந்தாசேதந தாரகத்வம் கைமுத்யஸித்தம். இங்கு ஸங்கல்பத்துக்கு ப்ரபஞ்சதாரகத்வோத்தியாலே "ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:" என்கிற ச்ருதியும் "ஸாச ப்ரசாஸநாத்" என்கிறஸூத்ரமும் ப்ரத்யபிஜ்ஞாபிதங்கள். ஏதேந "ஸ்வேமஹிம்நிப்ரஷ்டித:" என்கிறவநந்யாதாரத்வம் பலிதம். இத்தால் த்யுப்வாதிபாத ப்ரதிபாத்ய மான ஸ்வநிஷ்டத்வ ரூபகுணம் வ்யஞ்ஜித மாய்த்து. சிதைவில் - சைதில்ய மில்லாததான, மறை நெறியில்-வேதமார்க்கத்திலே, ஏறிய - ஆரூடங்களான, உரு-அசேதநத்தினுடைய, முறைகள் - கர்மங்கள், முறிய -பக்னங்களாம்படி, சிறை - சங்கோசம், காராக்ருஹவாசகமான சிறைசப்தத்தா லிங்கு ஸங்கோசம் விவக்ஷிதம், அரிய அசக்யமான, நிறைவினர் - பூர்த்தியையுடையயவரான, ப்ரமாணாந்தரேண பாதிதுமசக்யங்களான "இந்த்ரியேப்ய: பராஹ்யர்த்தா:" இத்யாதி வேதாந்த வாக்யங்களாலாபாதத: ப்ரதீயமானைகளான காபிலதந்த்ரஸித்தப்ராதாந ப்ரக்ரியைகளெல்லாம் ஸம்யங்ந்யாயாநுக்ருஹீத தத்தத்வாக்ய பராமர்சத்தாலே பாதிதைகளாகையாலே "ஏதேநஸர்வேவ்யாக்யாதாவ்யாக்யாதா:" என்கிறபடியே ஸர்வவேதாந்த ப்ரதிபாத்யநிஸ்ஸங்கோச மஹிமபூர்த்திகளான வென்று பிண்டிதார்த்தம். இங்கு ப்ரதாந ப்ரக்

ரியா ப்ரதிபாதந பங்கத்தைச் சொன்னது "ஜகத்வாசித்வா" இத்யாத்யதிகரணோர் தர்சிதமான ஜீவப்ரக்ரியா ப்ரதிபாதந பங்கத்துக்கு முபலக்ஷணம். "ஆநுமாநிக மப்யேகேஷா மிதி சேந் ந சரீர ரூபகவிந்யஸ்த க்ருஹீதேர் தர்சயதிச" இத்யாத் யதிகரணங்களாலே ப்ரதாந ப்ரக்ரியா நிராஸம் ப்ரதமோபக்ராந்தமாகையாலே அத்தை இங்கே கண்டோக்தமாக்கி சரமோபக்ராந்தமான ஜீவப்ரக்ரியா நிராஸத்தை யுபலக்ஷிக்கையுசிதமிறே. இத்தால் நிரவதிகமஹிமத்வ லக்ஷணாநுமாநிகபாத ப்ரதிபாத்ய குணம் ப்ரகாசிதமாய்த்து. கத்துவிக்க – ஜல்பம்பண்ணுவிக்க, வல – ஸமர்த்தமான. கத்துவித்தைவழி – ஜல்ப வித்யாமார்க்கத்தை, கற்றவர்க்கு–அப்யஸித்தவர்க்கு, அசைவில்–சலநமில்லாத, மாயனுர்–விசித்ரசக்திகரான, எடுத்தவிடமெல்லாம்ஹேது கல்பநம் பண்ணும்படி குதர்க்கஹேநோத்தாபகமான ஜல்பவித்யாக்ய மார்காப்யாஸ முடையவராலே துர்விசால ஜகத்ஸ்ருஷ்ட்யனுகூல விசித்ர சக்திக ரான வென்றபடி. இங்கு மாயனு ரென்று நிர்தேசித்தது "ஆத்மநி சைவம் விசித்ராச்சஹி" என்கிற ஸூத்ரத்தின்படியே விசித்ர சக்திகதயா ப்ரஹ்மணோ ஜகத்காரணத்வேஸம்பாவித ஸர்வாநுபபத்தி பரிஹார ப்ரதர்சனார்த்தம். ப்ரஹ்மகாரணத்வத்துக்கு தர்க துர்விசாலத்வ கதநம் காபிலாதி ஸ்ம்ருதி துர்விசாலத்வத்துக்கு முபலக்ஷணம், இங்கு சாரீரகசாஸ்த்ரத்தில் ப்ரதமோபாத்தமான ஸ்ம்ருதிதுர்விசாலத்வத்தை கண்டோக்தமாக்கி சரமோபாத்தமான தர்கதுர்விசாலத்வத்தை யுபலக்ஷிக்க வேண்டியிருக்க விபரீதமாகப்பண்ணினது கபிலாதி ஸ்ம்ருத்யபேக்ஷயா பாஹ்யதர்காணும் பரிஹார்யதாயாம் ப்ராதாந்யத்யோதநார்த்தம். இத்தால் ஸ்ம்ருதிந்யாயவிரோதபரிஹாரபர ஸ்ம்ருதிபாதப்ரதிபாத்ய நிர்பாதத்வ ரூப குணமநுபாஷிதமாய்த்து, கபிலர் – கபிலமதநிஷ்டருடையவும், சுகதர் – ஸுகதமதநிஷ்டருடையவும், சமணர் – ஶ்ரமணமத நிஷ்டருடையவும், ஶ்ரமணாஜிநா. அரர் – ஹரமதநிஷ்டருடையவும், வழிகள் – மார்க்கங்கள், அழியும்–நசிக்கும்படியான, அருள் – க்ருபாப்ரயுக்தமான, மொழியினர் – வசநத்தையுடையவரான, இங்கு அருள் மொழிசப்தத்தாலே ஸஹஜ பகவத் காருண்ய பரிவாஹபூதமான ஶ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ரம் விவக்ஷிதம். இதுக்கு க்ருபாப்ரயுக்தத்வோக்தியாலே "வேதாந்தேஷு யதா ஸாரம் ஸங்க்ருஹ்ய பகவாந்ஹரி: | பக்தாநு கம்பயாவித்வாந் ஸஞ்சிக்ஷேப யதாஸுகம்" என்று பரமஸம்ஹிதோக்தரீத்யா விப்ரலிப்ஸாதி மூலக புத்தாதி சாஸ்த்ராபேக்ஷயா வைலக்ஷண்யந் தர்சிதம். காபில காணாத ஸௌகதஜைந பாசுபத பாதகமான ஶ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ர ரூப வசநத்தை யுடைவரான வென்றபடி. இங்கு சுகத ரென்கிற பதத்தாலே "ஸமுதாய உபய ஹேதுகேபி தத்ப்ராப்தி:" என்றுதுடங்கி யதிகரணத்ரயத்தாலே நிரஸ்தரானவைபாஷிகஸௌத்ராந்திகயோகாசார மாத்யமிக ரூப சதுர்விதபௌத்தர்விவக்ஷித்தர்கள். ஏதேந ஸாங்க்யாதி கரணம் துடங்கி ஶ்ரீபஞ்சராத்ராதிகரண மளவாக வஷ்டாதிகரணார்த்தத்தை அநுக்ரஹித்தபடி. இத்தால் ஸமயபாத ப்ரதிபாத்யமான வாஶ்ரிதாப்தத்வ ரூபகுண மநுவர்ணிதமாய்த்து. கத்து – கங்களுடைய, கமிந்திரியம். இலக்கிலும் – லக்ஷ்யத்திலேயும், ஸ்தூலத்வேநேந்த்ரியகோசரமான வாகாசாதிபூதபஞ்சத்திலேயு மென்றபடி. இங்கு பூதபஞ்சகோபாதாநேந தத்ஸூக்ஷ்மாவஸ்தாரூப தந்மாத்ர பஞ்சகமுமுபலக்ஷிதமாகிறது. அரு – ஸூக்ஷ்மவஸ்துக்களுடைய, குலத்திலும்–வர்கத்திலேயும், அதிஸூக்ஷ்மத்வேநேந்த்ரியாகோசரமானஜீவவர்கத்திலேயுமென்றபடி. அசித்திலொக்கும்–அசித்தோடே ஸத்ருசமாகிய, மஹதாதிவிகாரத்தோடொக்க வென்றபடி. அசித்பதம் ஸமாக்யவாசியானாலு மிங்கு கோபலீவர்த்த ந்யாயேந பூத பஞ்சக பூர்வபாவி மஹதாதிரூப விசேஷபரம். ஒருமுதல்வனர்–ஒருகாரணபூதரான, ப்ரக்ருதியுடைய ஸாக்ஷாத்விகாரமான மஹத்தத்வத்திலே போலே பரம்பரா விகாரமான பூததந்மாத்ர பஞ்சகத்திலேயும் விகாரமில்லாத ஜீவவர்கத்திலேயும் ஸாக்ஷாதேவ நிமித்தோபாதாநபூதரான வென்று நிர்களிதார்த்தம். இந்த ஸார்வத்ரிக ஸாக்ஷாத்காரணத்வோக்தியாலே உத்தரோத்தர பூதம் ப்ரதிப்ரஹ்மண: பூர்வபூர்வபூதத்வாராகாரணத்வ மென்கிறசங்கா நிராஸகமான "தேஜோதஸ்ததாஹ்யாஹ" என்கிற வதிகரணம் ப்ரத்யபிஜ்ஞாபிதம். இங்குசேதநத்தை இந்த்ரியாகோசரத்வேந நிர்தேசிக்கையாலே ஸ்தூலத்வேந ஸ்வரூபபரிணாம

அஸஹிஷ்ணுதயா ஸ்வரூபாந்யதாபாவ ரூபோத்பத்தியும் ஜீவவர்க்கத்தை ஸூக்ஷ்மத்வேந நிர்தேசிக்கையாலே சேதந ஹநக்லேதந சோஷணாத்யநர்ஹத்வேந ஸ்வரூபபரிணாமா ஸஹிஷ்ணுதயாஸ்வபாவாந்யதாபாவரூபோத் பத்தியும் ஸூசிதையாய்த்து. இத்தால் வியத்பாத ப்ரதிபாத்யமான வாகாசாத்மாத்யுசித ஸ்ருஷ்டிகர்த்ருத்வ ரூபகுணம் ப்ரதர்சிதமாய்த்து. கரணம் - சக்ஷுராதிகரணங்களை, இடு-நிவேசிக்கை, சடைய - அசக்யங்களான; சக்ஷுராதிகரண ப்ரவ்ருத் யநர்ஹங்களான வென்றபடி. பதிஞெரு - ஏகாதச ஸங்க்யாகங்களான, இருடிகளும் - ஹ்ருஷீகங்களும், அடைய - கார்ஸ்ந்யேந முடியும் - நசிக்குமதான, அடி - ஆதிகாலத்திலே, இருடியார் - ருஷீபூதரான, நிருபாதிக நிகில விஷயக ஸாக்ஷாத்கார ரான வென்றபடி. சக்ஷுராதி கரணகோசரைகாத சேந்த்ரிய ப்ரளய காலஸ்திதராய் ஸ்வயங் கரண நிரபேக்ஷ ஸாக்ஷாத்காரரான வென்றபடி. இங்கிந்த்ரியங்களை சக்ஷுராத்ய கோசரத்வேந நிர்தேசித்தது "அணுவச்ச" என்கிற வதிகரணத்தின் படியே ஸௌக்ஷ்மதமத்வ ஜ்ஞாபநார்த்தம். ஏகாதசத்வேந நிர்தேசித்தது பரமாத்ம விஷய ச்ருதி ப்ரத்யபிஜ்ஞாபநார்த்தம். தத்ராபிப்ராணசப்தத்தாலே நிர்தேசியாதேருஷிசப்தத்தாலே நிர்தேசித்தது "ருஷிசப்தச்ச ஸர்வஜ்ஞே தஸ்மிந்நேவ யுஜ்யதே நத்வசேதநேஷ்விந்த்ரியேஷு" என்று ஸ்ரீபாஷ்யோக்தரீத்யாதஸ்யாநுஷ்டேஃ பரமாத்ம விஷயத்வோபபாதநார்த்தம். இங்கு பரமாத்மநி பஹுத்வோபஹுவசந நிர்தேசம் "கௌண்யஸம்பவாத் தத் ப்ராக் ச்ருதெச்ச" என்கிறபடியே பரமாத்மந் யேகஸ்மிந் ஔபசாரிகமான "ப்ராணவாருஷயஃ" என்கிற பஹுவசநத்தை யநுகரிக்கைக்காக. இத்தால் கரணபாத ப்ரதிபாத்யமான விந்த்ரியாதி காரணத்வ ரூப குணமுபதர்சிதமாய்த்து. அனைத்துலகும் - ஸமஸ்த லோகங்களிலேயும். ஒத்து - ஸமமாயிருந்து, இதுக்கு அசைவிலரென்கிறத்தோடந்வயம். ஒத்தியொத்தி - ஆக்ரமித்து ஆக்ரமித்து, வரும் - பொங்கிவருமதான், இப்பவத்து - இந்தபவத்திலே, இசையில் - அப்யுகமம்பண்ணில், அசைவிலர் - சலிப்பிக்கும்வரான்; ஸம்வர்த்த ஸமய ஸாகரம் போலே பொங்கிவருகிற ஸம்ஸாரத்திலே சேதநருக்கு ப்ராரப்த வைசித்ரியாலே ருசிபிறக்கில் ஸர்வஸமராயிருந்து தத்த்த்ருச்யநுகுணமாக ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பிக்குமவரான்வென்றுநிஷ்கர்ஷம். ஒத்தி ஒத்திவருமென்கிறவித்தால்ஸம்ஸாரத்துக்கு அவித்யாப்ரக்ருதி ஸம்பந்தருசிவாஸநாமுகேநாவிச்ராந்த்ய பாதகத்வம் தர்சிதம். இத்தால் வைராக்யபாதப்ரதிபாத்யமான ஸம்ஸாரதந்த்ரவாஹித்வ ரூப குணம் ஸ்புடீக்ருதமாய்த்து. உருவம் - ரூபவத்வஸ்து, அருவம் - ரூபரஹிதவஸ்து, எனுமுலகில் - என்று சொல்லப்பட்டலோகத்திலே, முடகு - ஸங்கோசம், இலெனில் - இல்லையென்னுமிடத்தில், உவமை - உபமானம், இலது - இல்லாதபடி, இலகு - விளங்காநிற்கிற, தலைவர் - ப்ரதாநபூதரான, சேதநாசேதநாத்மக ப்ரபஞ்சத்திலே கலந்திருக்கச்செய்தேயும் ப்ருமா ப்ரக்ஷிப்த காஷ்டந்யாயத்தாலே தத்ப்ரயுக்த ஸ்வபாவ ஸங்கோசாதி ஹேயப்ரஸங்க மில்லை யென்னுமிடத்தி லொருத்ருஷ்டாந்தம் சொல்ல வொண்ணாதபடி விளங்குகிற ஸர்வலோகப்ரதான ரான வென்றபடி. இத்தாலுபயலிங்கபாத ப்ரதிபாத்யமானவகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநத்வ ரூபகுணம் ஸ்பஷ்டீக்ருதமாய்த்து. உத்தமப்படி - உத்தமப்ரகாரத்தாலே, வகுத்த - விபக்தைகளான, வித்தைகளில் - வித்யைகளிலே - உத்தரிக்க - ஸம்ஸாரோத்தரணார்த்தமாக, உணர் - அநுஸந்தியமானங்களான, குணவனர் - குணங்களையுடையவரான, "லிங்கபூயஸ்த்வாத்தத்தி பலீயஸ் ததபி" என்கிற வதிகரணத்திலே நாராயணநுவாகம் ஸர்வபரவித்யோபாஸ்ய விசேஷ நிர்தாரண பரமென்று நிர்ணயித்தபடியே வேதாந்தங்களிலே பரவித்யாத்வேந நிர்ணீதைகளான ஸ தக்ஷர தஹ ராதிவித்யைகளிலே ஸம்ஸாரோத்தாரணகாமராலே உபாஸ்யமான கல்யாண குணரான வென்று நிஷ்கர்ஷம். இத்தால் குணோபஸம்ஹாரபாதப்ரதிபாத்யமான பஹுவிதபஜந விஷயத்வ ரூப குணம் க்யாபிதமாய்த்து. உரிய - உசிதைகளான, கிரிசைகளில் - க்ரியைகளிலே, அரியது - துஷ்கரமான, ஒருவிரகு - ஒருஉபாயத்தை, தெரிய - அறிகைக்கு, விரையுமவர் - த்வரிக்கு மவரிடத்திலே, பரிவினர் - ப்ரேமயுக்தரான, பக்த்யங்கபூத ஸ்வ ஸ்வ வர்ணாச்ரமோசித நித்ய நைமித்திக காம்ய கர்மங்களை யநுஷ்டிக்கும்போது தாரதிகம துஷ்கர ஸாத்விக த்யாக ரூப் பந்தகத்வ நிவ்ருத்யுபாயத்தைத் தெரிந் தநுஷ்டிக்கு மிவ்வதிகாரிகள் பக்கல் ப்ரஸன்னரா யவர்களுக்கு ஜடிதி ஸ்வவிஷயக பக்தியோக நிஷ்பாதகரான வென்று பலித்தா

ர்த்தம். இங்கு உரியவென்று க்ரியைகளை யுசிதத்வேந நிர்தேசிக்கையாலே "அந்தராசா பிது தத்த்ருஷ்டே:" என்கிறவதிகரணத்திலே நிர்ணயித்தபடியே விதுராத்யநாச்ரமிணுமப் யாச்ரம நியதைர் ஜபோபவாஸ தாந தேவதா ராதநாதிபிர் வித்யாதிகாரோஸ்தீதி ஜ்ஞாபிதம், இத்தா லங்கபாதப்ரதிபாத்யமான ஸ்வோசித கர்ம ப்ரஸாத்யத்வ ரூப குணமாவிஷ்க்ருதமாய்த்து, சத்து - ஸத்துக்கள், புண்யரூபங்களென்றபடி, அசத்து - அஸத்துக்கள், பாபரூபங்களென்றபடி. எனும் - என்னுமவையான, அனைத்து - ஸமஸ்தங்களான, அணைத்த - ஆத்மாவையாச்லேஷித்திருக்கிற, வினை - கர்மங்களுடைய, தொத்து - ஸம்பந்தத்தை, அறுக்கவல - சேதிக்கசக்தமான, துணிவினர் - ஸங்கல்பத்தையுடையவரான, ஸ்வோபாஸகருடைய புண்யபாபரூப ஸகல கர்மங்களுக்கும் அச்லேஷவிநாசாபாதக த்ருடஸங்கல்பரான வென்றபடி. இத்தால் வ்ருத்திபாத ப்ரதிபாத்யமான கர்மவிமோசகத்வ ரூபகுணம் ப்ரகடிதமாய்த்து. சரியுமளவில் - சரீரம்தளருங்காலத்திலே, உரியவரை - ப்ராப்தரான வதிகாரிகளை, அறிவரிய - ஜ்ஞாது மசக்யமான, தமனிநெறி - தமனி மார்கத்திலே, சொருகு - ப்ரவேசிப்பிக்குமவரான, விரகினர்-உபாயஜ்ஞரான, ஸ்வசரணாரவிந்தப்ராப்தி யோக்யரான வுபாஸகரை சரீரவிச்லேஷகாலத்திலே லோகாந்தரப்ராபக க்ஷுத்ரநாடிகளிலே ப்ரவேசியாதபடி "ததோகோக்ரஜ்வலநம் தத்ப்ரகாசிதத்வாரோ வித்யாஸாமர்த்தியாத் தச்சேஷகத்யநுஸ்ம்ருதி யோகாச்ச ஹார்தாநுக்ருஹீதச் சதாதிகயா" என்கிற ஸூத்ரத்தின்படியே நாடிவிவேசனம்பண்ணிவைத்து அர்சிராதிமார்க ப்ரதமதீர்த்தமான மூர்த்தந்யநாடியிலே ப்ரவேசிப்பிக்கு மவரான வென்றபடி. இத்தால் உத்க்ராந்திபாத ப்ரதிபாத்யமான ப்ரும்மநாடி ப்ரவேசகத்வ ரூபகுண மபிஹிதமாய்த்து. தத்துவ - ப்ரதிவ்யாத்ய சித்தத்வங்களுடைய, திரள் - ஸமூஹத்தை, உதைத்துதைத்து - பாதங்களாலே யாக்ரமித்து ஆக்ரமித்து, அடைவு-க்ரமேண, தத்துவிக்குமவர் - உல்லங்கநம் பண்ணிவைக்குமவர்க்கு, தலைவனார் - ப்ரதாநபூதரான, ப்ரஹ்மாண்டததாவரண ரூப ஸகல ப்ராக்ருத தத்வங்களையும் பாதங்களாலே மிதித்துக்கொண்டு ப்ராக்ருதேதரலோகாதிரோஹணம் பண்ணு முபாஸகர்க்கு ஆதிவாஹிகரான வர்சிராதிகளுக்கு நியாமகரான வென்றபடி. இத்தால் அர்ச்சிராதி பாதப்ரதிபாத்யமான வர்சிராதிமார்க நேத்ருத்வரூபகுண முத்பாவிதமாய்த்து. தருக - ஈச்வரன் பலன்கொடுக்கும்படி, உணருமவர் - உபாஸிக்குமவர், சரணம் - சரணங்களை, அணுக-அடைய, விடல் - த்யாகம், அரிய - அசக்யரான, பலப்ர தேச்வர ப்ரஸாதார்த்தமாக வுபாஸிக்குமவர் ஸ்வசரணாரவிந்தங்களை யடைந் தநுபவிக்கு மிடத்திலே யத்யர்த்தபோக்யதையாலே த்யக்து மசக்யரான வென்றபடி. இத்தால் சரமபாத ப்ரதிபாத்யமான அபுநராவ்ருத்தி ஸாயுஜ்ய ப்ரதத்வரூபகுண முத்காடிதமாய்த்து. இந்தசாரீரக சாஸ்த்ர ஷோடசபாதிப்ரதிபாத்ய குணங்களை (ஸ்ரஷ்டாதேஹீஸ்வநிஷ்டோ நிரவதிமஹிமா பாஸ்ததோஷச்ரிதாப்த: காத்மாதெரிந்த்ரியாதே ருசிதஜநக்ருத் ஸம்ஸ்ருதௌதந்த்ரவாஹீ!நிர்தோஷத்வாதிரம்யோ பஹுபஜநபதம் ஸ்வார்ஹகர்மப்ரஸாத்ய: பாபச்சித் ப்ரஹ்மநாடீகதிக்ருததிவஹந் ஸாம்யதச்சாத்ரவேத்ய:) என்றதிகரண ஸாராவல்யுபக்ரமத்திலே தாமே யநுக்ரமித்தாரிறே. அருள்வரதர் - க்ருபையாலே ஸகலபுருஷார்த்தப்ரதரான பேரருளாளருக்கு, அடியம் - நாங்கள்தாஸபூதர், ஆகப்பெறுவதேயென்றுசேஷ:.

(௧௯)

மூ.—திருமகண் மண் மகணீளைமுதலாவெல்லாத் தேவியருந் தன்னுடனே
திகழ்ந்துநிற்கத், கருமமிருமூன்றுமுதலனைத்துந்தொன்றத் தன்னனை
யசூரிகடன்னடிக்கீழ்வாழ. அருமறைசேரளவில்லா வவனியின் கண்
ணரவணைமேல்வீற்றிருப்பாலனைத்துங்காக்குங், கருமணியைக்கரிகிரி
மேற்கண்டேனென்றன் கடுவினைகளனைத்துநான்கண்டிலேனே. (௨௦)

ப்ரஹ்மா வப்பொழுது ஸம்ப்ரம ஸந்தோஷ ஸாத்வஸங்களை யுடையனாய்க் கொண்டு கிட்டிச்சென்று ஸௌரிபோக்யமான சுபாச்ரயத்தை யனுபவித்துத் தான் பெற்றபேற்றை பேசினபடியை யருளிச்செய்கிறார்.

திருமகள் - பெரியபிராட்டியார், மண்மகள் - பூமிப்பிராட்டியார், நீளை - நீளைப்பிராட்டியார், முதலா - இவர்கள்முதலான, எல்லாத்தேவியரும் - ஸகலதேவிகளும், தன்னுடனே - தன்னோடேகூட, திகழ்ந்துநிற்க - ப்ரகாசித்திருக்கும்படி, இதுக்கு வீற்றிருப்பவென்கிறத்தோடே யந்வயம். இருமூன்று - ஷட்ஸங்க்யாகங்களான,

தருமம் - தர்மங்கள், ஞானாதிஷாட்குண்யமென்றபடி. முதல் - அவைமுதலான், அனைத்தும் - க்ருத்ஸ்ந கல்யாணகுணங்களும், தோன்ற - பாஸிக்கும்படி, "குணைஷ் ஷட்பிஸ்த்வேதைः ப்ரதமதர மூர்த்திஸ் தவபபௌ, ஷாட்குண்யாத் வாஸுதேவः பரः" என்கிறபடியே ஷாட்குண்யம் முதலான ஸகலகல்யாணகுணங்களும் பரவாஸுதேவவிக்ரஹத்திலே ஸம்ய கபிவ்யக்தங்களாம்படி யென்றபடி, தன் - தன்னுடைய, அனைய - ஸமஸ்தரான, சூரிகள் - நித்யஸூரிகள், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தராகையாலே ஸந்தத மவிஸ்ம்ருத ஸ்வதாஸ்யரான ஸூரிகளென்றபடி. தன்னடிக்கீழ் - தன்னுடைய திருவடிகளின்கீழே, வாழ - வாழும்படி, இதுக்குமுன்புசொன்னபடி யந்வயம். அருமறை - த்ரவபோதஶ்ருதிகளோடே, சேர் - சேர்ந்திருக்கிற, அளவில்லா - அபரிச்சின்னையான, அவனியில் - அவனியிலே, "தத்விஷ்ணோः பரமம்பதம். த்ரிபாதஸ்யாம்ருதந்திவி" இத்யாதி ஶ்ருதிசதப்ரதிபாத்யமா யபரிச்சின்னமான விப்ராக்ருத லோகத்திலே யென்றபடி. கண் - ப்ரதானபூதரான், அரவு - ஸர்பமாகிற, போகிஸார்வபௌமனான திருவநந்தாழ்வானாகிற வென்றபடி. அணைமேல் - பர்யங்கத்தின்மேலே, வீற்றிருப்பால் - வீற்றிருக்கையாலே, உத்கர்ஷம் தோற்றவிருக்கையாலே யென்றபடி. அனைத்தும் - க்ருத்ஸ்நங்களையும், காக்கும் - ரக்ஷிக்குமதான, கருமணியை - கருமாணிக்கத்தை, இங்கு கருமாணிக்க சப்தத்தாலே நீலமணி போலுஜ்வல விக்ரஹரான பரவாஸுதேவரை நிகரணம் பண்ணினபடி. கரிகிரிமேல் - கரிகிரிசிகரத்திலே, கண்டேன் - ஸாக்ஷாத்கரித்தேன், ப்ரக்ருதி மண்டலோத்தீர்ண பரமயோகிவாங்மனஸாகோசர பரமவ்யோமவர்த்தி பரவாஸுதேவனை திர்யங்மனுஷ்யாதி ஸகலலோக சர்மசக்ஷுர்விஷயமான கரிகிரிசிகரத்திலே ஸாக்ஷாத்கரித்தே னென்றபடி. இதுக்குபலம்சொல்லுகிறது. என்தன் - என்னுடைய, கடு - க்ரூரங்களான, வினைகளனைத்தும் - ஸகலகர்மங்களையும், நான் - இப்படிக்ருதார்த்தனான நான், கண்டிலேன் - காணேன், ஸகலகர்மங்களும் நசித்தன வென்றபடி. (௨0)

மூ.—பெடையிரண்டையொ ரனமடைந்து பிரிந்திடாவகைபேசலாம் பெருகுமருவிக ளருகு மருவிய பெரியமணிவரைபயிலலாம், பிடியிரண்டொடு களபமொன்றுபிணைந்தபேரழகோதலாம் பிரிவிலொளியொடு நிழலுமருதுறு மிரவியிலகுதல்பரவலாம், கொடியிரண்டொடு விடபியொன்று குளிர்ந்தவாறுதுலாவலாம் குறைவில்நருதியு நினைவுமிலகியதருமவருநிலையென்னலாம், அடியிரண்டையு மடையுமன்பரறிந்தபேரருளாளனார் அணுகுமலர்மகளவனிமகளொடு கரடிகிரிநிலைகவர்தலே. (௨௧)

இப்படி கண்கள் கண்டற்கரிய மனோரதவிஷயத்தைக் கண்ட ப்ரஹ்மா "மொய்மாம்பூம்பொழில்" படியே அக்ரமமாக ஹர்ஷசேஷ்டிதங்களைப் பண்ணிச் சிறுது போதோடிக் கூடித்தரித்து நாச்சிமாருடனே பெரியபெருமா ளெழுந்தருளி யிருக்கிற நிலையை யனுபவித்த படியை யருளிச்செய்கிறார்.

அடியிரண்டையும் - சரணயுகளத்தையும், அடையும் - ஆஶ்ரயிக்குமவரான, அன்பர் - ப்ரேமசாலிகளாலே, அறிந்த - அறியப்பட்டவரான, "ஹ்ருதா மநீஷா மநஸாபி க்ல்ப்தः" இத்யாதிகள்படியே ஸ்வசரணங்களையே ப்ராப்யப்ராபகங்களாக வத்யவஸித்திருக்கும் ப்ரேமசாலிகளாலே ஸுக்ரஹஸ்வபாவரான வென்றபடி. இத்தா லனேவம்வித புருஷ துர்க்ரஹத்வம் பலிதம். பேரருளாளனார் - பேரருளாளருடைய, இதுக்குநிலைகவர்தலென்கிறத்தோடந்வயம். அணுகு - ஸன்னிஹிதைகளான, பார்ச்வத்வய ஸ்திதைகளான வென்றபடி. மலர்மகள் - பெரியபிராட்டியார், அவனிமகள் - பூமிபிராட்டியார், ஒடு - இவர்களோடுகூட, கரடிகிரி - கரடிகிரியிலே, ஸ்ரீஹஸ்திகிரியிலே யென்றபடி. நிலைகவர்தல் - ஸ்திதியையாஶ்ரயிக்கை, இதுக்கு பேசலாமித்யாதிகளோடந்வயம். பெடையிரண்டை - ஹம்ஸீத்வயத்தை, ஓர் - ஏகமான, அனம் - அன்னமானது, ஹம்ஸமான தென்றபடி. அடைந்து - ஸம்ச்லேஷித்து, பிரிந்திடாவகை - விச்லேஷியாதபடி, பேசலாம் - சொல்லலாம், ஒருஹம்ஸமான திரண்டுஹம்ஸங்களோடு ஸம்ச்லேஷித்து விச்லேஷியாதே யுல்லஸிக்குமாப்போலே யென்று உபமிக்கலா மென்றபடி. இப்படி மேலுங்கண்டுகொள்வது. பெருகும்-ப்ரவஹியாநிற்கிற, அருவிகள் - நிர்ஜரங்களாலே, அருகு - ஸமீபத்திலே, மரு

,வியன் ஆதரிக்கப்பட்டதான, ஸம்ச்லிஷ்டமான வென்றபடி. பெரிய - மஹோன்னதமான, மணிவரை - மணிபர்வதத்தை, பயிலலாம். அப்யஸிக்கலாம், அவிச்சின்ன ப்ரபோஷ நிர்ஜரணீயுகளாலங்க்ருத பார்ச்வத்வய மான வீந்த்ரநீல மஹாபர்வதத்தை முஹுர்முஹுஸ் ஸ்மரிக்கலா மென்றபடி. களப மொன்று - ஒருகளபமானது, பிடியிரண்டொடு - கரேணுத்வயத்தோடே, பிணைந்த - ஸம்ச்லேஷிக்கையுடைய, பேர் - மஹத்தான, அழகு - ஸௌந்தர்யத்தை, ஓதலாம் - அத்யநம்பண்ணலாம், கரேணுத்வய மத்ய வர்த்தி மதகரி களப லக்ஷ்மி போலே வர்ணிக்கலா மென்றபடி. பிரிவில்- விச்லேஷமில்லாத, ஒளியொடு - ப்ரபையோடே, நிழலும் - சாயையும், அருகு-ஸமீபத்தை, உறும் - அடையும்படியான, இரவி-ரவியுடைய, இலகுதல் - ப்ரகாசத்தை, பரவலாம் - ப்ரசம்ஸிக்கலாம், அப்ரதக்ஸித்த காந்திச் சாயா ரூப வல்லபாத்வயாலங்க்ருத பார்ச்வத்வயனான ஸூர்யனைப்போலேச்லாகிக்கலா மென்றபடி. கொடியிரண்டொடு - லதாத்வயத்தோடேகூட, விடபியொன்று-ஒருவிடபியானது, குளிர்ந்தவாறு- சீதளிபவித்தபடியை, குலாவலாம் - பெருமையோடே சொல்லலாம், வல்லிகாத்வய வேல்லிதமாய் தழைத்தபாரிஜாதத்ருமத்தைப்போலே குலாவலா மென்றபடி. குறைவில் - வைகல்யமில்லாத, சுருதியும் - ச்ருதியோடும், நினைவும் - ஸ்ம்ருதியோடும், இலகிய - விளங்கினதான, தருமம்-தர்மத்தினுடைய, அருநிலை-ஸூக்ஷமஸ்திதி, என்னலாம் - இதென்றுசொல்லலாம், இந்தவவஸ்தாநம். ச்ருதிஸ்ம்ருதி பரிஷ்க்ருத ஸூக்ஷ்மதர்மஸ்திதிபோலே என்று வர்ணிக்கலா மென்றபடி. (௨௧)

மூ.—வேரொப்பார்விண்முதலாங் காவுக்கெல்லாம் விழியொப்பார்வேத
மெனுங்கண்டனுக்குக் காரொப்பார்கருணைமழை பொழிந்திடுங்காற்
கடலொப்பார்கண்டிடினுங்காணுக்கூத்தால் நீரொப்பார்நிலமளிக்குந்
தன்மைதன்னு னிலமொப்பார்நெடும்பிழைகள் பொறுக்குநேரால்
ஆரொப்பாரிவர்குணங்களனைத்துங்கண்டா லருளாளர்தாமெனினுந்
தமக்கொவ்வாரே. (௨௨)

அநந்தர மநந்தமங்கள குணார்ணவரான பெருமாளுடைய திவ்யகுணங்களை யனுபவிக்கத் தொடங்கி ஓரோராகாரங்களுக்கு ஓரோருரூபமானு பாஸங்களைத்தேடி குணஸமுதாயத்துக்கொரு உபமானுபாஸங்களும் தேடவொண்ணுதென்று கொண்டாடினபடியை யருளிச்செய்கிறார்.

அருளாளர் - பேரருளாளர், விண்முதலாம் - ஆகாசப்ர்ப்ருதியான, காவுக்கெல்லாம் - தோப்புக்கெல்லாம், வேர் - மூதலோடே, ஒப்பார்- ஸத்ருசராவர், ஆகாசாதி பூதபஞ்சகாத்மக ப்ரபஞ்சரூப மஹோத்யாநத்துக்கு மூலம்போலே தாரகராயிருப்பரென்றபடி. வேதமெனும் - வேதமென்றுசொல்லப்பட்டதான, கண்தனக்கு - சக்ஷுஸ்ஸுக்கு, விழி - தாரகையோடே, ஒப்பார்-பூர்வவத் வேதமாகிற அலௌகிகார்த்த ப்ரகாசக சக்ஷுஸ்ஸுக் கந்தஸ்ஸாரபூதராகையாலே க்ருஷ்ணதாரகைபோலெ யிருப்பாரென்றபடி. கருணை மழை - கருணாவர்ஷத்தை, பொழிந்திடுங்கால் - வர்ஷித்துவிடுங்காலத்திலே, கார் - காளமேகத்தோடே, ஒப்பார் - பூர்வவத். அநாலோசித நிம்நோன்னத விபாகமாக க்ருபாவர்ஷம் பண்ணும்போது காளமேகம்போலே யிருப்பாரென்றபடி. கண்டிடினும்-ஸாக்ஷாத்கரித்துவிடிலும், காணு - காணப்படாத, கூத்தால் - நாட்யத்தாலே, கடல் - ஸமுத்ரத்தோடே, ஒப்பார்-பூர்வவத். முஹுர்முஹு: பரிசயே ப்யபரிசிதவத் விஸ்மயாவஹ திவ்யசேஷ்டிதங்களாலே "ஸலிலநிதி ரிவ ப்ரதிக்ஷணம் மே பவதி ஸ ஏவ நவோ நவோ ய மக்ஷ்ணோ:" என்கிறபடியே ஸமுத்ரம்போலே நவநவரா யிருப்பா ரென்றபடி, நிலம் - பூமியை, அளிக்கும் - ரக்ஷிக்குமதான, தன்மை - தன்னால் ஸ்வபாவத்தாலே, நீர் - ஜலத்தோடே, ஒப்பார்- பூர்வவத். பூமிவாடாதே ரக்ஷிக்கும் ஸ்வபாவத்தாலே ஜலம்போலே யிருப்பா ரென்றபடி. நெடும் - தீர்க்கங்களான, பிழைகள் - அபராதங்களை, பொறுக்கும் - க்ஷமிக்குமதான, நேரால் - ஆர்ஜவத்தால், நிலம் - பூமியை, ஒப்பார்-பூர்வவத். சிரதராநுவ்ருத்தாபராத ஸஹிஷ்ணுதையிலே பூமிபோலே யிருப்ப ரென்றபடி. இப்படி யோரோராகாரங்களுக்கு உபமானுபாஸங்களைக் காட்டி இனிமேல் ஸமுதாயத்துக்கோ ருபமானுபாஸமும் கிடையாதென்கிறார். இவர் - இந்தபேரருளாளருடைய, குணங்களனைத்தும் - ஸகல குணங்களையும், கண்டால்-நிரூபித்துப்பார்த்தால், ஆர்-எவர், ஒப்பார்-ஸத்ருசராவர், ஒருவரும் ஸத்ருச ராகா ரென்றபடி, வேறொருவர் ஸத்ருசராகாவிட்டாலும்

தமக்குத்தாமே யாகிலும் ஸத்ருசராகாரோ வென்ன வருளிச்செய்கிறார். தாமெனினும்-தாமேயாகிலும், தமக்கு-ஸ்பஷ்டம். ஒவ்வார்-ஸத்ருசராகார், கரிகிரி வாஸ்தவ்யரான தமக்கு பரமபத வாஸ்தவ்யரான தாமும் ஸத்ருச ராகா ரென்று தாத்பர்யம்.

மூ.—எந்நிலமுங் குரத்தார்க் குறி செய்த வெழிற் பரிகொண்
டன்னமுயர்த்த செய்யோ னன்றுவேள்விசெய் வேதியின்மேல்
முன்னிலையாகியமூர்த்தியுட னான்முகமற்றுமுனக்
கென்னவரந்தருவோ மென்று நாதனியம்பினனே. (௨௩)

ஹர்ஷபரவசனாய் ஸ்தோத்ரபரம்பரையை விண்ணப்பஞ்செய்யும் சதுர்முகனைப் பார்த்து ப்ரஸாதசுமுகரான பெருமா ளுனக்கு வேண்டின வரங்கொள்வா யென்றருளிச் செய்த படியை யநுபாஷிக்கிறார்.

அன்னம் - ஹம்ஸத்தாலே, உயர்த்த-உச்ச்ருதனான, ஹம்ஸவாஹநனான வென்றபடி. செய்யோன் - ருஜுஹ்ருதயன், அக்ருத்ரிமபகவத்ப்ரேமயுக்தனான சதுர்முகனென்றபடி. அன்று-ஆதிக்ருதயுகமுகத்திலே, எந்நிலமும், ஸகலபூமிகளிலும், குரத்தால்-குரங்களாலே, குறி - சின்னத்தை, செய்த - பண்ணினதான, பூமண்டலமெல்லாம் "அநேகஸஸ்ருஜேதராம் துரகமேதமுக்தப்ரமத்துரங்க குரசந்த்ரக ப்ரகரதந்துராமேதிநீ" என்கிறபடியே குரபுடபாடித ரேகாசிஹ்நிதமாம்படி ஜகதேகஜாங்கிகமானா வென்றபடி. எழில் - உஜ்வலமான, பரி - அச்வத்தை, கொண்டு - ப்ரதாநமாக ஸ்வீகரித்து, வேள்விசெய் - யாகம்பண்ணுமிடமான, வேதியின்மேல் - உத்தரவேதியின்மேல், நாதன் - ஸகலலோகநாதனான பேரருளாளர், இங்கு யாச்நார்த்தக நாத்ருதாதுநிஷ்பன்னமானநாதசப்தத்தாலே ஸகலபுருஷார்த்த விப்ஸுபிரப்யர்த்தநீயத்வம் தர்சிதம். முன்னிலையாகிய - எதி ரவஸ்தாந முடையதான, மூர்த்தியுடன் - மூர்த்தியோடே; நான்முக - வாராய்சதுர்முகனே, உனக்கு - நம்முடைய வத்யந்த ப்ரஸாதவிஷயனான வுனக்கு, மற்றும் - நாம் யாகவிக்நத்தை சமிப்பித்து ப்ராதுர்பாவித்தது தவிர, என்னவரம் - எந்தவரத்தை, தருவோம் - கொடுக்கக்கடவோம், என்று - ஸ்பஷ்டம். இயம்பினன் - அருளிச்செய்தார். (௨௩)

மூ.—சென்றுமலர்பறித்தென்னாதன் சேவடிப்போதுகந்து
நன்றெனநீர்சுடர்தூபநன்முகவாசவெள்ளிலைகொடுத்து
கன்னிலட்டுத்தோடன்னஞ்சிடைக்கறிபடைத்து
பின்னுஞ்செபித்தவன்பாதமெண்ணுங்கண்முனிகளென்றான். (௨௪)

இப்படி பெருமாளாலே யபிலஷித வராப்யர்த்தநாய் நியுக்தனான ப்ரஹ்மா "வைகுண்டேது யதாவாஸோ யதைவ க்ஷீரஸாகரே" என்று ஸ்வாபிலஷித வரத்தை விண்ணப்பஞ்செய்ய பெருமாளும் "தேவஷிர்யங் மனுஷ்யாணாம்" இத்யாதி அருளிச்செய்கையாலே க்ருதார்த்தனாய் க்ரதுஸேத்தைத்தலைக்கட்டி கார்த்தயுகதர்ம ப்ரக்கிரியையாலே பரிபூர்ண ஸமாராதநம்பண்ணி பரமபாகவதரான மஹர்ஷிகளைக்குறித்துத் தான்பண்ணின வபிகமநாதி ரூபாச்சித்ர பாஞ்சகாலிக ஸமாராதந க்ரமத்தை ஸங்க்ரஹித்துபதேசித்தபடியை யருளிச்செய்கிறார்.

இப்பாட்டு பஹுகோசங்களிலே கண்டதில்லையாகிலும் சிலகோசங்களிலே காண்கையாலும் அபேக்ஷிதார்த்தமாகையாலும் விவரிக்கிறோம். முனிகள் - மஹர்ஷிகளே, சென்று - அடைந்து, பகவதாபிமுக்யேந தங்களாத்மாக்களை நடத்தி யென்றபடி. இத்தால் "த்வயேந தத்விவரணை:" ப்ரபத்யப்ரபுமீச்வரம் நிக்ஷிப்யசிரமாத்மாநம் தத்பாதாப்ஜெ க்ருதீபவேத்)" என்கிறபடியே பகவச்சரணாரவிந்தயோ: ஸ்வாத்மஸமர்பணரூபமான வபிகமநத்தை யுபதேசித்தபடி, மலர் - புஷ்பங்களை, பறித்து - அபசயித்து, இத்தால் பாஹ்யபூஜோபகரணஸம்பாதநத்தை விதித்தபடி. நாதன் - நாதனுடைய, சேவடி-சிவந்திருக்கிறதிருவடிகளாகிற, போது-புஷ்பங்களை, உகந்து-ஸ்ப்ருஹித்து, இத்தால் மநஸோபகவச்சரணாரவிந்தைகாக்ரதாரூ பாந்தரபூஜோபகரண ஸம்பாதநத்தை யநுசாஸித்தபடி. இப்படி உபாதாநம் ஸங்க்ருஹீதமாய்த்து. நன்றென - நல்லவை யென்னுமவையான, ச்லாக்யங்களான வென்றபடி. நீர்-ஜலம். சுடர்-தீபம். தூபம் - தூபம், முகவாச - முகவாஸம், வெள்ளிலை - வெளுத்திருக்கிற தாம்பூலாதிகள், கொடுத்து - இவைகளை ஸமர்ப்பித்து, இது மற்றமுள்ள வௌபசாரிக ஸாம்ஸ்பர்சிக போகங்களுக்கு முபலக்ஷணம். இனி யாப்யவஹாரிக போக

ஸமர்பணத்தைக் காட்டுகிறார். கன்னல்-இக்ஷு-ரஸம், இது மற்றுமுள்ள பேயங்களுக்கு முபலக்ஷணம். இலட்டுகெத்தோடு-லட்டுகாக்ய பக்ஷ்ய விசேஷத்தோடே, இது மற்றுமுள்ள பக்ஷ்யங்களுக் குபலக்ஷணம். அன்னம் - ஓதனம், இதுமற்றுமுள்ள போஜ்யங்களுக் குபலக்ஷணம். சிடை-காத்யவிசேஷம். இதுமற்றுமுள்ள காத்யங்களுக் குபலக்ஷணம். கறி - வ்யஞ்ஜநங்கள், படைத்து - இவைகளை நிர்வபித்து, ஸமர்பித்தென்றபடி. இத்தால் இஜ்யையை சோதித்தபடி. பின்னும் - பிற்பாடும், செபித்து - ஜபித்து, மூலமந்த்ர மந்த்ர ரத்நாதிகளை ஜபித்தென்றபடி. இத்தால்ஸ்வாத்யாயத்தை போதித்தபடி. அவன்பாதம்-அந்தநாதனுடையபாதங்களை, எண்ணுங்கோள்-சிந்தியுங்கோள், இத்தால் யோகத்தை ஜ்ஞாபித்தபடி. என்றான் - என்றுசொன்னான், சதுர்முகனிதிசேஷ:. (௨௪)

மூ.—ஆழிநிலை வினைகடிவா னயமேத முடிந்ததற்பின்
வேழமலை நாயகனார் விடைகொடுக்க விண்ணேறி
நாழிகையில் வானவரை மாற்றியிடு நான்முகன்றா
னூழியெலா மழியாத யோக மடைந்திருந்தானே (௨௫)

அநந்தர மதிஸந்துஷ்டரான பெருமாளாலே யநுஜ்ஞாதனான சதுர்முகன் ஸத்யலோகத்தில் சென்று பரிபூர்ண பகவதநுபவ ரஸ பரித ஸமாதி விசேஷத்தாலே சரிதார்த்தனா யிருந்த படியை யருளிச்செய்கிறார்.

நாழிகையில் - கடிகைகளிலே யிருக்குமவரான, வானவரை-தேவர்களை, மாற்றியிடும் - மாற்றிவிடுமவனான, த்விதீரப்ரஹ்மவிநாடிகாபதஸ்தரான தேவர்களைதத்தத்காலங்களிலே வாங்கவும் வைக்கவு மதிகாரியான வென்றபடி. நான்முகன்தான். சதுர்முகன், ஆழிநிலை - ஸமுத்ரஸ்தாநீயமான, அபரிச்சின்னமான, வினை-கர்மத்தை, கடிவான் - பரிஹரிக்க, அயமேதம் - ஹயமேதமானது, முடிந்ததற்பின் - ஸமாப்தமானபின்பு, வேழமலைநாயகனார் - கரிகிரிநாயகரான பேரருளாளர், விடை - அநுஜ்ஞையை, கொடுக்க - ஸாதிக்க, விண் - ஸத்யலோகத்தை, ஏறி - ஆரோஹித்து, ஊழியெல்லாம் - கல்பகாலமெல்லாம், அழியாத-நசியாததான, ஆகல்பமனுஸ்யூதமான வென்றபடி. யோகம் - யோகத்தை, அடைந்து இருந்தான் - ஸ்பஷ்டம். (௨௫)

மூ.—ஆதியுகத்தயன் கண்டிட நின்றவருள்வரதர்
காதலுயர்த்த களிற்றைத் திரேதையிற் காத்தளித்து
வாதுயர்தேவகுருவுக் கிரங்கித்துவாபரகதில்
சோதியநந்தன் கலியிற் றொழுதெழ நின்றனரே. (௨௬)

இப்படி பெருமாள் க்ருதயுகத்திலே சதுர்முகனாலே ஸமாராதநங்கண்டருளின படியை யநுவதித்துக்கொண்டு யுகாந்தரங்களில் ஸ்ரீகஜேந்த்ர ப்ருஹஸ்பதி சேஷர்களாலே ஸமாராதநங் கண்டருளின படியைக் காட்டிக்கொண்டு ஸத்யவ்ருத மாஹாத்ம்யத்தை யுபஸம்ஹரிக்கிறார்.

ஆதியுகத்து - ஆதியுகத்திலே, அயன் - அஜன், கண்டிட - ஸாக்ஷாத்கரிக்கும்படி, ஆராதிக்கும்படி யென்றபடி. நின்ற - ஆவிர்பவித்தெதிரே நின்றவரான, அருள் வரதர் - க்ருபா ப்ரதாநரான பேரருளாளர். திரேதையில் - த்ரேதாயுகத்தில், காதல்-ப்ரேமத்தாலே, உயர்த்த - அப்யதிகமான, ப்ரதிதிநம் ஸஹஸ்ரபத்ர ஸஹஸ்ரேண பகவத் பாதபத்மார்சநம் விநா ஸ்வாத்ம தாரண மலபமான மானவென்றபடி. களிற்றை - கஜத்தை, காத்தளித்து - ஸயயம்பார்த்து ரக்ஷித்து, க்ராஹப்ரயுக்தாபத் விமோசனம் பண்ணி ஸ்ரீகஜேந்த்ராழ்வானாலே திருவாராதனங் கண்டருளி யென்று பலிதார்த்தம. இத்தால் ஸ்ரீகஜேந்த்ர வ்ருத்தாந்தஸ் ஸர்வோபி ஸங்க்ருஹீத. துவாபரத்தில் - த்வாபரயுகத்திலே, வாது - வாதங்களாலே, உயர் - அப்யதிகனான, தேவகுருவுக்கு - ப்ருஹஸ்பதிக்கு, இரங்கி - ப்ரீதிபண்ணி, தேவஸபையிலே தர்ம ஸம்வாதம் வந்தபோது தர்மமார்க்கத்தில் நின்றும் ஸ்கலித்து தேவசப்தனாய் பூமியிலே திக்க பஹுள ஜந்மத்தைப்பெற்று தபஸ்ஸு பண்ணுகிற ப்ருஹஸ்பதிக்கு சாபாபத் விமோசனம் பண்ணி யவனாலே யாராதநங் கண்டருளி யென்றபடி. இங்கு வாதுயர் என்கிறபதத்தால் தர்மவிப்ரதிபத்தி தசையிலே தர்மசாஸ்த்ரவிருத்த கேவல ஜல்பப்ரதாநத்வம் ஸூசிதம். இத்தால் ப்ருஹஸ்பதி வ்ருத்தாந்தஸ் ஸர்வோபி ஸம்க்ஷிப்த:

கலியில் - கலியுகத்திலே, சோதி - ஜ்யோதிர்மயனை, அநந்தன் - திருவநந்தாழ்வான், தொழுது - ஸேவித்து, ஆராதித்தென்றபடி. எழ - உஜ்ஜீவிக்கும்படி, நின்றனர்-ப்ரதிஷ்டிதரானார். (உசு)

மூ.—புண்டரீக முயர்த்த புராணனார் பொய்யின்மாமக வுத்தரவேதியிற்
கொண்டலாரருண்மாரிபொழிந்திடக் கொண்டதோருயர்கூர்மதியன்பினால்
பண்டைநான்மறைமௌலிபடிந்தநான் பாரின்மெய்விரதக்கலிபாடினேன்
தொண்டைமண்டலவேதியர்வாழவே தூயதென்மறைவல்லவர்வாழ்வே.

ஏதத்ப்ரபந்தவக்தா வான தமக்கு ச்ருதிசிரஸ் தாத்பர்ய பர்யாப்த நித்வேத வைலக்ஷண்யத்தைக்காட்டிக்கொண்டு பகவத் க்ருபொத்தம்பித ஜ்ஞாந பக்தி பரிவாஹ பூத மாகையாலே யிப்ரபந்த முபாதேயதம மென்று கொண்டு நாட்யப்ரதாநப்ரபந்தத்துக்கு அவஸாநத்தில் பரதவாக்யந்யாயத்தாலே துண்டீரமண்டலவாஸ்தவ்யரான உபயவேதாந்தநிஷ்டர்க்கு இவர் மங்களாசாஸநம் செய்தருளுகிறார்.

பண்டை - அநாதிகளான, நான்மறை - நாலுவேதங்களுடைய, மௌலி - மௌலிகளிலே, படிந்த - ப்ரதிஷ்டிதனான, நான் - விச்வநாமரூப வ்யாகர்த்ரு பரமபுருஷனாலே தத்த வேதாந்தாசார்ய ஸம்ஜ்ஞனான நான், புண்டரீகம் - புண்டரீகத்தாலே, உயர்ந்த - எடுக்கப்பட்டவரான, புண்டரீகோத்பன்னரான வென்றபடி. புராணனார்- புராதநருடைய, சதுர்முகனுடைய வென்றபடி. பஹுவசநம் அக்ருத்ரிம பகவத்பக்தி க்ருத கௌரவ ப்ரயுக்தம். பொய்யில் - அக்ருத்ரிமமான, மாமக - மஹாமகத்தினுடைய, ஹயமேதத்தினுடைய, வென்றபடி. உத்தரவேதியில் - உத்தரவேதியிலே, கொண்டல் - வலாஹகமானது, ஆர் - பூர்ணமான, அருள்மாரி - க்ருபாவர்ஷத்தைக், கொண்டது - ஸ்வீக்ருதமான, க்ருபாவர்ஷலப்தமான வென்றபடி. ஓர் - விலக்ஷணமான, அஸ்கலிதமான வென்றபடி. உயர் - அபிவ்ருத்தமான, கூர் - தீக்ஷ்ணமான, மதி - ஜ்ஞானத்தாலும், அன்பினால் - ப்ரேமத்தாலும், பாரில்-பூமியிலே, மெய்விரத-ஸத்யவ்ரதக்ஷேத்ரவிஷயமான, கலி - கவனத்தை, ப்ரபந்தத்தை யென்றபடி. பாடினேன் - காநம்பண்ணினேன், பரதசாஸ்த்ரானுகுணமாக ரசித்தேனென்றபடி, தொண்டைமண்டலம் - துண்டீரமண்டலவர்த்திகளான, வேதியர் - வைதிகர், வாழ - வாழக்கடவர்கள், தூய்ய - நிஷ்கல்மஷமான, தென்மறை - த்ரமிட வேதங்களை, வல்லவர் - அப்யசித்தவர்கள், ஸ்ரீபராங்குசாதி ஸூக்தி நிஷ்ட ரென்றபடி. வாழ - வாழக்கடவர்கள்.

மூ.—உயர்விரதமொன்றின்றியடைந்தாருய்ய வொருவிரதம் தான்கொண்ட
வுயர்ந்தமாலைச் செய்விரதமொன்றாலும் தெளியகிலாச் சிந்தையினாற்
றிசைபடைத்த திசைமுகன்றான் பொய்விரதநிலமெல்லாம் போயே
மீண்டுப் புகலிதுவே புண்ணியத்துக்கென்று சேர்ந்த மெய்விரதநன்
னிலத்து மெய்ம்மையேத்திவேதாந்தவாசிரியன் விளங்கினானே (உஅ)

சேவல துண்டீர மண்டல வாஸ மன்றிக்கே ஸர்வக்ஷேத்ரஸாரபூத ஸத்யவ்ரதக்ஷேத்ர மாஹாத்ம்ய வர்ணநத்தாலே தா மத்யந்த க்ருதார்த்தரான படியை யருளிச்செய்கிறார்.

திசை - திக்குகளை, படைத்த - ஸ்ருஷ்டித்தவனான, திசைமுகன் - சதுர்முகனானவன், உய் - உஜ்ஜீவநஹேதுவான, விரதம் - வ்ரதம், ஒன்றின்றி - ஒன்றுமின்றிக்கே, அடைந்தார் - தன்னை சரணமாகப் பற்றினவர்கள். உய்ய - உஜ்ஜீவிக்கும்படி, தான் - ஸ்வயம், ஒருவிரதம் - ஒருவிரதத்தை, கொண்ட - ஸ்வீகரித்தவனான, ஸக்ருத் ஸ்வசரணாரவிந்தயோ: ந்யஸ்தபரர்களை உஜ்ஜீவநோபாயாந்தர நிரபேக்ஷமாக ரக்ஷிக்கையிலே பத்ததீக்ஷனான வென்றபடி. உயர்ந்த-ஸர்வோன்னதனான, மாலை-ஆஸ்ரிதவ்யாமோஹ சீலனான ஸர்வேச்வரனை, செய்விரதம் - அநுஷ்டேயமான வ்ரதங்களிலே, ஒன்றாலும் - ஒருவ்ரதத்தாலும், தெளிய - ஸாக்ஷாத்கரிக்கையிலே, கில்லார்-அஸமர்த்தையான, சிந்தையினால் - சிந்தையாலே, பொய்விரதம் - மித்யாபூத வ்ரதங்களான, பலாவிநாபாவ ப்ரயோஜக ஸாத்குண்யாநா பாதகங்களாகையாலே பண்ணின வ்ரதங்கள் விபலங்களாய் போ மிடமான வென்றபடி. நிலமெல்லாம் - ப்ரதே

சங்களையெல்லாம், போயே-நடந்தே, மீண்டு - நிரூபித்து திரும்பிவந்து, இதுவே- இந்தஸத்யவ்ரதக்ஷேத்ரமே, புண்ணியத்துக்கு - புண்ணியத்துக்கு, புகல் - உபாயம், அநந்த பல புண்ய ஸாதந மென்றபடி. என்று-இப்படி நிரூபித்து, சேர்ந்த - வந்தடைந்த விடமான, மெய்விரதம் - ஸத்யவ்ரதமாகிற, நல்நிலத்து - நல்லக்ஷேத்ரத்தினுடைய, மெய்மை - யாதார்த்யத்தை. மெய்மை யென்கிற பதத்தா லிப்ரபந்தத்தில் அதிவாதசங்கைக்கு அவகாசமில்லை யென்று ஸூசிதம். எத்தி - ப்ரசம்ஸித்து, வேதாந்தவாசிரியன்-ஸ்ரீவேதாந்தாசாரியர், விளங்கினன்-ஸர்வோந்நதராக ப்ரகாசித்தார். (உஅ)

மூ.—சீராருந்தூப்புற் றிருவேங்கடமுடையான்
தாராரருளாளர்தாணயந்து - சீராக
மெய்விரதநன்னிலத்துமெய்ம்மையிதுமொழிந்தான்
கைக்கொள்களிபோலகிலங்கண்டு. (உகூ)

சரணாகதி வசீக்ருத சரண்ய ப்ரஸாதத்தாலே கரதலாமலகீக்ருத நிகிலதத்வ யாதாத்ம்ய ஞானதாம் செய்த விப்ரபந்தம் நிர்விசங்க பரிக்ராஹ்ய மென்கிற வபிஸந்தியோடே ப்ரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார்.

சீர் - கல்யாணகுணங்களாலே, ஆரும்-பூர்ணமான, தூப்புல் - தூப்புலென்கிற குடியிலவதரித்தவரான,நாநாஸித்தாந்த நீதிஞ்ஞ விமல தீ வம்சஜர்தரானவென்றபடி. திருவேங்கடமுடையான் - ஸ்ரீமத் வெங்கடநாதாசாரியர், தார் - ஹாரங்களாலே ஆர் - பூர்ணமான, ஹாராதிஸர்வபூஷண பூஷிதரான வென்றபடி. அருளாளர்-பேரருளாளருடைய, தாள் - திருவடிகளை, நயந்து - ஆச்ரயித்து, அகிலம் - அகிலங்களையும், கைகொள் - பர்ணிதலநிஹிதமான, களிபோல் - பலம்போல, கண்டு - ஸாக்ஷாத்கரித்து. "தாஹோ மொஹச் ச்ரமச் சைவக்ல மொ க்லாநிஸ் ததைவசரவச்ச தப்ரஸாதாத்வார்ஷ்ணேய ஸத்யோவ்யபகதாஇமேயச்சபூதம் பவிஷ்யச்ச । பரமத்யுதே । தத்ஸர்வ மநுபச்யாமி பாணௌ வாமலகம்யதாவேதோக்தாச்சைவ யே தர்மாஃ வெதாந்த நிரதாச்சயே । தாந் ஸர்வாந் ஸம்ப்ரபச்யாமிவரதாநாத் தவாச்சுத" என்கிறபடியே பகவத் ப்ரஸாதத்தாலே ஸர்வத்தையும் கரதலாமலகீ கரித்தென்றபடி. இது- இந்த மெய்விரத-ஸத்யவ்ரதமாகிற, நல்நிலத்து - ஸமீசீநக்ஷேத்ரத்தினுடைய, மெய்மை - யாதார்த்யத்தை, சீராக - குணவத்தரமாக, மொழிந்தான் - சொன்னார், இப்ரபந்தாந்தத்திலே யிப்படி மூன்றுபாட்டிலே தம்முடையகுணங்களை தாமேகீர்த்திக்கை நாடகரூபமான ப்ரபந்தத்துக்கு கவிப்ரசம்ஸாரூபமான வங்கமாகையாலும் ப்ரத்யுத விதுபண்ணுதபோது அங்கவைகல்யம் ப்ரஸங்கிக்கையாலும் தோஷமன்று, ஆனாலும் ப்ரபந்தோபக்ரமத்திலே கொண்டலருள் குணமே நாம் கூறுகின்றோ மென்று பேரருளாளர்குணகதநத்தை ப்ரதிஜ்ஞைபண்ணி ஸமாப்தியிலே ஸத்யவ்ரத மாஹாத்மயத்தைச் சொன்னதாக வுபஸம்ஹரிக்கை யனுபபன்ன மன்றோ வென்னில் அதுவும், "ப்ரஶஸ்திஸ் ஸா ராஜ்ஞோ யதபிச புரீகோசகதநம்" என்கிறபடியே பேருளாளருடைய மாஹாத்ம்ய பர்யவஸாயி யாகையாலேஸமஞ்சஸமாம். (உகூ)

इत्थं ……तावसः । सत्यव्रतमाहात्म्य……
वसिष्ठाय …… ॥ (க)
नाहं वेद्मि ……शरणागतः । (உ)
…… श्रवणस्य ……जङ्घेऽहम् ॥ (ஙு)
इति श्री……वीरराघवविरचितः कृतिषु
सत्यव्रतमाहात्म्यव्याख्यानम्.

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः.

ஸ்ரீஹஸ்திகிரிமாஹாத்ம்ய வ்யாக்யானம்

முற்றிற்று.

— ❧ —



ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

# அடைக்கலப்பத்து வ்யாக்யானம்.

ஸ்ரீஸூக்தி......நக்ஷா । ஸ்ரீவேங்கடேஶாகவிதார்க்கிகஸிம்ஹ:

விவரணோக்திகுந்நவீரதேவ ॥ (க)

ஜநாஜிவ்ருத்தேவ......வடிஸோ ॥ (உ)

மாயாதேஶோ:......ஸமிதாதிஶஜ்ஞ: ॥ (ங)

தைத்திரீயோபநிஷச்சரமச்லோகாதிகளாலே, சோதிதையாய் மந்த்ரரத்ந ச்வேதாச்வதரமந்த்ராதிகளாலே ப்ரகாசிதையாய் லக்ஷ்மீதந்த்ராஹிர்புத்ந்யதந்த்ராதி பகவச்சாஸ்த்ர ஸம்ஹிதைகளாலே யுபப்ருஹ்மிதையாய் தம்மாலே ஸ்ரீரஹஸ்யத்ரய ஸார நிக்ஷேபரக்ஷாதி பஹுப்ரபந்தங்களிலே ஸகலக்ஷோபங்களுந் தீரும்படி ப்ரமாணோபபத்தி ஸம்ப்ரதாயோபந்யாஸ பூர்வகமாக ஸம்யக் வ்யவஸ்தாபிதாதிகாரேதிகாதவ்யதா ஸ்வரூபொத்தரக்ருத்யையான சரணாகதிவித்யையை தாத்ருசப்ரபந்தபரிச்ரமாஸஹரான வேழைபேதைகளுங்கூட ஸுகமாக வநுஷ்டித்து உஜ்ஜீவிக்கும்படி தத்தநுஷ்டானப்ரகாரத்தை விசதமாக ப்ரதர்சிப்பிக்கைக்காக அடக்கலபத்து என்று பேர்பெற்றிருக்கிற ஸர்வாதிகர்த்தவ்ய த்ரமிடகாதாத்மக ப்ரபந்தத்தைச் செய்தருளுகிறார்.

மூ.—பத்திமுதலாமவைத்திற்பதியெனக்குக்கூடாமல்
எத்திசையுமுழன்றேடி யிளைத்துவிழுங்காகம்போல்
முத்திதருநகரேழின்முக்கியமாங்கச்சிதன்னில்
அத்திகிரியருளாளர்க்கடைக்கலநான்புகுந்தேனே. (க)

அதிலே முற்பட சரமச்லோகத்தினுடைய சரமவாக்யத்தின் நிஷேதஸாமர்த்யத்தாலே யாதல் ப்ரதமவாக்யத்தி லநுவாதத்தாலே யாதல் ப்ரதிபந்நமாய் த்வயத்திலுத்தமனாலே விவக்ஷிதமான ப்ரபத்யதிகாரத்தை யிரண்டுபாட்டுகளாலே அருளிச்செய்யக்கடவராய், ஆகிஞ்சந்யம் அநந்யகதித்வம் என்கிற இரண்டுவகையான ப்ரபத்யதிகாரத்தில் உபாயாந்தரராஹித்யரூபமான வாகிஞ்சந்ய மென்கிற ப்ரதமப்ரகாரத்தை முதல்பாட்டாலே அருளிச்செய்கிறார்.

எனக்கு - ஜ்ஞாந சக்த்யாதி ரஹிதனான வெனக்கு, பத்திமுதலாமவைத்தில்-பக்தியோக ப்ரப்ருதிகளான தத்தச்சாஸ்த்ரங்களிலே, இங்கு முதல் சப்தத்தாலே பக்தி த்வாரா மோக்ஷஸாதநபூத ஜ்ஞாநகர்மயோகபரிக்ரஹ:. பஹுவசநத்தாலே ஸ தக்ஷர சாண்டில்ய தஹர வித்யாதி ரூபேண பக்திக்குள்ள வைவித்யமும் யஜ்ஞ தாந தபோ தேவதார்சநாதி ரூபேண கர்மயோகத்துக்குள்ள வைவித்யமும் மற்றும் சாஸ்த்ரஸித்தங்களான வவாந்தரபேதங்களும் விவக்ஷிதங்கள். பதி - ஸ்திதியானது, கூடாமல்-கடியாமையாலே, "நதர்மநிஷ்டோஸ்மிநசாத்மவேதீநபக்திமாந்த்வச்சரணாரவிந்தே" என்கிறபடியே துஷ்கரங்களான கர்மஜ்ஞாநபக்தியோகங்களிலே நிஷ்டை துர்லபதரையாகையாலே யென்றபடி. எத்திசையும் - ஸர்வதிக்குகளிலும், உழன்று - பரிப்ரமித்து, ஓடி - தவித்து, இளைத்து - பரிச்ரமித்து, பரிப்ரமண ஜநித பரிச்ரமாதிசயத்தாலே பதாத் பதம் சலிதுமக்ஷமமா யென்றபடி. விழும் - விழாநிற்கிற, காகம் போல் - காகாஸுரனைப்போலே, பிராட்டிவிஷயத்தி லபசரித்துப் பெருமாளாலே ப்ரயுக்தமான குசரூப ப்ரஹ்மாஸ்த்ரத்தாலே யநுத்ருதனாய், "ஸபித்ராசபரித்யக்தஸ்தமேவசரணங்கத:" என்கிறபடியே போக்கற்று வந்து சரணமடையும் காகாஸுரனைப் போலே யென்றபடி. இதுக்கடைக்கலம்புகுந்தேனென்கிறத்தோடே யந்வயம். நான்-ஜிதகௌஸ்துப சௌர்யமான வாத்மாபஹாரத்தாலே யாத்யாத்மிகாதி துக்க பரம்பரைகளிலே விழுந்து கரைகாணாதிருக்கிற நான், முத்தி - முக்தியை, தரும் - கொடுக்குமவைகளான, நகரேழில் - ஏழுநகரங்களிலே, முக்கியமாம் - முக்யமாகா

நிற்கிற, கச்சிதன்னில் - காஞ்சீநகரத்திலே, தன்னென்று ஸ்வார்த்தே யனுப்ரயோகः. "அயோத்யா மதுரா மாயா காசீ காஞ்சீ ஹ்யவந்திகா । புரீத்வாரவதீ சைவ ஸப்தைதா முக்தி தாயகாः" என்று மோக்ஷப்ரத த்வேந பரிகணிதமான நகரஸப்தகத்தில் ப்ரதாநமான ஸ்ரீகாஞ்சீநகரத்திலென்றபடி. இவைத்தில் காஞ்சீநகரத்துக்கு ப்ராதாந்யமாவது ஸர்வேச்வரன் அயோத்யாதிநகரங்களிலே யவதரித்து திவ்யலீலாசேஷ்டிதங்களை நடத்தித் திரும்பவும் தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளுமாப்போலன்றிக்கே "வைகுண்டேது யதாவாஸோ யதைவக்ஷீரஸாகரே।ததா ஸத்யவ்ரத க்ஷேத்ரே நிவாஸஸ்தேபவேதிஹ" என்றச்வமேத யஜ்வாவான சதுர்முகன் அப்யர்த்திக்க, "தேவதிர்யங்மநுஷ்யாணும்+ப்ரவீமிதே" என்று தானருளிச்செய்தபடியே "வேகவத்யுத்தரேதீரே+அத்யாபிபரித்ருச்யதே" என்னும்படி ஸகல மனுஜ நயந விஷயதாங் கதனாய் நித்யவாஸம் பண்ணுகை. இங்கு திவ்யநகரவிசேஷோபாதானம் "தேவயம்பவதாக்ஷயாபவத்விஷயவாஸிநः" என்று மடிபிடிக்கலாம்படியான விஷயவாஸாக்ய ஸம்பந்தத்யோதநார்த்தம், இவ்வாகிஞ்சின்யாதிகாரஸம்பத்திதானு மிவ்விஷயவாஸாக்ய ஸுக்ருதவிசேஷப்ரயுக்தை யென்று த்யோதநார்த்தஞ்ச. அத்திகிரி-ஹஸ்திகிரியிலிருக்குமவரான, அருளாளர்க்கு - க்ருபையையாண்டுகொள்ளுமவரான பெருமாளுக்கு, இங்குசரண்யனை யருளாளரென்று நிர்தேசித்தது ஸ்வாதிநகருணாகரத்வமாகிற சரண்யத்வோபயுக்த ப்ரதாந குணப்ரதர்சநார்த்தம். அடைக்கலம் - ரக்ஷ்யவஸ்துவாக, புகுந்தேன் - ஆச்ரயித்தேன். (௧)

மூ.—சடைமுடியன்சதுர்முகனென்றிவர்முதலாந்தரமெல்லாம்
அடையவினைப்பயனாகியழிந்துவிடும்படிகண்டு
கடிமலராள்பிரியாதகச்சிநகரத்தகிரி
யிடமுடையவருளாளரிணையடிகளடைந்தேனே. (௨)

இப்படி த்விவிதமான ப்ரபத்யதிகாரத்தினுடைய ப்ரதமப்ரகாரத்தை யருளிச்செய்து இனிமேல் ப்ரயோஜநாந்தரவைமுக்யரூபமான வநந்யகதிகத்வமாகிற த்விதீய ப்ரகாரத்தாலே பலிதமான சரண்யாந்தரவைமுக்யத்தையருளிச்செய்கிறார்.

சடைமுடியன் - ஜடாமௌலி, ருத்ரனென்றபடி. இங்கு ருத்ரனை ஜடாசிரஸ்கத்வேந நிர்தேசித்தது ஸம்ஸார பாரதந்த்ர்ய ப்ரயுக்த கர்மாநுஷ்டான ப்ராவண்ய த்யோதநார்த்தம். சதுர்முகன் - ப்ரஹ்மா, என்றிவர்முதலாம் - இப்படி சொல்லப்பட்ட இவர்கள் முதலாயிருக்கிற, தரமெல்லாம் - ப்ரகாரங்களெல்லாம், ப்ரஹ்மருத்ரேந்த்ராதீயைச்வர்ய தாரதம்யங்களெல்லா மென்றபடி. அடைய-காத்ஸ்ந்யேந, வினைப்பயனாகி - கர்மபலன்களாய், அழிந்துவிடும்படி - ஒருகாலவிசேஷத்திலே நசித்துவிடும் ப்ரகாரத்தை, கண்டு - பார்த்து, ப்ரூஹ்மருத்ராத் யைச்வர்யங்களெல்லாம் "கர்மணாம்பரிபாகத்வாத் ஆவிரிஞ்சாதமங்களம் । இதிமத்வாவிரக்தஸ்ய வாஸுதேவः பராகதிः॥ ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா ஜகதந்தர்வ்யவஸ்திதாः।ப்ராணிநः கர்மஜநித ஸம்ஸாரவசவர்திநः॥ அவித்யாந்தர்கதாஸ்ஸர்வே தேஹிஸம்ஸாரகோசராः । ஸர்வேதேவாவாஸுதேவம் யஜந்தே ஸர்வேதேவாவாஸுதேவம்நமத்தே, ஸப்ரும்மகாஸ்ஸருத்ராச்ச ஸேந்த்ராதேவாமஹர்ஷயः । அர்சயந்திஸுரஸ்ரேஷ்டம் தேவம்நாராயணம்ஹரிம்॥ சிந்தயந்தோஹியம்நித்யம் ப்ரஹ்மேசாநாதயः ப்ரபும் । நிச்சயம்நாதிகச்சந்தி தமஸ்மிசரணங்கதः, பத்மேதிவ்யேர்கஸங்காசே நாப்யாமுத்பாத்யமாமபி।ப்ராஜாபத்யந்த்வயாகர்ம ஸர்வம்மயிநிவேசிதம்॥ ஸோஹம்ஸந்யஸ்த பாரோஹித்வாமுபாஸேஜகத்பதிம் । யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்யபத்மபூः । புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதிசுச்ரும, விச்வரூபோமஹாதேவः ஸர்வமேதேமஹாக்ரதௌ । ஜுஹாவஸர்வபூதாநிஸ்வயமாத்மாநமாத்மநா, மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மாஹுத்வாத்மாநம் தேவதேவோபபூவ । விச்வாந்லோகாந் வ்யாப்யவிஷ்டப்ய கீர்த்யா விராஜதேத்யுதிமாந் க்ருத்திவாஸாः, யோமேயதாகல்பிதவாந் பாகமஸ்மிந்மஹாக்ரதௌ । ஸததாயஜ்ஞபாகார்ஹோ தேவஸுத்ரோமயாக்ருதः, "வானவர் தம்மையாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும் செம்மையா லவன் பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே" "வேதாபஹாரகுருபாதக" இத்யாதிப்ரமாணங்க

னாலே கர்மோபாதிகமாம்படியையும் "ஏகோஹவைநாராயண ஆஸீந்ந ப்ரஹ்மாநே சாநஃ, யஃ புராப்ரளயேப்ராப்தே நஷ்டேஸ்தாவரஜங்கமே । ப்ரஹ்மாதிஷுப்ரலீநேஷு நஷ்டேலோகேசராசரே॥ ஆபூதஸம் ப்லவேப்ராப்தே ப்ரலீநே ப்ரக்ருதௌ மஹாந் ஏகஸ்திஷ்டதி விச்வாத்மாஸமேவிஷ்ணுஃ ப்ரஸீதது" "எம்பெருமானுண்டுமிழ்ந்த வெச்சில்தேவரல்லாதார் தாமுளரே" இத்யாதி ப்ரமாண ஸஹஸ்ரங்களாலே நச்வரங்களாம்படியையும் விசதமாக வறிந்தென்றபடி. இங்குப்ரஹ்ம ருத்ராதைச்வர்யங்களுடைய நச்வரதாநிரூபணத்தை யருளிச்செய்தது ஸ்ரீமந்நாராயணனுடைய பரஸ்ஸஹஸ்ரப்ரமாணோத்கோஷிதமான ஸ்வாபாவிகா நவதிகா திசயைசித்ருத்வ நிருபணத்துக்கு முபலக்ஷணம். இங்கு எல்லா மென்கிறகார்த்ஸ்ந்யவாசகபதம் ஸ்வரூபகார்த்ஸ்ந்யபரமாய்அடையவென்கிறகார்த்ஸ்ந்யவாசகம்ப்ரகாரகார்த்ஸ்ந்யபரமாகையாலே கார்த்ஸ்ந்யவாசக பதத்வயத்துக்கு புநருக்தியில்லை. கடிமலராள் - பரிமளயுக்தபுஷ்பத்தையுடையவளோடு, ஸுரபி ஸரோஜ நித்யவாஸிநி யாகையாலே ஸரோஜஸௌரபந்தான் வடிவுகொண்டாப்போலே யிருக்கிற பெரியபிராட்டியாரோடு, பிரியாத - விச்லேஷியாதவரான, "நித்யைவைஷாஜகந்மாதா, அகலகில்லேனிறையுமென் றலர்மேல்மங்கையுறைமார்பா" "சாந்தாநந்த" இத்யாதிகள்படியே ஸர்வாவஸ்தையிலும் ஜகன்மாதாவோடு ஸம்ச்லிஷ்டரான வென்றபடி. இத்தால் த்வயத்தில் மதுப் ப்ரத்யயம் நித்யயோக பரமாக வ்யாக்யாதமாய்த்து. இங்குபிராட்டிக்கு நித்யயோகம் அருளிச்செய்தது திவ்யதம்பதிகளிருவரும் ஆத்மஹவிஸ்ஸமர்பணத்திலே அக்நீஷோமாக்நாவிஷ்ணுந்யாயத்தாலே வ்யாஸஜ்யோத்தேச்யர்களென்று த்யோதநார்த்தம். கச்சிநகர் - காஞ்சீநகரிலே, அத்திகிரி - ஹஸ்திகிரியை வாஸஸ்தாநமாகவுடையவரான, அருளாளர் - பேரருளாளருடைய, இணையடிகள்-பரஸ்பரஸாத்ருச்யத்தாலே யுகளீபூதங்களான திருவடிகளை, அடைந்தேனே-சரணமாகப் பற்றினேன். (உ)

மூ.—தந்திரங்கள்வேறன்றித்தமதுவழியழியாது
மந்திரங்கள்தம்மாலும்மற்றுமுள்ளவுணாயாலும்
அந்தரங்கண்டடிபணிவாரெல்லார்க்குமருள்புரியுஞ்
சிந்துரவெற்பிறையவனார்சீலமல்லதறியேனே. (௩)

இப்படி ப்ரபத்யதிகாரத்தைச் சொல்லி இனிமேல் அநுஷ்டாதாவுக்கு அநுஷ்டாநஸௌகர்யாதிசயஜ்ஞாநார்த்தமாக சரமச்லோகத்தினுடைய ப்ரதமபாதத்திலே யாத லேகசப்தத்திலே யாதல் விவக்ஷிதமான ப்ரபத்தியுடைய தர்மாந்தரநைரபேக்ஷ்யத்தைக் காட்டாநின்றுகொண்டு அர்த்தாத் ப்ரபத்திக்கு ஸர்வபலஸாதநத்வத்தையும் வெளியிடுகிறார்.

தந்திரங்கள் வேறு இன்றி - வேறுதந்த்ரங்களின்றி யென்றந்வயம், வேறு ஆநுகூல்யஸங்கல்பாதி ப்ரபத்திப்ரகார வ்யதிரிக்தங்களான, தந்திரங்கள் - தந்த்ரங்கள், இன்றி - இல்லாமல், கர்மஜ்ஞான யோகாதிகளான ஸர்வதர்மங்களாலும் அபேக்ஷையில்லாதபடி யென்றபடி. இதுக்கு அடிபணிவார் என்கிறத்தோடந்வயம். இப்படி ப்ரபத்தி ஸர்வதர்ம நிரபேக்ஷையாகி லித்தை யனுஷ்டிக்கு மதிகாரி தத்கால ஸம்பாவிதங்களான சிகாயஜ்ஞோபவீதோர்த்வபுண்ட்ராதிகளைத் தவிர்த்து கொண்டேயநுஷ்டிக்கவேண்டாவோ வென்னில் அருளிச்செய்கிறார். தமது - தங்களுடைய, வழி-மார்க்கமானது, அழியாது - குலையாதபடி, பகவதாஜ்ஞாசிர்ஹங்களான ஸ்வஸ்வ வர்ணாஸ்ரமோசித நித்யநைமித்திக கர்மங்களை விடாதபடி யென்றபடி. இதுக்கும் முன்புசொன்னபடியந்வயம். "ஸஹகாரித்வேநச" என்கிறபடியே பக்திநிஷ்டனுக்கு க்ரத்வர்த்தத்வேந ஸர்வதர்மங்களும் அபேக்ஷிதங்களாகிறாப்போலன்றிக்கே "தீக்ஷிதோ ந ததாதி நஜுஹோதி நயஜதெ" என்றுதீக்ஷிதனுக்கு ப்ரதிஷித்தங்களான தாநஹோமபாகங்கள் க்ரத்வர்த்தங்களாக வேண்டாவிடிலும் புருஷார்த்தங்களாகவாவச்யகங்களென்று தாசமிகாதிகரணத்திலே பரீக்ஷகர் நிர்ணயித்தபடியே ப்ரபத்திநிஷ்டனுக்கு "விஹிதத்வாசாஸ்ரமகர்மாபி" என்கிறந்யாயத்தாலே புருஷார்த்தத்வேந ஸர்வதர்மங்களும் அபேக்ஷிதங்களாகையால் முன்புசொன்னசங்கைக்கு அவகாசமில்லை யென்று

கருத்து. மந்திரங்கள்தம்மாலும் - த்வயம் ப்ரணவம் யோப்ரஹ்மாணம் என்கிறச்வே தாச்வதர ஶ்ருதி, தத்விஷ்ணோः என்கிறஶ்ருதி, இத்யாதி மந்த்ரங்களாலும், மற்றுமுள்ள - வேறுமுள்ளவைகளான, உரையாலும் - ஸூக்தங்களாலும், பூர்வோக்த மந்த்ரவ்யதிரிக்தங்களாயுள்ள "அகலகில்லே" னென்கிறபாட்டு "நதர்மநிஷ்டோஸ்மி" என்கிறச்லோகம், சரணாகதிகத்யம், அம்மாள்பாசுரம், முதலான ஸாங்கப்ரபத்தி ப்ரகாசகங்களான ஸூக்திகளாலு மென்றபடி. இதுக்கும் முன்பு சொன்னபடி யந்வயம். அந்தரம் - அந்தரத்தை, வைலக்ஷண்யத்தை, கண்டு - நிரூபித்து, ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் ஸர்வேச்வரனுக்கு முள்ள வைதர்ம்யத்தை சாஸ்த்ரங்களாலே தெளிந்தென்றபடி. அடி - தம்முடையதிருவடிகளை, பணிவார் - ஸேவிக்குமவரான, எல்லார்க்கும் - ஸர்வர்க்கும், அருள் - க்ருபையை, புரியும் - வர்ஷிக்குமவரான, பொழியு மென்று பாடமான போது மிதுவே பொருள். தம்முடைய திருவடிகளை சரணமாகவாஶ்ரயித்தவர்களான, "ஆர்த்தோஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ" என்கிற சதுர்விதாதிகாரிகளுக்கும், "தாவதார்திஸ்ததாவாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம்|யாவந்நயாதிசரணம் த்வாமசேஷாகநாசநம்" என்கிறபடியே தத்த தபீப்ஸித பலன்களை கொடுக்குமவரான என்றபடி. சிந்துரவெற்பு - ஸிந்துரசைலத்துக்கு, இறையவனார் - ஈச்வாராயிருக்கிற பேரருளாளருடைய, சீலமல்லது - ஸ்வபாவத்தைத்தவிர, மஹத்வேஸதி மந்தைஸ்ஸஹ நீரந்த்ர ஸம்ச்லேஷாக்ய ஸௌசீல்யத்தை யொழிய வென்றபடி. அறியேனே - ஸ்பஷ்டம். வேறொன்றை இதிசேஷः. (௩)

மூ.—காகமிராக்கதர்மன்னர்காதலிகத்திரபந்து
நாகமரனயன்முதலாநாகநகரார்தமக்கும்
போகமுயர்வீடுபெறப்பொன்னருள்செய்தமைகண்டு
நாகமலைநாயகனார்நல்லடிப்போதடைந்தேனே. (௪)

ப்ரபத்திக்கு தர்மாந்தரநைரபேக்ஷ்யத்தை அருளிச்செய்தினிமேல் "உபாயஸ்ஸுகரச்சாயம் துஷ்கரச்சமதோமம" "கலவெள்கட்டுப்போய் கலவெண்ணெயாய்" த்தென்கிறபடியே ப்ரபத்யங்கங்களிலே துர்லப தமமான மஹாவிச்வாஸத்தினுடைய நிஷ்பத்யர்த்தமாக ப்ரபத்திக்கு பஹுஸ்தலங்களிலே பலாவிநாபாவத்தைக் காட்டுகிறார்.

காகம் - காகாஸுரன், இராக்கதர்மன்னர் - ராக்ஷஸராஜர்கள், ஸ்ரீவிபீஷணாழ்வானும் அவனுக்கந்தரங்கர்களான நாலுமந்த்ரிகளுமென்றபடி. யத்வா - இராக்கதர்-ராக்ஷஸர்கள், மன்னர் - பஞ்சபாண்டவர்களென்றபடி, காதலி - காதலை யுடைய ஸ்த்ரீ, காதல் - அநுராகம். அத்தையுடையவள் காதலி. வண்டார்குழலிபந்தார்விரலி என்னுமாப்போலே, த்ரௌபதி யென்று பலிதார்த்தம். கத்திரபந்து - க்ஷத்ரபந்து, நாகம் - காளீயஸர்பம், யத்வா - ஸ்ரீகஜேந்த்ராழ்வான், அரன்-ஹரன், அயன்-அஜன். சதுர்முகனென்றபடி, முதலாம் - இவர்களைப்ரதானமாகவுடையவர்களான, நாகநகரார்தமக்கும் - நாக நகர வாஸிகளான தேவர்களுக்கும், நாகः - ஸ்வர்லோகः. நாகமாகிய நகரத்தையுடையவர்கள் நாகநகரார், தம்மென்று ஸ்வார்த்தே நுப்ரயோகம். இங்குற்றஷஷ்ட்யர்த்தத்துக்கு காக ப்ரப்ருதிகளான ஸர்வர்களோடும் அந்வயம். போகம் - போகங்களாலே, உயர் - உச்ச்ரிதமான, போகஸம்ருத்தமான வென்றபடி, வீடு - மோக்ஷம், தத்ததாபத்விமோசனமென்றபடி. பெற - லபிக்கும்படி, தத்ததாபத்துக்களும் நீங்கி போகங்களும் ஸம்ருத்தங்களாம்படி யென்று நிஷ்கர்ஷம். பொன்-ஸ்ப்ருஹணீயமான, அருள் - க்ருபை, ஸர்வபலா விநாபாவத்தாலே ஸர்வபலாபிலாஷிகளாம்படி ஸ்ப்ருஹணீயை யென்றபடி. செய்தமை - செய்தபடியை, கண்டு-பார்த்து, பலாபிலாஷிகளான பலவதிகாரிகளிலே ப்ரபத்திக்கு பலாவிநாபாவத்தை நிர்ணயித்தென்றபடி. நாகமலைநாயகனார் - நாகசைலநாயகரான பேரருளாளருடைய, நல் - ஸமீசீனங்களான, அடி-திருவடிகளாகிற, போது - புஷ்பங்களை, இங்கு போதென்கிறபதம் புஷ்பசாமாந்யபரதாயாம் ஸ்வாரஸ்யாபாவாத் தாமரஸபுஷ்பரூபவிசேஷபரம். ஆச்ரிதரை கைவிடாதவைகளாய் அருணஸரஸிஸுகுமாரசீதளஸரஸவிமலங்களான திருவடிகளென்று பர்யவஸிதார்த்தம். அடைந்தேன் - சரணமாகப் பற்றினேன். (௪)

என்றும் - ஒருகாலத்திலும், ஓரேதமின்றி-ஓரவத்யமுமில்லாததாய், கதாசிதபி விச்லேஷரூபாவத்யம் இல்லாதபடி, யத்வா: கதாசிதபி வைரஸ்யரூபாவஸ்தா கந்தமில்லாதே யென்றபடி. இரவியுமொளியும் போல-ரவியும்ப்ரபையும்போலே, ஒன்றிநின்று - ஏகீபவித்து இருந்து, ப்ரபா ப்ரபாவந்ந்யாயத்தாலே நித்யஸம்ச்லிஷ்டமாய்நின்றென்படி. உலகு - லோகங்களை, அளிக்கும் - ரக்ஷிக்குமதான, உகம் - யுகத்தை, திவ்ய தம்பத் யாத்மகயுகளத்தையென்றபடி. இகழ்ந்து-த்யஜித்து,இத்தம்பதிகளில்பத்நீஸக்தசெஷித்வரக்ஷகத்வா ஜ்ஞானத்தாலே திவ்யதம்பத்யாத்மக யுகளத்தைத் த்யஜித்தென்றபடி. அடிமை-தாஸ்யத்ஸத, கேவலபகவத்தாஸ்யத்தையென்றபடி,வைத்தீர்-வைத்துக்கொண்டவர்களே, அப்யுகமித்தவர்களே என்றபடி. ஒன்று-ஏகாக்ஷரமாய்,மூன்றெழுத்தாய்-அகாரோகாரமகாராத்மகமாய், ஒன்றும் - ஏகீபவிக்குமதான, ஒன்றில்-ஒருபதத்திலே, ஸ்ருதியிலே அக்ஷரத்ரய ஸமுதாயாத்ம கைகாக்ஷரத்வேந ப்ரஸித்தமாய் ஸம்ஹிதேதரதசையிலே ஏகாக்ஷரீபவிக்குமதான ப்ரவரூபவிலக்ஷண சப்தத்திலே என்று பிண்டிதார்த்தம். ஒன்றுடைய ஒருவர்ணத்தினுடைய, முன்னே-பூர்வபாகத்திலே, ஒன்றிய-ஏகீபவித்ததான, இரண்டை-வர்ணத்வயத்தை, ப்ரணவத்திலே மகாராத்பூர்வமேகார்த்த பாவத்தாலே இதரேதர யோகத்வந்த்வ ஸமாஸேந ஐகபத்யமாபன்னமான வகாரோகாரரூபவர்ணத்வயத்தை என்றபடி. உள்ளி-அத்யவஸித்து, விஷ்ணுவாசகமான வகாரமும் லக்ஷ்மீவாசகமான உகாரமும் பூர்வோக்த ப்ரக்ரியைகளாலே லுப்தசதுர்த்தீ த்விவசநாந்த த்வந்த்வஸமாஸமாகையாலே ஆக்நாவைஷ்ணவ ஹவிராதாநந்யாயேந ததுபய சேஷத்வத்தையநுஸந்தித்தென்றபடி. இந்த யோஜனையிலே ப்ரமாணுக்தரபலத்தாலே சேஷத்வாந்யயோகவ்யவச்சேதம் ப்ரணவத்திலார்த்தமாகக்கடவது. உளரென - ஸத்துக்களென்னும்படி. "ஸந்தமேநந்ததொவிது" என்றஸத்தா சாலிகளாயென்றபடி. உய்யுன் - உஜ்ஜீவியுங்கள். (௪)

மு — தத்துவமறுநான்கோடு தனியிறையன்றிநின்ற
சித்தினையுணராதென்றுந் திரடொகையாகிநின்றீர்
மத்தனைத்தனிவிடாதே மையிலாவிக்கமாக்கி
உத்தமனடிமையான வுயிர்நிலையுணர்மினீரே. (௫)

இத் திவ்யதம்பதி சேஷத்வ ஜ்ஞானம் பிறந்தாலும் தத் சேஷத்வாஸ்ரயனை தன்னை தேஹேந்த்ரியாதி விலக்ஷணாக வறியாதபோது ஸ்வரூபோசித ஸாம்ப்ரதாயிக பலாநுகூல ப்ரவ்ருத்தி கூடாமையாலே தாத்ருசஜ்ஞானசபளரைக்குறித்து தந்நிவ்ருத்யர்த்தமாக மகாரார்த்தாநுஸந்தாக பூர்வகம் ப்ரணவாக்யார்த்தத்தை அநுஸந்தியுங்கோளென்று அருளிச்செய்கிறார்.

தத்துவம்-தத்துவங்களுடைய, அறுநான்கோடு-சதுர்விம்சதியோடே, தனி-அத்விதீயனை, இறை-ஈசவரன்,இன்றி நின்ற ஆகாதேயிருக்குமவனை, ப்ரக்ருதி மஹதஹங்காரேந்த்ரிய தந்மாத்ரபூதரூப சதுர்விம்சதிகுண தத்வேப்ய: பரமபுருஷாச்ச விலக்ஷணனை வென்றபடி. இங்குத்ரிகுண வைலக்ஷண்யகதநம் புத்திகால சுத்தஸத்வ வைலக்ஷண்யத்துக்கு மூபலக்ஷணம் இங்கு ப்ரணவாந்த்ய மகாரத்தை 'மந அவபோதநெ' என்கிற தாதுவிலே கர்த்தரி ல்யுட்ப்ரத்ய யாந்தமாக வ்யுத்பன்னமாக்கி ஜ்ஞாநாஸ்ரயபரமாகயோஜிக்கும்போது அசேதநவ்யாவ்ருத்தியும் மஸபரிமானேயென்கிற பரிமாண ஸாமாந்யார்த்தக தாதுவிலே நிஷ்பன்னமாகி, வாலாக்ரசதபாகஸ்ய, இத்யாதி ப்ரமாணாநுகுண்யேந பரிமாண விசேஷத்திலே விஸ்ரமிப்பித்து அணுபரிமாண பரமாக யோஜிக்கும்போது ஈச்வர வ்யாவ்ருத்தியும் ஸித்திக்குமென்று சருதலாலே ஜீவனுக்கு பயவ்யாவ்ருத்தி சொன்னபடி. சித்தினை - ஜீவனை, என்றும்-ஒருக்காலும்,உணராது-அறியாதே,திரள்-அங்கீபூதமான,தொகையாகி-மயூரபிஞ்சிகையாகி,நின்றீர்-ஸ்பஷ்டம். அசேதநேச்வரவிலக்ஷணஜீவாஜ்ஞாநேநசிர:பராண்யாதிலக்ஷண தெஹேந்த்ரிய மந: ப்ராணாதிகதம்பத்திலே யாத்மாபிமானம் பண்ணுகையாலே மயூரபிஞ்ச நிசரம்போலே சபளஸ்வரூபமாய் நின்றவர்களே யென்றுபவிதார்த்தம். மத்தனை-மகாரவாச்யனான ஜீவனை, மகாரத்தையுடையவன் மத்தன்-மகாரவாச்யனென்றபடி. இத்தால் "மகாரோயம் பஞ்சவிம்ஸ:ப்ரகீர்த்தித". என்கிற தத்வ ஸாகரசம்ஹிதாவசாம் ப்ரத்யபிஜ்ஞாபிதம். தனிவிடாதே-பிரிந்துவிடா

தே,ஸமபிவ்யாஹ்ருதபூர்வபதார்த்தங்களோடே நிராகாங்க்ஷமாக்காதே யந்வயித்தெ
ன்றபடி.மையிலா-மஷீசூன்யமான, விளக்கமாக்கி-தீபமாக்கி, ஸரஸதோ துக்காஞ்ஞா
நரஹிதஸ்வயம்ப்ரகாசரூபமாக லபித்தென்றபடி.இதுமநஜ்ஞாநேஎன்கிறதாதுவிலே
பூர்வோக்தப்ரக்ரியையாலேநிஷ்பன்னமானமகாரத்தாலேபலிதமானஜ்ஞானஸ்வரூபத்
வத்தைக்காட்டினபடி.. இப்படிமகாயாத்ரார்த்தத்தையருளிச்செய்தினிமேல்பூர்வபத
ஸமபிவ்யாஹாரலப்த வாக்யார்த்தத்தையருளிச்செய்கிருர். உத்தமன்-புருஷொத்த
மனுக்கு, அடிமையான-தாஸ்யரூபமான, உயிர்நிலை-ஜீவஸ்திதியை, பகவத்தால்யாத்
மக ஜீவஸ்வாபாவிகாரத்தை யென்றபடி. உணர்மினீர் - அநுஸந்தியுங்கள். (ரு)

மூ.—தனதிவையனைத்துமாகத் தானிறையாகுமாயன்
உனதெனுமுணர்த்திதாராதுமக்கு நீருரிமையுற்றீர்
எனதிவையனைத்தும்யானே யிறையெனுமிரண்டுதீர
மனவெனுமிரண்டின்மாறு வல்வினைமாற்றுவீரே. (சா)

இப்படி விலக்ஷணாத்மஸ்வரூப ஜ்ஞாநம் பிறந்தாலும் தனக்கும் நிருபாதிக சே
ஷித்வ ஸ்வாந்த்ர்யங்களுண்டென்கிற ப்ரமம் கழியாதபோது அநந்ய சரணத்வம்
ஸித்தியாமையாலே தாத்ருசப்ரமாந்தரைக்குறித்து நமச்சப்தத்தை பதத்வயமாக்கி
வ்யத்யயேநாந்வயித்து ததார்த்தத்தை யனுஸந்தியுங்கொளென்கிருர்.

இவையனைத்தும் - இந்தஸகலவஸ்துக்களும், தனதாக-தனக்கேசிதவ்யங்களாக,
தான்-ஸ்வயம், இறையாகும்-ஈச்வரனுமவனை மாயன் ஆச்சர்யஸ்வபாவ்ன இங்கு
ஈச்வரனுக்கு ஆச்சர்யஸ்வபாவமாவது யதாவஸ்தி தேசெசிதவ்யஸ்வபாவ திரோதாந
ஸாமர்த்யம். உனது-உங்களது, எனுமூர்த்தி-என்கிறஜ்ஞானத்தை, தாராது-கொ
டாதேயிருக்கச்செய்தே, நீர்-அஜ்ஞாதநமச்சப்தார்த்தரானநீங்கள், உமக்கு-உங்களு
க்கு, உரிமை - பாரதந்த்ர்யத்தை. அதீநச்வத்தை என்றபடி. உற்றீர் - அடைந்தீர்
கள், ஸர்தநியந்தாவானவன் ஸ்வாஜ்ஞா ரூபசாஸ்த்ர முகத்தாலேஜீவாநாம்நிருபாதிக
சேஷித்வ ஸ்வாதந்ர்யங்களை நிஷேதிக்கச் செய்தே தத்விருத்தமான சேஷத்வாபி
மாநத்தையும் ஸ்வாதந்த்ர்யாத மாநத்தையுப் அடைந்திகோள் என்றபடி. மனவெ
னும் - மனவென்கிற, இரண்டின் - பதத்வயத்திஞல், இவையனைத்தும்-இந்த ஸகல
வஸ்துக்களும், தேஹேந்த்ரிய பார்யாபுத்ர பசுக்ஷேத்ராதி வஸ்துக்களெல்லாமெ
ன்றபடி. எனது - மதீயங்கள் நிருபாதிக மச்சேஷ பூதங்களென்றபடி. யானே -
நான்தானே, இறை - ஈச்வரன்: ஸ்வதந்த்ர னென்றபடி, எனும் இரண்டு - என்
கிற வபிமாநத்வயமும், தீர - நசிக்கவே, - நமச்சப்தத்தை பதத்வயமாகச்சேதித்து
மஃ ந என்றந்வயித்து மஃ என்கிற பாகத்தை சாந்தசப்ர க்ரியையாலே லுப்த பூர்
வோத்தர பாக மகாரமாத்ரமாக்கி ஷஷ்ட்யந் தாஸ்மச்சப்தமாக்கி யத்தோட கிஞ்
சித் என்றும் ஸ்வாதந்த்ர்ய மென்றும் பதத்வயத்தை அத்யாஹரித்து மஃ - கிஞ்சித்
ப்ரதி ஸ்வாதந்த்ர்யம் ந - என்று யோஜிக்கும் போது எனக்கு நிருபாதிக சேஷமொ
ன்றுமில்லை - நான் ஸ்வதந்த்ரனு மல்லேனென்றுபோதம் பிறக்கையாலேபூர்வோ
க்த ப்ரமத்வயமும் நிவ்வித்தமாகிறதென்று நிர்களிதார்த்தம். இத்தால்நமச்சபதத்து
க்கஹிர்புத்ந்யம்ஹிதோக்த ஸூக்ஷ்மயோஜனையைக் காட்டினபடி. மாறு - நித்யமாக
ப்ரவாஹரூபேண அநுவர்த்திக்கையாலே நித்யங்களான, வல்-த்ருடங்களான,தத்வ
ஜ்ஞாநேதர துர்நிராஸங்களான வென்றபடி. வினை-கர்மங்களை, மாற்றுவீர்-போக்கு
ங்கள். (சா)

மூ—அழிவிலாவுயிர்கட்கெல்லா மருக்கனையழியாவீசன்
வழியலாவழிவிலக்கு மதியெழாமயமூர்த்தி
வழுவிலாதிவையனைத்தும் வயிற்றில்வைத்துமிழ்ந்தமாலை
நழுவிலாநாரவாக்கி ஞடிநீர்நணுகுவீரே.

இப்படி ப்ரணவ நமச்சப்தார்த்தஜ்ஞாநம் பிறந்தாலுமீச்வரனுக்கு ப்ராபகத்
வோபயுக்த காரணத்வ நியந்த்ருத்வாதிகளையுதி ப்ராப்யத்வொபயுக்த நித்யத்வ சுபா
ச்ரயவைசிஷ்ட யாதிகளையு மறியாத போது பூர்வொக்த.........நார சப்தார்த்தத்தை
யறியுங்கோளென்கிருர்.

அழிவிலா - நாசரஹிதமான, உயிர்கட்கெல்லாம், ஸர்வாத்மாக்களுக்கும், மதி-
ஜ்ஞாநமானது, எழ - உதிக்கும்படி, அருக்கனை-ஸூர்யவத் ப்ரகாசகனையென்றபடி
வழியலா - ஸன்மார்க்கமாகாத, வழி - மார்கததில் நின்றும் விலக்கும் நிவாரணம்

பண்ணுமவனுன: ஸ்வரூபதோ விகார ரஹிதனுன சேதனனுக்கு" ததாமி புத்தியோகந்தம் யேநமாமுபயாந்திதே" என்கிறபடியே ஸம்யக்ஜ்ஞாநப்ரதானத்தாலே யநுசித மார்க நிவர்த்தகரான வென்றபடி. இங்கு ஜீவாநாம் நித்யத்வ பஹுத்வகதநத்தாலே "நாரஸ்திதி ஸவஂ வஂஸஂ ஸஂஹஃ வரிகீதிஂதஃ। நாரா-நாராணாஂஸஂவாதஃ" இத்யாதி ப்ரமாணநுஸாரத்தாலே ஸமூஹார்த்தகாண் ப்ரத்யயாந்தமான நாரசப்தத்தில் ப்ரக்ருதிபூதமான நரசப்தத்தை - "ரிஷயெ" என்கிற தாதுவிலே - கர்த்தரிட ப்ரத்யயாந்தமாக வ்யுத்பன்னமாக்கி நசப்தத்தோடே நகநைகாதிவத்நஸமாஸமாக்கி ஜீவபரமாக்கி இத்தாலே ஜீவாநாம் க்ஷயராஹித்யம் ஸித்திக்கும் என்கிற பக்ஷமும் ஈச்வரனுக்கு நியந்த்ருத்வ கதநத்தாலே நரசப்தத்தை "நீஞ் நயெ" என்கிற தாதுவிலே பசாத்யஜந்தமாக வ்யுத்பன்னமாக்கி பரமாத்மபரமாக்கி, அத்தாலே நியந்த்ருத்வம் ஸித் மென்கிறபக்ஷமும் பரிக்ருஹீதமாய்த்து. அழியா - நசியாதவனுன, ஈசன் - ஈச்வரனுன, இத்தால் ப்ராகுக்த ப்ரதமபக்ஷ ரீத்யா வ்யுத்பன்னமான நரசப்தத்தை பரமாத்மபரமாக்கி யத்தா லவனுக்கு க்ஷயராஹித்யம் ஸித்திக்கு மென்கிற பக்ஷ மனுக்ருஹீதமாய்த்து. மாய - ஆச்சர்யாவஹமான, மூர்த்தி - விக்ரஹத்தை யுடையவனுன "தஸ்ய ... " என்றபடியே விலக்ஷண ஸன்னிவேச விக்ரஹசாலியானவென்றபடி. இதுமற்றும் அபேக்ஷித குணதி வைசிஷ்ட்யத்துக்குமுபலக்ஷணம். இத்தால்நாரசப்தத்தை "நரஸம்பந்தினோ நாராஃ" இத்யாதி ப்ரமாணநுஸாரேணபரமாத்மபரநரசப்தப்ரக்ருதிக ஸம்பந்தஸாமாந்யார்த்தகாண்ப்ரத்யயாந்தமாகயோஜிக்கிறத்தாலே பரமாத்மஸம்பந்தித்வேந ப்ரமாணஸித்தங்களான குணவிக்ரஹாதிகள்லபிக்குமென்கிறபக்ஷப் ப்ரகடிதமாய்த்து. இவையனைத்தும்-இந்த ஸகல வஸ்துக்களையும், வழுவிலாது-சகலிதங்களாகாதபடி,வயிற்றில்-இதரத்தில்,வைத்து-நிவேசித்து, உமிழ்ந்த - உத்கிரணம பண்ணினவனுன, மாலை-ஸ்வாமியை,ப்ரளயகாலத்திலே ஸகல வஸ்துக்களையும் ஸ்வரூபைக தேசத்திலே யடக்கி ரக்ஷித்து ஸ்ருஷ்டி காலத்திலே யதோசித ஸ்ருஷ்டிகர்த்தாவான ஸர்வஸ்வாமியை யென்றபடி. இதுக்கு நாடி யென்கிறத்தோ டந்வயம். இத்தால் நார சப்தத்தை "நராஜ்ஜாதாநி தத்வாநி நாராணி" என்கிறப்ரமாணநு ஸாரேண ஜாதார்த்த காண் ப்ரத்யயாந்தமாக்கி யத்தாலே ஈச்வரனுக்கு ஜகத்காரணத்வம் ஸித்திக்கு மென்கிறபக்ஷம்ஸ்புடீக்ருதமாய்த்து, நழுவிலா-விச்லேஷ மில்லாத, ஸமாஸ தசாபன்னமான வென்றபடி.- நாரவாக்கில் - நாரசப்தத்திலே, நாராயணசப்தாத்மக ஸமாஸாந்தர்கதமானநாரசப்தத்திலே யென்றபடி. நாடி - அந்வேஷித்து, ஸாவதாநரா யனுஸந்தித்து என்றபடி. நீர் - லப்தஜ்ஞாநரான நீங்கள், நணுகுவீர் - ஆச்ரயிக்கக்கடவீர்கள். (எ)

மூ—வயனமொன் றறிந்துரைப்பார் வன்கழல்வணங்கவெள்கி
நயனமுள்ளின் றிநாளு நள்ளிருணண்ணிநின்றீர்
அயனமிவ்வனைத்துக்குந்தானவை தனக்கயனமென்றப்
பயனுமாய்ப்பதியுமான பரமனைப்பாடுமினீரே. (அ)

இப்படி நாரசப்தார்த்தஜ்ஞாநம்பிறந்தாலும் பஹிர்வ்யாப்தி ஜ்ஞாநமில்லாத போது குலாலாதி விலக்ஷணகாரணத்வமும் அந்தர்வ்யாப்திஜ்ஞாநமில்லாதபோது நிருபாதிக விலக்ஷண நியந்த்ருத்வமும் துர்போத மாகையாலே தாத்ருசவ்யாப்தித்வய ஜ்ஞாந ரஹிதரைக்குறித்து அயநசப்தத்தோடு நாரசப்தத்துக்குள்ள தத்புருஷ பஹுவ்ரீஹி ஸமாஸார்த்தங்களையும்அயனசப்தமாத்ரார்த்தங்களையும்உபதேசிக்கிருர்.

வயனமொன்று-ஒருவசநத்தை, ஒருசாஸ்த்ரத்தை என்றபடி. அறிந்து - நிரூபித்து,உரைப்பார்-சொல்லுமவருடைய, ஸத்ஸம்ப்ரதாயத்தாலே சாஸ்த்ரார்த்தத்தை விசதீகரித்து உபதேசிக்குமாசார்யருடைய வென்றபடி. வன் - த்ருடங்களான, ஆச்ரிதரைக் கைவிடாதவையான வென்றபடி. கழல்-திருவடிகளை, வணங்க - ப்ரணிபதிக்க, வெள்கி - லஜ்ஜித்து, குருபஸதநாதி ப்ரதிபந்தக துர்மானத்தாலே யென்றபடி. நாளும் - ஒருகாலத்திலும், உள்நயநமின்றி - அந்தர்த்ருஷ்டியில்லாதே, நள் - த்ருடமான, இருள்-அந்தகாரத்தை, நண்ணி நின்றீர்-அடைந்திருந்தவர்களே,பரமா

த்மாவினுடையவந்தர்வ்யாப்த்யாதி ஜ்ஞாநமில்லாமையாலேகாடாந்தகாரமோஹிதர் களே யென்றபடி. தான்-விபுத்வாதி விசிஷ்டனுனதான், இவ்வனைத்துக்கும் - இந்த ஸகலங்களுக்கும், "நரஸம்பந்திநோ நாரா:" என்கிறபடியே நாரசப்தார்த்தத்வேந பூர்வோக்தங்களான சேதநாசேதநாத்மக ஸகல வஸ்துக்களுக்கு மென்றபடி. அயநம் - ப்ராப்யமான, ப்ரவேச்ய னென்றபடி. ஸகலமு மவனுடைய ஸ்வரூபைக தேசத்திலேப்ரவேசித்தடங்கிக்கிருக்குமென்றுபலிதார்த்தம். "இண்கதௌ" என்கிற தாதுவிலேயாதல் அபகதா வென்கிறதாதுவிலே யாதல் கர்ம ல்யுடந்தத்வேந வ்யுத்பன்னமாய் வ்யாப்யபரமான வயநசப்தத்தோடு நாரசப்தத்துக்குள்ளதத்புருஷ ஸமாஸத்திலே ஸித்தையா பைஹிர்வ்யாப்தியைக் காட்டினபடி. அவை. அந்த ஸகலவஸ்துக்களும், தனக்கு-ப்ரதிகாதாநர்ஹ ஸ்வபாவனுன தனக்கு, அயனம்-வ்யாப்யங்கள், ப்ரவேச்யங்களென்றபடி. என்ற - என்றுசொல்லும்படியான, இத்தா லுக்தரீத்யா நாரசப்தத்துக்கும் வ்யுத்பன்னமானவயநசப்தத்துக்கு மூள்ளபஹுவ்ரீஹிஸமாஸஸித்தையான வந்தர்வ்யாப்தியை வெளியிட்டபடி. ஆகஇரண்டு ஸமாஸங்களாலும் "யச்ச கிஞ்சிஜ்ஜகத்ஸர்வம் த்ருச்யதே ச்ரூயதேऽபி வா । அந்தர்பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:" என்றதுபலிதம்பயனுமாய்-பல்முமாய்,இத்தால் அயநசப்தத்தைப்ராப்யபரமாகயோஜிந்தபடி. பதியுமான-ஆதாரமுமான, இத்தால் அயநசப்தத்தையதிகரண ல்யுடந்தமாக யோஜித்தபடி. பரமனை. பரமபுருஷனை, பாடுமினீர் - காநம் பண்ணுங்கோள், நாராயணசப்தத்தாலே யர்த்தாநுஸந்தான பூர்வகமாக கீர்த்தியுங்கள் என்றபடி.

மூ—உயர்ந்தவருணர்ந்தவாற்று லுகந்தகுற்றேவலெல்லாம்
அயர்ந்துநீரைம்புலன்கட் கடிமைபூண்டலமருகின்றீர்
பயர்ந்திவையனைத்து மேந்தும்பரமனார்நாமமொன்றில்
வியந்தபேரடிமைதோற்றும் வேற்றுமைவேவுவீரே. (கூ)

இப்படிஜீவபரமாத்மஸ்வரூப ஸ்வபாவ தத்வஜ்ஞாநம் பிறந்தாலும் ஸ்வரூபோசித புருஷார்த்த ஜ்ஞான மில்லாதபோது ததுபாய ப்ரவ்ருத்தி கூடாமையாலே ததநபிஜ்ஞரைக் குறித்து பகவன் னித்ய சைங்கர்யாக்ய மகாபுருஷார்த்த பரையான நாராயணபதோத்தர சதுர்த்தியை பர்யாலோசியுங்கோ ளென்கிறுர்.

உயர்நதவர் - உன்னதரால், அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தத்வேந நித்யோன்னதரான ஸூரிகளாலே யென்றபடி. உணர்ந்தவாற்ருல் - ஸங்கல்பித்த ப்ரகாரத்தாலே, உகந்த - அபிலஷிதங்களான, நித்யஸூரிகளுக்கு யதாஸங்கல்ப மபிமதங்களான வென்றபடி. யத்வா : உயர்ந்தவர் - ஸர்வஸ்மாத்பரனுன ஸர்வசெஷி, உணர்ந்தவாற்ருல்-ஸங்கல்பித்தபடியே, உகந்த-பூர்வவத். பரமபுருஷ ஸங்கல்பாநுகுணயெந ஸ்வாபிலஷிதங்களான வென்றபடி. குற்றேவலெல்ல ம் - ஸர்வவித கைங்கர்யங்களையும், அலர்ந்து.விஸ்மரித்து, ஸ்வரூபோசித புருஷார்தத்தைஇகழ்ந்துஎன்றபடி. இங்குகதாசிதபி அந்த பூதமான பரமபுருஷார்த்தத்தை விஸ்மரித்ததாக நிர்தேசித்தது ஸம்ஸாரிணமபி ஸூரிமத் தாயதநக்ரமத்தாலேப்ராப்தியுண்டாகையாலேஸித்தப்ராய மென்று ஸூசநார்த்தம். நீர் - ஸாம்ராஜ்யார்ஹ ராஜகுமார ந்யாயேந பரமபுருஷார்த்த ஸ்வரூபபோக்யரான நீங்கள்,ஐம்புலன்கடகு-பஞ்சேந்திரியங்களுக்கு, அடிமை - கிங்கரபாவத்தை, பூண்டு - பூட்டிக்கொண்டு, அலமருகின்றீர் - தடுமாறிநின்றீர்கள், "வயந்துகிங்காரவிஷ்ணோ:" என்கிறபடியே ஸ்வரூபப்ராப்தமான விஷ்ணுகிங்கர பாவத்தை, த்யஜித்து "யூயமிந்திரியகிங்கரா:" என்கிறபடியே ஸ்வரூப விருத்தமான விந்த்ரியகிங்கர பாவத்தைவஹித்து,ததர்த்த வ்யாபாரங்களாலேபரிஶ்ரமித்தீர்களென்றபடி,பயர்ந்துவ்யாபித்து,இவை யனைத்தும்ஏந்தும்-இந்தஸகலவஸ்துக்களையும்தாங்குமவமான,பரமனர்-பரமபுருஷனுடைய,நாமமொன்றில் ஒருதிருநாமத்திலே, ஸகல பகவந் மூர்த்தி ஸாதாரண மாகையாலும் ஸகலவஸ்துவ்யாபகத்வப்ரதிபாதக மாகையாலும் பகவன் நாமாந்தரங்களில் காட்டில் வ்யாபகதரமான நாராயண சப்தத்தி லென்றபடி. வியந்த - விலக்ஷணமான, நிருபாதிகமான வென்றபடி. பேர்-மஹத்தரமான, உத்தராவதி ரஹிதமானவென்றபடி. அடிமை - கைங்கர்ய

த்தை, தோற்றும். போதிக்குமதான, வேற்றுமை - விபச்தியை, மெவுவீர் - ஆதரியுங்கோல், நிருபாதிக நித்ய கைங்கர்ய ரூப மஹாபுருஷார்த்தப்ரதிபாதக சதுர்த்தியைப்பரிசீலியுங்களென்றபடி. இங்கு வியந்தவென்கிற வைலக்ஷண்யகதநத்தாலே "சர்வம்பரவசந்துக்க"மிதிநியமஸ்ய கர்மாதீநமாரவச்ய விஷயத்வேந முக்திதசாபாவி நிருபாதிக கைங்கர்யஸ்ய புருஷார்த்த தாநுப்பத்தி சங்கை யில்லை யென்று ஸூசிதம். அடிமைசொல்லுமென்று ப்ரயோகியாதேதோற்றுமென்றுப்ரயோகித்தது தாதர்த்யாநுசிஷ்டையான சதுர்த்திக்கு தாதர்த்தய கார்ய பூத கைங்கர்யத்திலே லக்ஷணையென்றுஸூசநார்த்தம். சுப்விபக்தௌலக்ஷணாதிநிஷேதப்ரவாதம்மூலசைதில்யேநமந்த்ரப்ராயமாகையாலே யுபேக்ஷ்ய மென்று கருத்து.

மூ.—எண்டிசைபரவுஞ்சீரோ ரெங்களுக்கீந்தவெட்டில்
உண்டவாறுரைப்பார்போல லொன்பதுபொருளுரைத்தோம்
பண்டுநான்மறையோர்காக்குமா நிதியிவையனைத்தும்
கண்டவர்விள்ளார்விள்ளக் கருதுவார்காண்கிலாரே. (௰)

ஸர்வலோகப்ரஸித்தரான வாசார்யர்களாலே ஸார்த்த முபதிஷ்டமான மூலமந்த்ரத்திலே நாம்விசதீகரித்த இவ்வர்த்தங்கள் மஹாநிதிவ தத்யந்த கோபநீயங்களென்று கொண்டு ப்ரபந்தத்தைத் தலைக்கட்டுகிறார்.

எண்டிசை - எட்டுதிக்குகளிலேயும், பரவும் - ப்ரஸரிக்குமவையான, சீரோர் - திருக்கல்யாணகுணங்களையுடைய வாசார்யர்களாலே,எங்களுக்கு "சிஷ்யஸ்தேஹம் சாதிமாம் த்வாம்ப்ரபந்நம்" என்று ப்ரபன்னரான வெங்களுக்கு, ஈந்த - உத்தமான ஸார்த்தமாக வுபதிஷ்டமானவென்றபடி, எட்டில் - திருவஷ்டாக்ஷரத்தில், ஒன்பது - நவஸங்க்யாகங்களான, பொருள் - அர்த்தங்களை, அகார சதுர்த் யுகார மகார நமச்சப்த நாரசப்தாயநசப்த சதுர்த்தி களுடைய வர்த்தங்களை யென்றபடி. இங்கு உகாரத்துக்கு யோஜநாபேதே நார்த்த த்வய முண்டாகையாலே நவஸங்க்யாபூரணங் கண்டுகொள்வது. நமச்சப்த நாராயண சப்தாயந சப்தங்களுக்கு யோஜநாபேதேநார்த்தபேத முண்டேயாகிலு மவைத்துக்கு ப்ரயாஸபேத மில்லாமையாலே ப்ரதக்பரிகணநம் பண்ணுதொழிந்தபடி. உண்டவாறு - அநுபவித்தபடியே, உரைப்பார்போல-ப்ரதிபாதிக்குமவர்போல, உரைத்தோம்-ப்ரதிபாதித்தோம். ஸ்ருதிசிரோகுண்யங்களானவர்த்தங்களை ஆசார்யோபதேசத்தாலேயநுபவபர்யந்தமாகவறிந்துஅநுபூதவெளங்கி கார்த்தகதநம் பண்ணுமாப்போலே விசதமாக ப்ரதிபாதித்தோ மென்றபடி. பண்டு-ப்ராசீநங்களான. நான்மறையோர் - நாலுவேதங்களுடையவர்களாலே, ஸகல வேத ஸார வேதிகளாலே என்றபடி. காக்கும் - ரக்ஷிதமான, மாநிதி - மஹாநிதியான, மஹாநிதிவத் தைர்கோபாயிதங்களான, இவையனைத்தும் - இந்தஸகலார்த்தங்களையும், கண்டவர் - அறிந்தவர், விள்ளார் - ப்ரகாசிப்பியார்கள், லோகத்திலே நிதிலபித்தால் கோபிக்கு மத்தனை போக்கி ப்ரகடீகரிக்க விரகில்லை யிறே. விள்ளக்கருதுவார் - ப்ரகாசிப்பிக்க நினைக்குமவர்கள், காண்கிலார் - காணமாட்டார்கள், மந்த்ரப்ரகாசந ப்ரவ்ருத்தருக்கு மந்த்ரார்த்தம்நெஞ்சில்படவேயில்லை யென்றுஅறிதியிடலாவ தென்றபடி.

உபயவேதாந்தாசார்யாணாம்......ஸ்ரீமத்தாம் । ஸர்வதந்த்ரஸ்வதந்த்ராணாம்

மாயாவாதிவரூதிநீ வாரணவிதீர்ணவேதாந்தாய ॥

மாநம்வேதாந்த......மாநம் ॥

ஸர்வ......ஸம் ॥

இதி ஸ்ரீமத் கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய......வேதாந்தாசார்யஸ்ய ச்ருதிஷு ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய மாயாவாதி வாரணஸ்ய க்ருதிஷு.

திருமந்த்ரச்சுருக்கு வ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:.



ஸ்ரீ

# த்வயச்சுருக்கு வ்யாக்யானம்.

ஶ்ராஹ்ய......நக்ஷா । ஸ்ரீஶ்லாக்யாத்ருஹ்ஸம்ஹ்ருஹ
ஹ்ராத்ரா விவ்ருண்ய ஶாரணவிஷஷ்ட்ரமெத்ய॥
ஶநாஜிவ்யெந்நவ......வடீஶா॥
ஶாயாஷாோ:......ஶஷிதாதிஶஜ்ஞா:॥

மூ—இன்னமுதிற்பிறந்தாளி தங்கேட்கவுரைத்தபிரான்
பொன்னருளான் மறைமௌலியிற்பூண்டவிரண்டிசைத்து
தன்னுரைமிக்கத்தனமிதெனத்தந்தவேதகத்தில
துன்னுபொருள்கள்பத்துந்தொலையாநிதியாகின்றவே. (க)

இப்படி மூலமந்த்ரத்தாலெ வ்யுத்பாதித ஸ்வரூபோபாயபுருஷார்த்தனான அதிகாரிக்கு ப்ரயமபதப்ரதிபன்ன ஸ்வரூபாநுகுணமான த்ரீதியபதோத்தர சதுர்த்தீப்ரதிபன்ன புருஷார்த்த விசேஷத்துக்கு ஸாதநத்வேந மத்யம பதார்த்த ஸாமர்த்யஸித்தமான உபாய விசேஷத்தை தத்பல சோதந பூர்வகம் ஸேதிகர்த்தவ்யதாகமாகவிசதீகரிக்கையாலும் ப்ரதமரக்ஷர த்ரிதீயபதங்களிலே ப்ரதிபன்னமான பரமசேஷிபரமப்ராப்யத்வத்தை பத்நீவிசேஷ ஸம்பந்தத்தாலே யுஜ்வலீகரிக்கையாலும் மூலமந்த்ர விவரண பூதமாய் அஷ்டாக்ஷரோபதேச்ய மந்த்ரத்வ ஸாதர்ம்யத்தாலே மூலமந்த்ர ப்ரத்யாஸன்னமாய்பகவத்பாஷ்யகாரராலே ஸ்ரீமத்கத்யத்திலே ச்சாயயாவ்யாக்யாதமானஸ்ரீமத்த்வயாக்ய ப்ரபத்திகரணமந்த்ரத்திலுடைய ஸாரார்த்த தசகத்தைகாதா தசகத்தாலே ஸங்க்ரஹிக்க ப்ரவ்ருத்தராய் ப்ரதமம் ப்ரக்ருதமந்த்ரத்துக்குச்வேதாச்வதரஶ்ருத்யாதிப்படியேப்ராவ்ருத்திமந்த்ராந்தராபேக்ஷயாவைலக்ஷண்ய ஜ்ஞாபநார்த்தமாகவும் யேநகேநாபி ப்ரகாரேண த்வய வக்தா த்வம், என்றும் ‘த்வய மர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதைவம் வக்தாத்வம்’ என்றுஞ்சொல்லப்பட்ட மந்த்ர ததர்த்த விஷயக நிஷ்கம்ப நிஷ்டா ஸித்த்யர்த்தமாகவும் கடஶ்ருதி பகவச்சாஸ்த்ராதிஸித்தமான விம்மந்த்ர மாஹாத்ம்யாதிசயத்தையும் ஸதாசார்யோபதேச பரம்பராகதங்களான ததர்த்தங்களுடைய கௌரவ போக்யதயாதிசயங்களையும் ஸ்புடீகரிக்கிறார்.

இன்னமுதில்-போக்யமான வம்ருதத்திலே, பிறந்தாள் - உத்பன்னையானவள், இதம்-ஹிதத்தை.கேழ்க்க-ப்ரச்நம்பண்ண, பொக்யதமாம்ருதோத்பன்னையானபிராட்டி மாத்ருத்வாவிநாபூத நிருபாதிக வாத்ஸல்யத்தாலே ஸர்வஜகத் பிதாவானவீச்வரனை துரந்த ஸம்ஸாரஸாகரநிமக்நர்களானதன் பரஜைகளுக்குத் தாரணோபாயத்தை ப்ரச்னம் பண்ண வென்றபடி. பிராட்டிக் கம்ருதோத்பன்னத்வ கதநத்தாலே போக்யத்வோத்கர்ஷ ப்ரயுக்த பதிவால்லப்யாதிசயஸ்ஸூசிதஃ, இத்தால் ஸ்ரீப்ரச்நஸம்ஹிதாவதா ரோபோத்காதமான ப்ரச்நத்தைக்காட்டினபடி. உரைத்த - உபதேசித்தவனான, பிரான்-மஹோபகாரகனாலே, ஸ்வ சரணாரவிந்த ப்ரபத்தியே ஸர்வலோக பரமஹித மென்றுஸ்ரீப்ரச்ந ஸம்ஹிதையிலே உபதேசித்த ஸர்வபரமோபகாரகபரம புருஷனாலேயென்றபடி. இதுக்குத் தந்த வென்கிறத்தோடன்வயம். இதுக்கத்யந்தபதிவல்லப ஸ்ரீகர்த்தருக ஸம்ஸாரி ஹித் ஸாமான்ய ப்ரச்நத்தை ஸ்ரீப்ரச்நஸம்ஹிதாவதார மூலத்வேந ப்ரதிபாதிக்கையாலும் தத் வக்தாவான பரமபுருஷனை மஹோபகாரகத்வேநநிர்தேசிக்கையாலு மந்தஸம்ஹிதைக்குவிஸ்ரம்பணீயத்யவாதிசயஸ்ஸூசிதஃ. பொன்னருளால் - ஸ்ப்ருஹணீய க்ருபையாலே, மறைமௌலியில் - ஶ்ருதிமௌலியிலே,பூண்ட-அனுப்ரவிஷ்டமான, இரண்டு-வாக்யத்வயத்தை, இசைத்து-சேர்த்து, ஏகீகரித்தென்றபடி. கட ஶ்ருதியிலே பிரிய வோதி சேர்த்தநுஸந்திக்கச் சொல்லி விஹிதமான விம்மந்த்ரத்திலுடைய ஸமுதாயஜ்ஞான பூர்வகஸக்ருதுச்சாரணம் ஸம்ஸார தாரக மென்கிறப்ரபாவாதிசயம் பரத்யபிஜ்ஞாபிதம். இது-இந்தமந்த்ரம்,தன்னுரை- தன்னுடையஸூக்திகளிலே,மிக்க-அதிசயிதமான, தனமென- தநமெ

ன்று, தந்த-உக்தமான, வேத வேதாந்த பகவச்சாஸ்த்ராதி ரூப ஸ்வோக்திகளிலே இம்மந்த்ரம் மஹாதநவத் அத்யந்த கோபநீய மென்று சீர்மையோடே உபதிஷ்டமாணமென்று பிண்டிதார்த்தம். இத்தால், ஸ்ரீப்ரச்ந ஸம்ஹிதையிலே வர்ணோத்தாம்ப்ரக்ரியையாலே பகவதுபதிஷ்டமான விம்மந்த்ரத்தினுடைய ப்ரபாவாதிசயஸ் ஸூசிதः- வேதகத்தில்-வேதகத்திலே. அகிஞ்சநாநுஷ்டேய ஸாங்கப்ரபதநா வேதகமான ஸ்ரீமத் த்வயாக்ய மந்த்ரத்தி லென்றபடி. துன்று-வ்யாப்தமான, தாத்ருச மந்த்ர ப்ரதிபாத்யமான வென்றபடி. பொருள்கள்பத்தும்-அர்த்த தசகமும், ஸ்ரீசப்த மதுப்ப்ரத்யய நாராயண சரண சரண சப்தஸோபஸர்கதாதூத்தம புருஷோத்தரகண்டகத ஸவிசேஷண நாரர்யண சப்த ததுத்தர சதுர்த்தீ நமச்சப்தங்களுடைய வக்ஷ்யமாணார்த்த தசகமு மென்றபடி. தொலைய - மாளாத, நிரந்தரோபயோகேப்யபரிஹீநமான வென்றபடி. நிதியாகின்ற - நீதியாயிருந்தது, நிதிவ தத்யந்த கோப்யபோக்ய மென்றபடி.

மூ.—அருவுருவானவைதன்னையடைந்திடத்தானடைந்து
வெருவுரைகேட்டவைகேட்பித்தகற்றும்வினைவிலக்கி
இருதலையன்புதனுலெம்மையின்னடிசேர்த்தருளும்
திருவுடனேதிகழ்வார்சிறந்தாரெங்கள்சிந்தையுளளே. (௨)

இனி,மந்த்ர கடகசப்தார்த்தங்களை க்ரமேன வருளிச்செய்யத்துடங்கி ப்ரதமம் "ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா: ..." என்று பகு மங்களகுண கர்ப்பத்வேநாபிஸம்ஹிதமான ஸ்ரீசப்தத்தினுடைய ஸ்ரீயதே ஸ்ரயதே ச்ருணோதி - ஸ்ராவயதி - ஸ்ரீணாதி - ஸ்ருணாதி என்று பகவத்சாஸ்த்ராதிகளிலே ஷோடா தர்சிதங்களான வர்த்தங்களை யாகாங்க்ஷித ஸமுசிதார்த்த ஸமந்வயத்தாலே பரிஷ்கரித்துக்கொண்டு அருளிச்செய்கிறார்.

அருவுருவானவை - சேதநாசேதநங்களான வஸ்துக்கள், தன்னை-தன்ஸ்வரூபத்தை, அடைந்திட-ஆஸ்ரயித்துக்கிடக்க,சேதநாசேதநங்களாலே ஆதாரத்வேநாஸ்ரீயமாண ஸ்வரூபையா யென்றபடி. ஏதேநபஹிர்வ்யாப்தி: பலிதா. இத்தால் "... ஸ்ரீணாதீவை ... நாராயணம்" என்றுதீர்க்கஸந்நியோகக்விப் ப்ரத்யாந்தமான ஸ்ரீசப்தத்தைசேதநாசேதநை: ஸ்ரீயத இதி ஸ்ரீ:, என்று 'ஸ்ரீஞ் ஸேவாயாம்' என்கிறதாதுவிலேக்ருத்யல்யுடோபஹுளமிதிபாஹுளகத்வேந கர்மணி வ்யுபந்நமாக்கி அதுக்கபேக்ஷிதமான கர்த்ருகாரகத்தையும்சேதநரூபமாக ஸ்புடீகரித்து பஹிர்வ்யாப்தி பரத்வேந விவரித்தபடி. இங்கு 'ஸ்ரயந்தேயதாமிதிஸ்ரீ:, என்று ப்ரக்ரியாகௌமுதியிலே ப்ரதர்சிதையான கர்மவ்யுத்பத்தியை,கர்த்தரிக்விப்' பிதிஸூத்ரவிரோதோத்பவாநேகப்ரௌடமனோரமையிலே தூஷித்தது. "ஸ்ரயந்தீம் ஸ்ரீயமாணாஞ்ச, ஸ்ரீயதேவாவிமேநித்யம்" இத்யாதி நிர்வசநாபரிஜ்ஞாந மூலமாகையாலே யநாதரணீய மென்று கண்டுகொள்வது. தான் - ஸ்வயம், அடைந்து - ஆஸ்ரயித்து, அந்தர்வ்யாபித்தென்றபடி., சேதநாசேதநங்களை யிதிசேஷः. இத்தா லுக்தரீத்யா நிஷ்பந்நமானஸ்ரீ சப்தத்தை ஸ்வரஸத: கர்த்தரி வ்யுத்பன்னமாக்கி யவிக் கபேக்ஷிதமான கர்மகாரகத்தையம் சேதநாசேதந ரூபமாக ஜ்ஞாபித்து அந்தர்வ்யாப்திபரமாக யோஜித்தபடி. தத் புருஷ பஹுவ்ரீஹி ஸமாஸத்வயா பன்னமான நாராயண சப்தம் போலே கர்மகர்த்ருத்வயா பன்னமான ஸ்ரீசப்தமும் பஹிரந்தர்வ்யாப்தி பரமாகலா மென்றுகருத்து. ஆகையாலிறே பகவத்பாஷ்யகாரரும் ஸ்ரீமத் கத்யத்திலே யகவந்நாராயண வென்று பக்ம்மித்த நேரிலேபகவதீம் ச்ரியம் என்று ப்ரயோகித்தருளினர். ஆகையாலிறே ஸ்ரீயதே ஸ்ரயதே என்கிறவ்யுத்பத்தித்வயத்திலே ஸம்பாவித யோஜநாந்தராபேக்ஷயா இந்தயோஜனையே ப்ரதாநமாகிறது. வெருவுரை-பயோக்திகளை, கேட்டு-ஆகர்ணித்து, சோகஸாகரநிமக்நரான ஸம்ஸாரிகளுடைய வார்த்தசப்தத்தைத் கேட்டென்றபடி. இத்தால் ஸ்ரணோதிதிஸ்ரீ: என்று ஸ்ருஸ்ரவணே யென்கிறதாதுவிலே ப்ருஷோதராதித்வேந ஸாதுவாக நிஷ்பன்னமாக்கி யதுக்கபெக்ஷிதமான கர்மகாரகத்தையும் ஸமர்பித்து யோஜித்தபடி. அவை - அந்தபயோக்திகளை, கேழ்ப்பித்து-ஸ்ரவணம் பண்ணிவித்து, ஈச்வரனுக்கிதிசேஷ:. தன்னலேஸ்ருதமான ஸம்ஸாரிகளுடைய வார்த்தசப்தத்தையீச்வரனுக்குஸ்ரவிப்பித்தென்றபடி. இத்தால் ஸ்ரணோதியை யந்தர்பாவிதண்ய

ர்த்தமாக யோஜித்தபடி. அகற்றும் - விச்லேஷிப்பிக்குமவையான, வினை-கர்மங்களை விலக்கி-நிவர்த்திப்பித்து, பகவச்சரணாரவிந்த ப்ராப்தி ப்ரதிபந்தகத்வேந ஸம்ஸார சக்ர பரிப்ரம சரங்களான வனாதிகால ஸஞ்சித கர்மங்களை "வேரிமாருதபூமேலிருப்பாள் வினைதீர்க்கு" மென்கிறபடியேநிச்சேஷமாகநிவர்த்திப்பித்தென்றபடி. இத்தால் ஸ்ரீசப்தத்தை ஸ்ருணாதிநிகிலாந்தோஷாந் இத்யாதிப்ரமாணாநுஸாரேண ஸ்ருஹிம்ஸயா மென்கிறதாதுவிலே ப்ருஷோதராதித்வேந ஸாதுவாக நிஷ்பன்னமாக்கி யதுக்கபேக்ஷித ப்ரமாணிகார்த்த ஸமர்பணத்தாலே பரிபூரித்தபடி. இருதலை - உபய கோடிகளிலும், சேஷிவிஷயத்திலும் சேஷவிஷயத்திலுமென்றபடி. அன்புதனால் - ப்ரேமத்தாலே, எம்மை-நித்யஸம்ஸாரிகளான நம்மை, இன்னடி - போக்யங்களான திருவடிகளை, பகவச்சரணாரவிந்தங்களை யென்றபடி சேர்த்தருளும் - அடைவிக்குமவளான, சேஷசேஷணோ: பரஸ்பராலாப ரூபமான வவத்யம் கழியும்சலி இருவ்வரையும் ஸங்கடிப்பிக்குமவளான வென்றபடி. சேதநருக்கு அபவர்க பர்யந்த குணபரிபாகத்தை யுண்யாக்கு மவாளன வென்றுபலிலார்த்தம். இத்தால் ஸ்ரீசப்தத்தை ஸ்ருணாதிசகுணைஜக்த் என்கிற ப்ரமாணாநுஸாரேண ஸ்ரீஞ்பாகே என்கிறதாதுவிலேகர்த்தரிக்வி பந்தமாக நிஷ்பன்ன மாக்கி யபேக்ஷிதார்த்தோபஸ்தாபகஜதாலே பரிஷ்கரித்தபடி. திருவுடனே-பெரியபிராட்டியோடே, திகழ்வார்- ப்ரகாசிக்குமவரான, பேரருளாளர் எங்கள் - எங்களுடைய, சிந்தையுள்ளே - சிந்தாப்யந்தரத்திலே, சிறந்தார் - விஜ்ரும்பித்தார். ஸ்ரீசப்த கர்பித கல்யாணகுணவிசிஷ்டையான பிராட்டியோடே கூட ஹ்ருதயங்கமரானாரென்றபடி. (உ)

மூ.—ஒருயிராய் நின்ற வொண்சுடரின்பவுருத்தனிலும்
பேருருவத்திலும்பின்னதிற்றோற்றுமுருக்களிலும்
ஒருருவானவுலகிலுமேற்குமுருக்களினால்
சேருதன்மன்னுசெய்யாளன்பர்நம்மனஞ்சேர்ந்தனரே. (௩)

இப்படி ஸ்ரீசப்தார்த்தங்களை நிர்வசித்தினிமேல் "சாந்தாநந்த மஹாவிபூதி பரம்யத்ப்ரஹ்மரூபம் ஹரே:மூர்த்தம்ப்ரஹ்மததோயிதத்பரியதரம்ரூபம்யதத்யத்புதம் யாந்யந்யாநி யதாஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி தாந்யாஹு:ஸ்வைரநுரூபரூபவிபவைர்காடோப கூடாநிதோ" என்கிற ச்லோக ப்ரதர்சித நித்யயோக மதுப்ப்ரத்யயார்த்தத்தை யருளிச்செய்கிறார்.

ஒருயிராய்நின்ற-ஏகாத்மாவாயிருந்த, ஸகலஜகதேகாந்தர்யாமிபூதமான வென்றபடி. இத்தால் ஸர்வவஸ்துஸாமாநாதிகரண்யார்ஹத்வம் பலிக்கையாலே த்ரிவிதபரிச்சேதபாஹித்ய ரூபாநந்த்யாந்தர்கத வஸ்து பரிச்சேத ராஹித்யமுகேநா நந்த்யமுபலக்ஷிதமாகிறது. ஒண்-உஜ்வலமான, ஸத்தைகரூபமான வென்றபடி. சுடர்-ஜ்யோதிராத்மகமான, ஜ்ஞாநாத்மகமான வென்றபடி இன்ப-ஆநந்தரூபமான,அநந்தத்வஸத்யத்வ ஜ்ஞாநத்வா நந்தத்வவிசிஷ்டமானவென்றுபிண்டிதார்த்தம். இது ஹெயப்ரதிபடத்வ ரூபா மலத்வத்துக்கு முபலக்ஷணம். உருத்தனிலும் - ரூபத்திலேயும், ஸ்வரூபநிரூபக குண பஞ்சக நிரூபிதமான திவ்யாத்ம ஸ்வரூபத்திலேயுமென்றபடி. இதுக்கு ச்சேருதலோடந்வயம். இப்படி மேலுங்கண்டுகொள்வது. பெரு-மஹத்தரமான,உருவத்திலும்-ரூபத்திலேயும், "ஸமஸ்தாச்சக்தயச்சைதாந்ருபயத்ரப்ரதிஷ்டிதா: தத்விஸ்வரூபவைரூப்யம் ரூபமந்யத்தரோமஹத்" இத்யாதி ப்ரமாண ப்ரதிபன்னமான பரமவ்யோம-வர்த்ய பரவிக்ரஹத்திலேயுமென்றபடி. பின்-அநந்தரம், அதில்-அந்த பர விக்ரஹத்தில்நின்றும், தோற்றும்-ப்ராதுர்பவிக்குமவையான, உருக்களிலும்-ரூபங்களிலேயும், வ்யூஹவிபவாதிரூபங்களிலு மென்றபடி.ஒருருவான - ஏகரூபமான, திவ்யதம்பதி சேஷதை ரூபமானவென்றபடி. உலகிலும்-லோகத்திலேயும், தேவதிர்யங்மனுஷ்யாத்மக ப்ரபஞ்சத்திலேயுமென்றபடி. ஏற்கும்-அநுரூபங்களான, உருக்களினால் - ஸ்வரூபங்களாலே,இங்குஉருவென்கிறபதம் ஸ்வரூபவிக்ரஹஸாதாரணம். சேருதல்-ஸம்ச்லேஷத்திலே, மன்று-ஸ்திரையான,ஸ்திரஸம்ச்லேஷையான வென்றபடி. ஈச்வரனுடையஸ்வரூபத்திலும் பரவ்யூஹவிபவார்ச்சாந்தர்யாமிரூபசுத்தஸத்வமயாத்வாரக விக்ரஹங்களிலும்,தேவதிர்யங் மனுஷ்யாதிபும்வ்யக்திரூபகுணத்ரயபஹுளசேதநாந்தரவ்யவதாநஸஹிஷ்ணு விக்ரஹங்களிலும்தத்தநுசிதஸ்வரூப விக்ரஹங்களாலேநித்யஸம்ச்லிஷ்டையானவென்றபடி. பகவத்ஸ்வரூபத்திலேதது

ரூபஸ்வரூபத்தாலும்' தத்விக்ரஹங்களிலே ததநுரூப விக்ரஹங்களாலும் நித்யஸம்ச்விஷ்டையான வென்று பலிதார்த்தம். இங்கு லக்ஷ்மீ ஸ்வரூபத்துக்கு பகவத் ஸ்வரூபாநுரூப்யமானது 'நித்யம் தத்தர்மதர்மிணீ' யதாஸாவகதோவிஷ்ணுஸ்ததைவேயம் த்விஜோத்தமா:' இத்யாதி ப்ரமாண சதப்ரதிபன்னமானசாந்தத்வாநந்தத்வமஹாவிபூதித்வ பரத்வ நிரதிசய ப்ருஹத்வ ப்ருஹ்மணத்வாதிபகவத்கத பூயஸ்தரதர்மபாக்த்வ ரூப ப்ரக்ருஷ்டஸாத்ருச்யமென்று ஸ்ரீமத்ப்ரதுகத்ய சதுச்லோக்யதிகாரங்களிலே தாமே யருளிச் செய்தாரிறே. விபுத்வய ஸம்யோகம் கூடாதென்கிற வைசேஷிகாதி ப்ரவாதம் மந்த்ரபாட ப்ராயத்வேநாஸ்ரத்தேய மாகையாலும் ப்ரத்யுத ஸ்ரீமந்ந்யாயஸித்தாஞ்ஜநாதி க்ரந்தங்களிலே விபூநாம் நித்யஸம்யோகம் ப்ரயத்நேந ஸமர்த்திதமாகையாலும் விபுவான பகவத்ஸ்வரூபத்திலேதாத்ருச லக்ஷ்மீஸ்வரூபத்துக்கு ஸம்ச்லேஷம் சொன்னது விருத்தமன்று லக்ஷ்மீ விக்ரஹத்துக்கு பரவிக்ரஹாநுரூபயமாவது "நித்யைவைஷாஜகன்மாதாவிஷ்ணோஸ்ரீரணபாயிநீ" இத்யாதிப்ரதிபன்னமான ஸததைகரூபத்வாதிகம். வ்யூஹவிபவாத்யாநுரூப்யமாவது 'தேவத்வேதேவதேஹேயம்மனுஷ்யத்வேசமாநுஷீவிஷ்ணோர்தேஹாநுரூபாம்வைகரோத்யேஷாத்மநஸ்தநும்' 'ராகவத்வேபவத்ஸீதாருக்மணீக்ருஷ்ணஜந்மநி அந்யேஷுசாவதாரேஷுவிஷ்ணோரேஷாநபாயிநீ' இத்யாதிகளில்படியேஸத்ருஸம்ஸ்தாநாதிமத்வம். தேவதிர்யங்மநுஷ்யாத்யாத்ம,பும்வியக்திரூபபகவச்சரீரானுரூப்யமாவது. அர்த்தோவிஷ்ணுரியம்வாணீ' யென்றுபக்ரமித்து 'தேவதிர்யதிர்யங்மநுஷ்யேஷுபுந்நாமாபகவாந்ஹரி:! ஸ்திரீநாம்நீ லக்ஷ்மீர்மைத்ரேய நாநயோர்வித்யதே பரம்' என்று பராசர ப்ரஹ்மர்ஷி உபஸம்ஹரித்தபடியே அபிமாந விசேஷாதிஷ்டித தேவ திர்யங் மனுஷ்யாத்மக ஸ்திரீ ரூபத்வம். பகவத்ஸ்வரூபத்திலே ஸ்வரூபத்தாலும் சுத்த ஸத்வமய விக்ரஹங்களிலே தாத்ருசவிக்ரஹங்களாலும் ப்ரபஞ்சாந்தர்கதபும்வ்யக்திரூபப்ராக்ருதசரீரங்களிலே தாத்ருசஸத்ரீவ்யக்திரூப சரீரங்களாலும் நித்யசம்ச்லிஷ்டையான வென்று பிண்டிதார்த்தம். லோகத்தை யொருருவான வென்று நித்யைக ரூபமாக நிர்தேசித்தது 'ஸ்த்ரீபும்ஸாம் ஸர்வேஷாம்திவ்யலம்பதி நிரூபிதைக ஶேஷித்வ மேவ ஸ்வபாவிகம், பும்ஸாம் பகவத்விபூதித்வம் ஸீதரீணும் லக்ஷ்மீவிபூதித்வம் ரஸவிஶேஷ ப்ரயுத்த விபாக நிபந்தநம்" என்றுத்யோதநார்த்தம். இவ்வர்தத்தை "ஸாதாரண்யெஸத்யபி ஸ்வெச்சயைவ த்வேதா வில்வம் யத்விபூதிர்வ்யபாஜி" என்று தாமேயருளிச்செய்தாரிறே. செய்யாள் - ருஜுபரபருதியான பிராட்டியினிடத்திலே, அன்பர் - ப்ரேமசாலியான, ஈச்வரன், இங்கு பிராட்டியை ருஜுப்ரக்ருதித்வேந-நிர்தேசித்தது நித்யம் அஞ்சாதநிக்ரஹத்வஸூசநார்த்தம். நம்மனர் - நம்முடைய மனஸ்ஸிலே, சேர்ந்தனர் - ஸந்நிஹிதரானர். (ரு)

மூ.—காரணமாயிறையாய்க கதியாயமரும்பதியாய்
ஆரணமோது மனைத்துறவாயகலாவுயிராய்
சீரணியுஞ்சுடராய்ச் சிறந்தெங்குந்திகழ்ந்துநின்ற
நாரணனர்நமக்காய் நல்கிநாந்தொழநின்றனரே. (சு)

இப்படி மது பார்த்தத்தை யருளிச்செய் தினி நாராயண சப்ரார்த்தத்தை யருளிச்செய்கிறார்.

காரணமாய் - ஜகத்காரணபூதராய் "நராஜ்ஜாதநிதத்வாநி" என்கிறபடியேஜாதார்த்தகாண்பரத்யயாந்தமான நாரசப்தலப்தமான வர்த்தத்தைச் சொன்னபடி. இறையாய் - நியந்தாவென்றபடி - இது - அண்ப்ரத்யய ப்ரக்ருதி பூதமான நரசப்தத்தை ந்ருநயெ யென்கிறதாதுவிலேபசாத்யசகமாக வ்யுத்பாதித்தபடி, அமரும் - ஸர்வவஸ்துக்களு மடங்கும்படியான, பதியாய் ஸ்தானமாய், இதயந சப்தத்தை யதிகரண ல்யுடந்தமாக வ்யுத்பாதித்தபடி. ஆரணம் - உபநிஷத்துக்களாலே, ஓதும் - அதீதரான, அனைத்துறவாய் - ஸகலபந்துக்களாய், "மாதாபிதாப்ராதாநிவாஸ ஶரணம்ஸுஹ்ருத்கதிர்நாராயண:" இத்யாதிஸௌபலாதிசுப்ருதிகள் சொல்லுகிறபடியே, சேதநருக்கு ஸகலவிதபந்துவாயென்றபடி. இது நாராயணசப்தாத்மகஸ மாஸாநுப்ரவிஷ்டலுப்த ஷஷ்ட்யாத்தமான ஸம்பந்தத்தை விசேஷித்தபடி. அகலாவிச் லேஷியாததான, உயிராய் - ஆத்மாவாய், இது நியந்த்ருத்வாதாரத்வ நியம்ய பலிததான வாத்ம பாவத்தை ஸ்புடீகரித்தபடி இத்தால் பஹுவ்ரீஹி ஸ

மாஸஸித்தாந்தர்வ்யாப்திः பலிதா, சீர்-கல்யாணகுணங்களாலே, அணியும்-அலங்குதமான, சுடராய்-ஜ்யோதிஸ்ஸாய், ஜ்ஞாநஸ்வரூபனென யென்றபடி, இது ஸத்யத்வாதிகளுக்கு முபலக்ஷணம். நிகரில் புகழாயென்கிறபடியே நிரூபக ஸத்யத்வாதி ஸ்வரூப நிரூபக குணங்களாலும் வாத்ஸல்ய ஸௌசீல்யஸௌலப்யாதி நிரூபித ஸ்வரூப விசேஷண குணங்களாலும், விசிஷ்டனு யென்றபடி. இது நாரசப்தத்தை 'நரசம்பந்திநோ நராः' என்கிற ப்ரமாணாநுஸாரத்தாலே யுபயத்வோபயுக்த குணபரமாக யோஜித்தபடி. எங்கும் ஸர்வத்ர, செறிந்து-வ்யாபித்து, திகழ்ந்துநின்ற, ப்ரகாசித்து நின்றவரான, இது தத்புருஷ ஸமாஸலப்யபஹிர்வ்யாப்தியை ப்ரகடீகரித்தபடி நாரணனுர்-நாராயணன், நமக்காய் - நம்முடைய ஸ்வாமியாய், நல்கி-ஸ்நேஹித்து வாத்ஸல்யத்தைப் பண்ணி யென்றபடி, நாம்-தாஸபூதரான நாம், பஹுவசநத்தா லநுபந்திபரிக்ரஹः, தொழ-ஸேவிக்கும்படி, சரண வரணம் பண்ணும்படி என்றபடி. நின்றனர் - ஸ்பஷ்டம். (ச)

மூ.—வானமர்மன் னுருவாய் வகையாலதினு லுருவாய்
மீனமதயாமைகேழன் முதலாம்விபவங்களுமாய்
ஊனமருள்ளுருவாயொளி யாதவருச்சையுமாய்த்
தேனமர்செங்கழலான் சேர்த்தனன்கழலென்மனத்தே. (ரு)

இனி சரணசப்தோபலக்ஷித பஞ்சப்ரகார திவ்யமங்கள விக்ரஹயோகத்தை யருளிச்செய்கிறுர்.

தேனமர்-மதுபரிதங்களான செங்கழலான்-அருணசரணாரவிந்தங்களை யுடையவரான ஸர்வேச்வரன், இத்தால் ததீயசரணங்களுக்கு போக்யதாதிசயோ சித்தாலம்பநஸௌகர்யம் ல்யஞ்ஜிதம் வ்வான-பரமவ்யோமத்திலே, அமர் - ப்ரதிஷ்டிதமான, மன்-த்ருடமான, நித்யமான வென்றபடி. யத்வா:சமஸ்த சக்த்யாதாரமான வென்றபடி. உருவாய்-ரூபத்தையுடையவனாய், "நித்யஸிஷெ தஜாகாரெ, ஸஹோஷக்ஷபயெஷுதா நுவயதுவஹதிஷிதாः" இத்யாதிப்ரமாணசத ஸித்தபரமவ்யோமகத நித்யஸர்வாதார பரவிக்ரஹ விசிஷ்டனு யென்றபடி. வகையால் - க்ரமத்தாலே, அதில்-அந்தபரரூபத்திலும் பன்னங்கலான, நாலுருவாய் - நாலுரூபங்களை யுடையவனாய், க்ரமேண ப்ராகுக்த பரரூபொத்பன்ன வாஸுதேவ ஸங்கர்ஷணப்ரத்யும்நாநிருந்த ரூப வ்யூஹாக்யாநிக்ரஹக விசிஷ்டனு யென்றபடி. இது மற்றுமுள்ள கேசவாதி வ்யூஹாந்தரங்களுக்கு முபலக்ஷணம். மீனம்-மத்ஸ்யம், அது - ப்ரஸித்தமான, இது பூர்வொத்தராந்தராந்வயி, ஆமை-கூர்மம், கேழல்-வராஹம், முதலாம் - இவைமுதலான, விபவங்களுமாய், விபவங்களுமாய், இதுமற்றுமுள்ள ஹம்ஸஹயக்ரீவாதி விபவாந்தரங்களுக்கு முபலக்ஷணம். ஊன்-சரீரத்திலே, அமர் - அடங்கினதாக, உள்-அந்தர்கதமான, ஸூக்ஷ்மமான வென்றபடி. உருவாய் - ரூபத்தை யுடையவனாய், அந்தர்யாமி விக்ரஹவிசிஷ்டனு யென்றபடி. ஒளியாத - திரோஹிதமாகாத, அருச்சையுமாய்-ஸர்வலோக ப்ரஸித்தார்ச்சாக்ய விக்ரஹவிசிஷ்டனுமா யென்றபடி. கழல் - ஸ்வசரணங்களை, இங்கு அனதிக்ரணீயம் ஹிசரணக்ரஹணம் என்கிறபடியே க்ருபோத்தமபகத்வம் ஸூசிதம், நம்மனத்து-நம்முடைய மநஸ்ஸிலே, சேர்த்தனன். வைத்தான். (ரு)

மூ.—வேறெருணங்குதொழும் வினைதீர்த்தெம்மையாண்டிடுவான்
ஆறுமதின்பயனுந்தந்தளிக்கு மருளுடையான்
மாறிலதாயிலகும் மதுமெல்லடிப்போதிரண்டால்
நாறுதுழாய்முடியரனமக்குச் சரணயினனே. (சா)

இப்படிசரணசப்தத்தினுடைய முக்யார்த்தத்தையும்ததுபலக்ஷிதவிக்ரஹவிசேஷங்களையும் அருளிச்செய் தினிமேல் ஸர்வம் வாக்யம் ஸாவதாரண மென்கிற ந்யாயத்தாலும்நாகணை மிசைநப்பிரான் சரணே சரணமக்கு என்கிற பாசுரத்தாலும், சரணசப்தத்திலே விவக்ஷிதமான வவதாரணத்தை த்விவசநார்த்தத்தோடேகூடஸ்படிகரித்துக்கொண்டு உபாயக்ருஹரக்ஷதாதி பஹுவர்த்த பரதயாதத்ரதத்ரப்ரயுஜ்யவான சரணசப்தத்துக்கு ப்ரக்ருதே விலக்ஷிதமான வர்த்தத்தை யருளிச்செய்கிறுர்

வேறேருர்-பகவத் வ்யதிரிக்த மாயிருப்பதொரு, அணங்கு-தேவதையை, தொழும் வினை - சேவிக்கும் கர்மத்தை, தேவதாந்தர ஸேவாபாதக கர்மங்களை யென்றபடி தீர்த்து-நிவர்த்திப்பித்து, எம்மை-நம்மை, ஆண்டிடுவான் - விநியோகித்துக்

யோகித்துக்கொள்ளுமவனுன, இது சரணுவதாரண பலிதமான தேவாந்தர வ்யவச்சேதத்தை வெளியிட்டபடி. ஆறும் - உபாயத்தையும், அதின்பயனும் - அதினுடையபலத்தையும், தந்து - கொடுத்து, அளிக்கும் - ரக்ஷிக்குமதான, அருளுடையான்- க்ருபையுடையவனுன, இது ஈச்வரன் சரணமாகும்போது க்ருபாவைசிஷ்ட்ய மாவச்யகமென்று ஜ்ஞாபனர்த்தம் விசேஷிப்பித்தபடி. நாறு - பரிமளிக்குமதான, துழாய்முடியான் - துளஸீமௌலலிகனுன வீச்வரன், மாறிலதாய் - ச்யுதி இல்லாத தாய், இலகும் - விளங்குமதான, ஆச்ரிதர்க்கு ச்யுதியில்லாதே யுல்லஸிக்குமதானவென்றபடி. மெல் - ம்ருதுவான, அடிப்போது - சரணபுஷ்பங்களுடைய, பதபங்கஜங்களுடைய வென்றபடி. இரண்டால் - யுகளத்தால், நமக்கு - ஸ்பஷ்டம். சரண் - சரணமாக, ஆயினன் - ஆனுன். (சூ)

பெறுவதுநாம்பெரியோர்பெரும்பேறெனநின்றவெம்மை
வெறுமையுணர்த்திவிலக்காதநன்னிலையாதரிப்பித்
துறுமதியாற்றன்னையொண்சரணென்னவுணர்வுதந்த
மறுவுடைமார்பனுக்கேமன்னடைக்கலமாயினமே. (எ)

இனிமேல் மஹாவிச்வாஸ ரூபஜ்ஞாநவிசேஷபர்யவஸிதமான ஸோபஸர்க தாதுவை விவரிக்கிறுர்.

நாம் - நீசரான நாம், பெரியோர் - மஹாத்மாக்களாலே, பெரும் - லப்தும் யோக்யமான, பேறு - புருஷார்த்தத்தை, பெறுவது - அடைவோம், மஹாத்ம ப்ராப்ய மோக்ஷாக்ய புருஷார்த்தம் நமக்கு வேணுமென்றபடி. என - என்று, நின்ற - வாஞ்சித்திருக்கிற, எம்மை - நம்மை, இத்தால் ப்ரபத்தி சாஸ்த்ராநுஷ்டாநோபயுக்த பலாபிருசியைச் சொன்னபடி - வெறுமை - ரிக்ததையை, ஆகிஞ்சின்யத்தை யென்றபடி. உணர்த்தி - அறிவிப்பித்து, விலக்காத - விச்லேஷிப்பியாத, நன்னிலை - நல்ல நிஷ்டையை, ஆதரிப்பித்து - அபிருசிப்பித்து, தன்னுடைய வாகிஞ்சின்யத்தையு மீச்வரனுடைய வுத்கர்ஷத்தையு மனுஸந்தித்தால் 'அம்மானுழிப்பிரானவனெவ்விடத்தான் யானுர்' என்றகலும்படி நராதமத்வாபாதகங்களான நைராச்யம் பிறவாதபடி புருஷார்த்தாபிருசியை த்ருடீகரித்தென்றபடி. உறு - த்ருடமான, மதியால் - ஞானநத்தாலே, ப்ருஹஸ்பதி ஸஹஸ்ரத்தாலும் அக்ஷோப்யமான மஹாவிச்வாஸத்தாலே என்றபடி. தன்னை - பத்நீகுண விசிஷ்டனுன தன்னை, ஒண் - உஜ்வலமான, உபாயாந்தரநிரபேக்ஷமானவென்றபடி. சரணென்ற - சரணமென்று விஷயீகரிக்கலாம்படி, உணர்வு - ஜ்ஞாநத்தை, ஸ்ரீமத் பரிகர விபாகாதிகார ப்ரதர்சித ரீத்யா மஹாவிச்வாஸ ப்ரதிபந்தக சங்காபஞ்சக நிவர்த்தகமான ஸம்பந்தகுண விசேஷஜ்ஞானத்தை என்றபடி. தந்த - கொடுத்தவனுன - மறுவுடை - ஸ்ரீவத்ஸாக்ய சிஹ்நயுக்தமான, மார்பனுக்கு - வக்ஷஸ்ஸையுடையவனுக்கே, மன் - த்ருடமான, அடைக்கலம் - ரக்ஷ்ய வஸ்துவாக, ஆயினம் - ஆனேம். (எ)

அருமறையாதுந்துறவோமென்றேயறிந்தார்கவரும்
கருமமுஞானமுங்காதலுங்கண்டுமுயலகில்லோம்
வருவதுமிந்நிலையாய்மையனுற்றவெமக்குளதோ
திருமகளார்பிரியாத்திருமாலன்றிநற்சரணே. (அ)

இப்படி ஸௌபஸர்க தாத்வார்த்தத்தை யருளிச்செய் தினி யுத்தமனில் அபிஸம்ஹிதமாய் மஹாவிச்வாஸ ப்ரதிபந்தக சங்கோத்தாபநாக்ஷமத்வென பூர்வகாதையிலே ப்ரக்ருதமான வாகிஞ்சந்யத்தை "நதர்ம நிஷ்டோஸ்மி நசாத்ம வேதீ நபக்திமான் த்வச்சரணரவிந்தெ" இத்யாத்யநுஸாரேண த்ரைகாலிக ஜ்ஞாந க்ரியா பஜந ஸம்பத் துர்பிக்ஷமாக நிரூபிக்கிறுர்.

அருமறை - துரவகாஹவேதங்களை, யாதும் - ஸகலங்களையும், துறவோம் - த்யஜியோம், என்றறிந்தார் - என்றத்யவஸித்தவராலே, கவரும் - பரிக்ருஹீதமான, ஸகல வேதார்த்தாநுஷ்டான த்ருடதர ஸூத்ரராலே சக்யாநுஷ்டானமானவென்றபடி. கருமமும் - கர்மயோகத்தையும், ஞானமும் - ஜ்ஞாநயோகத்தையும், காதலும் - பக்தி

யோகத்தையும், கண்டு-நிரூபித்து, ததிய தௌஷ்கர்யத்தை யநுஸந்தித்தென்றபடி. முயல-ப்ரவர்த்திக்க, இல்லோம்-ஸமர்த்தரல்லோம், ஸம்ப்ரதி ஸாமர்த்யமில்லையாகிலும் ஆகாமிகாலத்திலே ஸம்பவிக்குமாகி லாகிஞ்சன்யம் விகடிதயாகாதோவென்னில்; வருவது - வரப்போகிறதும், இந்நிலையாய் - இந்த அவஸ்தையாய் "அநாகதாநந்தகால ஸமீக்ஷயா ப்யத்ருஷ்ட ஸந்தா மீராபாயஃ" என்கிறபடியே யாகாமிகாலத்திலு மாகிஞ்சந்ய மநுவர்த்திக்கலாம்படியாயென்றபடி. காலத்ரயேப் யுபாயாந்தர ஸம்பாவநாகந்த விகலராயென்று நிர்களிதார்த்தம். மையல்-வ்யாமோஹத்தை 'அநாதிவாசநாரோஹாத் அநைச்வர்யாத்ஸ்வபாவஜாத் - மலாவகுண்டிதத்வாச்சத்ருக்கரியாபிஹிதிர்ஹியா - தத்கார்பண்ய' மென்கிறபடியே யாகிஞ்சன்ய மூல பூதா வித்யா வாசநாதிகளை யென்றபடி. உற்ற - ப்ராப்தரான, எமக்கு - நமக்கு, திருமகளார்-பெரிய பிராட்டியாரோடு - பிரியா - கதாசிதபி விச்லேஷியாதவரான, திருமாலன்றி - விபூதித்வய ஸ்வாமியைத்தவிர, திருசப்தம் விபூதிபரமாய் மால் சப்தம் ஸ்வாமி பரமாகையாலே புநருக்தியில்லை. நல்சரண் - நல்ல சரணம், உபாயாந்தர நிரபேக்ஷமான வுபாயமென்றபடி - உளதோ - உண்டோ, இல்லையென்றபடி. (அ)

சுருங்காவகலமெல்லாந்துளங்காவமுதக்கடலாய்
நெருங்காதனைத்துடனேநின்றநந்திருநாரணனார்
இரங்காதகாலங்களெல்லாமிழந்தபயன்பெறவோர்
பெருங்காதலுற்றினிமேற்பிரியாமையுகந்தனமே. (கூ)

இப்படி பூர்வகண்டத்தை விவரித் தினியுத்தரகண்டகத ஸவிசேஷண நாராயணபதத்தை ப்ராப்யதொபயுக்த பத்நீவிபூதி வைசிஷ்ட்ய ப்ரயுக்த நிரதிசயபோக்யதாபரமாக விவரித்துக்கொண்டு தத்பலிதமான ப்ராப்தாவினுடைய க்ஷணவிச்லேஷா ஸஹிஷ்ணு நிரதிசய ப்ரேமத்வத்தை யருளிச்செய்கிறார்.

சுருங்கா-ஸங்கோசியாததான, அகலமெல்லாம்-விஸ்தாரமெல்லாம், துளங்கா - நிச்சலமான, அமுதகடலாய் - அம்ருதஸாகரமாய், கர்மபந்ததசையில் ப்ரதிகூலங்களாகவு முதாஸீநங்களாகவும் அல்பாநுகூலங்களாகவும் தோற்றின ப்ரபஞ்சாந்தர்கதங்களான ஸகலவஸ்துக்களும் கர்மபந்த நிவ்ருத்திதசையிலே நிஸ்தரங்கஸுதாஸாகரம்போலே நிரதிசயபோக்யங்களாயென்றபடி - அனைத்துடனே - ஸகலவஸ்துக்களோடே, நெருங்காது - ஸம்மர்தியாதே, நின்ற - ஸம்ச்லேஷித்திருக்குமவனான, 'நானுன்னையன்றியிலேன்கண்டாய் நாரணனே நீயென்னையன்றியிலை' யென்கிறபடியே ஸகலவஸ்துக்களோடும் கலந்திருக்கு மவனானவென்றபடி. திருநாரணனார் - ஸ்ரீமந்நாராயணன், இரங்காதகாலமெல்லாம்-அநுகம்பியாதகாலமெல்லாம், அபவர்கப்ரதாந ஸ்வரூபயோக்யையான பகவத்க்ருபை வ்யாஜ விசேஷரூப ஸஹகாரவிளம்பேந பலோபதாநம் பண்ணாத ஸம்ஸாரகாலமெல்லாமென்றபடி. இழந்த - அலப்தமான, பயன் - பலத்தை, மோக்ஷரூப புருஷார்த்தத்தையென்றபடி. நாம்-ஸ்வரூபயோக்யரான நாம், பெற லபிக்கைக்கு, ஓர்-அத்விதீயமான, பெருங்காதல் உத்கடாகாங்க்ஷையை, உற்று - அடைந்து, இனிமேல் - ஸ்பஷ்டம். பிரியாமை - விச்லேஷியாதே, உகந்தனம் - ஹ்ருஷ்டரானோம். (கூ)

கடிசூடுமூன்றும்கழல்பணிந்தார்க்குக்கடிந்திடவே
முடிசூடிநின்றமுகில்வண்ணனார்முன்னுலகளந்த
அடிசூடிநாமவராதரத்தாலுடுத்துக்கனையும்
படிசூடியன்புடனேபணிசெய்யப்பணிந்தனமே. (௧௦)

இனி சதுர்த்தீப்ரதிபாத்ய தாதர்த்த்யகார்யபூத கைங்கர்ய ரூப புருஷார்த்தத்தை யருளிச்செய்கிறார்.

கடி - துஸ்ஸகமான, சூடுமூன்றும் - தாபத்ரயத்தையும், கழல் பணிந்தார்க்கு-தன் திருவடிகளை சேவித்திருக்குமவர்க்கு, கடிந்திடவே - நிவர்த்திப்பித்துவிடவே, முடி - கிரீடத்தை, சூடிநின்ற - தரித்துநின்றவரான, ஸ்வசரணாரவிந்த ஸேவிகளுக்காத்யாத்மிகாதி பௌதிகாதி தைவிக ரூப தாபத்ரய ப்ரசமநார்த்தமாகவே மகுடதாரணாதி ஸாம்ராஜ்ய சிஹ்நத்தை வஹித்தாரென்று த்ப்ரோக்ஷிக்கலாம்படி ரக்ஷணாதி

க்ருதரானவென்றபடி. முகில்வண்ணனார்-மேகவர்ணனுடைய, இதுக்கு திருவடியோடன்வயம். முன்-பூர்வத்திலே, த்ரிவிக்ரமாவதாரதசையிலென்றபடி. உலகு-லோகங்களை, அளந்த-பரிச்சேதித்தவையான, அடி - திருவடிகளை, சூடி-சிரஸ்ஸிலே அலங்காரமாக தரித்து, நாம்-தாஸபூதரான நாம், அவராதரத்தால்-முகில்வண்ணனுடைய வாதரத்தாலே, உடுத்துக்களையும்படி - தரித்துவாங்கும் ப்ரகாரத்தை, திருப்பரிவட்டம் முதலான வசேதநங்களை இச்சாநுஸாரேண உடுத்துக்களைந்தருளுமாப்போலே சேதநரான நம்மையும் ஸ்வாபிமத கைங்கர்யங்களிலே ப்ரவர்த்திப்பித்தும் நிவர்த்திப்பித்து முபயோகித்துக்கொள்ளும்படியான பாரதந்த்ர்யத்தை, சூடி - வஹித்து, அன்புடனே - ப்ரேமத்தோடே, பணி - கைங்கர்யங்களை, செய்யப்பணிந்தனமே - பண்ணவணங்கியமர்ந்தோம். (௧௦)

தனதன்றிவையெனத்தானன்றெனமறைசொன்னதெல்லாற்
தனதென்றுந்தானென்றுமெண்ணுதலால்வருமீனமெல்லாம்
மனதொன்றியின்றுநமவென்றதேகொண்டுமாற்றுதலால்
தனதன்றியொன்றுமில்லாத்தனித்தாதைசதிர்த்தனனே. (௧௧)

இனி நமச்சப்தத்தை ஸம்ஸாரசக்ர பரிவ்ருத்தி நிதாந பூதாஹங்கார மமகார ரூபாநிஷ்டநிவ்ருத்தி பரமாக விவரிக்கிறார்.

இவை-இந்தவஸ்துக்கள், ப்ரமாணஸித்தங்களான தேஹேந்திரியாதிகளும் தத நுபந்திங்களுமென்றபடி. தனதன்று-ஆத்மீயங்களன்று, தானன்று-ஆத்மாவுமன்று, என-இப்படி, மறைசொன்னதெல்லாம்-வேதோக்தங்களையெல்லாம், தனதென்றும்-ஆத்மீயங்களென்றும், தானென்றும்-தானென்றும்-ஆத்மாவென்றும், எண்ணுதலால்-அபிமானிக்கையாலே, அநாத்மத்வேநா த்மீயத்நே யீத்வேநச ச்ருத்யாதிப்ரதிபந்நங்களான தெஹேந்த்ரியாதிகளிலும் தததுபந்திகளிலும் ஆத்மத்வ புத்தியையு மாத்மீயத்வபுத்தியையும் பண்ணுகையாலேயென்றபடி. வரும்-ப்ராப்தமான, ஈனம் - ஹீநத்தை, பாவப்ரதாநோ நிர்தேசஃ. ஹீநத்வத்தையென்றபடி. யத்வாஃ பாவேநிஷ்டா. ஹாநியை என்றபடி. எல்லாம்-ஸ்பஷ்டம். அஹங்கார மமகார மூலக ஸாம்ஸாரிக தோஷங்களை யென்றபடி. இன்று - விவேகம்பிறந்த வின்று, மனது - மநஸ்ஸிலே, ஒன்றி - உறுத்தி, ஹெயத்வேந ஹ்ருதயாரூடங்களான வென்றபடி. நமவென்றதே கொண்டு-நமஃ என்கிற பதத்தையேகொண்டு, மாற்றுதலால்-நிவர்த்திப்பிகையாலே, தனதன்றி-தனக்குச் சேஷமாகாதே, ஒன்றுமில்லா - ஒருவஸ்துவுமில்லாதவனை, 'இலனதுவுடையனிதெனனநினைவரியவ' னென்கிறபடியே ஸ்வசேஷா சேஷார்த்தனனவென்றபடி. தனித்தாதை-அத்விதீயபிதா, ஸகல ஜகதே கொபாதாந நிமித்தமான வீச்வரனென்றபடி. சதிர்த்தனன் - சதுரனனன் ஸகலஹித ப்ரவர்த்தகனை ஸர்வசெஷி நம்முடைய வஹங்கார மமகாரங்களை நமச்சப்தத்தாலே சமிப்பித்து க்ருதக்ருத்யனாய் விஜ்வரனாய் ப்ரமோதித்தானென்றபடி. இத்தால் அபவர்காநுபவ தசையில் பலாந்தராநுபவந்யாயேந ஸம்பாவித ஸ்வதந்த்ர கர்த்ருத்வாபி மானநிவ்ருத்தியும் பலிக்கும். (௧௧)

சேர்க்குந்திருவாளர்சேர்த்தியின்மன்னுதல்சீர்ப்பெரியோர்க்கு
ஏற்குங்குணங்களிலக்காம்வடிவிணையடிகள்
பாற்குஞ்சரணத்திற்பற்றுதனன்னிலைநாம்பெறும்பேற்
றேற்கின்னவெல்லைகளெல்லாங்களையறவெண்ணினமே. (௧௨)

இப்படி மந்த்ரகடக பதங்களை விவரித்து இனி ப்ரதமகாதையிலே ஸாமாந்யதஃ கீர்த்திதமான வர்த்ததசகத்தை கௌரவபோக்யதாதிசய ப்ரயுக்தா தராதிசயத்தாலும் அநுஷ்டாநதசாயா மேக புத்யாரோஹார்த்தமாகவும் விசேஷித்தநுக்ரமித்துக்கொண்டு ப்ரபந்தத்தைக் தலைக்கட்டுகிறார்.

சேர்க்கும் - சேதனனை ஈச்வரனோடு கடிப்பிக்குமவளான, திருவாளர்-ஸ்ரீயையுடையவர், சேர்த்தியில் - ஸம்ச்லேஷத்திலே, மன்னுதல் - ஸ்திரீபவிக்கை, ஸ்ரீயஃபதிக்கு புருஷகாரபூத ஸ்ரீயொடுண்டான நித்யஸம்பந்தமென்றபடி. இதுக்கு ஏர்க்கின்றவென்கிறத்தோடன்வம். இது ஸ்ரீசப்த மதுப் ப்ரத்யத்தினுடைய வர்த்தங்களை

தனுஸந்தித்தபடி. பெரியோர்க்கு - ஸர்வஸ்மாத்பரனான வீச்வரனுக்கு, ஏர்க்கும்-உசி யங்களான,குணங்கள்-குணங்களைக்காட்டிலும்,ஈச்வரனுடைய பரத்வத்வத்துக் கதி சயாவகங்களான வாத்ஸல்ய ஸௌலப்யாதி குணங்களைக்காட்டிலுமென்றபடி. இலக் காம் - லக்ஷீபவிக்குமதான, சித்தாலம்பனமானவென்றபடி. வடிவில்-விக்ரஹத்தில், சீர்-கல்யாணகுணபூர்ணங்களான, இணையடிகள்-பரத்வஸௌலப்யாதிகுணேப்யோ பிசித்தாலம்பநபூதங்களான திருவடிகளென்றபடி. இதுக்கு முன்சொன்னபடி யந் வயம். இது நாராயணசரணசப்தார்த்தங்களை யநுகீர்த்தித்தபடி. பார்க்கும் - ப்ரதி க்ஷணீயமான, கத்யந்தரம் காணுமையாலே இதுவே சரணமென்று பரீக்ஷ்ய நிர்ணீ தமானவென்றபடி. சரணத்தில்-உபாயத்திலே, பற்றுதல் - அவலம்பிக்கை, இதுக்கு முன்பு சொன்னபடி யந்வயம்-இப்படி மேலுங் கண்டுகொள்வது. சரணசப்த ஸோ பஸர்கதாதுக்களுடைய வர்த்தங்களை யனுஸந்தித்தபடி. நன்னிலை - நல்லவவஸ்தை யை, ஆகிஞ்சிந்யாவஸ்தையை யென்றபடி. இது உத்தமனி லர்த்தத்தை யனுவர்ணி த்தபடி. நாம்-ஸம்ஸாரிகளான நாம், பெறும்பேறு-அடையப்புகுகிற புருஷார்த்தம், ஸகலப்ரதிபந்தக நிவ்ருத்தி பூர்வக பத்நீகுண விக்ரஹவிபூதிவிசிஷ்ட ப்ரஹ்மாநுப வ பரீவாஹ பூத கைங்கர்யங்களென்றபடி. இது ஸித்தாஸாத்யோபேய தத்ப்ரதிபந் தக நிவ்ருத்திபரங்களான உத்தரகண்டகத ஸவிசேஷண நாராயணபத சதுர்த்தீ நம ச்சப்தங்களுடைய வர்த்ததசகங்களை ஸங்க்ரஹித்தநுபாஷித்தபடி. ஏர்க்கின்ற-இவை களுக்குசிதங்களான, எல்லைகளெல்லாம்-ஸீமைகளெல்லாம், இதுகளுக்குசிதங்களா ன ஸ்வரூபஸ்வபாவங்களை யெல்லாமென்றபடி, களை-ப்ரதிபந்தகம்,அற-நிவர்த்திக்க, அஜ்ஞான நிவ்ருத்தி பிறக்கும்படி, எண்ணினம்-பரிகணித்தோம்-இங்கு பரிகணநோ க்தியாலே யொன்றுஞ் சிந்தாமலநுஸந்திக்கவேணுமென்று வ்யஞ்ஜிதம். (கஉ)

ஐ꠶ஂவக꠶ஊஹ௵ெணா......ஊவஸா꠶| ஸ்ரீ꠶ஷயா꠶꠶ஸஜ꠶ஹமாய꠶

வ꠶வஸிஷ꠶ெவஷவஸ்ரீ꠶ை꠶||

நாஹஂ.....ஶரணாஸ்ஹ!

கு நாஜிவ꠶ஜெவ...வடிஊ.

த்வயச்சுருக்கு வ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநம꠶.

ஸ்ரீ꠶.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளேசரணம்.

தேசிகன் திருவடிகளேசரணம்.

## சரமச்லோகச் சுருக்கு வ்யாக்யானம்.

### கோடிகன்னிகாதானம் திருமலைதாததேசிகன் செய்தருளியது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிவிருத்தம்.

மாமலர்மங்கைமார்பனைமன்னும்மாறனைப்புகழெதிவரனூர்
தூமலர்ப்பாதநண்ணுநன்மறையின்மௌலியாசிரியனூலுரையைக்
கோமலமாகக்கூறுமின்னமுதத்திருமகள்தநயனைப்பணியா
யாமலசருக்கும்பயன்படச்சுருங்கச்சரமபத்தியச்சுருக்குரைப்பாம் (க)

'கல்லாரகலு' மென்று துடங்கி பதினொரு கட்டளைக்கலித்துறைகள்

சரமச்லோகச் சுருக்கு.

மூ.—கல்லாரகலுங் கருமமு ஞானமுங் காதலுமற்
றெல்லாநிலைகளுக்கேற்க விதித்த கிரிசைகளும்
வல்லார்முயல்க வலி யிழந்தா ரென்றனைத்தொழுகென்
றெல்லாத்தரும முரைத்தவரின்னடி சேர்ந்தனமே. (௧)

'ஸாக்ஷாத்ஸ்வதர்மவிஷயேஷு யதாநுஷ்டேயேஷு நாநா
விதேஷ்வபி ஸர்வேஷு ஸ்லோக ஸங்க்ரஹ॥"

'கர்மணோஹ்யபி போத்தவ்யம், கர்மண்யகர்ம யஃ பச்யேத்'இத்யாதியாலே கர்மயோகமும் ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாந ஸஹக்ருதமாக வேண்டுகையாலும் தாத்ருச ஜ்ஞானயோக கர்மயோகங்களில ஜ்ஞாநாம்சத்துக்குவிசேஷதோ விநியோகம்காண்கையாலும் தாத்ருச ஜ்ஞானரஹிதர்க்கு அவற்றில் ப்ரவேசிக்கலாம் விரகில்லையாகையாலே கல்லாரகலும் என்றது. கர்மயோக நிஷ்டாதி சகலநிலைகளுக்கும் ஏற்குமாறு விதிக்கப்பட்ட மற்றைக்கர்மங்களுமென்று கூட்டுவது. வர்ணாச்ரமதர்மங்கள்அங்க கோடிப்ரவிஷ்டங்களிறே. த்ருதீய ஷட்கத்தில் பூர்வோத்தரத்ரிகங்களிலேசோதித மான ப்ரதானபுருஷாதி விவேசநமும் ததுபயோகி. ஜ்ஞாநயோகாதிகாரியும் லோக ஸங்க்ரஹார்த்தமாக கர்மயோகத்தையே அநுஷ்டிக்கக்கடவன் என்கையாலே எல்லாநிலைகளுக்கேற்க விதித்த கிரிசைகளு மென்றதென்னுமாம். தர்மங்களுக்கெல்லாம் ஸாத்விகத்யாக மத்தனை போக்கி ஸ்வரூபத்யாக மில்லையாகையாலே, கிரிசைகளும்-ஸாத்விகத்யாகாதியோடே அநுஸந்தேயமாகவிஹிதமான கர்மங்களை,யென்கை.வல்லார்முயல்கவென்னுமளவும் கீதாசாஸ்த்திரத்தின் அஷ்டாத சாத்யாயங்களின்அர்த்தம். மேல் சரமச்லோகார்த்தம். அதிலும் வலியிழந்தாறென்றனைத்தொழுகென்றென்கையாலே ஸ்ரீகீதாபாஷ்யப்ரக்ரியையாலே அங்கப்ரபத்தியும் ஸ்ரீரஹஸ்யத்ரய ஸார ப்ரகரியையாலே ஸ்வதந்த்ரப்பத்தியும் என்கிற யோஜநாத்வயமும் அபிப்ரேதம். (௧)

என்கிற கட்டளையிலே சரமச்லோகத்துக்கெல்லாம் திரண்டபொரு ளிதென்றருளிச்செய்கிறார். கல்லார்-ஸம்யச்ஜ்ஞான மில்லாதவர்கள், அகலும் -விலகிப்போமதான, இது மே லெல்லாவற்றிலும் அந்வயிக்கிறது கருமமும் கர்மயோகத்திலும், ஞானமும்-ஜ்ஞானயோகத்திலும், காதலும்-பக்தியோகத்திலும், மற்று - மற்றும், எல்லாநிலைகளுக்கு - அவஸ்தைகளெல்லாவற்றிற்கும், ஏற்க-அநுரூபமாக, விதித்த-கீதாசாஸ்த்ரத்தில் கீதாசார்யன் நியமித்த, கிரிசைகளும்-க்ரியைகளிலும், வல்லார்-வல்லமையுள்ளவர்கள், முயல்க - ப்ரயத்நப்படக்கடவர்கள், அவர்களுக்கு ருசித்ததொரு வழியிலே ப்ரவர்த்திக்கக் கடவர்கள், வலியிழந்தார்-சக்தியற்றவர்கள், அதிகாரமில்லாதவர்கள், என்றனை-என்னை, தொழுக - தொழக்கடவர்கள், என்னையே உபாயாந்தரஸ்தானத்தில் நிவேசித்துக்கொள்ளக்கடவர்கள், என்று-இப்படி,எல்லாத்தருமம்-தர்மம் எல்லாவற்றையும், உரைத்தவர்-அவர் அவர் ருசிக்கும் அதிகாரத்துக்கும் தக்கபடி அவர் அவர் பரிக்ரஹிக்கைக்காக கீதாசாஸ்திரத்தில் அர்ஜுனனை வ்யாஜீகரித்து ப்ரகாசிப்பித்த கீதாசார்யனது, இன்னடி-போக்யதமமான திருவடிகளை, நிருபாதிகாநவதிக போக்யதா-சாலிகளான திருவடித்தாமரைகளை,சேர்ந்தனம்-ஸதாசார்யகடாக்ஷத்தாலே தத்வ ஹித புருஷார்த்த விவேகம் பெற்ற நாம் அதிகாரமில்லாமையாலே உபாயாந்தரங்களில் பிரவர்த்திக்க மாட்டாதவர்களாய் விச்வாஸாதிசயத்தோடே விளம்பாக்ஷமராய் கீதாசார்யன் திருவடிகளே நமக்கு உபாயமும் உபேயமுமென்று பற்றினோமென்கை. (௧)

வெறுமையுணர்ந்தது முன்னிட்டு வேறங்கமில்லையெனக்
குறியவனின்றவை யெட்டக்குதித்திடுங் கோணைத்துறந்
துறுமயனத் திரமென்னப் பொருநிலையோர்ந்திடவோ
ரறநெறியன்றுரைத் தானழியா வறமாயினனே. (௨)

"அஶக்தாதிகாரத்வ மாகிஞ்சந்ய புரஸ்க்ரியா| அநங்கபாவோ தர்மாணா மஶக்யாரம்ப வாரணம்॥ தத்ப்ரத்யாஶாப்ரஶமநம் ப்ரஹ்மாஸ்த்ரந்யாய ஸூசநம் ஸர்வதர்மபரித்யாக ஶப்தார்த்தா: ஷடுதாஹ்ருதா:"

என்கிறகட்டளையிலே 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்னும்பதங்களுக்குஆறர்த்தங்களை அடைவேஸங்க்ரஹித்துக் காட்டியருளுகிருர். இதில் முந்தின அர்த்தம் 'அநித்யமஸுகம் லோக மிமம் ப்ராப்ய பஜஸ்வமாம்' என்னு மிடத்தில் போலே 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய ஸ்தித ஸ்த்வம்' என்கிற யோஜனையால் அநுவாதபக்ஷஸித்தம். மேலை ஐந்தர்த்தங்களும் விதி பக்ஷஸித்தங்கள்.

வெறுமை-தாரித்ர்யத்தை, உணர்ந்து - தெரிந்துகொண்டு, ஸர்வேச்வரனைப் பெறுகைக்குத் தன்பாடே யொருகைம்முதலில்லாமையையுணர்ந்துஎன்றபடி. இது அசக்தாதி காரத்வம். அதுமுன்னிட்டு-அந்தவெறுமையை முன்னிட்டுக்கொண்டு, இது ஆகிஞ்சந்ய புரஸ்கிரியை. தான் அவனைப்பெறுகைக்குக் கைம்முதலொன்றுமில்லாமையை புரஸ்கரித்தென்கை. ஆகிஞ்சந்யாநு ஸந்தான ரூபமான கார்ப்பண்யம் சொல்லிற்று. வேறு-இந்த ந்யாஸவித்யைக்கு ப்ரதிநியதமாகச்சொல்லப்பட்ட ஆநுகூல்ய ஸங்கல்பாதிக ளொழிய வேறுபட்ட, அங்கம்-அங்கங்கள், இல்லையென-வேண்டியதில்லையென்று, இப்படித்தெரிந்தென்கை. இது அநங்கபாவோதர்மாணும். வர்ணுச்ரமதர்மங்கள் ஸ்வயம் ப்ரயோஜந பகவதாஜ்ஞாநுபாலன புத்யா நுஷ்டேயங்களாகையாலே அவையு மங்கமல்லவிறே. குறியவன்-குள்ளனுனபுருஷன், நின்றவை-நின்றனவான பலபுஷ்பாதிகளை, தன்கைக்கெட்ட வொண்ணுதபடி உச்ச்ரிதங்களாய் நின்றவைகளான பலாதிகளை என்றபடி. எட்ட-தான் கையாலெட்டவேண்டுமென்று, குதித்திடும்-குதிப்பதாகிற, தாவித்தாவிக்குதிப்பதாகிற, கோணை-பீடையை, துறந்து-விட்டு, குள்ளன்-தன்கைக்கெட்டாநிலத்திலுள்ள பலத்தைப் பெறவேண்டிக்கையைத்தூக்கிக்கொண்டு தாவித்தாவிக் குதிப்பதுபோலே தனக்கு அசக்யமானவற்றில் தலையிட்டுக்கொள்ளுதலை விட்டென்கை. இது அசக்யாரம்ப வாரணமும் தத்ப்ரத்யாசா ப்ரசமனமும். அசக்யத்தில் ப்ரவர்த்திக்கவேண்டா, இனிஎப்போதாவது இதுநமக்கு சக்யமாமென்று ஆசைப்படவும் வேண்டா என்பனவிறே அவை-கோணை என்று வேற்றுமைத்தொகை. அன்றிக்கே: கோண் என்று கோணலாய்வக்ரபாவமென்னுமாம். அப்போது கோணையென்று விரி. உறும்-த்ருடமான, அயனத்திரமென்ன-ப்ரஹ்மாஸ்த்ரமென்னும்படி, பொருு-ஸஹகார்யந்தர ஸம்பந்தத்தைப்பொருததான, நிலை - ப்ரபத்தியின் நிலையை, 'ராக்ஷஸாநா மவிஸ்ரம்பா தாஞ்ஜநேயஸ்ய பந்தநே| யதா விகளிதா ஸத்யஃ அமோகா ப்யஸ்த்ர பந்தநா॥ ததா பும்ஸாமவிஸ்ரம்பாத் ப்ரபத்திஃப்ரச்யுதாபவேத்' என்றதிறே. இதொரு ப்ரஹ்மாஸ்த்ரமிருக்கும்படி. அத்திரமன்னவெனப் பாடமானபோது ப்ரஹ்மாஸ்த்ரம்போன்றபொருநிலையென்க. "மூண்டாலு மரியதனின் முயலவேண்டா முன்னமதிலாசைதனைவிடுகைதிண்ணம். வேண்டாது சரணநெறி வேருெர் கூட்டு வேண்டி னயனத்திரம்போல் வெள்கி நிற்கும்." இது ப்ரஹ்மாஸ்த்ரந்யாயஸூசநம். ஆகவித்தால் சொல்லிற்ருய்த்தென்னென்னில்; (ஸர்வதர்மாந் பரித்யஜ்ய) என்கிற த்யாகவிதிக்குஅங்கத்வேநாநுஷ்டானத்யாகமும் ப்ரபத்திப்ரச்யாவகத்வாத் உபாய கோடிப்ரவிஷ்டத் வேநாநுஷ்டானத்யாகமும் அசக்யஸர்வகர்மத்யாகமும் அசக்யேஷுப்ரத்யாசா த்யாகமும்அபிப்ரேதமென்கை. ஓர்ந்து-தெளிந்து, ஸதாசார்யோபதேசத்தாலே ஸம்யக்காக அறிந்தென்கை, இட-போட, தன்மேல் பரத்தைப்போடும்படி யென்கை. நியாஸம்நிக்ஷேபம் என்றிறே சொல்வது. அன்றிக்கே: ஓர்ந்திடவென்று அறியவென்னுமாம். ஓர் - அத்விதீயமான, அறநெறி-தர்மமார்க்கத்தை, அழியா -அநச்வரமான, அறமாயினன்-தர்மமானவன்; 'க்ருஷ்ணம் தர்மம்ஸநாதநம்' இறே. அன்று-அந்தநாளிலே. 'சிஷ்யஸ்தேஹம்' என்று அடி பணிந்த அர்ஜுநனை இடையிட்டு அத்யாத்ம சாஸ்த்ரஸாரார்த்தத்தை ஸ்ரீகீதாசாஸ்த்ரரூபமாக வெளியிட்ட நாளிலே, உரைத்தான்-உபதேசித்தான் என்கை. (உ)

வாரிதிவிட்டு மலர்மகளோடு மதுரைவந்து
பாரதவெஞ்சமர் பார்மகள்பாரஞ் செகவுகந்து
சாரதியாய்முன்பு தூதனுமாய்த்தளரும் விசயன்
தேரதினின்றவனைத் தேற்றினன்றிறமாயினமே. (௩)

இது மாம்சப்தார்த்தம் சொல்லுகிறது. மாம்என்று பரத்வ ஸௌலப்யவ்யஞ்ஜக பார்த்தசாரதி பூதனன தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹவிசேஷம்தொட்டுக்காட்டப்படுகிறது.அத்தாலே வாத்ஸல்ய ஸ்வாமித்வய ஸௌசீல்ய ஸௌலப்யங்களாகிற குண சதுஷ்டயம் வ்யஞ்ஜிதமாகிறது.

வாரிதிவிட்டு-க்ஷீர சமுத்ரத்தைவிட்டு, மலர்மகளோடு - பெரியபிராட்டியாரோடு, மதுரை-வடதிருமதுரையிலே, வந்து - திருவவதரித்து, பாரத வெஞ்சமர்-பாரதமென்னும் க்ரூரமானயுத்தத்தில், பார்மகள்-பூமியினது. பாரம்-பாரமானது, செக-நசிக்கும்படி உகந்து-ஸந்தோஷித்து, சாரதியாய் - அர்ஜுனனுக்கு ஸாரதியாய், முன்பு-யுத்தாரம்பாத்பூர்வம், தூதனுமாய் - தூத்யம்பண்ணினவனுமாய், தளரும் - அஸ்தான ஸ்நேஹாதிகளாலே தளர்ந்துபோகாநின்ற, விசயன் - அர்ஜுனனது, தேரதில்-ரதத்தில் நின்று, அவனை - அப்படி கலங்கின அர்ஜுனனை, தேற்றினன் - தத்வோப தேசத்தாலெ தேறச்செய்த ஸ்ரீகீதாசார்யனது, திறமாயினம்-வசமானோம், ததேக தாஸராகப் பெற்றோமென்கை.

(தளருமித்யாதி) அஸ்தான ஸ்நேஹாதிகளாலே கலங்கின அர்ஜுனனை அநாதரியாமையாலே வாத்ஸல்யம் சொல்லிற்று. 'மத்தஃ பரதரம் நாந்யத்' இத்யாதியாலே தானே தன்ஸ்வாமித்வத்தைப் பலகாலும் அருளிச்செய்தான். வேண்டுமென்றவிடத்தில் ரதத்தை நிறுத்தென்னவும் குதிரையைக் கட்டென்னவும் அவிழ்க்க வென்னவுமாம்படி ஸாரதியாயும் ஓலைகட்டித்தூதுபோவென்னும்படியாயும் தன்னைத் தாழ நிறுத்துகையாலும் அது தான் தன்பேறாசவுகந்து செய்கையாலும்ஸௌசீல்யமும், விச்வரூபத்தைக் காட்டென்ன காட்டி பழயரூபத்தோடு நிற்கவேணுமென்ன பழயபடியே ஸாரதியாய்நிற்கையாலே ஸௌலப்யமும் சொல்லிற்றாகிறது. இதெல்லாம் இங்கே சாரதியாயித் யாதியிலே ப்ரகாசிதம் 'நிகரில் புகழாய்' என்னுமிடத்திலும் நாராயணசப்தத்திலும்ப்ரதாநதயா இவையேயிறே தோற்றுகிறன. மாம்என்று காட்டுகிறவடிவில் லக்ஷ்மீவிசிஷ்டத்வம் ஸர்வாவஸ்தாஸாதாரணம். அப்படியேஅவதாரத்தில் மெய்ப்பாடும்ஸித்தம், (வாரதிவிட்டித்யாதி) ஒரூரிலிருந்து 'மற்றோரூருக்குப் போமாப்போலே யிறே தன்னுடைச்சோதியில் நின்றும் க்ஷீராப்தியில்நடுநிலை நின்று மதுரைவந்தது. இத்தால் அப்ராக்ருதஸம்ஸ்தானத்தோடே திருவவதரித்தபடி சொல்லுகிறது. 'ஏஷநாராயணஃ ஸ்ரீமாந்' இத்யாதி. மற்றும் அநுக்ரஹைகாந்தங்களாய் மாம்சப்தத்தில் சொருகிக்கிடந்த குணவிசேஷங்களுமெல்லாம் இங்கே யதாஸ்தாநம் அநுஸந்தேயங்கள். (௩)

தன்னருளாற்பெறுஞ்சாதனஞ்சாதகனென்றிவற்றைத்
தன்னுடனெண்ணுதனீங்கத்தமர்க்கொருசாதனமாய்ப்
பொன்னருளோடும் பூமகளோடுந் திகழநின்ற
வின்னுரையீசனையேயேகமெண்ணவிசைந்தனமே. (௪)

இது 'ஏகம்' என்றதின் அர்த்தங்களைக் காட்டுகிறது.

"ப்ராப்யஸ்யைவ ப்ராபகத்வம் ஸ்வப்ராப்த்யந்ய நிவாரணம் । ப்ரபத்தேர் வ்யாஜமாத்ரத்வம் ஹேத்வந்யோபாயநந்வய: ॥ தத்ரைவ ஸம்பந்த ஸ்வஸாமர்த்யேஷு ஸித்ததா । இத்யத்ர ஷட்ப்ரகாரேண ரக்ஷஸம்பவ்ய ஶிக்ஷிதா:"

"யதா குணாதி வைஶிஷ்ட்யம் விக்ரஹாதேஶ்ச லக்ஷிதம் । ஏவம் பத்நீ விஶிஷ்டத்வம் த்ருஷ்டம் ஶாஸ்த்ரசக்ஷுஷாம்" என்கிறகட்டளை

யிலே தன்னருளால்-தனது கிருபையாலே, பெறும்-சேதநன் பெறுகிற, சாதனம் - ஸாதனத்தையும்,ஸர்வேச்வரன் தன்னுடைய நிர்வ்யாஜ நிரவதிககருணையாலேஅவஸர ப்ரதீக்ஷனாய் அஜ்ஞாத யாத்ருச்சிகாதி ஸுக்ருத மடியாக ஆசார்யப்ராப்திபண்ணுவித்து தத்வஹிதபுருஷார்த்த விவேக பூர்வகமாக ப்ரபதநத்திலேமூட்டுவையாலே தன்னருளால் பெறுஞ் சாதன மென்றது. சாதகன் - உபாயாநுஷ்டாதாவான சேதநன், என்றிவற்றை - என்கிற இவைத்தை, தன்னுடன்-தன்னோடே, எண்ணுதல்-அபிஸந்திசெய்தல், நீங்க-நீங்கும்படி, சாதனத்தைத் தன்னுடன் எண்ணுதலாவது ஸர்வேச்வரன் ப்ராப்யன் நாம் அநுஷ்டித்த உபாயம் ப்ராபகம் என்று நினைக்கை. அது நீங்குகையாவது மாம்என்கிற ஏகவசநத்தாலேயே ஏகத்வம்ஸித்தமாயிருக்க மிகுதிகாட்டுகிற ஏகசப்தத்தாலே ப்ராப்யனான தானே ப்ராபகனாக அபிஸந்தி பண்ணத்தக்கவனென்றதாகையாலே ப்ராப்யஸ்யைவ ப்ராபகத்வம் என்றிருக்கை. சாதகனைத் தன்னுடனெண்ணுகையாவது ஸ்ரிய:பதி பலப்ரதன், நாம்ததுபாயாநுஷ்டாநம் செய்தோ மென்றிருக்கை. அது நீங்குகையாவது அவனையொழியநமக்கு ஸத்தையே யில்லாமையாலே அவன் கொடுத்தகரணகளேபரங்களையுடைய நாம் அவன் கொடுத்த ஸ்வரூபஜ்ஞானத்தாலே ப்ரார்த்தித்தோமத்தனை; ஸ்தநந்தய ப்ரஜை ரோதனம் செய்யுமாப் போலே, ஆனபின்பு நமக்கு உபாய கோடியில்எவ்வித அந்வயமு மில்லையென்று தெளிகை. இது ஸ்வப்ராதாந்ய நிவாரணம். இங்குற்ற ஸ்வசப்தம் சேதநபரம். தமர்க்கு-ஆத்மீயர்க்கு, ஸ்வதாஸபூதர்களுக்கு, ஆகிஞ்சந்யைகதநரான ப்ரபந்நர்களுக்கென்கை. ஒரு - அத்விதீயமாய் விலக்ஷணமான, சாதனமாய்-உபாயமாய், ஒருவ்யாஜமின்றியே ரக்ஷிக்கில் ஸர்வமுக்திப்ரஸங்கம் வருகையாலே நீ செய்யும்ப்ரபதநம் வ்யாஜமாத்ரம்,முக்யோபாயம் நானேஎன்றுஏகசப்தார்த்த மாம்போது ப்ரபத்தேர் வ்யாஜமாத்ரத்வம் சொல்லிற்றாகிறது. அதாவது ஸித்தோபாய துல்யதயா உபாயமன்றென்கை. அங்க ப்ரபத்தி நிஷ்டான்திறத்தில் அங்கியான உபாஸந நிஷ்பத்தி ப்ரதீக்ஷைபோலே ஸ்வதந்த்ரப்ரபத்தி நிஷ்டன்திறத்தில் உபாயாந்தராபேக்ஷையில்லை யென்றேகசப்தார்த்தமாம் போது அந்யோபாயைரநந்வயம் சொல்லிற்றாகிறது, பரஸ்வீகர்த்தாவான ஸர்வேச்வரன் தானே உபாயாந்தரஸ்தானத்திலே நிற்கையாலே இவனுக்கு பாயாந்தரபேக்ஷையில்லை யென்கை. பக்த்யாத்யநபேக்ஷஸ்வதந்த்ரோபாயத்வ மென்றதாயிற்று வித்யாத்வஸாம்யத்தாலேவர்ணாச்ரமதர்மாதிகளுக்கும் அங்கத்வமுண்டோ வென்று ஸம்சயிக்கவேண்டா, அங்காந்தர புஷ்கலேபாயாந்தரக்ருத்யத்தையும் நானேசெய்வன் என்னொருவனையேபற்றென்று ஏகசப்தார்த்தமானபோது ததங்கைரப்யஸம்பந்தம்சொல்லிற்று. ப்ரபத்திக்கென்றடைத்து வைத்த ஆநுகூல்ய ஸங்கல்பாதிகளொழிய பக்த்யங்கபூதங்களாயாதல் இதரங்களாயாதலுள்ளபரிகாரந்தரங்கொண்டுஅபேக்ஷையில்லையென்கை.இவன்கோலினபலமெல்லாவற்றிற்கும்உபாயமொன்றேயாயிருக்குமென்று'யத்யேநகாமகாமேந இத்யாத்யநுஸாரேணஏகசப்தார்த்தமாம்போதுஸர்வசாத்யேஸ்வபேதம்சொல்லிற்றாகிறது.இப்படியாலுள்ளவைலக்ஷண்யங்கள் ஒருசாதனமாயென்றதில்அபிப்ரேதங்கள். பொன்-ஸ்ப்ருஹணீயமான, ஸர்வகுணங்களுக்கும் புகரூட்டவற்றாய் அகிஞ்சநாலம்பநமாயிருக்கையாலே ஸர்வபோக்யமான வென்கை. அருளோடும் - கிருபையோடும், பூமகளோடும்-பெரியபிராட்டியாரோடும், புகழ - புகழும்படி, வேதங்களும் ப்ரஹ்மாதிகளும் ஆச்ரிதர்களும் ஸ்துதிக்கும்படியாக, நின்ற-நின்றவரான, இங்கு அருளென்றது ரக்ஷேச்சையுக்தமான ஸகலகல்யாணகுணங்களுக்கும் உபலக்ஷணம். இது த்ருஷ்டாந்தார்த்தம். அநவதிகாதிசயா ஸங்க்யேய கல்யாணகுண விசிஷ்டனாயிருக்குமாப்போலே ஸ்வாபிமதாநுரூபகுண விபவைச்வர்ய சீலாத்ய நவதிகாதிசயா ஸங்க்யேய கல்யாணகுணையான பெரியபிராட்டியாரோடு நித்யஸம்ச்லிஷ்டன் என்கை. இத்தால் ஏகசப்தம் உபாயதசாயாம் லக்ஷ்மீ வைசிஷ்ட்யத்தைநிஷேதிக்கிறதென்கிறபக்ஷம் ப்ரதிக்ஷிப்தமானபடி.கல்யாணகுணயோகம் ஏகத்வபாதக மாகாதாப்போலேலக்ஷ்மீவைசிஷ்ட்யமும் ஏகத்வபாதகமன்றென்று திருவுள்ளம்.இன்னா-போக்யமான ஸூக்தியை யுடையவரான, ப்ரபந்நஜநபாதேயமான ஸூக்தியை யுடையவரான என்கை, ப்ரம விப்ரலம் பாதி ஸம்பாவனையில்லை யாகையாலே ஸர்வவிஸ்ரம்பணீய சரமச்லோகரூபதிவ்யஸூக்திகரான வென்று திருவுள்ளம், ஈச

னையே - ஸர்வேச்வரனையே, ஏகம் - ஏகம்என்கிற பதத்திலே, எண்ண - எண்ணுகைக்கு, இசைந்தனம்-அங்கீகரித்தோம். ஸதாசார்யோபதேசாதிகத ஸாரார்த்தங்களாகையாலே கீழுபபாதித்த ஆறர்த்தங்களையும் ப்ரகாசிப்பிக்கிற ஏகசப்தத்தில் தாத்ருசகுணவிசிஷ்ட ஸர்வேச்வரனை அநுஸந்திக்கலாமென்றுமென்கை. (௫)

ஊனிலிணைத்துழல்விக்கும் வினைக்கடலுள்விழுந்த
யானெனதான குணங்களெனக்கிசை நல்வழியுந்
தானுதவித் தனைத்தந்திடநின்ற தனித்தரும
நானினிவேறோர்பர நணுகாவகைநல்கின்றதே. (௬)

இது சரணசப்தார்த்தம் சொல்லுகிறது. சரணசப்தம் உபாயபரமிறே. உபாயமாவது தான் கோறின பலத்தைப் பெறுவதற்காகத் தான்செய்யவேண்டியகார்யம். ஈச்வரனை உபாயமாகப்பற்றுகையாவது எனக்கு வேண்டிய பலத்தை நீயே கொடுக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கை. இது பரந்யாஸம். ஈச்வரகதமான உபாயத்வமாவது பரஸ்வீகர்த்ருத்வம். அப்படியே பரந்யாஸோபயுக்த ஜ்ஞாநப்ரதாநமும் ஈச்வர கார்யம். அத்தைச்சொல்லுகிறது.

ஊனில் - மாம்ஸத்திலே, மாம்ஸமயமான தேவாதிசரீரத்திலே, இணைத்து-சேர்த்து, அவிவேகிகளுக்கு பேதாரஹம் அரிதாம்படி ஒன்றாக்கி யென்கை. உழல்விக்கும்-உழலச்செய்கிற, பரிப்ரமிக்கும்படி செய்கிறதான, ஜநநமரண சக்ரபரிவ்ருத்தியாலே ஸதத பரிப்ரமம் செய்விக்கிறதான வென்கை, வினைக்கடலுள்-கர்மரூபஸாகரத்தில், அநுபவைக நாச்யமான ஸுக்ருத துஷ்க்ருத ரூபா நாதிகர்ம பரம்பரை யென்னும் கரைகாண வொண்ணாக்கருங்கடல் நடுவில்என்கை. விழுந்த-நிபதினான, கடல்நடுவில் விழுந்தவன் அதன் அலை போக்கும் போக்கன்றித்தன் முயற்சியாலொன்றும் செய்யவல்லானாகாதாப்போலே கர்மஸாகரபதிதனான சேதநனும் தான் அவசனாய் கர்மாநுரூப தேவாதிசரீரயோகேந ஜநந மரணாதி சக்ரபரிப்ரமம் செய்யுமத்தனை போக்கி ஸ்வயத்நத்தாலே தன்ஹிதாஹிதம்செய்துகொள்ள சக்தனல்லனென்கை. யான்-என்னையும், எனதான-என்னுடையவையான, குணங்கள்-பகவத நந்யார்ஹசேஷத்வாதி குணங்களையும். எனக்குஇசை - என்ஸ்வபாவத்திற்கு அநுகுணமான, ஜ்ஞாந சக்த்யாத்யதிகாராநுரூபமானவென்கை. நல்வழியும்-ஸமீசீநமார்க்கத்தையும், ஸம்ஸாரஸாகர ஸந்தரணோபாயத்தையு மென்றபடி. கர்மயோக ஜ்ஞாந யோகபக்தியோக ந்யாஸவித்யாதிகளில் ஸ்வஸ்வாதிகாராநுகுணமான உபாயத்தையு மென்றபடி. தான்-நிரவதிக காருண்யரூபியான தானே, உதவி - கொடுத்து, நம்முடைய உத்தரணோபாயத்தைச் சிந்தித்து ரக்ஷாபேக்ஷாப்ரதீக்ஷனாய் நின்று அஜ்ஞாதஸுக்ருதாதிகளை முதலாக்கித் தானே ஸ்வரூபஜ்ஞாநாதி ஹேதுகமான ஜாயமானகடாக்ஷத்தைப்பண்ணி ஆசார்ய ப்ராப்தி பண்ணுவித்து தத்வோபாய விவேகம் பண்ணுவித்துஸ்வாதிகாராநுகுண ஸமுசித ஸமீசீநோபாயத்திலே மூட்டியென்றதாயிற்று. என்னைத்தருகையாவது பகவத்தாஸ்யைகஸ்வரூபமான என் ஸ்வபாவத்தை அறிவிக்கை. 'அஸந்நேவ ஸபவதி, ஸந்தமேநந்ததோவிதுঃ' இறே. தனை - தன்னை, அப்ராக்ருத தேசவிசேஷத்திலே ஸர்வப்ரகார நிரதிசய போக்யனாய் ஸர்வாகார விசிஷ்டனான தன்னை. தந்திட-கொடுக்கும்பொருட்டு, தானான தன்மையில் தரும்பொருட்டு, "முதற்றனியுன்னையுன்னை யெந்நாள் வந்து கூடுவன்யான்" என்றிறே அபேக்ஷிப்பது. நின்ற-ஆத்மாநம் ப்ரகாச்ய ஸ்திதனான, இங்கு நின்ற வென்றது திஷ்டமாநசப்தபர்யாயம். நாம் சரணவரணம்பண்ணும்படி தன்திருவடிகளைத் தாழவிட்டுக்கொண்டுபார்த்தன் தேர் முன்னே தாழநின்றவனான வென்கை. அன்றிக்கே: ஸர்வ ஸமாச்ரயணீயத்வாய் உகந்தருளின நிலங்களிலே அர்ச்சாரூபேணநின்ற வென்றுமாம், அர்ச்சாவதாரங்களிலிறேநம்மாசார்யர்கள் ப்ரபத்தி பண்ணுவது, தனித்தருமம்-அத்விதீயதர்மமானது, "ஏகம்ஸர்வப்ரதம் தர்மம் ஸ்ரீயாஜுஷ்டம்" என்கிறபடியே ஸநாதநதர்மமானஸ்ரீகீதாசார்யனென்றபடி. நான்-அவன் திருவடிகளில் ரக்ஷாபரந்யாஸம் பண்ணின நான், இனி-மேல், வேறோர்பரம்-வேறொரு பாரத்தை, நணுகாவகை-அடையாதவண்ணம், நல்கின்றது-ஸ்நேஹியாநின்றது, ஸக்ருத்வ பாதகமான விதியொன்றும் இல்லாமையாலே அதி ஸக்ருத்கர்த்தவ்யமாய்த்து, 'ஏகம் சரணம்'என்ற ஸமபிவ்யாஹாரத்தாலே கோலினபலத்தைப்பற்ற மேலொருகர்த்தவ்யாந்தரமில்லையென்றதாகிறது, தேஹயாத்ரைகர்மாதீனையாய் ஆத்மயாத்ரை ஈச்வராதீனையாய்அற்றபின்பு

நமக்கினி கர்த்தவ்ய மொன்றுமில்லை யாகாதே. இப்படி நாம் நிர்ப்பரராயிருக்கும் படி அவன்செய்துவைத்தது அவனுடைய நிரவதிக காருண்யமேயிறே. 'மித்ரபாவேந' என்பானவன் அபிப்ராயத்தாலே நல்கின்றதென்றது. (௬)

கடுவினைநாம்பெறும் பேற்றைத்தகைந்தமைகொண்டுநம்மேல்
நடைவிலகாமலிசைந் தொருகாலந்துணிவுடனே
உடைமையடைக்கலமாக வடைக்கு முகப்பதனால்
அடையெனவன்றுரைத்தா னடைவித்தனன் றன்னடியே. (௬)

வ்ரஜவின் அர்த்தம் சொல்லுகிறது கடுவினை-க்ரூரமான கர்மங்கள், ப்ராரப்தருபங்களான கர்மங்கள், நாம் பெறும்பேற்றை-நமக்கு தாயதனக்ரமத்தாலேஸ்வதஃப்ராப்தமாய் நாம் பெறக்கடவபுருஷார்த்தத்தை, பகவத் கைங்கர்ய ரூபபுருஷார்த்தத்தை யென்கை. தகைந்தமைகொண்டு-ப்ரதிபந்தித்தபடி கொண்டு. ப்ரதிபந்தித்தமையாலே யென்றபடி. நம்மேல்-நம்முடையமேலே, ஸ்வசரணயுகள ஸமாச்ரிதரான நம்திறத்திலென்கை. நடை-கதியானது, ஆசாரமானது, விலகாமல் தவறுமல்,மேலையார்செய்வனகள் என்று முன்னோர் நடந்தவழியேவழுவாதுநடக்கும்படி யென்கை. இசைந்து-அங்கீகரித்து, துணிவுடனே - மஹாவிச்வாஸத்துடனே, ஒருகாலம் - ஒருகாலத்தில், ஸக்ருத்தாகவென்றபடி. உடைமை-ஸ்வரக்ஷயவஸ்துவை, அடைக்கலமாக-சத்தனுக்குரக்ஷ்யமாக,அடைக்கும்-ந்யாஸம்செய்கிற,உகப்பதனால்-ஸந்தோஷத்தினாலே,தன்னுடைமையை ரக்ஷித்துக்கொள்ள சக்தியில்லாதவன் அதைரக்ஷிக்க சக்தன்கையில் நிக்ஷேபமாக அடைத்துவிட்டு நிர்பரனாய்ப்பயங்கெட்டு மார்பில் கைவைத்துறங்கு மாப்போலே யென்றபடி. அடை-வ்ரஜ, என - என்று, அன்று-பாரதஸமராரம்ப ஸமயத்திலே, அர்ஜுநசோகாபநோதநவ்யாஜேந அத்யாத்மசாஸ்த்ர ஸாரார்த்தத்தை உபதேசிக்க உற்பட்டகாலத்திலே,என்கை. உரைத்தான்-அருளிச்செய்த கீதாசார்யன், தன்னடி-ஸ்வசரணகமலயுகளத்தை,அடைவித்தனன்-ப்ராபிக்கச்செய்தான், ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே விசததமாதிகத ஸ்வரூபோபாய விவேகராக்கி ந்யஸ்தபரராக்கி வைத்தான்.

கத்யர்த்தமானவ்ரஜதாது புத்யர்த்தமாய் ஸாங்கமாய்ஸக்ருத்கர்த்தவ்யமான பரந்யாஸரூபாத்யவஸாய விசேஷத்தைச்சொல்லுகிறதென்று அருளிச்செய்கையாலே, முதலடியிலே அநாத்யாஜ்ஞாதிலங்கனமடியாக ஏதாவத் பர்யந்தம் தானிழந்தமையை அநுஸந்திக்கும்படியையும்,நடைவிலகாமலென்று ப்ராதிகூல்யவர்ஜனமும் இசைந்தென்று ஆநுகூல்யஸங்கல்பமும் துணிவுடனே யென்று மஹாவிச்வாஸமும் கடுவினையென்று கர்மங்களுக்கு ப்ராபல்யம் சொல்லுகையாலே தத்ப்ரதிகாதார்ஹமானதோர் கைம்முதலில்லாமை சொல்லிற்றாய் ஆகிஞ்சந்யமும் அடையென்பதில் கோப்த்ருத்வ வரணமும் அங்கியும் சொல்லிற்றாய்த்தென்று கொள்ளுக. உரைத்தானடைவித்தனன் தன்னடியே யென்று ஸாத்விகத்யாகம் சொல்லிற்று. (௬)

கானென்ற வேதங்கள் கற்கும்பரனென்று காட்டநின்ற
தானின்றறிய கிலார்க்கறிவிக்குந் தனித்திறலோன்
வானொன்றினாரோடு மானிடனென்ன வவதரிப்பான்
நானென்றநந்திரு மானம்மைநற்பதஞ் சேர்த்திடுமே. (எ)

அஹம் சப்தார்த்தம் சொல்லுகிறது. கானென்ற-காடுபோன்ற, துரவகாஹங்களானவென்கை. வேதங்கள்கற்கும்-வேதங்களால்கற்கப்படுமவனான 'வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:' இறே. பரன்-பரமபுருஷன், பரதத்வம், என்று - இப்படி, காட்டநின்ற-காட்டும்படிநின்றவனானதான் —,ஸர்வஸ்மாத் பரத்வேந வேதங்களாலே ப்ரதிபாதிக்கப்பட்ட தான் என்கை. இன்று-இப்போது,தான மநுஷ்யஸஜாதீயனாய் அவதரித்திருக்கச்செய்தே; அறியகிலார்க்கு-அறியஅஸமர்த்த ரானவர்களுக்கு, அறிவிக்கும்-தானே ப்ரகாசிப்பித்துத் தெரிவிப்பதான, தனி-ஒப்பற்ற, திறலோன்-ப்ரபாவமுடையவனும், 'பஹூநி மே வ்யதீதாநி' என்கிறபடியே தன் அவதாரரஹஸ்யத்தைத் தான் சபத பூர்வகமாக வாகிலும் வெளியிடு மவனான வென்கை. "அறியாத விடைச்சியரு மறியும் வண்ணம்." வான்-பரமபதத்திலே, ஒன்றினாரோடு-தன்னோடொக்க 'ஸவயஸ இவதே' என்று பெருமதிப்புடைய நித்யஸூரிகளோடுகூட,

மானிடனென்ன-மனுஷ்யனென்னும்படி, மனுஷ்ய ஸஜாதீயதயாளென்கை. 'க்ஷணேபிதேயத்ரவிரஹோதி துஸ்ஸஹ:' ஆகையாலே அவர்களைவிட்டுப் பிரியமாட்டாதே கூட்டிக்கொண்டு வந்தபடி. திருவநந்தாழ்வானிறே நம்பி மூத்தபிரான். திருவடி நேரே வந்திருக்கும். சேஷாசநன் பார்த்தனென்பர். இப்படியே மற்றும் கொள்க. அவதரிப்பான் - அவதரிப்பவனும், 'ததாத்மாநம்ஸ்ருஜாம்யஹம், ஸம்பவாமி யுகே யுகே' இறே. நான்-அஹம், என்ற-என்றருளிச்செய்த, நம்திருமால்-நமக்கு மாதாவான பெரிய பிராட்டியாரிடத்தில் வ்யாமுக்தனானவன், இது மாம் அஹம் ஸமபிவ்யாஹாரார்த்தம். மோக்ஷயிஷ்யாமியில் உத்தமனாலே அஹம் என்று தோற்றாநிற்க மிகுதிகாட்டுகிற அஹம்சப்தத்தினாலே தன் ஸ்வாதந்த்ர்யமும் மாமில் ஸௌலப்யமும் ஆக, பரஸ்பராதி சயாதாயகமான குணத்வயமும் ப்ரகாசிதமாயிருக்கிறது. நம்மை-அவன் திருவடிகளை ஆச்ரயித்த நம்மை, நற்பதம்-'தத்விஷ்ணோ: பரமம்பதம்' என்கிறபடியே உத்தமபதமான பரமபதத்தை, சேர்த்திடும் - சேர்ப்பான், நாம் ந்யஸ்தபராளாகையாலே, நாம் சோலினகாலத்திலே நாம் கோலினபலத்தைத் தருகைக்காக சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதியை ப்ராபிக்கும்படிசெய்வன்.

தன்னிலைகாட்டித் தனிமையுகந்து தனித்தகவால்
நன்னிலைதீரவடைக்கலங் கொண்டடி சேர்த்திடவே
பன்னிலைமூலவெழுத்திலும் பாண்டவர் தேர்தனிலும்
முன்னிலை கொண்டபிரா னெம்மை முன்னிலைகொண்டனனே. (அ)

இது 'த்வா' சப்தத்தின் அர்த்தத்தைக் காட்டுகிறது. நிர்பரத்வமிறே த்வா சப்தார்த்தம். தன்-தனது, நிலை-ஸ்திதியை, காட்டி - ப்ரதர்சிப்பித்து, சிதசித் விலக்ஷணனான தன் ஸ்வரூபத்தை, 'நத்வேவாஹம் ஜாதுநாஸம்' முதலான உபதேச பரம்பரைகளாலே அர்ஜுனனை வ்யாஜீகரித்து ஸர்வருக்கும் ப்ரகாசிப்பித்து என்கை. தனிமை-அஸஹாயதையை, உகந்து-ஸந்தோஷித்து, அல்பத்வா ஸ்திரத்வாதி தோஷங்களைத் தெளிகையாலே பரமபுருஷார்த்தத்தில் உத்கடாபிலாஷம் பிறந்து இதற்கென்று காட்டிய துஷ்கரோபாயாந்தரத்தில் துவக்கற்றபடியைக்கண்டு தன்னுபதேசம் பலித்ததென்று ஸந்தோஷித்தென்கை. நம்-நமது, நிலை-ஸ்திதியானது, தீர-தீரும்படி, நெடுங்காலம் பிழைசெய்த நிலை நீங்கும்படியாக, அநாத் யாஜ்ஞாதிலங்கனமடியாக ஸம்ஸரிக்கிற நிலை கழியவென்று திருவுள்ளம். தனி-ஒப்பற்ற, தகவால்-க்ருபையாலே, ஆச்ரிதரை ஒருவழியாலே கரையேற்றவேண்டுமென்று நினைத்தால் விலக்கவல்லாரில்லையென்று தனியென்றது. அடைக்கலம்கொண்டு-ரக்ஷ்யவஸ்துவாக ஸ்வீகரித்து, ஸர்வ ப்ராப்யனாய் பரமகாருணிகனாய் விரோதி நிராகரண க்ஷமனான தான் இவன்செய்யும் சரணவரணமென்னும் வ்யாஜத்தை ஒரு பெருங்கை முதலாக நினைத்து திருவுள்ளம் பற்றியென்கை. 'கோவிந்தேதியதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம்' என்பானிறே அவன். 'பூயிஷ்டாந்தே நம உக்திம்விதேம' இறே. அடி - ஸ்வசரண கமலயுகளங்களை, சேர்த்திடவே-சேர்க்கைக்காகவே, பூபாராவதரணம் வ்யாஜமாத்ரம். அவதார ப்ரயோஜநம் அகிஞ்சந ப்ரபந்நஜந மோக்ஷணம், பல்நிலை-பல நிலைகளையுடைய, ஏகமாத்ரம் த்விமாத்ரம் த்ரிமாத்ரம் என்றுப்போல்வன பலவிறே ப்ரணவத்தின்படிகள். மூலவெழுத்திலும் - ஸகல வேதமூலபூதமான ப்ரணவத்திலும், மூலமாகிய வொற்றை யெழுத்திறே. பாண்டவர்-பாண்டவரது, சரமச்லோகாவதார நிதாநபூதனாகையாலும் ஸ்ரீஸேநாபதியாழ்வான் அவதாரமாகையாலும் பாண்டவரென்று புகழ்ச்சிப்பன்மை. (பூஜாயாம் பஹுவசநம்.) தேர்தனிலும் - தேரிலும், ப்ரணவத்தையும் பார்த்தரதத்தையும் ஒப்பிட்டுச்சேர இணைத்தநுஸந்திப்பது நம்மாசார்யர்கள் பணி 'சிலைவிசயன் தேரணையச் சிறுவேதத்தே, ப்ரணவேபார்த்தரதேசபாவயந்த:.' இத்யாதி. முன் முன்னே, அக்ஷர த்ரயாத்மகமான ப்ரணவத்தில் ஆத்யக்ஷரத்தில், ஸாரதியாகையாலே ரதிக்குமுன்னே இருக்குமிறே. அபிமுகாகதர்முந்தறக்காண்பதிவனையாகாதே. நிலை-அவஸ்திதியை, கொண்ட-திருவுள்ளம்பற்றின, பிரான்-மஹோபகாரன், எம்மை-நம்மை. இருள்தருமாஞாலத்தில் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தட்டித்தாவற்றுப் பரிப்ரமிக்கிற நம்மை, முன்னிலை-முன்னிலையாக, நீர் நீ முன்னிலை. த்வா என்றானிறே. கொண்டனன் - கொண்டான், அர்ஜுனன் பேரிட்டு வைத்ததுமாத்திரம். த்வா என்றவனருளிச்செய்தது நம்மை என்கிறார். 'ஸர்வலோக சரண்ய' னிறே. 'ஸர்வபூதேப்ய:' 'அருக்காதேயனைவர்க்கு மனைவரானு மஞ்சேலென் றருள்கொடுக்கும்.' (அ)

காடுகளோ நரகோ கடிதாங் கரளத்திரளோ
சூடுவிடா வனலோ தொலையா நிலை நள்ளிருளோ
சாடுபடச் சரணாலன்று சாடிய சாரதியார்
வீடுசெய்வித்து நம்மைவிடுவிக்கின்ற பாவங்களே. (௬)

இது 'ஸர்வபாப' சப்தார்த்தம் சொல்லுகிறது. பாபமாவது சாஸ்த்ரங்கொண்டே அறியவேண்டும் அநிஷ்டஸாதநம்.

சாடு-சகடமானது, பட - நசிக்கும்படி, அன்று-ஸ்தந்யார்த்தியாய் ரோதனம் பண்ணினகாலத்திலே, சரணால்-திருவடியாலே, சாடிய - உதைத்த, 'போர்ந்தோர் சாடிறச்செய்ய பாதமொன்றாற்செய்த நின்சிறுச்சேவகமும்' என்றதிறே 'ஊர்சகடமிறச்சாடியதும்'. சாரதியார்-ஸாரதியான க்ருஷ்ணன், பாடுபடவென்று பாடமானபோது பாடென்று வருத்தமாய் பூமியின் துஸ்ஸஹபாரரூபமான வருத்தம் தீரும்படி இருவடிகளை அசைத்து தேரை நடத்திய சாரதியென்னுதல், அன்றிக்கே: பாடு என்று இடமாய் அது தப்பும்படி திருவடியால் தேரை யூன்றினவென்றுமாம். கர்ணயுத்தத்தினன்று நாகாஸ்த்ரத்தை இலக்குத் தப்புவிக்கும்படி திருவடி யூன்றினவென்றபடி. இத்தால் ஆச்ரிதரக்ஷணத்தில் அப்ரமாதித்வம் சொல்லிற்றாகிறது. "தம் வீக்ஷ்ய தீர்க்கம் யுயுத்ஸாயவஸ்தம் ஸ்வாந் நிதஃ ஸம்ஸிவத்ஸஸ்ரீமம் | வஹாவிநிஷ்பிஷ்ய ரயொத்தத்தம் வ்யாவெஸ்ய ஸாரணீம் கிஷ்க்காத்ராம்" என்னக்கடவதிறே வீடு-த்யாகத்தை, பரந்யாஸத்தையென்கை. செய்வித்து - பண்ணிவைத்து, நம்மை ரக்ஷாபரஸமர்ப்பணம் பண்ணும்படி செய்துவைத்தென்கை. நம்மை விடுவிக்கின்ற-நம்மை விட்டுப்போகும்படி செய்கின்ற, பாவங்கள்-பாவங்களானவை, 'வீடிசைமினே' ஒன்றதை அடியொற்றி வீடிசைவித்து என்று பாடமானாலும்பொருந்தும். வீடு-ஸமர்ப்பணத்தை, இசைவித்து - அப்யுபகமிக்கும்படிபண்ணியென்கை. ஸ்வரக்ஷாபரஸமர்ப்பணத்தைப் பண்ணுவித்தென்று பலிதம். பாவங்கள், காடுகளோ-விபிநங்களோ, பாபங்கள் போகவேண்டிய இடம் காடோ நரகோ இத்யாதி. 'நாட்டிலுள்ள பாவமெல்லாம் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே' என்னக்கடவதிறே. நரகோ-நரகமோ, கடிதாம்-க்ரூரமான, கரளத்திரளோ-விஷஸமூகமோ, அன்றிக்கே: விஷபிண்டமோ. விஷப்ரசுரமான கபளமோ என்னுதல். சூடுவிடா-உஷ்ணபாவத்தைவிடாத, அனலோ - அக்னியோ, மணிமந்த்ரௌஷதி பலாதிகளால் ப்ரதிகாதாநர்ஹமான அக்னியோ என்கை. தொலையா-ஒழியாத, நிலை-ஸ்திதியையுடைய, சாச்வதமான வென்கை நள் - நிபிடமான, இருளோ - அந்தகாரமோ, அவைகள் சரிப்பது காடோ நரகோ விஷகபளமோ அக்னியோ அந்தகாரமோ. அவை போய்த்தன, இனிமீளா என்கை.

ப்ராரப்தேதரங்களாய் ப்ராப்தி விரோதிகளாகவல்ல பூர்வபுண்ய பாபங்கள் உபாயாரம்பத்திலே கழியும்படியை அவை போவதுகாடோ என்றும் அபுத்திபூர்வங்களும் தேசகால வைகுண்யக்ருதங்களும் அலேப விஷயங்களாம்படியை நரகோ என்றும் அநுபத்தில் புத்திபூர்வோத்தராகங்கள் ஸ்வாதிகாராநுகுண ப்ராயச்சித்த விசேஷத்தாலேயாதல் சிக்ஷார்த்தமான லகுபல விசேஷத்தாலேயாதல் தீரும்படியை கடிதாங்கரளத்திரளோ என்றும் ப்ரபந்நனுக்கு ப்ராரப்தத்தில்இசைந்தகாலத்துக்குள்ளே விபக்வமாம் கர்மாம்சம் அநுபவத்தாலும் அவாந்தர ப்ராயச்சித்தத்தாலும் நாசநீய மாம்படியைச் சூடுவிடாவனலோ என்றும் உபயபாவநா க்ரமத்தாலே வந்த புத்திபூர்வோத்தரபுண்யங்களில் ப்ரதிபந்தகமில்லாதவையும் உபாஸகனுக்கு வித்யாநுகுண பூர்வோத்தரபுண்யங்களும் பலப்ரதாநத்தாலே கழியும்படியையும், வித்யைக்கநுபயுக்த புத்திபூர்வோத்தரபுண்யங்களில் அநுகூல ப்ரதிகூல ப்ரபல கர்மாந்த்ரபலங்களாலே நிருத்தாவஸரங்களாய் பலங்கொடுக்கப்பெறாதே மிகுதியாய் நின்றவை அந்திமகாலத்திலே கழியும்படியையும் தொலையாநிலை நள்ளிருளோ என்றும் அருளிச்செய்தார்.

விடுவிக்கின்ற பாவங்கள் துரவகாஹத்வ துஸ்தரத்வங்களாலே மருகாந்தாரங்களோ, துஸ்ஸஹதுக்கஜநகத்வாதிகளே ரௌரவாதிநரகங்களோ, துக்கமிச்ரத்வாதிகளாலே விஷ ஸம்ஸ்ப்ருஷ்டமான அன்னகபளமோ, தாபத்ரய ஜநகதயா அனலோ, ஸ்வரூபதிரோதாநாதிகளைப் பண்ணுகையாலே அவிநாச்ய காடாந்தகார யுக்தமான காளராத்ரியோஎன்று பொருள்கூறுவாருமுண்டு. இப்படி இதஃபூர்வம் நினைக்

கலாம்படியாயிருந்த எல்லாபாபங்களையும் விடுவிக்குமென்று கருத்து. ப்ராரப்தேத ரங்களை காடுகளென்றது. அப்யுபகதமாய் அநுபூயமான பாபங்களை நரகென்றது. புண்ய சப்திதங்களை கடிதாங்கரளத்திரள் என்றது. இப்படி 'க்ருதாந்' என்றதைச் சொல்லி 'சூடுவிடாவனலோ' வென்று 'க்ரியமாணாந்'என்றதைச்சொல்லி 'க்ரிஷ்ய மாணாம்ச்சஸர்வாந்' என்றதை 'தொலையாநிலை நள்ளிருளோ' என்கிருர் என்னுமாம்.

சென்றுயர் வானமர்ந்தவ்வடியாருடன் சேர்ந்திடவே
இன்றெனிலின்றுநாளை யெனிணுளை யினிச்செறிந்து
நின்றநிலை நின்றனைத்து வினையுநின் விட்டகலக்
கன்றிவிடுப்பனென்ருன் கருத்தானம்மைக் காத்திடுமே. (௧0)

இது 'மோக்ஷயிஷ்யாமி'யின் அர்த்தம் சொல்லுகிறது. நீ நினைத்தபோது விடுவிப்பேன் என்றிறே அதின் அர்த்தம்.

இனி-நீ என்னிடத்தில் ரக்ஷாபரந்யாஸம் செய்தபின்பு, செறிந்து-நீ பிரஸங்களாய், நின்ற-இருந்தவையான, நிலைநின்ற-ஸ்திரப்ரதிஷ்டிதங்களான, நின் - உன்னுடையவையான, அனைத்துவினையும் - ஸகலகர்மங்களும், 'ஸர்வபாபேப்ய:' என்ருனிறே. ப்ராப்திவிரோதிகர்மங்களுக்கார்யமாயும் காரணமாயும் வருகிற அவித்யா வாஸநாதிகளும் ஸர்வபாபசப்தார்த்தமாகையாலும் ஆநந்த்யம் பஹுவசநார்த்தமாகையாலும், செறிந்துநின்ற வென்று கார்யகாரணபலிஷ்டத்வமும் நிலைநின்றவென்று ஆநந்த்யமும் சொல்லிற்ருகிறது.விட்டு-ந்யஸ்தபரனுன உன்னைவிட்டு, அகல-விலகிப்போம்படி, ஸுக்ருத துஷ்க்ருதங்கள் ஸுஹ்ருத் துர்ஹ்ருத்துக்கள் பக்கலிலேஸங்க்ராந்தமாம்படி யென்கை. சென்று-அர்ச்சிராதிகதியாலே சென்று, உயர்-ஸர்வோத்க்ருஷ்டமான வான்-பரமபதத்திலே, அமர்ந்து - புநராவ்ருத்தியில்லாதபடி ஸ்திரமாயிருந்து, அவ்வடியாருடன் - என்னுடைொக்க ஸமாநபோகராய் ஆநந்தாநுபவம் பண்ணுகிற நித்யமுக்தர்களோடு, சேர்ந்திட-நீ ஒருகோர்வையாகச்சேரும்படி, இழந்தநாள் பலத்தினிழவத்தனைபோக்கி மேல் பலபாகத்தில் வைஷம்யமில்லையிறே. அன்றிக்கே: அமர்ந்த - ஸ்திரப்ரதிஷ்டிதரான, அடியாருடன் - நித்யமுக்தர்களோடென்றுமாம். இன்றெனில்-இன்றே பரமபுருஷார்த்தம் பெறவேண்டின், இன்று-இப்போதேவிடுப்பன், நாளையெனில் - நாளைக்கு ஆகட்டுமென்ருல், நாளை-நாளைய தினம் விடுப்பன், நீ கோலினகாலத்திலே விடுவிப்பன் என்கை. கன்றி-கோபித்து, 'க்ரோதமாஹாரயத்தீவ்ரம்' என்று கோபந்தான் இவனிட்டவழக்காயிறே இருப்பது. ஆச்ரிதரை நலிந்ததென்ருக்கடுஞ்சீற்றம் பிறக்குமிறே. விடுப்பன், அநாதிவிபரீதாநுஷ்டானத்தாலே பிறந்த நிக்ரஹஸங்கல்பத்தை நான் விடுவேனென்றபடி. என்ருன்-'மோக்ஷயிஷ்யாமி'என்று அருளிச்செய்தவன்,கருத்தால்-ஸங்கல்பத்தாலே, நம்மை-ந்யஸ்தபரராய் சாதகவ்ரதிகளான நம்மை, காத்திடும்-ரக்ஷித்தருளும். 'க்ஷிப்ரம் ஸம்ஸ்ருதி சர்வரீம் க்ஷிபதியத் ஸங்கல்ப ஸூர்யோதய:'என்று ஸம்ஸார நிவர்த்தகம் ஸங்கல்பமேயிறே. (௧0)

அறிவுமனைத்து மிலாவடியோமை யடைக்கலங்கொண்
டுறவெனநின்றதெல்லா முறவேநின்ற தானெமக்காய்
மறுபிறவித்துயர்வாராவகை மனங்கொண்டகலா
இறையவனின்னருளா லெங்கள்சோகந் தவிர்த்தவனே. (௧௧)

'மாசுச:' இன் அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு பிரபந்தத்தை நிகமிக்கிறது.

அனைத்தறிவும் இலா - ஸர்வஜ்ஞானமுமில்லாத, தேஹாத்மஜ்ஞாந மில்லாதே சேஷசேஷிபாவ ஜ்ஞானமில்லாதே ஸ்வரூபாநுரூப புருஷார்த்தஜ்ஞானமில்லாதே தது சிதோபாய ஜ்ஞானமில்லாதே இப்படி இவனுக்கு ஆவச்யகமான ஜ்ஞானங்கள் எல்லாம் கிடக்க விபரீதமான ஜ்ஞானமுண்டாயிராநின்றதென்று தோற்ற இரண்டும்மை கொடுத்தது. அடியோமை - ஸ்வரூபத்தாலே நிருபாதிக தாஸபூதரான நம்மை, ஆசார்யாநுக்ரஹத்தாலே லப்தமந்த்ரராய் ஸ்வரூபஜ்ஞானம் பெறும்படிபண்ணி தாஸராக்கிவைத்த நம்மையென்னுமாம். அடைக்கலம்கொண்டு-ரக்ஷ்யவஸ்துவாக அங்கீகரித்து, நாம் பண்ணின ரக்ஷாபரஸமர்ப்பணத்தைத் திருவுள்ளம்பற்றியென்கை. உறவென-பந்துவென்று சொல்லும்படியாக, நின்றதெல்லாம்-நின்றவையெல்லாம். 'அன்னையாய் அத்தனாய்' இத்யாதியாலே சொல்லப்படுகிற பாந்தவ்ய

மெல்லாமென்கை. உறவே-அடைகைக்காகவே, நின்ற-இருந்தவனுன், தான்—;எம க்காய்-நமக்காக, நாம் அநர்த்தப்படாதபடி பண்ணுகைக்காக என்றபடி. மனங்கொண்டகலாவென்று கூட்டுவது. அன்றிக்கே: உறவெனநின்றதெல்லாம் எமக்குநின்ற உறவு தானேயாய் என்றுகூட்டி 'மாதா பிதா ப்ராதா நிவாஸச்சரணம்ஸுஹ்ருத் கதிர்நாராயண:'என்கிறபடியே நித்யநிருபாதிக ஸகலவிதபந்துவும் நமக்குத்தானேயாயென்னுதல். மறுபிறவித்துயர்-ஜன்மாதரதுக்கம், வாராவகை-நமக்கு நேராவண்ணம்,மனங்கொண்டு-மனதை நியதவாஸஸ்தலமாகத் திருவுள்ளம்பற்றி, அகலா-நீங்காத, பெரியபிராட்டித் தன்னகலத்தை விடமாட்டாதாப்போலே இவனும் நம் மனதைவிட்டகலமாட்டாதவன் என்கை. 'இன்றவன் வந்திருப்பிடம் என்தனிதயத்துள்ளே தனக்கின்புறவே.' 'கொள்ளக்குறைவற் றிலங்கிக் கொழுந்துவிட்டோங்கிய நின்வள்ளற்றனத்தினுல் வல்வினையேன் மனம்நீபுகுந்தாய்' இறையவன்-ஸர்வஸ்வாமியானவன், அந்திமப்ரத்யயம் தன்கார்யமேயிறே 'அஹம் ஸ்மராமி' இறே. 'அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்'என்றவனுகையாலே இவனுக்கு தேஹாவஸாநகாலத்தில் நாம் தாழ்த்தோமாக வொண்ணுதென்று மனத்தே கோயில் கொண்டவனென்று திருவுள்ளம் இன்னருளால்-போக்யமான க்ருபையாலே,எங்கள்-அவன் திருவடிகளிலே ந்யஸ்தபரரான எங்களுடைய, சோகம் - சோகத்தை, தவிர்த்தனன்-நீக்கினுன். 'மாசுச:' என்று அருளிச்செய்தானிறே.

கீதாசாஸ்த்ரம் அர்ஜுனனை வ்யாஜீகரித்து ப்ரவ்ருத்தமாயிருக்கும். அதில் பந்துவதாதி நிமித்தகசோகங்கள் யதாவஸ்திதாத்மோபதேசாதிகளாலே கழிக்கப்பட்டன. ப்ருக்ருதியைப்பற்றவந்த சோகம் 'மாசுசஸ்ஸம்பதந்தைவீம் அபிஜாதோஸி' என்று கழிக்கப்பட்டது. இதில் உபாய தௌஷ்கர்ய விரோதி பாகுள்ய பலவிளம்பப்ரயுக்தசோகம் கழிக்கப்படுகிறது. சரமச்லோகந்தான் அர்ஜுனனை லக்ஷீகரித்து பரவ்ருத்தமானுலும் சரண்யாபிப்ப்ராயத்தாலே அது ஸர்வவிஷயம். ஆகையாலே எங்கள் சோகந்தவிர்த்தனனே என்னக்குறையில்லை. இங்கு சோகம் என்றது பயத்துக்கும் உபலக்ஷணம். ஒன்றைச்சொல்ல இரண்டும் வருமாகையாலே சோகமென்றிவ்வளவே அருளிச்செய்தது. 'அஞ்சினநீயென்னை அடையென்றூர்வந்தார்.' என்றதிறே. அதிகாரவிசேஷத்தையும் உபாயவிசேஷத்தையும் பலஸித்தியையும் பற்ற உபாயாநுஷ்டான பூர்வாபர மத்யதசைகளில் பலபடியாக சோகங்கள் ஸம்பாவிதமாகையாலே ஜ்ஞாநாநுஷ்டானங்கள் இரண்டினுடையவும் பலமான சோக நிவ்ருத்தியெல்லாம் இங்கே அபிப்ரேதமென்று திருவுள்ளம்.

இச்சரமச்லோகம் திரளிலே கேட்பிக்கலான இதிஹாஸத்திலேற்பட்டுக்கிடக்கையைப்பற்ற சப்தம் ப்ரகாசமாய்ச் சொல்லலாமாகையாலே அர்த்தத: ரஹஸ்யமாயிருக்கும் என்று ஸம்ப்ரதாயம். (கக)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருமகளார் திருமகனுந் தாதசூரித்
திருநாவீறுடைய பிரான்பதமே போற்றும்
பெருமையுடைவேங்கடநல் வரதனென்னுங்
குருவரனூர் மகனுகித் தாதைபாதம்
மருவிநனிக்கசடறவே கலைகள்கற்றுன்
கருவினிலாந் திருவுடையன் சாரவேதி
திருமலையினமுதடைத்தாதவாக்கிச்
சரமவுரைச்சுருக்குக்கோருரையிட்டானே.

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநம:.

சரம சுலோகச் சுருக்கு வியாக்கியானம்முற்றிற்று.

---

லக்ஷ்மீகுமாரதாததேசிகன்திருவடிகளேசரணம்.



ஸ்ரீமதேநிகமாந்தமகாதேசிகாயநமஃ

# கீதார்த்த ஸங்க்ரஹ வ்யாக்யாநம்.

ఆరభ్యస్వగురుభ్యః...నత్వా। గీతార్థసారసంగ్రహగాథావివృషీయసంగజిత్ ప్రీత్యై॥
ఆనాజిఘ్రన్నేవ... పటిమా॥
గాథాఇమాః... ఊశంకాః॥

ஆரப்யஸ்வகுருப்யஃ...... ஸ்ரீசமபிவ்யாப்யகுருததிம்நத்வா
கீதார்த்தஸாரஸங்க்ரஹ காதாவிவ்ருஷீய ஸங்கஜித்ப்ரீத்யை (க)
அநாஜிக்ரந்நேவ - படிமா (உ)
காதாஇமாஃ...களிதாதி சங்காஃ (ரு)

கருமமுஞ்ஞாநமுங் கொண்டெழுங்காதலுக் கோரிலக்கென்
றருமறையுச்சியு ளாதரித்தோதுமரும் பிரமம்
திருமகளோடு வருந்திருமாலென்று தானுரைத்தான்
தருமமுகந்த தனஞ்சயனுக் கவன்சாரதியே. (க)

“தத்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ்ஸர்வதோமுகைஃ (1) தத்வமேகோ மஹாயோகீ ஹரிர்நாராயணஃ பரஃ, ஆலோட்யஸர்வசாஸ்த்ராணி விசார்யசபுநஃ புநஃ, இதமேகம்ஸுநிஷ்பந்நம் த்யேயோ நாராயணஸ்ஸதா” இத்யாதி ப்ரமாண ஸங்க்ரஹீத தத்வ ஹித புருஷார்த்த ப்ரதர்சகமாய் “அத்ரோபநிஷதம் புண்யாம்க்ருஷ்ணத்வைபாயநோப்ரவீத்” என்கிறபடியே உபநிஷத் ஸாராத்மகமாகையாலே “பாரதே பகவத்கீதா தர்மசாஸ்த்ரேஷுமாநவம். வேதேஷுபௌருஷம் ஸூக்தம் புராணேஷுசவைஷ்ணவம்” என்று மஹாபாரத ரஸத்வேந நிர்ணீதமாய் “யஸ்மிந் ப்ரஸாதஸுமுகேகவயோபிதேதே சாஸ்த்ராண்ய சாஸுரிஹதந் மஹிமாச்ரயாணி, க்ருஷ்ணேநதேநயதிஹஸ்வயமேவகீதம் சாஸ்த்ரஸ்யதஸ்யஸத்ருசம் கிமிஹாஸ்திசாஸ்த்ரம்” என்று அபியுக்தராலே வக்த்ரு வைலக்ஷண்யப்ரயுக்த பரமோத்கர்ஷ சாலித்வேந ப்ரசம்ஸிதமாய் பெரியமுதலியாராலே ஸ்ரீமத்கீதார்த்தஸங்க்ரஹத்திலே ஸங்க்ருஹீத சாஸ்த்ரஷட்கா த்யாய ஸாரார்த்தமாய் பகவத்பாஷ்யகாரராலே ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தாலே விசதப்ரதர்சித பதவாக்யார்த்த யோஜநாகமாய் தம்மாலே ஸ்ரீமத்கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷையிலே ரக்ஷித ஸாரார்த்தமாய் ஸ்ரீமத்கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையிலே பரமத [illegible] க்ஷேப பூர்வகமாக நிஷ்கம்பீக்ருதார்த்தமான ஸ்ரீகீதாசாஸ்த்ரத்திலுள்ள [illegible] ர்த்தங்களை த்ரமிடஸூக்தி ரஸிக ஸாத்விக ஸமாஜ சித்தரஞ்ஜநார்த்தமாக த்ரமிட காதைகளாலே ஸங்க்ரஹிக்க வுபக்ரமித்து “ஸ்வ தர்ம ஜ்ஞாந வைராக்ய ஸாத்ய பக்த்யேக கோசரஃ, நாராயணஃ பரப்ப்ரஹ்மகீதா சாஸ்தரே ப்ரகீர்த்திதஃ” என்கிற ச்லோகத்தின்படியே க்ரோடீக்ருத ஷட்கத்ரயார்த்தமான சாஸ்த்ர மஹாவாக்யார்த்ததை நிஷ்கர்ஷித்தருளிச்செய்கிறார்.

தருமம்-தர்மத்தை, உகந்த - அநுபவித்தவனை, தனஞ்சயனுக்கு - அர்ஜுனனுக்கு, “விவாதபீதாயவிதிப்ரியாய” என்கிறபடியே தர்ம ச்ரவண ததநுஷ்டாநைக ப்ரவணனான வர்ஜுனனுக்கென்றபடி, இங்கர்ஜுனனை தனஞ்ஜயபதத்தாலே நிர்தேசித்தது தநஞ்ஜயதீதி தநஞ்ஜயஃ என்கிற வ்யுத்பத்தி லப்த தநத்ருஷ்ணா விஜய ப்ரதர்சநார்த்தம். ஆக விசேஷண விசேஷ்ய பதங்களால் “ச்ருதாதந்யத்ர ஸந்துஷ்டஸ் தத்ராவசகுஹூஹலீ” என்கிறபடியே ச்ரோதவ்ய சாஸ்த்ராபிருசியும் தத் வ்யதிரிக்த விஷயே ஷ்வலம் புத்தியும் ப்ரதிபாதித மாகையாலே யிவனுக்கு சாஸ்த்ரார்த்த ச்ரவணா திகார பௌஷ்கல்யம் தர்சிதம். அவன் - அந்த வர்ஜுநனுடைய, சாரதி - ஸாரதி, ஆச்ரிதவாத்ஸல்ய ப்ரயுக்த பாரதந்த்ர்யாதிசயத்தாலே யர்ஜுநஸாரத்ய ப்ரவ்ருத்தனான ஸர்வேச்வர னென்றபடி. இதுக்கு ரைத்தானென்கிற த்தோடே யந்வயம். கருமமும் - கர்மயோகத்தையும், ஞாநமும் - ஜ்ஞானயோகத்தையும். கொண்டு - அவலம்பித்து, எழும்-உத்பவிக்குமதான, ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞான பூர்வக பரித்யக்த பலாதிஸங்க பரமபுருஷா ராதநைக வேஷ நித்யநைமித்திகாதி சாஸ்த்ரார்த்த ரூப கர்மயோகத்தாலும் பரிசுத்தாத்ம

ஸ்வரூப நிரந்தர ஸ்ம்ருதி ஸந்ததி விசேஷ ரூப ஜ்ஞாநயோகத்தாலும் பரிகர்மிதாந்
தஃகரண நிஷ்பாத்யா த்மஸாக்ஷாத்கார ஸாத்யத்வேந கர்மயோக ஜ்ஞானயோகங்
களை யாத்ம ஸாக்ஷாத்கார த்வாரா ஸாதநத்வெ நா பேக்ஷிக்குமதான வென்று நிஷ்
க்ருஷ்டார்த்தம். காதலுக்கு - ப்ரேமத்துக்கு, பக்தியோகத்துக் கென்றபடி. தைல
தாராவ தவிச்சின்ன ஸ்ம்ருதி ஸந்தாந ரூப மாயாப்ரயாண மநுவர்த்தநீயமாய்
அஹரஹ ரப்யாஸாதேயாதிசயமாய் தர்சந ஸமாநாகார பக்தி யோகத்தை ப்ரேம
ரூபமாக நிர்த்தேசித்தது "நாயமாத்மாப்ரவசநேநலப்யோ நமேதயாநபஹுநாச்ரு
தேந" என்கிறபடியே பூர்வோக்த யோகம் நிரதிசய ப்ரேம ரூபதயா பரிணமித்தா
லல்லது பரம புருஷ வரணீயதா ஹேது வாக மாட்டா தென்று ப்ரேமாகார பரி
ணமத்தினுடைய ப்ராதாந்ய த்யோதநார்த்தம். ஓரிலக்கு-ஏகலக்ஷ்யம், இங்குலக்ஷ்
யத்வமாவது பலத்வேநோத்தேச்யத்வம். இந்தயோஜனையிலோரென்கிறபதமவதா
ரணார்த்தமாய் ஜ்ஞாநகர்மாதி ப்ராப்யத்வ வ்யவச்சேதபரம். "பக்த்யேககோசர"
இதிபக்தேரேவ கோசரோ நாந்யஸ்யே த்யர்த்தஃ. ஏதேந கர்மஸமுச்சய வாக்யார்
த்த ஜ்ஞாநாதிபக்ஷாஃ ப்ரதிக்ஷிப்தாஃ. கோசரத்வ மிஹ பலத்வே நேதி க்ராஹ்யம்.
'பக்த்யேகலப்யே புருஷேபுராண'இத்யாதிபிரைகார்த்த்யாத் பக்தியோக லப்யஇதி
ஸ்வொக்தி ஸம்வாதாச்ச" என்று கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையிலே தாமே அருளிச்
செய்தாரிறே. லக்ஷ்யத்வம் விஷயத்வ மென்னவுமாம். இது நிரங்குசைச்வர்யாதி
யுக்ததயா பக்த்யர்ஹத்வ மிஹ தத்கோசரத்வ மென்றருளிச்செய்தாரிறே.அப்போது
ஓரென்கிறபதம் பக்தியோகத்துக் கைகாந்தி கத்வாதி ப்ரதர்சநார்த்தம். இந்தயோஜ
னையில் பரமபுருஷனுக்கு பலத்வம் தத்க்ர துந்யாய ஸித்த மென்று கண்டுகொள்
வது. ஆக இவ்வளவால்பூர்வொதாஹ்ருத சாஸ்த்ரார்த்த ஸங்க்ரஹ ச்லொகத்தில்
பூர்வார்த்த மநுவர்ணிதமாய்த்து. கருமமும் ஞாநமு மென்கிறவித்தால் "ஜ்ஞாநகர்
மாத்மிகே நிஷ்டேயோகலக்ஷ்யே ஸுஸம் ஸ்க்ருதே, ஆத்மாநுபூதி ஸித்யர்த்தே
பூர்வஷட்கேந சோதிதே" என்கிற ஸங்க்ரஹ ச்லோக ஸங்க்ருஹீதமான பூர்வஷ
ட்கார்த்தமும் காதலுக்கென்கிற வித்தால் "மத்யமேபகவத்தத்வ யாதாம்யாவாப்தி
ஸித்தயே" ஜ்ஞாந கர்மாபி நிர்வர்த்யொ பக்தியோகப்ரகீர்த்திதஃ" என்கிற ச்லோக
ஸங்க்ருஹீதமான மத்யம ஷட்கார்த்தமும் க்ரோடீக்ருதமாய்த்து. இதுக்கோது மெ
ன்கிற த்தோடே யந்வயம். அரு - துர்போதங்களான, மறையுச்சியுள் - வேதசிரஸ்
ஸுக்களிலே, இங்கு வேதாந்தங்களுக்கு துர்போதத்வோக்தியாலே யச்லோகோப
ப்ரும்ஹணீயத்வம் பலிக்கையாலே ஸ்ரீமத்கீதோபநிஷதாம் வேதாந்தைஃ க்ருதகத்வ
சங்காப்ரத்யுக்தா. ஆதரித்து - ஆதரம்பண்ணி, ஓதும் - அதீதமான, அரும் - பக
வத் பக்தி விகலராலே துர்போத துஷ்ப்ராபமான, பிரமம் - ப்ரஹ்மம், பரப்ரஹ்ம
மென்றபடி, அரு மென்கிற துர்போதத்வோக்தியாலே ஸர்வ ஸாதாரணா ஹம்ப்
ரத்யயகோசரத்வேநஸுலபதம ஜீவரூபா வரப்ரஹ்மம் வ்யாவ்ருத்திஃ. ஆதரித்தோது
மென்கிற விசேஷணத்தாலே ஸ்வதஃ நிரதிசயாநந்தரூபதயா பரமப்ராப்ய ப்ரஹ்ம
போதகங்களான வேதாந்தங்களுக்கு ப்ரவ்ருத்திநிவ்ருத்தி பரத்வாபாவேபி ஸமய
ஸூத்ரோக்தரீத்யா புருஷார்த்த பர்யவஸாயித்வெந ப்ராமாண்யந் துரபஹ்நவ
மென்று ஸூசிதம். திருமகளோடு - பெரியபிராட்டியாரோடு, வரும்-புத்தியில் வரு
மவனான, ஸர்வாவஸ்தையிலும் ஸ்ரீவிசிஷ்டனாகவே ப்ரமாண ப்ரதிபந்நனான வென்
றபடி. இத்தால் பிராட்டிக்கு பக்தியோக விஷயத்வமும் பரப்ரஹ்மத்துக்கு
தேவதாந்தரவைலக்ஷண்யமும் தர்சிதம். திருமால் - உபயவிபூதி ஸ்வாமீ, இங்கு
திருவென்கிறபதம் ஸம்பத் வாசகமாயுபயவிபூதி பரமாகையாலும் மாலென்கிற
பதம் ஸ்வாமிவாசகமாகையாலும் திருமகளோடு வரு மென்கிறத்தோடு புநருக்
தியில்லை. யத்வா - திருமகளோடுவரு மென்கிறது ஸர்வாவஸ்தையிலும் லக்ஷ்மீ
ஸம்பந்தமாத்ர தத்பரமாகையாலும் திருமாலென்கிறபதம் ததுபபாதக லக்ஷ்மீ
விஷயக நிரதிசய ப்ரேமபரமாகையாலும் புநருக்தியில்லை. ஜ்ஞாந கர்மாபிநிர்
வர்த்தித பக்தியோக லக்ஷ்யத்வேந வேதாந்தாம்நாதமான பரப்ரஹ்மம் ஸ்ரீமந்நா
ராயணனென்று திரண்டபொருள். இத்தால் ஸமாநப்ரகரண படிதங்களான
ஸத் ப்ரஹ்மாதிசப்தங்களுக்கு ச்சாகபசுந்யாயேந உசிதவிஷய பர்யவஸாநம் தர்சித
மென்றபடி. தான் - ஸ்வயமெவ், உரைத்தான் - சொன்னான். ஸ்ரீகீதாசாஸ்த்ரத்தி
லிதிசேஷஃ. ஸ்ருதிஸ்ம்ருதித்வாரக மன்றிக்கேஸாக்ஷாதேவ உபதேசித்தானென்
றபடி. இங்கு ஸர்வேச்வரனுக்கு அரும் பிரமமென்கிற சித்வைலக்ஷண்ய கதநே
நாசித்வைலக்ஷண்யம் கைமுத்ய ஸித்தமாகையாலே "ப்ரதாந புருஷ வ்யக்த

ஸர்வேச்வர விவேசனம், கர்மதீபக்திரித்யாதிஃ பூர்வசேஷோந்தி மோதிதஃ’ என்கிறசரமஷட்க ஸங்க்ரஹச்லோக பூர்வார்த்தஸங்க்ருஹீதமான சரமஷட்க பூர்வ த்ரிகார்த்தமும் தருமமுகந்தவென்கிற தநஞ்ஜயவிசெஷண தர்மாபிருசி கதநத்தாலே கர்மதீபக்திரித்யாதி சப்தவிவக்ஷித சாஸ்த்ரார்த்தோப பாதந ப்ரகார சாஸ்த்ரவச்யத்வாதிகமும் ஸூசிதமாகையாலே சரமஷட் கார்த்தமு மந்தர்பாவிதமாய்த்து. கர்மஜ்ஞாநபக்திகள் ஷட்கத்வய ப்ரதிபாத்யத்வேந ப்ரதர்சிதங்களாகையாலே விவைத்ஷைதசரமஷட்கார்த்தத்வேந புநஃகீர்த்தியாதொழிந்தபடி. (க)

உகவையடைந்தவுறவுடையாருறவற்றவந்நாள்
தகவுடையன்புகரைபுரளத் தருமத்தளவில்
மிகவுளமஞ்சி விழுந்தடிசேர்ந்த விசயனுக்கோர்
நகையுடனுண்மையுரைக்கவமைந்தனர்நாரணரே (உ)

இப்படி யந்தர்நீத ஷட்கத்ரயார்த்தமான சாஸ்த்ர மஹாவாக்யார்த்தத்தை ஸங்க்ரஹித் தினிமேல் அத்யாயாஷ்டாதசகார்த்தங்களைக் க்ரமேண காதாஷ்டாதசகத்தாலே ஸங்க்ரஹிக்கக்கோலி முற்பட ‘‘அஸ்தாந ஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாகுலம், பார்த்தம்ப்ரபந்நமுத்திச்யசாஸ்த்ராவதரணம்க்ருதம்’’ என்கிற ஸங்க்ரஹச்லோகத்தின்படியே ‘‘தமுவாசஹ்ருஷீகேசஃ ப்ரஹஸந்நிவபாரத, ஸேநயோருபயோர்மத்யேஸீதமாந மிதம்வசஃ’’ என்கிற ச்லோகபர்யந்த த்விதீயாத்யாயைகதேச சிரஸ்கமான ப்ரதமாத்யாயத்தினுடைய சாஸ்த்ராவதாரோபயுக்தமான வர்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார்.

நாரணர்-நாராயணன், இங்கு பஹுவசநம் கீதோபநிஷ துபதேச கௌரவ ப்ரயுக்தம். கீதாசார்யனை நாராயண பதத்தாலே நிர்தேசித்தது ததுபதேசோபயுக்தகாருண்ய வாத்ஸல்யாதி குணங்களுக்கு ஜ்ஞாபநார்த்தம். உகவை - ப்ரீதியை, அடைந்த - ப்ராப்தரான, உறவுடையார் - ஸம்பந்தத்தை யுடையவர், இங்கு உறவு சப்தத்தாலே வித்யா ஸம்பந்தம் யோநி ஸம்பந்த மிரண்டும் விவக்ஷிதம். அதிஸ்நிக்தரான வாசார்யாதிகளும் பித்ராதிகளு மென்றபடி. உறவு - ஸம்பந்தத்தை, அற்ற - பரித்யஜித்த, அந்நாள் - அந்த தினத்திலே, த்ரோண பீஷ்ம துர்யோதநாதிகள் ப்ராக்ஸித்த ஸம்பந்தத்தை பரிஹரித்து பாண்டவ வதார்த்தமாக யுத்தஸந்நத்தரான காலத்திலே யென்றபடி ‘‘தாந்ஸமீக்ஷ்யஸகௌந்தேய ஸ்ஸர்வாந்பந்தூநவஸ்திதாந்’’ என்னுமளவாக வுண்டான வர்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி. இத்தால் வக்ஷ்யமாண க்ருபா ஸ்நேஹங்களுக்கு அநௌசித்யம் தோற்றுகையாலே ஸங்க்ரஹ ச்லோக கதாஸ்தாநபதம் வ்யாக்யாதமாய்த்து. தகவுடை-க்ருபாஸஹிதமான, அன்பு-ஸ்நேஹம், கரைபுரள - வேலாதிக்ரமம் பண்ண, ஆசார்ய பித்ராதி விஷயமாக க்ருபாஸ்நேஹங்கள் அந்தர் தாரயிது மசக்யங்களாய் ஸர்வதர்மஜ்ஞ ஸர்வப்ரகார ஹிதப்ரவர்த்தகனான ஸர்வேச்வரன் பாரதஸமரப்ரவர்த்தந வ்யாஜேநபூபாராவதரண ப்ரவ்ருத்தனா யிருக்க வவனைக் குறித்து ‘குரூநஹத்வாஹிமஹாநுபாவாந்ச்ரேயோபோக்தும்பைக்ஷமபீஹலோகே’’ என்கிறபடியேநயுத்தாபேக்ஷயா க்ஷத்ரிய ஸ்வரூப விருத்தமான பைக்ஷாசரணமாகிலும் ப்ரசஸ்த மென்று சொல்லுகிற காலத்திலே யென்றபடி. தருமத்து - தர்மத்தினுடைய, அளவில் - பரிச்சேதத்திலே, உளம்-அந்தஃகரணமானது, மிக-அத்யந்தம், அஞ்சி-பயப்பட்டு, க்ஷத்ரியனுக்கு பரமதர்மமான யுத்தத்திலே யதர்ம புத்தியாலே பீதமநஸ்கனா யென்றபடி. இங்கு ‘‘பந்துஸ்நேஹேநபரயாசக்ருபயாதர்மபயேநச’’ என்கிற ப்ரதமாத்யாயாந்தபாஷ்யாநுகுணமான தர்மாதர்மபயாகுலம் என்கிற ஸங்க்ரஹச்லோக பாடத்தையநுஸரித்து மிகவுள மஞ்சியென்றருளிச்செய்தபடி. ‘‘ஏவமஸ்தாநேஸமுபஸ்திதஸ்நேஹகாருண்யாப்யாமப்ரக்ருதிம்கதம் க்ஷத்ரியாணாம்யுத்தம்பரம தர்மமப்யதர்மமந்வாநம்’’ என்று சாஸ்த்ராவதாரிகா பாஷ்யாநுகுணமாக தியாகுலம் என்றுபாடமானபோது உளமஞ்சி யென்கிறபத மாகுலசப்தார்த்த ப்ரதர்சந பரமாகக்கடவது. விழுந்து - ப்ரணிபதித்து, அடி - சரணங்களை, சேர்ந்த - ஆச்ரயித்தவனான, ‘‘யச்ச்ரேயஸ்யாந்நிச்சிதம்ப்ரூஹிதந்மேசிஷ்யஸ்தேஹம்சாதிமாம்த்வாம்ப்ரபந்நம்’’ என்று தர்ம புபுத்ஸயா சரணாகதனான வென்றபடி. விசயனுக்கு - விஜயனுக்கு, விஜயனை யுத்தேசித்தென்றபடி. ஓர்-விலக்ஷணமான, விரோத வ்யஞ்ஜகமான வென்றபடி. நகையுடன்-ஸ்மிதத்தோடேகூட, ‘‘తమువాచహృషీ కేశః ప్రహసన్నివ భారత’’

ఇతిశ్లోక వ్యాఖ్యానావసరే "ఏవం దేహాత్మనోర్యాథాత్మ్యజ్ఞాన నిమిత్తశోకావిష్టం దేహాతిరి క్తాత్మజ్ఞాన నిమిత్తంచధర్మం ద్వాపరూణాం పరస్పరవిరుద్ధ ధర్మేణ న్వితము భయోస్సేన యోయుర్ద్ధాయోమ్యుక్తయోమర్థ్యఅకస్మాన్నిర తద్యోగంపార్థమవలోక్యపరమపురుషః ప్రహసన్నివ-పరిహాసరూప వాక్యంవదన్నితి" என்று பாஷ்யகாரரருளிச்செய்த படியே விருத்ததர்மஸமாவேசப்ரயுக்தஸ்மிதத்தோடே-கூட வென்றபடி. உண்மை - யாதாத்ம்யத்தை, ஆத்ம பரமாத்ம யாதாத்ம்ய தத்ப்ராப்த்யுபாயாதிகளை யென்றபடி. உரைக்க - உபதேசிக்க, அமைந்தனர் - ப்ராப்தரானார்.

உடலமழிந்திடு முள்ளுயிரொ ன்றழியாதெனைப்போல்
விடுமதுபற்று விடாததடைத்த கிரிசைகளே
கடுகவுனக்குயிர்காட்டு நினைவதனாலுளதாம்
விடுமயலென்று விசயனைத்தேற்றினன் வித்தகனே. (ரு)

இப்படி சாஸ்த்ரோபோத்காத பரமான த்விதீயைகதேச சிரஸ்க ப்ரதமாத்யாயத்தினுடைய வர்த்தத்தை ஸங்க்ரஹித் தினிமேல் "நித்யாத்மா ஸங்ககர்மேஹா கோசராஸாங்க்யயோகதீः, த்விதீயேஸ்திரதீலக்ஷயா ப்ரோக்தாதந்மோஹசாந்தயே" என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்தின்படியே, "நத்வேவாஹம் ஜாதுநாஸம்" என்று தொடக்கமாக வுள்ள த்விதீயாத்யாயத்தினுடைய வர்த்தத்தை ஸங்கரஹிக்கிறார். வித்தகன் - விஸ்மயநீய சரிதனான ஸர்வேச்வரன், இதுக்குவாக்யாந்த க்ரியையோடே யந்வயம். இப்படி மேலுங் கண்டுகொள்வது. இங்கு ஸாரத்ய ரூப ப்ரேஷ்யக்ருத்ய ப்ரவ்ருத்தனானவன் தானே தத்வோபதேசரூபா சார்யக்ருத்யம் பண்ணுகையாலே யிவனை வித்தகனென்கிறது. நீ யுத்தாத் நிவ்ருத்த னாகிறது ஆசார்ய பித்ராதிகளுடைய தேஹநாசபீதியாலோ ஆத்மநாசபீதியாலோவென்று விகல்பித்து ப்ரதம விகல்பத்துக்கு த்தரம் சொல்லுகிறது. உடலம்-சரீரம், அழிந்திடும் - நசித்துவிடும், இடுமென்கிற விந்தால் சஸ்த்ரப்ரஹா ராதிகம்விநாபி பரிணாமைகஸ்வபாவத்வேந ஸ்வயமேவ நசிக்கு மென்று ஸூசிதம். இது "அந்தவந்தஇமேதேஹாः" இத்யாதிகளாலே ப்ரபஞ்சிதமாய் ஸங்க்ரஹச்லோகத்தி லாத்மநித்யத்வ கதநத்யோதிதமான தேஹ நச்வரத்வத்தைச் சொன்னபடி. இத்தால் யுத்தநிவ்ருத்தாவபி ததீய சரீரநாச மவச்யம் பாவித்வேந அவர்ஜநீயமாகையாலே யது சோகஸ்தாந மன்றென்று பலிதம். இனி த்விதீயகல்பத்துக் குத்தரம் சொல்லுகிறது. உள் - அந்தர்வர்த்தியான, உயிரொன்று - ஆத்மா வொருவன், ஆழியாது - நசியாது. இங்காத்மநோந்தர்வர்த்தித்வ நிர்தேசேந ஸூக்ஷ்மதமத்வம் பலிக்கையாலே "நைநம்சிந்தந்திசஸ்த்ராணி" இத்யாதிகளில் படியே சேதந தஹந சோஷணாத்யநர்ஹத்வம் ஸூசிதம். ஆத்மநித்யத்வே ஸம்ப்ரதிபந்ந த்ருஷ்டாந்தகதநம், எனைப்போல் - பரமாத்மாவாய் ஸர்வேச்வரனான வென்னைப்போலே, இத்தால் ஜீவநித்யத்வாநபிஜ்ஞனான வர்ஜுநனைக்குறித்து ஈச்வரநித்யத்வத்தையுபந்யஸித்தது "யதாஹம் ஸர்வேச்வரः பரமாத்மாநித்ய இதி நாத்ரஸம்சயः, எவம் பவந்தः க்ஷேத்ரஜ்ஞா ஆத்மாநோபி நித்யாஏவ மந்தவ்யாः" என்றுபாஷ்யோக்தரீத்யா த்ருஷ்டாந்தார்த்த மென்று தர்சிதம். ஏதெநாத்மநாச ப்ரயுக்த சோகாவகாசமில்லை யென்று பலிதம். இப்படியாகில் தேஹாத்மஸ்வரூப ஸ்வபாவ விவேகம் பிறந்தவனுக்கு ஸ்வைரஹிம்ஸாப்ரவ்ருத்திஸங்கேந ஹிம்ஸாநிஷேதக ஸகலப்ரமாண வ்யாகோபம் ப்ரஸங்கியாதோ வென்று சங்கையில் மேல் வாக்யம் ப்ரவர்த்திக்கிறது. அடைத்த-நிவேசிதங்களான, விதிக்கப்பட்டவைகளான வென்றபடி, கிரிசைகள் - க்ரியைகள், விடாதது - விடத்தகாது, பற்று - ஸங்கமானது, விடுமது - விடத்தக்கது, ப்ராஹ்மணாதி வர்ணசதுஷ்டயத்துக்கும் ப்ரதிக்ரஹ யுத்தவாணிஜ்ய சிச்ரூஷாதி ரூபேண விபஜ்ய ச்ருதிதர்சிதங்களான கர்மங்களிலே பலாதி ஸங்கமாத்ரமே த்யஜிக்கக்கடவ தென்றபடி, இங்கு [illegible] கர்மோபாதானம் மற்றுள்ள ஸத்யவசநாதி ஸாதாரண தர்மங்களுக்கு [illegible], பலாதிஸங்க மாத்ர த்யாகோக்தியாலே க்ரியாஸ்வரூபத்யாகம் [illegible] விருத்த மென்று ஸூசிதம். ஆக வித்தால் பூர்வோக்த தேஹாத்ம விவேக [illegible] யுத்தாயாலம், ஸ்வைரஹிம்ஸா ப்ரஸக்தி யில்லை யென்று முன்புற்ற சங்கைக்கு ஸமாதானம் ஸூசிதமாய்த்து. இவ்வர்த்தம் ஸ்ரீமத்கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகைகளிலே கண்டோக்தமிறே. இப்படி சோதிதமான வாத்ம யாதாத்ம்ய விவேக பூர்வக த்யக்தபலாதிஸங்க பரமபுருஷாராதநைகவேஷ கர்மாநுஷ்டாந

ரூப கர்மயோகத்துக்கு பலம்சொல்லுகிறது மேல். அதினல் - அந்தஸங்க ரஹித கர்மயோகத்தாலே, உனக்கு - தேஹாத்ம மோகாந்தனுய் ஸம்ப்ரதி ஶ்ருத தேஹாத்ம யாதாத்ம்யனுன வுனக்கு, உயிர் - ஆத்ம ஸ்வரூபத்தை, காட்டும் - ஸாக்ஷாத்கரிக்குமதான, நினைவு - ஸ்ம்ருதி, ஸ்ம்ருதி ஸந்ததி ரூப த்யாந மென்றபடி. ஆத்மாவலோகந ஸாதநமாய் தேஹாதி விலக்ஷணுத்மஸ்வரூப நிரந்தர சிந்தநாத்மகமாய் ஸ்திரப்ரஜ்ஞதா பரபர்யாயமான ஜ்ஞாநயோக மென்றபடி. கடுக - சீக்ரமாக, உளதாம் - உண்டாம், பிறக்குமென்றபடி, மயல் - மோஹத்தை, விடு-த்யஜி, என்று - ஸ்பஷ்டம். விசயனை - அர்ஜுநனை, தேற்றினன். ஆச்வஸிப்பித்தான். (ரு)

சங்கந்தவிர்ந்து சகஞ்சதிர்பெற்ற தனஞ்சயனே
பொங்குங்குணங்கள் புணர்ப்பனைத்தும் புகவிட்டவைத்து
நங்கண்ணுரைத்த கிரிசையெல்லா மெனவுந்நவின்ருர்
எங்குமறிவார்களே யென்று நாதனியம்பினனே. (சா)

"அஸத்யாலோகரக்ஷாயை குணேஷ்வா ரோப்யகர்த்ருதாம். ஸர்வேச்வ ரேவாந்ய ஸ்யோக்தாத்ருதீயேகர்மகார்யதா" என்கிற ச்லோகத்தின் படியே த்ரிதீயாத்யா யார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிருர். சகம் - ஜகத்திலே, சதிர் - சாதுர்யத்தை, பெற்ற - ப்ராப்தனுன, தனஞ்சயனே - தநஞ்சயனே, ஸாராஸாரவிவேசன சாதுரீசாலித்வேந ஸர்வலோக ப்ரஸித்தனுன வர்ஜுநனே யென்றபடி. இத்தால்சிஷ்டதயா வ்யபதிஷ்டனுய் லோகாநுவிதேயாநுஷ்டாநனுன வுன்னுடைய வநுஷ்டாநத்தாலே யந்தர்கதாத்மஜ்ஞாந கர்ம நிஷ்டாக்ய நிஷ்ப்ரமாத ஸூசக கண்டாபதத்திலே ஸம்பாவித ப்ரமாத துச்சக ஜ்ஞாந நிஷ்டாதிகாரிகளுங் கூட ப்ரவர்த்தித்து ஜ்ஜீவிப்பர்க ளென்று வ்யஞ்ஜிதமாகையாலே ஸங்க்ரஹச்லோகத்தில்"லோகரக்ஷாயை" என்கிற பதமர்த்தாத் வ்யாக்யாதமாய்த்து. சங்கம் - ஸங்கத்தை, தவிர்ந்து - த்யஜித்து, அநுஷ்டேயமான கர்மங்களிலே பலாபிஸந்தியையு மாத்மீயதாபிமானத்தையும் விட்டென்றபடி, இத்தால் "மயிஸர்வாணிகர்மாணி ஸந்யஸ்யாத்யாத்மசேதஸா, நிராசீர் நிர்மமோ பூத்வாயுத்யஸ்வவிகதஜ்வர:" என்கிற ச்லோகத்தில் நிராசீ: - நிர்மம: - என்கிறபதத்வய விவக்ஷித பல மமதாத்யாக ஸங்க்ராஹகமாய் ஸங்க்ரஹச்லோக கதமான வஸக்தி பதம் விவ்ருதமாய்த்து. பொங்கும் - உத்ரிச்ய மாநங்களான, குணங்கள் - குணங்களுடைய, பார்வணேந்து மயூக சும்பித ஸாகரகல்லோலந்யாயேந ந்யூநாதிகபாவேந விஜ்ரும்பியாநிற்கிற ஸத்வாதி குணங்களுடைய வென்றபடி., புணர்ப்பு - கார்யங்களை, அனைத்தும் - ஸர்வங்களையும், ஸத்வாதிகுணமூலக ஸர்வவிதவ்யாபாரங்களையு மென்றபடி, அவைத்து - அந்த ஸத்வாதிகுணங்களிலே, புகவிட்டு - ஆரோபித்தென்றபடி. ஆத்மநஸ் ஸாம்ஸாரிக ஸர்வவித வ்யாபாரகர்த் ருத்வமும் குணஸம்ஸர்க ப்ரயுக்தமாகையாலே தாத்ருச கர்த்ருத்வமும் ப்ராப்தாப்ராப்த விவேகேந குணக்ருதம் நது ஸ்வரூபாநுபந்தி யென்று நிஷ்கர்ஷித்தென்று பிண்டிதார்த்தம். உரைத்த - சொல்லப்பட்டவையான,சாஸ்த்ர சோதிதங்களான வென்றபடி. கிரிசையெல்லாம் - க்ரியைகளிலெல்லாம், நம்கண் - நம்மிடத்திலே, கண்ணென்று ஸப்தம்யர்த்த வாசகம். ஸர்வகர்மங்களும் ஸர்வசேஷியாய் ஸத்வாதிகுணத்ரயாச்ரய ப்ரக்ருத்யாதி ஸர்வபதார்த்த நியந்தாவான வென்னிடத்தி லாயத்தங்க ளென்றபடி. அதவா,நங்கண்-நம்ஸ்வாமியிடத்திலே, கண்ணென்று ஸ்வாமிவாசகமாம் லுப்தஸப்தமீக மாகக்கடவது. முன்புள்ள யோஜனையில் நம்என்கிற பத முபதேஷ்ட்ரு க்ருஷ்ண பரம். இந்த யோஜனையில் அந்தபத மநுஸந்தாயி புருஷ பரமாய் நகண் என்கிறபதம் தத்ஸ்வாமி பூத பரமாத்ம பர மென்று கண்டுகொள்வது, உபயதாபி சேதநனுடைய ஸர்வவிதகர்த்ருத்வமும் 'பராத்துதச்ச்ருதே:' என்கிறபடியே பரமாயத்தமென்று பலிதார்த்தம். என்றும் - இப்படியும், நவின்றவர் - சொன்னவர்கள், சப்தாபிலாபபர்யந்தமாம்படி மநஸாநுஸந்தித்தவர்களென்றபடி. இங்கு - நினைந்தவரென்று அபிஸந்தி மாத்ரத்தைச் சொல்லவேண்டியிருக்க நவின்றவர் என்று சப்தாபிலாபபர்யந்தம் சொன்னது சிஷ்டதயா வ்யபதேச்யரான விவர்களுடைய சப்தாபிலாபத்தாலே யுக்நீதமான வபிஸந்தியை மிதப்ரஜ்ஞ ரநுஷ்டித்து ஜ்ஜீவிப்பார்க ளென்கிற வபிப்ராயத்தாலே. என்று மென்கிற நிர்தேசத்தாலே பூர்வோக்த குணகர்த்ருத்வாநுஸந்தாந ஸமுச்சய:. இத்தால் ஸங்க்ரஹச்லோகத்தில் ஸர்வேச்வரேவாந்யஸ்ய என்கிற

வாசப்தம் விகல்பபரமன்று; கிந்துஸமுச்சயபரமென்று ஸூசிதம். "த்ருதீயாத்யாய ஸங்க்ரஹ ச்லோகெ துல்யவிகல் போநபிமத இத்யபிஸூசிதம் பவதி" என்றுஶ்ரீமத் தாத் பர்யசந்த்ரிகையிலே தாமே யருளிச்செய்தாரிறே. எங்கும் - ஸர்வவிஷயத்தி லும், அறிவார்களே - ஞானத்தை யுடையவர்கள்தானே, ஸர்வசாஸ்த்ரார்த்தஸார பூத ப்ராபகதாநுஷ்டாந நிஷ்டையாலே ஸர்வசாஸ்த்ரார்த்த பரிஜ்ஞாந பலம் ஸித் திக்கைகயாலே ஸர்வஜ்ஞத்வேந வ்யபதேச்யர்க ளென்றபடி. என்று - இப்படி, நாதன் - நாதன், இயம்பினன் - சொன்னன். (ச)

பிறவாமைதந்திடத்தானேபிறக்கும்பெருமைகளும்
துறவாக்கிரிசைகள்தூய்மதிதன்னற்றுலங்குகைகயும்
இறவாவுயிர்நிலையுங்கண்டிடுமுலகினிலையும்
மறைவாழிமாயவனேயெனக்கின்றறிவித்தனனே (ரு)

"ப்ரஸங்காத்ஸ்வஸ்வ பாவோக்திః கர்மணோகர்மதாஸ்யச, பேதோஜ்ஞாநஸ் யமாஹாத்ம்யம் சதுர்த்தேத்யாய உச்யதே" என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்தின் படியே சதுர்த்தாத்யாயார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார். மறை - வேதங்களிலே, வாழி - வாழுமவனன, "அஜாயமாநோபகுதா விஜாயதே" என்கிற ச்ருதியிலே விசித்ர திவ்யாவதார ப்ரயுக்த நிரங்குசைச்வர்ய சாலித்வேந ப்ரஸித்தனன வென்ற படி. இத்தால் வக்ஷ்யமாணவதார ஸ்வரூப ஸ்வபாவாதௌ ச்ருதிரேவ ப்ரமாண மென்று தர்சிதம். மாயவன் - மாயையையுடையவன், இங்கு மாயாசப்தத்தாலே "மாயாதுவயுநம்ஜ்ஞாநம்" என்கிறபடியே ஸங்கல்ப ரூபஜ்ஞாநம் விவக்ஷிதம். இத்தால் பகவதவதாரம் புண்யபாபஹேதுகமன்று; கிந்து "ஸம்பவாம்யாத்மமா யயா" என்கிறபடியே ஸ்வஸங்கல்பைகஹேதுக மென்று ஜ்ஞாபிதம். பிற வாமை — அபுநர்பவத்தை, தந்திட - கொடுக்கைக்கு "ஜன்மகர்மசமே திவ்ய மேவம்யோ வேத்திதத்வதః, த்யக்த்வா தேஹம்புநர்ஜந்ம நைதிமாமேதி ஸோர் ஜுந" என்கிறபடியே ஸ்வா சரிதர்க்கு ஸ்வாவதார ரஹஸ்யவேதநத்தாலே புநர்ஜந்ம ப்ராப்தி யில்லாத மோக்ஷப்ரதாநம் பண்ணுகைக்கென்றபடி. இத் தால், பகவதவதாரம் ஸாதுபரித்ராணபலகமத்தனே போக்கி ஸுகதுக்காநுபவ பலகமன்றென்று ப்ரதர்சிதம். இது துஷ்க்ருத்விநாசந தர்மஸம்ஸ்தாபநங்களுக்கும் உபலக்ஷணம். தானே - அஜத்வாவ்யயத்வஸ்வாபாவிக ஜ்ஞாநபலைச்வர்யாதிவிசிஷ் டனனதானே, பிறக்கும்பெருமைகளும் - அவதரிக்கும் மாஹாத்ம்யங்களையும், தானே யென்கிற வித்தாலே ஸ்வபாவாபரித்யாகமும் பிறக்குமென்கிறவித்தாலே தஸ்ய சுத்த ஸத்வ மயத்வ தர்மக்லாந்யாதிகாலிகத்வைச்சிகத்வங்களும் விவக்ஷிதங் கள். இத்தாலே பகவதவதாரத்துக்கு ஸ்வரூபதః ப்ரகாரதః த்ரவ்யதః காரணதః காலதః ப்ரயோஜநதச்ச வைலக்ஷண்யம் தர்சிதம். துறவா-த்யக்துமசக்யங்களான, கிரிசைகள்-கிரியைகள், பகவத் ப்ரோக்தங்களாய் விவஸ்வதாதி ஸம்பரதாயா கத ங்களாகையாலே த்யாகாநர்ஹங்களான சாஸ்த்ரீய கர்மங்களென்றபடி. இங்கு கிரி சைசப்தத்தாலே க்ரியா ஸ்வரூபமும் பஹுவசநத்தாலே "தைவமேவாபரேயஜ்ஞம்" இத்யாதிநா ப்ரபஞ்சிதங்களான தேவார்ச்சநேந்த்ரிய ப்ராணயாம யாகதான ஹோம தப ஸ்தீர்த்த ஸேவா ஸ்வாத்யாய ததர்த்தாப்யாஸாதி ரூப ததவாந்தர பேதங்களும் துறவாவென்கிறவித்தாலே அவைத்துக்குப்ரா மாணிகத்வமும் தர்சித மாய்த்து. தூய் -பரிசுத்தமான, மதியால் - ஜ்ஞாநத்தாலே ஆத்மஸ்வரூபஸ்வபாவ ஜ்ஞானத்தாலே யென்றபடி. துலங்குகையும் - நிர்மலங்களாம்படியையும், "கர் மண்யகர்மயஃபச்யேத்" இத்யாதிகள்படியே க்ரியமாண கர்மங்களே அந்தர்கத கர்மஜ்ஞாந தயாஜ்ஞாநாகாரங்களாம்படியையு மென்றபடி. இறவா - நசியாதவ னன, உயிர் - ஆத்மாவினுடைய, நிலைவழி - நிஷ்டாமார்கத்தை, கண்டிடும் - அறி ந்துவிடுமெதான, நித்யாத்ம கோசர ஜ்ஞாந நிஷ்டோபாய வேதியான வென்றபடி. உலகின் - லோகத்தினுடைய, நிலையும் - ஸ்திதியையும், "ச்ரேயாந்த்ரவ்யமயாத்ய ஜ்ஞாத்ஜ்ஞாநயஜ்ஞః பரந்தப, ஜ்ஞாநம்லப்த்வா பராம்சாந்திமசிரேணதிகச்சதி,யோ கஸந்யஸ்தகர்மாணம் ஜ்ஞாநஸஞ்ச்சிந்ந ஸம்சயம், ஆத்மவந்தம் நகர்மாணி நிபத்நந் திதநஞ்சய" என்று ப்ரதர்சிதையான ஜ்ஞாநநிஷ்டாதிகாரி வர்கத்தினுடைய வுத்கர் ஷாவஸ்தையையு மென்றபடி. ஆகவித்தால் ஶ்ரீமத் தாத்பர்ய சந்த்ரிகையிலேசதுர் த்தாத்யாய ஸங்க்ரஹச்லோகரூபத்வேந ப்ரதர்சிதமான கர்மஸ்வரூப தத்பேத தத்

ப்ராமாணிகத்வ ஜ்ஞாநப்ரதாந்ய பகவதவதார யாதாத்ம்யா த்ம கார்த்ரஷட்கம் ஸங்க்ரஹீதமாய்த்து. எனக்கு - இருள்தருமாஞாலத்துள் பிறந்து ஜாத்யந்தனான வெனக்கு, இன்று - ஆசார்ய கடாக்ஷம் பெற்ற விந்ததிநத்தில், அறிவித்தனன் - தெரியப்பண்ணினன், ஆசார்யரூபியா யுபதேசித்தா னென்றபடி. அர்ஜுநனுக்கன்றுபதேசித்த வர்த்தத்தை தமக்கின்றுபதேசித்ததாக வருளிச்செய்தது ஸ்வயமேவ ப்ரவர்த்திதமான கர்மயோகத்தை பாரதஸமரஸந்நாஹகாலத்திலே க்ருஷ்ணரூபியாய் அர்ஜுநனுக்கு வெளியிட்டதோடு ஸம்ப்ர த்யாசார்யரூபியாய்த் தமக்கு வெளியிட்டதோடு வாசையில்லாமையாலே. (கு)

கண்டெளிதாங்கருமமுயிர்காட்டுங்கடுகுதலும்
மண்டியதன்படியின்மனங்கொள்ளும்வரிசைகளும்
கண்டறியாவுயிரைக்காணலுற்றநினைவுகளும்
வண்டுவரீசனியம்பினன்வாசவன்மைந்தனுக்கே (சா)

இனி "கர்மயோகஸ்ய ஸௌகர்யம் சைக்ர்யம் காச்சநதத்விதா:, ப்ரஹ்மஜ்ஞாநப்காரச்ச பஞ்சமேத்யாய உச்யதே" என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்தினடியே பஞ்சமாத்யாயார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார். வண்-ஸுந்தரமான, துவர்-த்வாரகாபுரத்துக்கு, ஈசன்-ஈச்வரன், ஸ்ரீமத்வாரகேச்வரனான கீதாசார்ய னென்றபடி. கண்டு-அறிந்து, எளிதாம்-ஸுகரமாம், சாஸ்த்ரமுகேந தன்னநுஷ்டான ப்ரகாரத்தை யறிந்தால் ஸுகரமாகத் தோற்றுமதான வென்றபடி. கருமம் - கருமயோகம், உயிர் - ஆத்மாவை, காட்டும்கடுகுதலும்-அவலோகநம்பண்ணுவிக்கும் ஜாடித்யத்தையும், "யோகரக்தோமுநிர்ப்ரஹ்மநசிரேணாதிகச்சதி" என்று தர்சிதமான கர்மயோகத்துக் காத்மாவலோகந நிஷ்பாதகதா சைக்ர்யதையுமென்றபடி. இங்கு ஸௌகர்யத்தை சைக்ர்யாதிகளைப்போலே யுபதேசகர்மத்வேந நிர்தேசியாதே கர்மயோகவிசேஷணத்வேநாநுவதித்தது பஞ்சமே கர்மயோகஸௌகர்ய கதநஸ்ய த்ருதீயோக்தாநுவாதமாத்ரத்வ ஜ்ஞாபநார்த்தம். ஆகையாலிறே பஞ்சமாரம்பபாஷ்யத்திலே ஸங்க்ரஹச்லோகார்த்தாநுக்ரமண வஸரத்திலே ஸௌகர்யத்தை யநுக்ரமியாதொழிந்தது. இவ்வர்த்தத்தை ஸங்க்ர ஹரக்ஷா தாத்பர்யசந்திரிகைகளிலே தாமேயருளிச் செய்தாரிறே. அதன்படியில் -அந்தயோகத்தினுடைய ப்ரகாரங்களிலென்றபடி. மண்டி-அத்யந்தமாஸக்தனாய், மனம் - மநஸ்ஸை, கொள்ளும் வரிசைகளும் - நிவேசிப்பிக்கும் க்ரமங்களையும், நைவகிஞ்சித்கரோமீதியுக்தோமந்யேததத்வவித்" இத்யாதிகளாலே ப்ரதிபாதிதங்களான கர்மயோகாந்தர்பூத கர்த்ருத்வாநுஷ்டாநுபரபர்யாயங்களான மநச்சிக்ஷண ப்ரகாரங்களையு மென்றபடி. கண்டறியா - கதாசிதபி தர்சநவிஷயமல்லாத, உயிரை-ஆத்மாவை, ஸாக்ஷாத்கர்த்துமசக்யமான பரிசுத்தாத்மஸ்வரூபத்தை யென்றபடி. உண்டறியாவென்று பாடமானபோது "யம்லப்த்வாசாபரம்லாபம்மந்யதேநாதிகந்தத:" என்கிறபடியே நிரதிசய ஸுகரூப மாயிருக்கச்செய்தேயும் கதாசிதபி ததாவிதத்வேந பகவத்விஷயமல்லாத வென்றர்த்தம் கண்டுகொள்வது. இத்தால் ஸங்க்ரஹ ச்லோகத்திலே ப்ரஹ்மபதம் ப்ரஹ்மஸமாநாகார பரிசுத்தாத்ம ஸ்வரூபபரமென்று தர்சிதமாய்த்து. காணல் - பார்க்கையை, உற்ற - அடைந்தவையான வென்றபடி. நினைவுகளும் - ஜ்ஞானங்களையும், இங்கு காணலென்கிற பதம் "வித்யாவிநயஸம் பந்நே" இத்யாதிகளில்படியே ஸமதர்சந விபாகாபந்ந ஜ்ஞாநபரம். "நப்ரஹ்ருஷ் யேத்ப்ரியம்ப்ராப்ய" இத்யாதி ப்ரதிபாதிதங்களான ஸமதர்சன விபாக ஸாதநாநுஸந்தாநங்களையு மென்று பலிதார்த்தம். வாசவன் - வாஸவனுடைய, மைந்தனுக்கு - குமாரனுக்கு, அர்ஜுநனுக்கென்றபடி. இயம்பினன் - சொன்னான். (சா)

யோகமுயற்சியும் யோகிற்சமநிலை நால்வகையும்.
யோகினுபாயமும் யோகுதன்னால்வரும் பொருளும்
யோகுதனிற்றன்றிற முடையோகு தன்முக்கியமும்
நாகணையோகிநவின்றனனன்முடிவீரனுக்கே. (எ)

"யோகாப்யாஸவிதிர்யோகீசதுர்த்தாயோகஸாதநம், யோகஸித்திஸ்ஸ்வயோகஸ்யபாரம்யம்ஷஷ்டஉச்யதே" என்கிற ஸங்க்ரஹச்லோகத்தின்படியே ஷஷ்டாத்

யாயார்த்தத்தை ஸங்கரஹிக்கிறார், நாகணை - நாகபர்யங்கத்தில், யோகி - யோகீ, "ஏஷநாராயண ஸ்ரீமான் க்ஷீரார்ணவநிகேதநः, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்புரீம்" என்கிறபடியே நாகபர்யங்க யோகநித்ரா ரஸிகனான க்ருஷ்ணனென்றபடி, யோகீ யோக தத்ப்ரகாரங்களை யுபதேசிக்க ப்ராப்தனாவது. யோக - யோகத்தினுடைய, முயற்சியும் - அப்யாஸத்தையும்,இங்குயோகபத மாத்மாவலோகந பரம். ஜ்ஞாநகர்மயோக ஸாத்யாத்மாவலோகநரூப யோகாப்யாஸ விதியையு மென்றபடி. யோகில்-யோகத்தில், நால்வகைச்சமநிலையும் என்றந்வயிப்பது. நால்வகை - சதுஷ்ப்ரகாரையான, சமநிலை-ஸமநிஷ்டையும், "ஸர்வபூதாத்மாந" மித்யாதிச்லோகசதுஷ்டயத்தாலே க்ரமேணோத்த ரோத்தர விபாக தேசாபந்நத்வேந ப்ரதர்சிதையாய் "ஆத்மநாம் ஜ்ஞாநாநந்தத்வாதிபி ரந்யோந்ய ஸாம்யதர்சநம், சுத்தாவஸ்தாயாம், அபஹதபாப் மத்வாதிபிரீச்வரேண ஸாம்யதர்சனம், பரித்யக்தப்ராக்ருதபேதாநாம் அஸங்குசிதஜ்ஞாநாகாரதயாஈச்வரேணததப்ருதக்ஸித்த விசேஷணத்வாதிபி ரந்யோந்யஞ்ச ஸாம்யதர்சநம், ஔபாதிகைः புத்ராதிபி ரஸம்பந்தஸாம்யதர்சநஞ்ச" என்று ஸ்ரீமத்கீதார்த்தஸங்க்ரஹரக்ஷா தாத்பர்ய சந்திரிகைகளிலே விவரித்தபடியே சதுர்விதையான ஸமதர்சந விபாக நிஷ்டையையு மென்றபடி. இங்கு ஸங்க்ரஹ ச்லோகத்தை யநுஸரித்துயோகிசாதுர்வித்யம் சொல்லாதே யோக சாதுர்வித்யம் சொன்னது தஸ்யயோக சாதுர்வித்யோபாதிகத்வத் யோதநார்த்தம். யோகின் -யோகத்தினுடைய,உபாயமும் - ஸாதநங்களையும், அப்யாஸவைராக்யாதிகத்தையு மென்றபடி. யோகுதன்னால்-யோகத்தாலே, வரும்-ஸித்திக்குமவையான, பொருளும் - அர்த்தங்களையும், யோகப்ரஷ்டஸ்யாபி ப்ரத்யவாய விரஹ புண்ய லோகாத்யவாப்தி விச்சிந்நப்ரதிஸந்தாநாதி ரூப யோகாவதார பலங்களையு மென்றபடி, யோகுதனில் - யோகங்களில், பூர்வோக்த சதுர்விதஸமதர்சந நிஷ்டையிலு மென்றபடி. தன்திறமுடை - தன்னைவிஷயமாகவுடையதான, யோகுதன் - யோகத்தினுடைய, முக்கியமும் - பாவப்ரதாநோ நிர்தேசः. முக்யத்வத்தையு மென்றபடி. பகவத் வாஸுதேவ விஷயமாக வுடையதான பரபக்தியுடைய நிரதிசயோத்கர்ஷத்தையு மென்றபடி. இங்கு "யோகிநாமபிஸர்வேஷாம்மத்கதே நாந்தராத்மநா, ச்ரத்தாவாந்பஜதே யோகம்ஸமே யுக்ததமோமதः" என்று ஷஷ்டாந்த்ய ச்லோகத்திலே யோக்யந்தராபேக்ஷயா பகவான் உத்கர்ஷஞ் சொன்னதும் யோகோத்கர்ஷ பர்யவஸிதமா மாகையாலும், "ஸ்வயோகஸ்ய பாரம்யம்" என்கிற"நிஷ்கர்ஷாநுஸாரத்தாலும் உபபந்நம்." நன்முடி - நல்ல மகுடத்தை யுடையவனான, வீரனுக்கு - விக்ரமசாலியான அர்ஜுனனுக்கு, நவின்றனன் - சொன்னான். (எ)

தானின்றவுண்மையைத்தன்றனிமாமைமறைத்தமையும்
தானன்றிமாயைதனைத்தவிர்ப்பான்விரகற்றமையும்
மேனின்றபத்தர்களால்வரின் ஞானிதன்மேன்மைகளும்
தேனின்றசெங்கழலான் றெளிவித்தனன்பார்த்தனுக்கே. (அ)

"ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்யதிரோதிச்சரணாகதிः, பக்திபேதःப்ரபுத்தஸ்யச்ரைஷ்ட்யம் ஸப்தமஉச்யதே" என்கிற ஸங்க்ஹச்லோகத்தின்படியே ஸப்தமாத்யாயார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறார். தேன் - மது, நின்ற - நிற்குமிடமான, செம்- அருணங்களான, கழலான்-திருவடிகளையுடையவன், மகரந்தபரித கோகநதஸத்ருச சரணனான பரமபுருஷனென்றபடி. இத்தால் தச்சரணோபாஸநத்துக்கு நிரதிசய ப்ரீதிரூபதா பத்யர்ஹத்வம் ஸூசிதம் தான் - ஸ்வேதரவிலக்ஷணனான தான், நின்ற - ப்ரமாண ப்ரதிபந்நனா யிருந்தமையுடைய,உண்மையை - யாதார்த்யத்தை, அஷ்டகாரம்ப பாஷ்யாநுபாஷித நிகிலசேதநாசேதந வஸ்து சேஷித்வ காரணத்வாதாரத்வ ஸர்வசரீரத்வ ஸர்வப்ரகாரத்வ ஸர்வசப்தவாச்யத்வ ஸர்வகல்யாண குணகணப்ரயுக்தபரத்வாதி ஸ்வயாதாத்மயத்தை யென்றபடி. தன்-தன்னுடைய, ஸ்வசேஷிபூதையான வென்றபடி. தனி-அத்விதீயையான,இத்தால் "தைவீஹ்யேஷா குணமயீமமமாயாதுரத்யயா" என்கிறவிடத்திலே குணமயீ என்கிற மயட்ப்ரத்யயம் ப்ராசுர்யபரமாய் ஸ்வார்த்திக மல்லாமையாலே "ஸத்வரஜஸ்தமோ ரூபத்ரவ்யத்ரயமாத்மிக மூலப்ரக்ருதிः" என்கிற ஸாங்க்யதர்சந மநுபபன்ன மென்று ஸூசிதம், மாயை - ப்ரக்ருதிः, மறைத்தனவும் - ஆச்சாதித்தபடியையும், தேஹேந்த்ரியாதிரூபேண பரிணதையானப்ரக்ருதி பவேத் ஸ்வரூபயாதாத்ம்யதிரோதாநம் பண்ணின

படியையு மென்றபடி. மாயைதனே பூர்வோக்த ப்ரக்ருதியை, தவிர்க்க-த்யஜிக்கைக்கு, மாயாக்ருத பகவத் ஸ்வரூப யாதாத்ம்ய திரோதாந நிவ்ருத்திக் கென்றபடி. தானின்றி-தன்னைத்தவிர, விரகு-உபாயம், அற்றமையும்-இல்லாமையையும்,“ மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்திதே”என்கிறபடியே ஸ்வவ்யதிரிக்தமாயாதரணோபாயதுர்பிக்ஷத்தையு மென்றபடி. இந்த வாகிஞ்சந்யோக்தியாலே மாயாதரணார்த்த ப்ரபதந மிங்கே பலிதம். மேனின்ற - மேல்நின்ற இதிச்சேதः. உபரிஸ்திதரான, “சதுர்விதாபஜந்தேமாம் ஜநாஸ்ஸுக்ருதி நோர்ஜுந” என்கிறபடியே பரமபுருஷ ததீயத்வாபிமாந விஷயதயா அதிகார்யந்தராபேக்ஷயா ஸமுந்நதரானவென்றபடி. நால்வர்பத்தரிலென்றந்வயம். நால்வர் “ஆர்த்தோஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீஜ்ஞாநீச” என்கிறபடியே சதுர்விதரான,பத்தரில் - பக்தர்களிலே, ஞானிதன்-ஞானியுடைய, மேன்மைகளும் - உத்கர்ஷங்களையும், ஞானிசப்தநிர்திஷ்டனுன பகவத்ப்ரேப்ஸுவுடைய நித்யத்வைகபக்தித்வ பரமபுருஷ ப்ரியத்வ ப்ரயுக்த ச்ரைஷ்ட்யங்களையு மென்றபடி. பார்த்தனுக்கு - பார்த்தனுக்கு, தெளிவித்தனன்-விசதமாக வறிவித்தான். (அ)

ஆராதசெல்வமு மாருயிர்காணு மரும்பயனும்
பேராததன்கழற்கீ ழமரும் பெருவாழ்ச்சிகளும்
சோராதுகந்தவர் தூய்மதிகொள்வதுஞ் செய்வனவும்
தோராவிசயனுக்குத் திருநாரணன் செப்பினனே. (கூ)

“ஐச்வர்யாக்ஷர யாதாத்ம்ய பகவச்சரணார்த்திநாம் வேத்யோபாதேய பாவாநாமஷ்டமேபோத உச்யதே” என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்தின்படியே யஷ்டமாத்யாயார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறர். திருநாரணன் - ஸ்ரீயः பதியானநாராயணன், கண்ணனென்றபடி. “ஏஷநாராயணः ஸ்ரீமான்” என்னக்கடவதிறே. ஆராத - பர்யாப்தமாகாத, செல்வமும் - ஐச்வர்யத்தையும், உத்தரொத்த ரோத்கர்ஷத்தாலே நிரந்தரமுத்தரோத்தர த்ருஷ்ணுஜநகமான வைச்வர்யத்தையு மென்றபடி. இத்தையுகந்தவரென்கிறத்தோடே யந்வயிப்பது. இப்படி மேலுங்கண்டுகொள்வது. இங்கு செல்வசப்தத்தாலே ஸங்க்ரஹ ச்லோகத்தில்போலே நஷ்டைச்வர்யமும் அபூர்வைச்வர்யமும் ஐச்வர்யத்வேந ஸங்க்ருஹீதமானதாகையாலே அதிகாரி சாதுர்வித்யோக்தியோடே விரோதமில்லை. ஆகையாலிறே “ஆர்த்தः-ப்ரதிஷ்டாஹீநः ப்ரஷ்டைச்வர்யः புநஸ்தத்ப்ராப்திகாமः, அர்த்தார்த்தீ - அப்ராப்தைச்வர்யதயா ஐச்வர்யகாமः, தயோர்முகபேதமாத்ரம் ஐச்வர்ய விஷயதயாஐக்யாத் விஷயதயாஐக்யாத் ஏகஏவः” என்று பாஷ்யகார ரநுபாஷித்தருளினர். ஆர் - த்ருப்திப்ரதமான, விஷயாந்தர வைத்ருஷ்ண்ய ஜநகமான, உயிர் - ஆத்மாவை, காணும் - அநுபவிக்கையாகிற, அரும் - துர்லபமான, பயனும் - பலத்தையும், “யம்லப்த்வாசாபரம்லாபம்மந்யதேநாதிகந்ததः” என்கிறபடியே நிரதிசயமாகத்தோற்றி யாழங்கால்படுத்து மதானவாத்மாநுபவஸுகத்தையு மென்றபடி. இதுக்கு துர்லபத்தோக்தியாலே பரமாத்மாநுபவாபேக்ஷயா திக்ஷுத்ரரஸமான வாத்மாநுபவத்தை ஜ்ஞாநகர்மநிஷ்டாதிக்லேசாநுபவத்தாலே ஸாதிக்கை மலைகல்லி யெலிபிடிக்குமாப்போலே போலே யநுசிதமென்றுத்வநிதம். பேராத - புநராவ்ருத்தி சூந்யங்களான வென்றபடி. இது வாழ்ச்சிகளு மென்கிறத்துக்கு விசெஷணம். தன்கழல்கீழ் - தன்திருவடிகளுடையகீழ்ச்சாயையிலே, அமரும்-அந்தர்பவிக்கையாகிற, பெருவாழ்ச்சிகளும் - மஹாபுருஷார்த்தங்களையும், “நிரஸ்தாதிசயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணு. பேஷஜம்பகவத்ப்ராப்தி ரேகாந்தாத்யந்திகீமதா” என்கிறபடியே நிரதிசயமாகத்தோற்றி யுத்தராவதி சூந்யநிரதிசய ஸுகாத்மக பகவச் சரணர விந்தாநுபவ தத்பரிசரணுதிரூப புருஷார்த்தங்களையு மென்றபடி. இங்கு வாழ்ச்சிக்கு பெரு வென்கிற விசெஷணத்தால் ஸ்வரூபதோ நிரதிசயத்வம் தோற்றுகையாலே யத்யல்பரஸாக்ஷராநுபவ வைலக்ஷண்யம் ஜ்ஞாபிதம். பகவதநுபவரஸத்துக்குப் பேராத வென்று புநராவ்ருத்தி சூந்யத்வோக்தியாலே “ஸர்வேச்யவநதர்மாணः ப்ரதிபுத்தஸ்துமோக்ஷபாக்” என்றநுகீதையில் சொன்னபடியே ஐச்வர்யவ தாத்மாநுபவஸ்யாபி ப்ரச்யுதி துஷ்டத்வம் வ்யஞ்ஜிதம். சோராது - விடாதே, உகந்தவர்-அபிலஷித்தவராலே, நிரந்தரமபிலஷித்தவராலே யென்றபடி. செய்வனவும்-அநுஷ்டேயங்களையும், இவ்வதிகாரி

[Sanskrit verse in Grantha script, lines 1–3, ending "…நி:"]" என்கிறபடியே ஸாம்ஸாரிகமாணஸகலதாபங்களுமாறும்படி அவஹிக்கவல்லதும் ஆரோக்யார்த்தம் க்ஷீரஸேவை பண்ணப்பித்தம் தன்னடையே கழியுமாப்போலே போகபுத்யாப்ரவர்த்தித்தலும் மோக்ஷபர்யந்தமாய்த் தலைக்கட்டித் தரக்கடவதுமாயிற்றே அலையற்றவாரமுதக்கடல் அயத்நமாக ஸர்வாவகாஹ்யமாம்படி ஓஷதாத்ரிஸமீபத்தில் ப்ரகாசிக்கிறபடி பாரீர். நந்துதலில்லாவென்று ஸத்யத்வமும் நல் என்று ஹேயப்ரத்ய நீகத்வமாகிற அமலத்வமும் விளக்கென்று ஜ்ஞாநத்வமும் அந்தமில் என்று அநந்தத்வமும் அமுதவாழி யென்று நந்தத்வமும் சொல்லிற்றாய் மோக்ஷோபாயபூதங்களான வித்யைகளுக்கெல்லாம் வேத்யாகாரங்களாய் ஸ்வரூபநிரூபகங்களான ஸத்யத்வஜ்ஞாநத்வாநந்தத்வாமலத்வாநந்தத்வங்களாகிற குணபஞ்சகமும் ப்ரதிபாதிதமாய்த்து. பாற்கடல்தன்னில் - க்ஷீரஸமுத்திரத்தில், பண்மணி அன்ன-பகுரத்நங்களையொத்த, சீர்-கல்யாணகுணங்களது, கணம்-கூட்டத்தோடு, சேர்ந்த-இணைந்த, சீலம்-ஸௌசீல்யமென்னும் குணத்திற்கு, எல்லையிலை. எல்லை இல்லாதவனாயிராநின்றாய், சேர்ந்த வென்றதை சீர்க்கணத்தோடும் கூட்டியுரைத்தனன்று, ஸ்வாபாவிகாநவதிகாதிசயைச்வர்யஜ்ஞாநசக்திபலைச்வர்யாதி குணங்களோடே இணைந்து அத்தாலே ஆஹிதாதிசயமான ஸௌசீல்யமென்றபடி. ஸௌசீல்யமாவது ஸர்வாதிகனானவன் அதிநீசர்களோடும் இடைவிடாதே மனமொத்துக்கலக்கையேயிறே. "யதாரத்நாநிஜலதேரஸங்க்யேயாநிபுத்ரக. ததாகுணாஹ்யநந்தஸ்யாப்யஸங்க்யேயாஹிசக்ரிண:" என்னக்கடவதிறே. "வசீவதாந்ய:" என்பதில் "குணவாந்" என்று ஸௌசீல்யகுணம் ப்ருதக்காக அருளிச்செய்யப்பட்டதிறே. அன்றிக்கே: ந்யாஸவித்யைக்கு அநுஸந்தேயாகாரமான புருஷகாரவசீக்ருதத்வ வாத்ஸல்யஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்ய ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வஸத்யஸங்கல்பத்வ பரமகாருணிகத்வ க்ருதஜ்ஞத்வஸ்திரத்வ பரிபூர்ணத்வ பரமோதாரத்வாதிகளான நிரூபிதஸ்வரூப விசேஷணங்களான குணங்களை அநுஸந்தித்தபடி, அடியவர்-தாஸர்களது, பிழைகள்-அபராதங்கள், நின்-உனது, கருத்து-திருவுள்ளத்தை, அடையாது -ப்ராபியாதபடி, திருவுள்ளத்தில்தட்டாதபடி, அடைய முழுதும், ஆண்டு - பரிபாலித்து,அருளும்- க்ருபைசெய்தருளுமவனான, அரசனும்-ராஜாதிராஜனும், நீயே—, எத்தனையேனும் தீரக்கழிய அபராதம்பண்ணினாலும் அவஸரப்ரதீக்ஷயான க்ருபையாலேபுரிந்து அஜ்ஞாதயாத்ருச்சிக ப்ராஸங்கிகாநுஷங்கிஸாக்ருதாதிகளை ஒருவிரகாக்கி ஜாயமாநகடாக்ஷம்முதலாக ஆசார்யப்ராப்திபண்ணிவைத்து ஸ்வாதிகாராநுகுணோபாயத்திலூட்டி பரமபலப்ரதாநாந்தமாக ரக்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. உயர்ந்த நீ-ஸர்வாதிகனானநீ, உன்னை ஸ்வாநுரூபதிவ்யமங்களவிக்ரஹகுணகனாதி விசிஷ்டனான உன்னை, எம்முடன்-அதிநிஹீநராய் நீதான் 'த்வம்மே' என்று வளைத்தாலும் 'அஹம்மே' என்று முறணிடும்படி. தேஹாத்மாபிமான ஸ்வதந்த்ரத்வ ப்ரமாதிகளிலே நிலைநிற்குமெங்களோடே, கலந்தனை - ஒருநீராகக்கலந்தருளினாய், நீ முன்னம் நிஷாத கோபாலாதிகளோடு கலந்ததோடுநில்லாதே அந்த ஸௌசீல்யந்தான் இன்றளவும் அநுவ்ருத்தமாயிருந்தபடி யென்தானென்கிறார். அங்ஙனே கண்டதுண்டோவென்ன: அயிந்தைமாநகரில் - திருவஹீந்திரபுரத்தில், எமக்காய் - எங்களுக்காக, அமர்ந்தனை - ஸ்திரப்ரதிஷ்டிதனாய் நித்யவாஸம்பண்ணுநின்றாய். நீதான் புற்பாமுதலாப்புல்லெறும்பாதியொன்றின்றியே நற்பாலுக்குய்த்தவன்றும் ததிபாண்டாதிகளுக்கும் பரமபலந்தந்தவன்றும்; காணப்பெறாதேயோ, காணப்பெற்றுவைத்தே இந்த்ரஜாலம்மாயாவஞ்சனையென்று அவமதித்த ஆஸுரப்ரக்ருதிகளோடு கலந்திருந்தோ; இழந்துபிற்பாடரான நாங்களும் அநுபவிக்கும்படி அர்ச்சாரூப பரிக்ரஹம் பண்ணி அமர்ந்தவனென்றபடி. "[Sanskrit quotation in Grantha script]" என்னக்கடவதிறே. ஸௌசீல்யத்துக்குத் தந்நிலமாகையாலும் ந்யாஸவித்யாநுஷ்டானத்துக்கு முக்கியமான சுபாச்ரயமாகையாலும் பரவ்யூஹாதிகளுக்குமுன்பே அர்ச்சாவதாரத்தை அநுஸந்திக்கிறபடி. அர்ச்சாவதாரமேயிறே ப்ரபத்திக்குவிஷயம். உகந்தருளின நிலங்களிலேயாய்த்து ஆசார்யர்கள் ந்யாஸவித்யையை அநுஷ்டிப்பது. சித்திரம்-ஆச்சர்யமான, மணியென - ரத்நமென்னலாம்படி, திகழும்-விளங்காநின்றுள்ள, மன்-ஸ்திரமான, ஸத்தைகரூபமானவென்கை. உருவில்-விக்ரஹத்தில், அத்திரமணிபென அஸ்த்ரமென்றும் பூஷணமென்றும் சொ

ல்லும்படி, அனைத்தும் - ஸர்வதத்வங்களையும், நீ-ஸர்வவிலக்ஷணனாய் நிரபேக்ஷனான நீ, அணுகி-கிட்டி, தரித்தென்றபடி. விண்ணினுள் - பரமவ்யோமத்தில், அமர்ந்த-ஸ்திரமான, வியன்-ஆச்சர்யமான, உருவதனால் - ரூபத்தினாலே, பரத்வம்சொல்லிற்று. "புருடன்மணிவரமாக" என்கிறபாட்டை அநுஸந்திப்பது. எண்ணிய - த்யாதாக்களால் த்யாநிக்கப்படுமதான, ஈரிரண்டுருக்களும் - சதுர்விதரூபங்களையும், அடைதி-அடையாநின்றாய், வ்யூஹரூபத்தை அநுஸந்தித்தபடி. வாஸுதேவஸங்கர்ஷணப்ரத்யும் நாநிருத்தரூபமான சாதுர்வ்யூஹம்சொல்லிற்று. எண்ணிய வீரிரண்டுருக்களுமென்கையாலே த்யாதாக்களின் சாதுர்வித்யத்தாலே ப்ரத்யேகம் சதுர்விதமான சாதுர்வ்யூஹத்தையும் சொல்லிற்றென்பர். "ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்த்யாக்யதுரீயப்ராயரூபத: ஸ்தாநைஸ்ஸாத்த்விகைர் வ்யூஹம் ஸ்வயம் ஸர்வவ்யவஸ்திதம் ...॥" என்னக்கடவதிறே. பன்னிருநாமம்-கேசவாதிகளான பன்னிருதிருநாமங்களையுடைய, பலபலவுருவாய்-பேதகாகாரத்தாலே பிந்நபிந்நமான த்வாதசரூபங்களால், என் - எனது, உரு - தேகத்தையும், லலாடாதிஸ்தாநங்களையும், எங்கும்-எல்லாவிடத்திலும், ப்ராகாதி திக்குக்களையுமென்றபடி. எய்தி-அடைந்து, வ்யாபித்தென்றபடி. நிற்றி-நில்லாநின்றாய், நீ என்னுருவெய்தியெங்கும் நிற்றியென்று கூட்டுதனன்று. இது வ்யூஹபேதத்தை அநுஸந்தித்தபடி நீ-இருப்பிடம் வைகுந்தம்வேங்கடம் என்னாப்போலே ரமணீயவாஸஸ்தானத்தையுடைய நீ அதிநிஹீநனான என்சரீரத்தில் வாஸம்பண்ணாநின்றாய். அங்குப்பண்ணும் ஆதரத்தை இங்குப்பண்ணாநின்றாய். "திருமாலிருஞ்சோலைமலையே" இத்யாதி. மீனோடாமை - மதஸ்யத்தோடு கூர்மமும், கேழல்-வராஹமும். "மாயாவநேகாகாராதிசரீரிணம் த்வாம்தாநேவபச்யதிசரீச யதேஷலோகஃ" என்கிறபடியே மாயர்நோஹிதர் ப்ராக்ருதபுத்திபண்ணும்படிக்கேற்க இதோர்ரூப பரிக்ரஹப்ரகாரம். இத்தையுட்கொண்டு மீன் ஆமை கேழல் என்கிறார். கோளரியாய்- நரங்கலந்தசிங்கமாய், வான்-ஆகாயத்திலே, ஆர்-நிறைந்த, குறளாய்-வாமநனாய், வாமநனாய்வந்தவன்தானே ஆகாயமளாவி வளர்ந்துநின்றபடி, வான் ஸத்யலோகமுமாம். "குறைகொண்டு நான்முகன்குண்டிகை நீர்பெய்துமறைகொண்டமந்திரத்தால் வாழ்த்திக்கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான் அண்டத்தான் சேவடியையாங்கு" என்கிறபடியே ப்ரஹ்மா அர்ச்சிக்கும்படி ஸத்யலோகத்தை நிறைத்தவென்கை. மழு-பரசுவை, படை-ஆயுதமாகக்கொண்ட, முனியாய்-ருஷியாய், பரசுராமனாய் என்றபடி. தான்ப்ராஹ்மணயோநியாய்ப் பிறக்கச்செய்தேயும் துஷ்டக்ஷத்ரநிபர்ஹணார்த்தமாக ஆயுதபரிக்ரஹம்பண்ணி "இருபத்தோர்காலரசுகளை கட்டவென்றி நீண்மழுவா" என்னும்படி அஸஹநமுநியென்று பேர்பெற்றவனே, ஜாதிதர்மஸங்கரம் சொல்லுகையாலே அம்சாவதாரமொன்று சொல்லிற்றாகிறது. அன்றிக்கே: மழுப்படையனாய் அரசுகளைகட்டு, பின் வைஷ்ணவமான கார்முகத்தைச் சக்ரவர்த்தித் திருமகனாரிடம்கொடுத்து அருந்தவத்தோனாய் நின்றபடியென்னுமாம். பின்னும்-புநரபி, இராமர் இருவராய்- இரண்டுராமர்களாய், முன்னம் பரசுதரராமனாய்ப் பின்னும் தநுர்தரராமனும் ஹலதரராமனுமாயென்றபடி. அன்றிக்கே: பின்னல் தெற்றலாய் தெற்றல்இறுத்தலும் மாறுபடுதலுமாய் "மாரயதிபக்தசத்ருநிதி ராமஃ" என்று நிருக்தமான ஆச்ரிதவிரோதிநிரஸநசீலதையும் "தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா | ததஸ்து க்ருஷ்ணரோஹிண்யாம் பூர்வஸ்ய து" என்ற மாறுபடுதலும் சொல்லிற்றாய் பெருமாளும் நம்பிமூத்தபிரானுமான ராமத்வயமாய் என்னுதல். பாரில்-பூமியின்கண், துன்னிய - அடர்ந்த,நிபிடமான, பரம்-பாரத்தை, தீர்-தீர்க்கவல்ல, துவரைமன்னனும் - த்வாரகாதீசனானகண்ணனும், ஆய்—, "தைத்யாதிமுக்யா ராஜாநோ ... ஸுராஜா |" என்கிறபடியே ஆஸுரப்ரக்ருதிக ராஜந்ய ரூபபூயிஷ்டபாரபீடிதையான பூமியின்பாரத்தைத் தீர்க்கவென்றுவந்து பாரதஸமரவ்யாஜத்தாலேஅவநிபாரம்தீர்த்தவனிறே. "பூபாரோத்தரணாய". கலி - கலிகோலாஹலத்தை, தவிர்த்து-தவிரச்செய்து, அடக்கி, அளிக்கும் - பரிபாலிக்கின்ற, கார்த்தயுகதர்மப்ரரோஹணம்செய்து ரக்ஷிக்குமதான, கற்கியாய்-கல்கியாய், "கலிஷ்ட்ரத்யக்ஷைவ ... க்ருதயுகதர்மம் ஸம்விக்ருதாரணயாராயாஃ" "பாவிந்யாதசயா" "கற்கியாமின்னும்" என்கையாலேகல்க்யவதாரம்பாவியானாலும் கல்பாந்தரஸமாதியாலே யாதல் சாப்தப்ரமாணதிருடநிச்சயத்தா

லேயாதல் பூபலவிஷயதோஸ்ஸஹ நிர்தேசம்பண்ணுகிறது. அன்றிக்கே: கல்கியாய் என்பதை வருதியோடுசேர்த்து இதற்கு முன்பு மீனுடித்யாதியாய்இனிதற்கியாய் வருதியென்று பொருள்கொள்ளுதலுமொக்கும். மற்றும்—, மலிவதற்கு - மேன் மேல்வளருதற்கு, எண்ணும் - நினையாநின்ற, வல்வினை-க்ரூரபாபங்களை, அதர்மங் களை யென்கை. மாற்ற - மாற்றுதற்கு, அதர்மங்களை மாற்றலாவது தர்மத்தைநிலை நிறுத்தல். நாநாவுருவம்கொண்டு - "அஜாயமாநோபகுதாவிஜாயதே" என்கிறபடி யேநாநாவிதசரீரபரிக்ரஹம்பண்ணி, நல்அடியோர் - பத்தர்கள், தான்ஸாதுக்களெ ன்கிறபத்தர்கள். "அநந்யாச்சிந்தயந்தோமாம்." வானரின்பம் - பரமபதத்திலுடைய க்கடவஸுகத்தை, பகவத்ஸாக்ஷாத்காரஸுகத்தை, இங்கு- இவ்விருள்தருமாஞால த்திலே, உற - அடையும்படி, வருதி-வராநின்றாய், ஆசார்யரூபமாகவும் வராநின்றா ய். இத்தாலே "பரோவாவ்யூஹோவா" இத்யுக்தமான பரரூபாதிகளெல்லாம் "பக் தாநாம்த்வம்ப்ரகாசஸே" எனகிறபடியே ஆச்ரிதரக்ஷணார்த்தமே; துஷ்டநிக்ரஹம் ஆநுஷங்கிகமென்றதாய்த்து. "விநாசாயசதுஷ்க்ருதா" மிறே. 𑌯𑌦𑌾 𑌯𑌦𑌾 𑌹𑌿 𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌗𑍍𑌲𑌾𑌨𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 । 𑌅𑌭𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑌮𑌧𑌰𑍍𑌮𑌸𑍍𑌯 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌮𑍍 । 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 ॥ என்னக்கடவதிறே. உலகுக்கு - லோகங்களுக்கெல்லாம், ஓர்உயிர் - அத்விதீயாத்மா, ஓரோ ஆத்மா. "அந்தஃப்ரவிஷ்டச்சாஸ்தாஜநாநாம்." என்னும் - என்றுச்ருதிசதசிகரப்ரதிப்ரத்யனுன, நீ—, திருவோடு-பெரியபிராட்டியாரோடு, ஓர்-ஸங்கல்பிதமான, உயிர்-சேதநவர்கங்களையும், எல்லாம் - அசேதநவர்கங்களையும், ஏந்தி-தன்தேஹத்தில் தரித்து, விராட்ரூபத்தில் தரித்து. 𑌤𑌵𑍈𑌵𑍈𑌤𑌾𑌸 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣𑌾𑌯𑌿𑌮 𑌤𑍍𑌵𑌯𑌾𑌯𑍀 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑍇𑌜𑍋𑌨𑍍𑌤𑌿𑌃

இன்புறுதி - ஆநந்தியாநின்றாய். தன்பேருக இவற்றை தரியாநின்றாய். "𑌪𑌰𑍋 𑌵𑌾 𑌵𑍍𑌯𑍂𑌹𑍋 𑌵𑌾 𑌵𑌿𑌭𑌵 𑌉𑌤 𑌵𑌾𑌰𑍍𑌚𑌾𑌵𑌤𑌰𑌣𑍋 𑌭𑌵𑌾𑌨𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍀 𑌵𑌰𑌦" என்று அர்ச்சாரூபத்துக்கும் அந்தர்யாமிரூபத்துக்கும் நடுவே 'பவாந்வா' என்று விராட்ரூபத்தை அநுஸந்தித்தக்ரமத்திலே இங்கும் அருளிச்செய்தபடி. மேல் அந்தர்யாமிரூபம். யாவரும்-யாரும், அறியாது-அறியாதபடி, எங்கும்-எல்லாவற்றிலும், எல்லாவிடத்தும், நீ—, கரந்து-ஒளித்துவர்த்தித்து, "கறந்தபாலுள்நெய்யேபோல்" என்கிறபடியே க்ஷீரக்ருதந்யாயத்தாலே ஸர்வாம்சத்திலும் வ்யாபித்திருக்கச்செய்தே துர்விஜ்ஞேயனென்றபடி, மேவு-மேவுகிறவர்களுடைய, உபாஸகர்களுடையவென்கை, உரு - சரீரத்தை, சூழ்ந்து-வ்யாபித்து, வியப்பினல்-ஆச்சர்யத்தால், மிகுதி - மிகாநின்றாய். அதிசயிதனுகாநின்றாய். உபாஸகர்களுக்குக்கண்ணால் காணலாம்படி சரீரபரிக்ரஹம்பண்ணி நிற்பவனுகையாலே அநவதிகாதிசயாச்சர்யஸ்வரூபனென்கை. இங்கு குருகைகாவலப்பன்வார்த்தையை அநுஸந்திப்பது. [இவ்வார்த்தையை மஹாவம்சமகிமையில்காண்பது.] எம்மை-அநாதிகர்மப்ரவாஹத்தாலே ஸம்ஸாரபரம்பரையிலே தோள்மாறித்தட்டித்தாவற்றுநிற்கிறநம்மை, அடைக்கலங்கொண்டிட - அடைக்கலம்கொள்ள, ரக்ஷ்யமாக அங்கீகரிக்க, உன்னையன்றி - ரக்ஷணைபயுக்தநிகிலகல்யாணகுண பரிபூர்ணனுன உன்னையல்லது, மற்றொன்று கதி வேறொருபாயத்தை, கண்டிலம் - காணவில்லை, கம்பித இதம் என்று-கதி- ப்ராப்யம்என்னுமாம். உன்னையல்லது எமக்குப்ராப்யமுமில்லையென்றபடி. அன்றிக்கே: மற்றொன்று-வேறொன்றையும் கதியாகக்கண்டோமில்லையென்னுதல். அவனல்லது மற்றவெல்லாம் பரமபுருஷார்த்தப்ரதாநவிஷயத்தில் அசித்கல்பமென்றுதோன்ற மற்றொன்றென்றபடி. பல்வகைநின்ற-இப்படிபல்படியாய்நின்ற, நின்படி அனைத்தில்-உன்ஸ்வரூபரூரகுணவிபவாதிகள் எல்லாவற்றிலும், தொல்வகை-அநாதிஸித்தமான ப்ரகாரத்தை, காட்ட-விசதமாகத்தெரிவிக்க, துணிந்ததும் - ஸாஹஸமாய்ப்ரவர்த்தித்ததும், மறையே-வேதமே, அபௌருஷேயதயாப்ரமப்ரமாதாதிஸம் பாவனையில்லாதவேதமேயென்கை. "யதோவாசோநிவர்த்தந்தே" யிறே. துணிந்ததூஉமென்றளபெடை. அன்றிக்கே, துணிந்த-ஸாஹஸிகமான, தூமறை பரிசுத்தமானவேதம், காட்டும் - ப்ரதர்சிப்பிக்கும். என்று காட்டுமென்று முற்றாய்பாடங்கொள்ளினும், தூமறை துணிந்துகாட்டுமென்று துணிந்தென்றெச்சமாய்ப் பாடங்கொள்ளினுமொக்கும்.

கீழ்மெல்லடிவேண்டிய என்று பரமபக்திசொல்லிற்று, அதுதானே அநுபவதசையில் ஸர்வகாரணத்வாதிஸாக்ஷாத்காரமும் தத்ப்ரதிபாதநமும் அபிமதமாகையா

லே தாத்ரு சாகாரவிசிஷ்டவேஷத்தாலே உத்தரோத்தர ஸாக்ஷாத்காரேச்சையைப்பிறப்பித்து பரபக்தியாகிறது. அதன் மேலேபரஜ்ஞாநம், அதன்மேலே பரமபக்தி,பின்னை அது தாத்ருசாகார விசிஷ்டவேஷத்தோடே ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்ற இச்சையைவிளைத்துப் பரபக்தியாகிறது. இதிறே முக்திதசையில்படி. அப்படியே இங்கும் கண்டுகொள்வது.

நின்திருதனக்கென்று ஸ்ரீமத்சப்தார்த்தம், பாற்கடல்தன்னிலித்யாதி நாராயணசப்தார்த்தம், சித்திரமணியெனவென்று சரணசப்தார்த்தம், சரணசப்தம்திவ்ய மங்களவிக்ரஹோபலக்ஷமிறே. கொண்டிடவெம்மை யித்யாதிசரண சப்தார்த்தம். கண்டிலங்கதியென்று ப்ரபத்யேயினர்த்தம். ஆகிஞ்சந்யாதிகள் உத்தமனில்விவக்ஷிதமிறே. பல்வகையித்யாதி உத்தரகண்டார்த்தம்.

தூமறையினுள்ளந்துளங்காத்துணிவுதரும்
ஆமறிவாலார்ந்தடிமையாகின்றோம்-பூமறையோன்
பாராயணத்திற்பணியுமயிந்தைநகர்
நாராயணனார்க்கேநாம். (௪)

கீழ் "உயிரளிப்பானென்னெனயோநியுமாய்ப்பிறந்தாய்" என்கிறபடியேஇத்தலையைப்பெறுக்கைக்காக அவன்செய்த க்ருஷிசொல்லிற்று. அதுதான் தன்திறத்தில் ஸபலமானபடி சொல்லுகிறதிதில். கீழ்பாட்டு பூர்வகண்டார்த்தம். இப்பாட்டு உத்தரகண்டார்த்தம். கீழ் அர்த்தத: ஸம்க்ஷிப்தமான உத்ரகண்டார்த்தத்தை விஸ்தரிக்கிறதென்னுமாம்.

நாம்-ஸதாசார்யகடாக்ஷத்தாலே தத்வஹிதபுருஷார்த்த விவேகம்பெற்றநாம், தூமறையின்-நிர்துஷ்டமான வேதங்களின், வேதாந்தங்களினுடைய, உள்ளம்-அபிப்ராயத்தில், துளங்கா - ஸம்சயவிபர்யயாதிகளில்லாத, துணிவு - திருடநிச்சயத்தை, தரும்-உண்டாக்குமதான, ஆம் - உசிதமான, அறிவால்-ஜ்ஞாநத்தாலே, ஆர்ந்து பூர்ணராய், "[illegible]" இத்யாதிப்படியேதத்வோபாயபுருஷார்த்தங்களை 'உபதேசாத்ஹரிம்புத்வா' என்னும் கட்டளையிலே அறிகையாலே 'தர்மஜ்ஞஸமய: ப்ரமாண' மென்றுகொண்டு ஸம்சயாதிகள் அற்றென்கை. 'நிச்சங்கஸ்தத்வத்ருஷ்ட்யா.' பூமறையோன்-பூவையும்மறையையும் உடையவன், பூவில்வாழ்பவன், மறையைப்போற்றுமவன். பூவிலுறைபவன், மறையையுணர்பவன். அன்றிக்கே: பூவென்று அழகாய் அழகியதாக வேதப்ரவசநம் செய்பவனென்னுதல். மதுகைடபர்கையில்சிக்கி வேதத்தைப் பறிகொடுத்தபடிகொண்டு 'க்விச்நாதிலப்தபரிபாலநவ்ருத்திரேவம்' என்கிறபடியே ஸ்வகீயரக்ஷணசக்தனென்று பரிஹாஸகர்பமுமாம். பாராயணத்தில் - அநுஸந்தானத்தில், பணியும்-ஸ்துதிசெய்யாநின்ற, தேவுமெப்பொருளும்படைக்குந் தன்னையும்படைத்தவனாகையாலே தனக்கும்பிதாவாகவும் சேஷியாகவும் ஸ்வாமியாகவும் ஸ்துதிசெய்யாநின்ற, அயிந்தைநகர்- திருவயிந்தைமாநகருக்கு ஸ்வாமியான, ஆச்ரிதரக்ஷணார்த்தமாக நடுநாட்டில்வந்து நிற்குமவனை, நாராயணனார்க்கே - நாராயணனுக்கே, ஸர்வஸ்மாத்பரத்வாதி கல்யாணகுணாகரனுக்கே, அடிமையாகின்றோம் - தாஸர்களாகிறோம். மூலமந்த்ரத்திலே ஸ்வரூபம்தெளிகையாலே ததீயபர்யந்தமாக அந்யசேஷத்வத்தைக்கழித்து பாகவதசேஷத்வபர்யந்தமாக புகலுசேஷர்களாகப்பெற்றோமென்கை. பூமறையோன் பாராயணத்தில் பணியுமென்ற இடத்தில் அஹீந்த்ரபுர மாகாத்ம்யத்தை நினைப்பது. "[illegible]" என்று மருளிச்செய்தாரிறே,

ஆர்க்குங்கருணைபொழிவானயிந்தையில்வந்தமர்ந்த
கார்க்கொண்டலைக்கண்டகாதற்புனமயிற்கண்பனியா
வேர்க்குமுகிழ்க்கும்விதிர்விதிர்க்கும்வெள்கிவெவ்வுயிர்க்கும்
பார்க்கின்றவர்க்கிதுநாமென்கொலென்றுபயிலுவமே. (எ)

கீழ் ஆமறிவாலார்ந்தடிமையாகின்றோமென்ற ப்ரஸங்கத்திலே நாயிகாபாவத்தை ப்ராப்தரானார். 'ஸதீவப்ரியபர்த்தாரம்' என்றுமுண்டிறே. அடியவர்க்குமெய்யனோடு ஒருநீராகக்கலந்துபரிமாறவேண்டுமென்று அபேக்ஷித்தார். அப்போதே அவன் அதைத்தலைகட்டினானில்லை; க்ஷிப்ரபலப்ரதம்தேவதாந்தரமிறே. இது ஸாத்மியாதென்றுபார்த்தான்; கடக்கநின்றான். அபேக்ஷிதம் பெறாமையாலேநொந்து படும்பாடுகளாய்த்திதில் சொல்லுவது. இவர்க்கோடும் தசை இன்னதென்று பாசுமிடமாட்டாமே திகைத்துச்சொல்லும் பரிவர்பாசுரத்தை தலைமகளீடுபாடுகண்டு நயந்துரைத்ததோழிபாசுரத்தாலே அருளிச்செய்கிறார். துறை மின்னிடை மெலிதற்சொல். பாங்கிமதியின் அவரவர் மனக்கருத்துணர்ந்துரைத்தலெனினுமாம்.

ஆர்க்கும்-யாவர்க்கும், கருணைபொழிவான் - க்ருபையை வர்ஷிப்பதற்காக, அயிந்தையில்-திருவயிந்தையில், வந்து அமர்ந்த - வந்து நித்யவாஸம்பண்ணுகின்றுள்ள, கார்க்கொண்டலை - நீலமேகத்தை, நடுநாடிறே. மத்யஸ்தமாய் நிலைநின்றபடி. கடல்கொண்டெழுந்திறே வானம் நீராய் நெகிழ்கின்றது. இக்கொண்டலும் மாசிக்கடலாடி மகிழ்ந்துவருமதிறே. அங்கங்கே போய்நின்று வர்ஷித்துப்போகவேண்டாதபடி நடுநிலைநின்று வர்ஷிக்க உறுப்பட்டபடி. திங்கள் மும்மாரிபெய்தென்று ஒருகால வ்யவஸ்தையாதல்; பெய்திடாய் நாங்களும் மார்கழிநீராடமகிழ்ந்தென்று அநுகூலருள்ளவிடமென்றொரு தேசவ்யவஸ்தையாதல்; வாழவுலகினிலென்று விஷயவ்யவஸ்தையாதல்;இன்றிக்கே யாவர்க்கும் எப்போதும் எல்லாவற்றிற்கும் வர்ஷிக்க ஒருப்பட்டபடி. ஒழித்தால்வரட்கேடு, பொழிந்தால் வெள்ளக்கேடாகாதே பொழியப்பொழியச் செழிக்கும்படியாய்த்து வர்ஷிப்பது. நீராயினிறே அது. இது கருணையிறே. சிறிதுபொழிந்தவளவிலே உடம்பு வெளுக்குமிறேவானம். இது பொழியப்பொழியக்கறுத்து நிறங்கொடு நிற்கும்கொண்டல். 'மேகங்களோ உரையீர்.' கண்டு-பார்க்கப்பெற்ற, காதல்-அநுராகம் வடிவுகொண்டாப்போன்ற, புனம்யில்-தன்னிலத்தில் உறையும்மயில், 'வாழியவானமே' என்று போற்றவேண்டாதே ஸர்வமங்களமங்களமான கொண்டலைக்கண்டவாறே தானானதன்மைமாறி அநுராகமே இவ்வடிவுகொண்டதென்னும்படியானமயில். தன்னிலமாகையாலே ஸ்வேச்சையாய் வர்த்திக்கக்கடவதிறே. இது உருவகவதிசயவணி. கண்பனியா-கண்களில் நின்றும் நீர்சோர்ந்து, வேர்க்கும்-வியர்க்கும், முகிழ்க்கும்-உடலெங்குமரும்பிநிற்கும், விதிர்விதிர்க்கும்-நடுங்காநிற்கும், வெள்கி-நாணி, வெவ்வுயிர்க்கும் - உஷ்ணமாக நெடுமூச்சு எறியாநிற்கும், பார்க்கின்றவர்க்கு - காணுமவர்களுக்கு, இது-இதை, நாம்-இவள் தோழியாகிய நாம், என்கொல் என்று - எதுவென்று, எவ்வாறாயினதென்று, பயிலுவம்-சொல்லுவோம், பாசுரமிடவறியோமென்கை. 'முலையோமுழுமுற்றும்போந்தில, மொய்பூங்குழற்குறிய, கலையோவரையில்லை, நாவோகுழறும், இவள்பரமே பெருமான் மலை திருவேங்கடமென்று கற்கின்றவாசகம்,' மறைத்துவையாதே கொண்டலைக் காணவிட்டவாறே இவளை இழந்தோமாகாதே. துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்தொழுமிவளை நீரினி அன்னைமீருமக்காசையில்லைவிடுமினோ அங்கு. 'நமக்காசையில்லைவிட்டோம்' இங்கு. நாடாகவாழாநிற்க நாமிறே இவளையிழக்கப்புகுகிறோம். "ஸ்வேதவேபது ஸ்தம்ப ரோமாஞ்ச ஸ்வரபேத வைவர்ண்யாஸ்ரு ப்ரலய இத்யஷ்டௌ ஸாத்விகா:| ஸ்வாத்விகவ்யபிசாரிணாம் ..." நாட்டியுள்ள கணமயிலவைகலந்தாலும். எம்புனமயில் கண்பனியாவித்யாதி. 'மதியிலேன்வல்வினையேமாளாதோ.' நாமென்கொலென்று பயிலுவம்-இது பூர்வராகமென்னவோ;ப்ரவாஸமென்னவோ; இதிறே யெங்கள்படியென்னவே."ஸ்ரோதாஷஸ்ருங்காரவகதிருணயமேநா ... ஸ்ருங்காரஉஷா:" என்றபத்திலும் வைத்துக்கொண்டு ஜஶ்ரளஹீ நவெஷ ஸ்வஜூநாநரைத ஸஸ்யா என்னுமளவும் ஆய்த்து. இனி என்கொலென்று பயிலுவம். இனிமேல் வரக்கடவதென்தான். அதுதான் முடிவேயிறே. அன்றிக்கே: கண்பனியாவென்கையாலே கண்ணீர்பெருகுமதுதான், பனிநீராயிருக்கையும் வேர்வையும் ரோமாஞ்சமும் நடுக்கமும்கண்டவாறே மாநஸபாவனை நடவாநின்றதென்றறியலாயிருந்தது,தலைமகனை தர்சனஸமாநாகாரமாக ப்ரத்யக்ஷீகரிக்கையாலே ஆனந்தக்கண்ணீர்பெருகாநின்றது, அல்லாதபோது அது பனியாகாதிறே. வேர்க்கும்-அவன் கைமேலே பட்டதாக நினைந்தவாறே வெயராநின்றாள். கலவியில் புதியாளிறே. முகிழ்க்கும்-ஸம்பாவனையிலேஅரும்பாநின்றாள். ...

றெ நா|என்னுமாப்போலே கடலின்மிசப்பெரிதா மிவள்காதலை இதுகாட்டாநின்றது. மணிக்கண்ணுடிமுகிழரும்பினபடி. கடம்பரும்பினாப்போலே உடலெங்குமரும்பினபடியாலேபுலவிநினைவாயிருந்தது. விதிர்விதிர்க்கும்-நடுங்காநிற்கும்துடைகள். 'ஸம்ஹாராநுஶாஸநே ... ... ... ஸங்கோசம்'' என்னுனிறே மஹாகவிபாவாவஸாநமென்று காட்டாநின்றது. ... ... இறே. அன்றிக்கே: விதிர்விதிர்க்கும்-உதறுநிற்கும், கைகள். ... ... இறே. அதவா: ஸந்துக்ஷ்யமாண பாவையென்கை ... என்றுனிறே மல்லநாகன். யத்வா: ... ... என்றுகொண்டு உதறுநிற்குமென்கை. வெள்கி லஜ்ஜியாநிற்கும். ... ... என்றுனிறே. அன்றிக்கே: ஸ்வாப்நிகஸமாகமம் தானேபாரமார்த்திகமா தலைக்கட்டுகையாலே நாணுநிற்கும். ... ... ... ... வேதி'' என்றுனிறே பவபூதி. தன்பருவத்தினளவல்லாமையைக் கணிசித்துத் தானே நாணுநிற்கும். வெவ்வுயிர்க்கும்-இதுகாறும் ஸம்போகச்ருங்காரமாய் இப்போதாய்த்துவிப்ரலம்பம். வெவ்வியதாக நெட்டுயிர்க்கையாலே. முன்னே தன்படிதானறியாதேமானஸமாய்வ்ருத்தம். இங்குத்தன்படிதான் அறிகையாலேநெட்டுயிர்க்கும். 'என்செய்கேனென்றி நீ திருவரங்கத்தாயென்றும்வெவ்வுயிர்த் துயிர்த்துருகும்.' அன்றிக்கே: ஸ்வப்நாநுபூத நகபத தந்தச்சேத்யாதிகளைக்காணு: அய்யோ! இதென்னுயிற்றென்று திகைத்து ஸ்வாப்நிகமென்று அறிந்து வெவ்வுயிர்க்கும். அவன்தானிப்போதாகப் பிரிந்தானாய் வெவ்வுயிர்க்கும். இதுநாமென்கொலென்று பயிலுவம், கேட்டார்க்குச்சொல்லவல்ல சொலவறியாதே நாமும்நாணிக்கவிழ்தலையிட வேண்டியிறேயிருப்பது, நம்குடிக்கிதுசேருமோ. கொண்டலைக்கண்ட மயில் துயருறுமாறு சொல்லுகையாலே விரோதவணியுமாம். ''முரணப்படும்பொருளொடு மொழியானும்முரணப்படுமியல்பாக முன்றோன்றல் விரோதமெனப் பெயர்வேண்டப்படுமே'' என்றுனிறே தமிழன். கொண்டல்மயிலென்ன உருவகவதிசயவணி இதற்கு அங்கமாய் நிற்றலால் அங்காங்கித்தன்மைக் கலவையணி.

பயின்மதிநீயேபயின்மதிதருதலின். வெளியுநீயேவெளியுறநிற்றலின், தாயுநீயேசாயைதந்துகத்தலின், தந்தையுநீயேமுந்திநின்றளித்தலின், உறவுநீயேதுறவாதொழிதலின், உற்றதுநீயேசிற்றின்பமின்மையின், ஆறுநீயேயாற்றுக்கருடலின், அறமுநீயேமறநிலைமாய்தலின், துணைவனுநீயேஇணையில்லையாதலின், துய்யனுநீயேசெய்யாளுறைதலின், காரணநீயேநாரணனாதலின், கற்பகநீயேநற்பதந்தருதலின், இறைவனுநீயேகுறையொன்றிலாமையின், இன்பமுநீயேதுன்பந்துடைத்தலின், யானுநீயேயென்னுளுறைதலின், எனதுநீயேயுனதன்றியின்மையின், நல்லாய்நீயேபொல்லாங்கிலாமையின், வல்லாய்நீயேவையமுண்டுமிழ்தலின், எங்கணுமாகுமெய்யநின்வியப்பே, அங்ஙனேயொக்கவறிவதாரணமே. (எ)

கீழ் 'நாமென்கொலென்றுபயிலுவ' மெனறுயிர்த்தோழிக்கும் பாசுரமிடவகையறியாவண்ணம் ஓடிற்று. பெரியோர் திறத்திலித்தலையில் ஆகாரத்தை மறைத்துக்கொள்ளக்கடவதாகையாலே இக்குறை வேறுபோக்குச்சொல்லலாமென்றுபாரித்தால் அதுதனக்குப் பாசுரமிடவல்லோ மல்லோமாசாதேயென்று என்கொலென்று பயிலுவமென்னுநின்றார்கள். ''அயலோரறியிலுமீதென்னவார்த்தை'' யென்றுகொண்டு தலைமகள் மறைத்துவர்த்திக்கக்கடவத்தை அவள்தான்மறைக்கவல்லளல்லாமையாலேஉயிர்த்தோழிகள்மறைக்கப்பார்த்து அதுதான் அசக்யமாயிருக்கையாலேகால்யாந்தலைசாய்த்தார்களென்றதாய்நின்றது. இப்படிபரமபக்திதலையெடுத்துபரதசையிலும் வைத்து ஸௌலப்யஸௌசீல்யாதி கல்யாணகுணகணங்கள் நிறம்பெறுமிடமான உகந்தருளினநிலத்தில் விபவஸமாதியாலே கலந்துபரிமாறவேண்டுமென்று மநோரதித்துநின்றார்; அதுபெற்றாரில்லை, இது தனக்கடியென்னென்று பார்த்தார். அவன்தா

ன் அநவதிகாதிசயாஸங்க்யேயகல்யாணகுணகணநிவாஸபூமியாகையாலே அதிலொருகுறைசொல்லவிரகில்லை, ஆனபின்புநமக்குததிகாரம் நிறைந்ததில்லையென்ருதல்; அவன்தானித்தலையில் அநுராகமில்லாதவனென்ருதல்சொல்லவேண்டிற்றிறேயென்று உத்விக்நரானுர், சோகித்தவாறே“மாசுச:”என்னவேண்டுமிறே அவனுக்கு,‘இதன்அடியென்னென்ருராயாநின்ருயீ! அநுராகவிரஹமாதல்: அதிகாரசூந்யதையாதல் அன்று. நாம்மானுஷ்யாவதாரத்தில்மநுஷ்யபாவனைசெய்யக்கடவோமானுப்போலே அர்ச்சாவதாரஸமாதியின் மர்யாதையையழிக்காமைக்காகவாயிற்றுநாம் தூஷ்ணீம் நின்றது, துக்கமுருதேகொள்’ என்று ஸமாதாநம்பண்ணி முன்னம் இவரைஅநுபவிப்பியாதகுணங்களை அநுபவிப்பித்தான். இங்ஙனல்லாதபோது இவரை இழக்கவேண்டிவருமிறே. நெடும்போதுகூட பரத்வத்தைமறைத்து வைத்தும் கடைசியில் அது தானேவெளிவரும்படியாய்த்திறே விபீஷண பரிக்ரஹத்தினன்று. அதுபோலேயிங்கும் ‘ஸ்வநிகம்மபஹாய’ இறே. “விதிதஸஹிஹாதர்மஜ்ஞ:ஶரணாகதவத்ஸல:
வாழிவியஸவிவவிவு[illegible] ஸயஸாஹ விஜர்ம்ஹிதஸவெலு[illegible]
ஹாவ” என்னக்கடவதிறே. அது தன்னைத்தான் அநுபவித்தபடியே பேசுகிருர். அது பேசுமிடத்தில் ஸஹேதுகமாக உபபாதித்தருளுகிருர், பரோபதேசபர்யவஸிதமாம்படி. இதில் அந்யதாபாவம்சங்கிக்கவிரகில்லையென்றுகொண்டு ஸ்திரீகரணமாயிருக்கும். அது தன்னில் உத்விக்நராய் அகலப்பாரித்ததம்மை அநுபவிக்கும்படிசித்த ஸமாதானம் செய்துகைக்கையாலே அதுதன்னையே முந்தற அருளிச்செய்கிருர். பயில்மதி-இடைவிடாதே அநுபவிக்க அளவுடைமையை, தருதலின்-எனக்கு அருள் செய்கையாலே, பயில்மதி-அநுபவயோக்யஜ்ஞன சந்தரன், நீயே. வெளியுற - இதர தேஜோவஸ்துக்கள் ப்ரகாசத்தையடையும்படி, தன்னை அதிவஸித்துதேஜோந்தரங்கள் தேஜஸ்ஸையடையும்படி யென்கை. நிற்றலின்-நிற்பதினுலே, வெளியும்-தேஜஸ்ஸூம், நிருபாதிகதேஜோ ரூபியான ஸூர்யனும், நீயே. “ப்ருஹங்பாண்டரவாஸாஸ்ஸொமொராஜேதி” என்று பாஸ்யஜ்ஞனசந்த்ரனும் “அதிஷ்டாஸ்ஸர்வேஷாம் பூதாநாம்மூர்தாராஜேதி” என்று பாஸ்யஜ்ஞன ஸூர்யனும் நீயே. “யஸ்தெஜஸஜி தெஜாம்ஸி, தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி” என்று தன்னையொழிந்த தேஜஸ்ஸூக்களுக்கும் புகர்கொடுப்பவனிறே நீதான். யஸ்யாம்ஸமெதயஸம் யெஷூசிரந்நிவாஸாத் பாகிரதீப்ரப்ருதயோபிபவந்திபுண்யா: என்னுமாப்போலே. இது ஸர்வநிர்வாஹகத்வம் சொன்னபடி. மேல் “ப்ராதா பர்தாசபந்துச்ச பிதாசமமராகவ: மாதா பிதாப்ராதாநிவாஸச்சரணம்ஸூஹ்ருத்” இத்யாதிப்படியே ஸர்வவிதபந்துவும்நீயே யென்கிருர். சாயை-நிழலை, தந்து-கொடுத்து, உகத்தலின்-ஸந்தோஷித்தலால், தாயும்-மாதாவும், நீயே. “மாத்ருதேவோபவ” என்று முந்தறச்சொல்லிற்றிறே. இங்குச் சாயையென்றது ஸம்ஸாரஸந்தாபஹரமான திருவடிகளை. அதை அஜ்ஞாதயாத்ருச்சிகாநுஷங்கிக ப்ராஸங்கிகஸூக்ருதாதிமூலகமாகத் தான் முயன்று தருகையாலும் அதுதான் தன்பேறென்று உகக்கையாலுமாய்த்துத் தாயு நீயேயென்றது, அங்குச்சாயையென்பது கர்ப்பதாரணத்தை. முந்தி - ஸ்ருஷ்டிகாலத்திற்கு முன்னே, நின்று—, அளித்தலின்-கரணகளேபர ப்ரதானம்பண்ணி ரக்ஷிக்கையாலே, தந்தையும்-பிதாவும், நீயே, “அசிதவிசிஷ்டாந்ப்ரளயயேஜந்தூந வலோக்யஜாதநிர்வேதாகரணகளேபரயோகம் விதரஸிவ்ருஷசைலநாத்தகருணேத்வம்.” பிதாதான்ஹிதப்ரவர்த்தகனுகையாலே இவனுக்கு ஆமது ஆகாதது ஆராய்ந்து இவன் அறியாக்காலத்திலும்நடத்திவைக்குமாப்போலகழிக்கவேண்டுவனகழித்துக்கூட்டவேண்டுவன கூட்டி ரக்ஷிக்கையாலே பிதாவும்நீயே. ‘அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு சைவித் தறியாமாயத்தடியேனைவைத்தாயால்.’ துறவாது - விடாதே. ஒழிதலின் - ஒழிகையாலே, உறவும்-பந்துவும். நீயே. பரித்யாகஹேதுக்கள் நிலைநின்ருலும்விடமாட்டாதேயிருக்கையாலே நிர்வ்யாஜபந்துநீயே. ‘ப்ராதா’ இத்யாதி. ‘பர்த்தாச பந்துச்ச.’ ‘வேறேபோகவெஞ்ஞான்றும்விடலே.’ சிற்றின்பம்-சில்வானஇன்பங்கள் ஆபாததஃ அல்பாநுகூலங்களாய்த்தோற்றிப் பின்னுல் அநர்த்தோதர்க்கமானகாமங்கள், ‘நெடுங்காமமுற்பயக்குஞ் செந்நீரவின்பத்தின் மிற்றிழாய்பிற்பயக்கும் பீழை பெரிது, என்று தமிழன்வார்த்தை. இன்மையின்-இல்லாமையால், அப்படியாகாமையால் என்றபடி. அவகாஹிக்க அவகாஹிக்க ’ஸரஸமாய்ஸூகோதர்க்கமாகையாலே என்கை. ‘அதிகமதிகமங்யாமாத்மசோபாம்ததாநம். அநவதிக்கவிபூதிம் ஹஸ்திசைலெச்வரம் த்வாமநுதிநமநிமேஷைர்லோசநைர்நிர்விசெயம்.’ உற்றதும்-ப்ரப்தமும், வருத்தவிஷயமும், நீயே, ‘வாயவனையல்லதுவாழ்த்தாது கையுலகந்தாயவனையல்லது

தான்றொழா, பேய்முலை நெஞ்சுணக்கவுண்டா னுருவொடுபேரல்லால் காணுகண்கே ளாசெவி’ ‘வாழ்த்துகவாய்’ இத்யாதி. அன்றிக்கே: உற்றதும் - பரித்யாகாநர்ஹ அந்தரங்கவஸ்துவும் நீயே யென்பாருமுண்டு. உற்றதும் - வாஸஸ்தானமும் நீயே யென்றுமாம். இது ‘நிவாஸஃ’ என்றதைச்சொல்லுகிறது. மேல் ‘சரணம்’ என்றதைச் சொல்லுகிறது. ஆற்றுக்கு- அநுஷ்டிக்கு மேதேனுமொரு வ்யாஜமாத்ரமான உபாயத்துக்கு, அருளதலில் - உபாயலாகவத்தையும் பலகௌரவத்தையும் நினையாதே பரிபூர்ண பலப்ரதானம்பண்ணி ரக்ஷிக்கையாலே, ஆறும் - உபாயமும், நிருபாதிக ஸர்வவிதஸம்பந்தமு முடையவனுகையாலே இத்தலையில் வ்யாஜமாத்ரத்தைக்கொண்டு தான் உபாயாந்தர ஸ்தானத்திலே நிற்கையாலே ஸகலபலஸாதநமும் நீயே. ‘த்வமேவோபாயபூதோ மே பவ’ இறே. மறநிலை - பாபங்களின்நிலையை, மாய்தலில் - மாய்த்தலில், நசிப்பிக்கையாலே, அறமும் - தர்மமும், நீயே. பாபநிவர்த்தகங்கள் தர்மங்களிறே. ‘ஏத்வாவராசியேந யாக்ஷவஹ்ருதம் சக்திநியாக்ஷ்வ சரணாகதவத்ஸலம்’ ‘ராமோ விக்ரஹவாந் தர்ம:’, ‘க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்’. இது ‘ஸுஹ்ருத்’ என்றதைச்சொல்லுகிறது. ‘வணக்ஷணவஸாஹ்ருஸமேதா நியமேந வ்ருத்திநாபாதிய:’ என்னக்கடவதிறே. அறம் என்று கர்மயோகாதிகளைச்சொல்லி ‘ஸாக்ஷாத்ரெணஸோவெஷ்யா பெநயெநக்ஷஹெ தாநா தஸ்யதஸ்யாஹமேவ’ என்றபடியைச் சொல்லிற்றென்றுமாம். இணைதன்னேடொப்பார், இல்லையாதலின் - இல்லாமையால், ‘ஒத்தார் மிக்காரை இலையாயமாமாயா.’ துணைவனும் - ஸஹாயமாய் நிற்பவனும், நீயே. உன்னேடொப்பானெருவன் உண்டாமன்றிறே அவனும் ஸஹாயமோவென்று சங்கிக்கலாவது. ‘ஜையவவக்ஷீஸோ வாயத்வத்யாத்ரிகா’ என்கையாலே ஸத்பதவீ ஸஹாயன் நீயேயிறே. இது கதிஃ என்றதைச்சொல்லிற்று. அன்றிக்கே ஆறும்நீயே, அறமும் நீயேயென்று சரணம் என்றதைச்சொல்லி துணைவனும் நீயே துய்யனும்நீயே யென்று ஸுஹ்ருத் என்றதைச்சொல்லி காரணம்நீயேயென்று கதிஃ என்றதைச் சொல்லி நாராயணஃ என்றதை நாரணனுதலின் என்றுசொல்லிற்றென்னுமாம். செய்யாள் - பெரியபிராட்டியார், உறைதலின்-அகலகில்லே னிறையுமென்று நித்யவாஸம் பண்ணுகையாலே, துய்யனும் - பரிசுத்தனும், நீயே. அகிலஹேய ப்ரத்யநீக கல்யாணைகதானன் நீயே, ‘மங்களம் மங்களாநாம்’ என்று அவிகலகல்யாண நிதியான பெரியபிராட்டியார் விரும்பிவஸிக்கையாலே ஸர்வப்ரகாரசுத்தனுய் சுபாச்ரயமான திவ்யமங்களவிக்ரஹ யோகத்தாலே முமுக்ஷூபாஸ்யனென்கை. ‘ஸமாயௌவணஜைஜஃஹ்ஸாரதிஹவதீவாஉஷாக்ஷாரவஸாக்ஷம்’ என்னக்கடவதிறே. ‘ஸ்வாத்யாயவெயஸ்ஸ ஸ்வரவோஜிஸவெஜெண| வ்ருயிதஃவ்ருதிவம்வம்யீ ஸ்ரீமந்நிமவக்ஷாஷாம்’ என்கை. நாரணனுதலின் - நாராயணனுகையாலே, காரணம் - நிகலஜகந்நிமித்தோபாதாநரூப ஸர்வவித காரண பூதனும் நீயே. ‘ஏகோஹவைநாராயண ஆஸீத்’ இத்யாதியாலே நாராயணனிறே ஸர்வகாரணமாக ப்ரதிபாதிதனுனன். நாராயணசப்தம் ஸமாஸத்வயத்தாலுமாக காரணத்வாதி கண்டோக்திமத்திறே. இது கீழும்மேலுமுள்ள எல்லாவற்றுக்கும் ஸ்தாபகமும். நற்பதந்தருதலின் - புநராவ்ருத்தி ப்ரஸங்கமற்ற ஸமீசீநபதத்தை பரமபதத்தைத் தருகையாலே, கற்பகம் - கல்பவ்ருக்ஷம் நீயே. சதுர்வித புருஷார்த்தங்களையும் வழங்குமளவன்றிக்கே ஏதேனுமொரு கிஞ்சித்காரம் பண்ணினர்க்கு ஸர்வஸ்வபூதமான காடபரிஷ்வங்கத்தைக் கொடுக்கக்கடவதிருத்தோள்களை யுடையவனுகையாலே கற்பகக்காவன்ன நற்பலதோளனிறே. குறை ஒன்று - ஒரு குறையும், இலாமையின் - இல்லாமையாலே, ஸ்வரூபரூபகுணவிபவாதிகளில் ந்யூநதை ஒன்றுமில்லாமையாலே, இறைவனும் - ஸர்வேச்வரனும், நீயே. ‘நம்பி.’ ஸ்வேதரஸர்வநியந்தாநீயே. துன்பம் - துயரங்களை, துடைத்தலின் - நீக்குகையாலே, இன்பமும் - நிருப்பாதிகாநந்த ஸ்வரூபமும், நீயே. ‘ஆநந்தோப்ரஹ்ம.’ என்னுள் - எனக்குள், இச்சரீராந்தஃப்ரதேசத்தில், உறைதலின்- கறந்தபாலுள் நெய்யேபோல் அப்ருதக்ஸித்தனுய் வஸிக்கையாலே, யானும்நீயே. ‘யஆத்மநிதிஷ்டந்.’ சரீரவாசிசப்தங்கள் நிய

ந்த்ருத்வ சேஷித்வாதிகளாலே ஆத்மவாசகமிறே. இப்படி இவ்வாத்மாவைப்பற்ற அவன் நியந்தாவும் ஆதாரமும் சேஷியும் ஆகையாலே யானும் நீயே. உனதன்றி- உன்னுடையதல்லாமல், இன்மையின் - இல்லாமையின், எனதும்-மதீயமும், நீயே. மதீயமெல்லாம்நீயே. 'ஜ்ஞாநாயபுஷ்ஷியொஹூஹம் ஸகலம்-தஜிதமெவவா யவ | நியதஸ்வம்' இறே. ஜ்ஞாநசக்த்யாதிகளும் களத்ரபசுக்ஷேத்ராதிகளும் நீயே. பொல்லாங்கு இலாமையின் - தீமையொன்றுமில்லையாதலின், நல்லாய் - நல்லவன், ஹேயகுணலேசமு மின்மையால் கல்யாணஸ்பாவன் நீயே. ஆறும்நீயேயென்று தொடங்கி இவ்வளவும்வர 'சரணம்' என்றதைச்சொல்லி 'நல்லாய்' என்று 'ஸுஹ்ருத்' என்றதைச்சொல்லுகிற தென்னுமாம். அப்போது மேல் 'கதிஃ' என்றதைச்சொல்லுகிறது. வையம் - பூமியை, ப்ரஹ்மாண்டலக்ஷ சதகோடிகளை யென்றுகருத்து. உண்டு - ப்ரளயம்வந்தவாறே வயிற்றில்வைத்துரக்ஷித்து, உமிழ்தலில் - ப்ரளயம் போனவாறே யதாபூர்வம்நிகரணம் பண்ணுகையாலே, வல்லாய் - வல்லவன், நீயே. நிகிலஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரகரணசக்தன்நீயே. நீயே நல்லாய் நீயே வல்லாய். ஸர்வஜ்ஞனாகையாலும் ஸர்வசக்தனாகையாலும் பரமகாருணிகனாகையாலும், இஷ்டப்ராபணத்திற்கும் அநிஷ்டநிவர்த்தனத்துக்கும் கடவன்நீயே. மெய்ய - அடியவர்க்குமெய்யனே, நின்வியப்பு - உனது ஆச்சர்யஸ்வபாவம், எங்ஙனமாகும் - எவ்வகையாயிராநின்றதோ, அங்ஙனே - அவ்வகையில் எல்லாம், ஒக்க அறிவது - நின்படிக்கேற்க அறியவல்லது, அறிந்துசொல்வது. ஆரணமே - வேதமே. அபௌருஷேயமாகையாலே நித்யநிர்தோஷமான வேதமொன்றே யாயிற்று அறிவது. நம்போலிகளுக்கு நிலமோ. அன்றிக்கே: ஒக்கவறிவது - போலியாய் அறிவது. நின்படிமுழுதும் அறிய வேதங்களுக்கும் நிலமல்லவிறே. 'யதோவாசோநிவர்த்தந்தே' இறே. 'உவய-ஜ-வய-ஜவஹ-வொவிவ-ஏர-ஷாநு வ-கவ-தெ யெஶ-தஜி-த-நா-க-ாதீ | ஹீரஸ்வெகெகஹ-ணாவயீஷ்யா ஸஹாவிதாவெநாஜதொதிஶெஶரெதெ' என்கை, அங்ஙனேயொக்க - இங்குச்சொனவையன்றிக்கே, நல்குரவும் இத்யாதியிற்சொன்னபடி யெல்லாமறிவது என்கை. 'ஸோஅங்கவேதயதிவாநவேத' என்று கைவாங்கின பழமறைபோலன்றிக்கே மாறன்மறையாயிற்றொக்க வறிவது. 'ஸேவாயோச்யஃ' இத்யாதியிற்படியே பத்துபத்துக்களிலும் ப்ரதிபாதிதங்களான பத்துஅர்த்தங்களும் இப்பாட்டில் அருளிச்செய்யப்பட்டதிறே. எங்ஙனேயென்னில், பயின்மதிநீயென்று ஸேவ்யத்வம். வெளியும் நீயென்று போக்யத்வம். தாயுநீயே தந்தையும்நீயே என்னும் இரண்டிலுமாக சுபஸுபகவிக்ரஹவத்வம். உறவும்உற்றது மென்று ஸர்வபோக்யாதிசத்வம். ஆறும் அறமுமென்று ச்ரேயஸ்தத்தேதுதாநம். துணைவனும் துய்யனுமென்று ப்ரபதநஸுலபத்வம். காரணம் கற்பகமென்று அநிஷ்டநிவர்த்தகத்வம். இறைவனுமின்பமும் என்று ஆச்ரிதேச்சாநுஸாரித்வம். யானும்நீ யெனதும்நீ யென்று நிருபாதிகஸுஹ்ருத்வம். நல்லாய் வல்லாய் என்று ஸத்பதவீஸஹாயத்வம். இப்படி இக்குணதசகத்தாலும் உபாயமும் உபேயமும் அவனே யென்றிறே அங்குமிங்கும் ப்ரதிபாத்யம். (எ)

ஆரணங்கள் தேடவயிந்தைநகர்வந் துதித்த
காரணராய்நின்றகடல்வண்ணர்—நாரணனர்
இப்படிக்குமிக்கன்றெடுத்தபாதங்கழுவ
மெய்ப்படிக்கமானதுபொன்வெற்பு. (அ)

இப்படி தன்னுடைய குணங்களை வகையும் தொகையுமாக வகுத்தநுபவிக்கிற இவரைக்கண்டு எம்பெருமான் தன் திருவடியைக் காட்டிக்கொடுத்தான். இதைப் பாராயென்றான். இதுவோ பார்க்கச்சொல்லிற்று, இது தான் வேதங்களுக்கும் ம்ருக்யமன்றோவென்று த்ரிவிக்ரமவ்ருத்தாந்தத்தை அநுஸந்திக்கிறார். த்ரிவிக்ரமாந்தம் வேதமென்றிறே ப்ரவாதம். கீழ்மொழிவார்மொழிவனவென்று வேதங்கள் அதிக்ருதாதிகாரமென்றும் எம்பெருமான் வேதைகஸமதிகம்யனென்றும் சொல்லிற்று. தூமறையினுள்ளத்தில் பகவத்ஸ்வரூபாதிகள் வேதைகஸமதிகம்யமானு

னும் அது ஆஸுரப்ரக்ருதிகளுக்கு நிலமன்றென்றும் பரதேவதாபாரமார்த்த்யஜ்ஞானவான்களின் மதாவலம்பநத்தாலே இதிஹாஸபுராணாதிகளால் உபப்ரும்ஹிதமாம்போது ஸுகமமாமென்றும் அது தனக்கு ஸதாசார்யபரிக்ரஹம் வேண்டுமென்றும் சொல்லிற்று. இங்கு அப்படி நிரூபிக்கப்புக்கவாறே வேதந்தான் அவன் ஸ்வரூபாதிகளை பரிச்சேதித்தறியமாட்டாதே 'நந' என்றும் 'யதோவாசஃ' என்றும் கைவாங்கிற்றென்றறியலாயிற்றென்கிறது இங்கு. ஆரணங்கள்தேட - வேதங்கள் தேடாநிற்க, இன்னும் தேடிக்கொண்டிருக்கிறனவாயிற்று. 'நோத்யமதோதிசேரதே.' அயிந்தைநகர் - திருவயிந்தையில், வந்து - தானேவந்து, உதித்த - அவதரித்தருளின, அவையங்கே தேடாநின்றன; இவ னவற்றின்கண்ணின் மணற்கொடு தூவிக்காலினுல்பாய்ந்துவந்து நின்றபடி. காரணராய்நின்ற - ஸர்வகாரணபூதனாய் நின்ற, வேதங்களில் காரணத்வம் ப்ரதிபாதிதமாயிருந்தாலும் இவ்வவதாரமில்லாதபோது அது ஸர்வருக்கும் ப்ரமாணமாகமாட்டாது. 'ஸம்வதேத்கியத்ருசா ஹரேர்ஹஸ்தாணகிடியேஹிதைநிரே| தந்தேதவிபதாநதாம்ம தாஹஸிநாதவரவஸுநிதாயீ' என்னக்கடவதிறே. கடல்வண்ணர்-கடலின் ப்ரகாரதனதயுடையவர், ஸமுத்ரம் போன்றவர். அநுக்ஷணவீக்ஷணேபி நவநவம்போலே ஆச்சர்யாவஹனுகை. 'ஸமுத்ர இவகாம்பீர்யே.' நாரணனுர்-நாராயணன், நிகிலஜகத்வ்யாபகபரணசீலன், இப்படிக்கு - இந்த பூமிக்கு, மிக்கு - மிகுத்து, அன்று- அந்தகாலத்தில், சேவடியால் மூவடிமண்தென்னரங்கத்தம்மான் மாவலிபால்வாங்கியநாள், எடுத்த - விசும்பையளக்க உயர்த்த, பாதம் - திருவடியை, கழுவ - அவநேஜநம் பண்ண, 'குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர் பெய்து மறைகொண்டமந்திரத்தால் வாழ்த்திக் கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினனண்டத்தான் சேவடியையாங்கு' என்கிறபடியே தன்தேசத்தேற எழுந்தருளின வலது திருவடியை அயன் அர்ச்சித்து அவநேஜநம்பண்ணின அந்த ஸ்ரீபாததீர்த்தத்திற்கு, 'சுருதணாஉவாம்கூஹாஉருதாஉவநேஜநாதீ|சுருதஸுவம்வஸ்ரா நவெவதிஜநாஉநஃ' இறே. மெய்ப்படிக்கமானது - ஸத்யமான ப்ரதிக்ரஹ பாத்ரமாகவானது, பொன்வெற்பு - மேருபர்வதம். மேருபர்வதம் ப்ரதிக்ரஹபாத்ரமானது. வாமனன் த்ரிவிக்ரமனுனன், ஸ்ரீயஃபதி ப்ரஹ்மசாரியானன். ஈச்வரனென்றிருப்பார் திருவடிவிளக்குவதும் அதை சிரஸில் தரிப்பதுமானுர், பொன்வெற்புப்படிக்கமாயிற்று, இதென்ன ஆச்சர்யம்தான். கீழ் 'இழிவாரிழ்கவென்'றென்று அவஸரப்ரதீக்ஷத்வம் சொல்லிற்று. 'ரக்ஷாபேக்ஷாம்ப்ரதீக்ஷதே' இறே. 'அடிமையாகின்றேம்......நாராயணனுர்க்கேநாம்' என்று ரக்ஷ்யவஸ்துலாபம் சொல்லிற்று. 'அநுத்தமம்பாத்ரமிதம்தயாயாஃ.' இங்கு கடல்வண்ணனென்று ஸ்வாபீஷ்டரக்ஷ்யவஸ்துலாபத்தால் வந்த க்ருதக்ருத்யத்வப்ரயுக்தஹர்ஷப்ரகர்ஷம் சொல்லுகிறது. 'உதாராஃ' என்பானெருவனிறே. (அ)

வெற்புடனென்றியயிந்தையில்வெவ்வினைதீர்மருந்தொன்
றற்புதமாகவமர்ந்தமை கேட்டருள்வேண்டிநிற்கப்
பற்பினமர்ந்தசெய்யாள்படிகாட்டிய பண்புடையெம்
விற்புருவக்கொடிக்கோர் விலங்காமயல்பெற்றனமே. (௯)

இப்படி அநுகூலப்ரதிகூல நீசாநீசவிபாகமற எல்லார்தலையிலும் திருவடியை வைத்து 'ஸதூவதாம்தவவஉம் வதூராநநதம் வாஜெஉகம்வஸிரஸாவஹதாம்ஸிவகவம்| வகதவிகூணகஉணிதெஜயதஜெஹஉயிஸாகியவயிதம்வயிவ்யாம்' என்கிறபடியே ஒருவனைச்சதுரானனுக்கி ஒருவனை சிவனுக்கிப்பொல்லாச்குறளுருவிட்டங்கே நின்றுழ்கடலும் மண்ணும் விண்ணும் முடிய வீரடியால் முடிந்துகொண்டமை சொல்லிற்று. அயிந்தையோடொக்க நீள்கோயில்பொன்னகரமும் நடுநாடிறே. அங்குற்றைப்படி சொல்லிற்று. அர்ச்சாவதார ப்ரதிபத்தியைமறந்து விபவததில் நெஞ்சம் குடிபோய் 'அந்நாள்தடந்தோறும் புல்லாய்ச்சிலையாய்க்கிடந்திலமே நெஞ்சமே சழல்நீண்டுகைக்கே' என்று கொண்டு நெஞ்சம்புண்பட்டு நோவுபடத்துடங்கினர். நீர்ப்பானாயாமினியுமாயிற்று. அவ்வள

விலே தன்படிதாமாகாதவாறே அங்கு நின்ற இவர்தமக்கு முத்தேச்யரான பாகவதர் சொல்லும் பாசுரத்தை தலைவியீடுபொடுகெண்டு வியந்துநொந்துரைத்ததாயார் பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். துறை நற்றாய் வருந்தல். கற்பொடுபுணர்ந்தகவ்வையின் கண்ணதாயிற்று. நற்றாய் பாங்கியர் தம்மொடும் அயலார் தம்மொடும் புலம்புமாறு இங்கு சுருங்கக் கூறப்பட்டுளது. தன் மகள் மேன்மைத்தன்மைக்கிரங்கலுமாம்.

ஜ்ஞாநதசையில் தம்பேச்சு, ப்ரேமதசையில் பெண்பேச்சு. ப்ராப்யத்வரை தலைமகள். ஸம்பந்த ஜ்ஞாநம்தோழி. உபாயத்வாத்யவஸாயம்தாய். எம்பெருமானோடிவ்வாத்மாசேருகைக்கு ஸம்பந்த ஜ்ஞாநம் ஆவசியகமாகையாலே அதைத்தோழியென்கிறது. இருதலையும் கலக்கச்செய்வது தோழியிறே. தலைமகள் தலைவன் பாடே அதிமாத்ரப்ராவண்யத்தாலே அவனிருந்தவிடத்தே போவதாக உறுப்படா நின்றால், 'அவன் வருமளவுபார்த்திருக்கையல்லது இதுநம்குலவழக்கன்' றென்பது தாயின் கார்யமாகையாலே ப்ராப்யத்தின் போக்யதாதிசயத்தாலே க்ரமப்ராப்திபற்றாமே முறுகினவளவிலே 'ஸாத்யோபாயபரிக்ரஹமுகேந ஸித்தோபாயவசீகாரம் பெற்ற நமக் கினியொருவிளம்ப ஹேதுவில்லாமையாலே அவன்தானே வந்து கொடுபோமளவும் பதறாதிருக்கவேண்டும், இங்ஙனே மேல்விழுவது ப்ரபந்நகுல மர்யாதைக்குச்சேரா' தென்று நிவர்த்திப்பிக்குமதான உபாயத்வாத்யவஸாயத்தைத்தாயென்கிறது. 'இன்றேயிசையிலிணையடிசேர்ப்பரினிப்பிறவோம் நன்றே வருவதெல்லாம் நமக்குப்பரமொன்றிலதே' என்றிறேப்ரபந்நன் இருக்கக்கடவது. க்ரமப்ராப்தியளவுமாறியிருக்கமாட்டாதே கிட்டியல்லதுதரியேன் என்று பதற்றத்தையுண்டாக்குமது ப்ராப்யத்வரையாகையாலே நாயகவைலக்ஷண்யத்தையுணர்ந்து குலமர்யாதையைப்பாராதே மேல்விழத்துடிக்கிற தலைமகளென்கிறது. தர்சனஹேதுவாகையாலே ஜ்ஞாநத்தைக்கண்ணென்கிறது. மேல்விழுகைக்கு ஹேதுவாகையாலே பக்தியைமுலையென்கிறது. கார்ச்யத்தையிட்டு வைராக்யத்தை இடையென்கிறது. கரணநியமநரூபதாந்தியை வளைவையிட்டுப்புருவமென்கிறது. இது நம்மாசார்யர் அருளிச்செய்யும்படி. வெவ்வினைதீர்-அதிக்ரூரமான கர்மங்களை நீக்கவல்லதான, மருந்தொன்று-ஓர் ஔஷதம், 'யத்வக்ஷகொடிநியுதா நஹவெவ்யநாஸ்யம்' இத்யாதிகளில் சொன்னவடைவில் தீராதநோய்களாவன வினைநோயிறே. 'தீராதவினையனைத்தும் தீர்க்கும்கோயில்.' 'வினையேன்வினைதீர்மருந்தானாய்.' வெற்புடன் ஒன்றி - மலையோடேசேர்ந்து, அன்றிக்கே: சேர்ந்து விளங்காநின்ற, அயிந்தையில்-அயிந்தைமாநகரில், 'மாமலையிலுள்ள மருந்தே பிணிதீர்க்கும்' என்று தமிழாள்பேச்சு. ஒன்று - நிஸ்ஸமாப்யதிகம். அற்புதமாக-ஆச்சர்யதயா விலக்ஷணமாக,பத்யநியம காலநியம ப்ரமாண நியமாதிகளின்றியே போஜநம்பண்ணவேண்டுமென்றில்லாதே'சிந்திக்கத்தித்திக்கும் செவ்வாய்த்துவர்த்துப்பாம்புந்திக்குளேயின் புளிமேவும் நந்தம் கருவரங்கங்கைத்தழலுங் காவிரியினூடே திருவரங்கத்தேவளருந்தேன்'என்கிறமுறையிலே விலக்ஷணமான மருந்து. ஆகையாலே ஸர்வரும் விஸ்மயிக்கலாம்படியென்கை. அமர்ந்தமை-நிலைநின்றமையை, ஸததோபபோகேபி ஸகலோபயோகேபிகலயாபிவைகல்யமில்லாமேநிலைநின்றமையையென்கை. கேட்டு—, அருள்வேண்டிநிற்க-பகவத்கடாக்ஷத்தை நாம் ப்ரார்த்தித்துக்கொண்டிருக்கச்செய்தே, ஔஷதஸேவைபண்ணும்போதும், 'வைத்யோநாராயணோஹரிः' என்றிறே சொல்வது. 'நாராயணம்ஸுரதரௌஹுஜயெநயாகாः நாராயணாதாதாரம்நஹிகிஞ்சித்வஹி'என்றிறே லோலம்பன் வைத்யஜீவநம் தலைக்கட்டிற்று. இம்மருந்தினாலே நம்நோயும் நம்மவர்நோயுமெல்லாம் தீரும்படிஅவன் அருள்புரிவானென்றுநாம்வேண்டிக்கொடுநில்லாநின்றோம். பற்பித்யாதி. பற்பென்றுபத்மம்.இல்லென்றுவீடு. கம்பீராம்பஸ்ஸமுத்பூத ஸம்ம்ருஷ்டநாள ரவிகரவிகஸித புண்டரீகதளாமலாயத ததீய நயநஸத்ருசமான திருத்தாமரை யாகிற வாஸஸ்தானத்தை, அன்றிக்கே, இல்லென்று ஏழனுருபாய் பற்பில் என்றுவேற்றுமைமயக்கம். தாமரையை யென்கை. மறந்த-மறந்தவளான, அகலகில்லேன் என்று வைத்து திருமார்பிலே நித்யவாஸம்பண்ணுகையாலே தாமரையை மறந்தாளாயிற்று. இருப்பதும்

தாமரை, காற்கடைக்கொண்டதும் தாமரை, பார்ப்பதும்தாமரை, பார்க்கப்படும தும் தாமரை, தரிப்பதும்தாமரை, அணைப்பதும்தாமரை, மறந்ததும் தாமரை. செய்யாள்படி - பெரியபிராட்டியின்படிகளை, படி - ப்ரகாரம். காட்டிய - எல்லோருக்கும் காட்டியதான, இவள்படியே பெரியபிராட்டியாரின்படியென்று எல்லோருமறியும்படி ஸ்வாநுஷ்டாநமுகேந காட்டிக்கொடுத்தவள் இவள்ஒருவளேயாயிற்று. பண்புடை - ஸ்வபாவத்தையுடைய, 'பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்.' பற்பினித்யாதி. பிறந்தகத்தமறக்கையாலே பெரியபிராட்டியை யொத்தாளென்கிருள். அன்றிக்சே, பற்பினமர்ந்த வென்றுபாடமாய், திருமார்வத்தில் நிலைநின்றுவஸிக்குமென்று பொருளாய் படிகாட்டியவென்று தத்வத்பாவாபேக்ஷையைச் சொல்லுகிறது என்னுமாம். 'இல்லம்வெறியோடிற்ருலோ என் மகளை யெங்கும்காணேன்' என்று நானலற்றும்படி பண்ணப்பாரியாநின்ருள். எம்-எமது, விற்புருவக்கொடிக்கு - மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைபோன்ற புருவமுடைய வல்லிநுடங்கிடைக்கு, அன்றிக்கே. புருவமுடைய கொடிபோன்ற பெண்பிள்ளைக்கு, அன்றிக்கே: வில்போன்ற புருவக்கொடியுடையாளுக்கு, ஓர் - அத்விதீயதயாவிலக்ஷணமான, விலங்கா - பரிஹரிக்கவொண்ணுத, மயல் - மோஹத்தை, பெற்றனம் - யாமடைந்தோம். நாம் அருள்வேண்டி நிற்கச்செய்தே நம்குலக்கொழுந்து மோஹமுறப்பெற்ருேம். இப்படியும் ஓர்மருந்தே! நாம் குணம்வேண்ட நம்மவர்க்கு மையலூட்டவற்றே. அன்றிக்கே: விலங்காமயல் - நிகளமான மோஹம். ஸம்ஸாரகாராக்ருஹத்தில் நின்றும் பேர்ந்து போகவொட்டாதநிகளம். 'ஸ_த்ரு ஶுவெவாரணமெஶுஜநாய வெகு⁻ணவாஷெவி ந௰ஷிஹூாஷஃ' என்றிறேபேச்சு. அர்ச்சாவதாரத்தி லீடுபொடு. பிள்ளான் ஸூக்தியை ஸ்மரிப்பது. 'இங்குற்றை அநுபவத்திலும் காட்டில் அங்குப்போய் அநுபவிக்கை தண்ணியதென்றிருந்தீராகாதே' யென்று அருளிச்செய்தாரிறே.

பெற்றனைநீயே மற்றுளதெல்லாம் பெறுவதுநின்னை உறுவதுகொள்வார், நின்னலன்றி மன்னுரின்பம் நின்பொருட்டு நீயென்பொருட்டில்லை, நின்னுருநின்று மின்னுருத்தோன்றும் நின்றனக்குநிகர் நின்னடியடைவார், நின்பாலன்றியன்பானுய்யார் வாரணமழைக்கவந்தகாரணமே. (௧௦)

கீழ் 'விலங்காமயல்பெற்றனமே' என்னும்படிநின்றது. இனித்தான் முகங்கொடாதொழியில் ஸம்ய்க்பவிஷ்யதி ததச்சரணு கதாநாம் ஸம்ரக்ஷிதேதி ப்ருதம் வரதத்வதியம், என்ருமிறே. தேவநாயகன் தன்னைக்காட்டி அநுபவிப்பித்தான். உன்மழலைச்சொல்கேட்க விருப்பமானேனென்ருன். நான் சொல்லலாவதென்தான்என்ருர். சங்குதுடைத்தான், மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வாரைப்போலே அநுபாவயிதாவை அநுபவிக்கிருர். 'வ௱ய⁻கவஜ நஶஜவஶஷ நீத௱.'

வாரணம் - கஜேந்த்ரனனவன், அழைக்க - மொய்மாம் பூம்பொழில் பொய்கையிலே முதலைச்சிறைப்பட்டு ஆதிமூலமே யென்றழைக்க, வந்தகாரணமே - நானேமூலமென்று வந்துதோன்றிய காரணவஸ்துவே, யானை மூலமேயென வோலமிட எங்களுள்யாருமில்லை என்றகன்ருர்கள் தேவர்கள். நானே இதற்கு என்றகன்ருன் நக்கன். நானன்றென்று புறமிட்டான் திசைமுகன். நானேயென்றுவந்தான் கடல்வண்ணன். அவனேயிறே ஸகலகாரணன். நீயே—, மற்றுளதெல்லாம் - மற்றுள்ள சேதநாசேதநங்களை, பெற்றனை - ஸ்ருஷ்டித்தாய். அன்றிக்கே: மற்றுளதெல்லாம் - உன்னேடொக்க நாட்டார்சங்கிக்கு முன்பேரன் பிள்ளைதுடக்கமாக எல்லாவற்றையுமென்னுதல். பெற்றனை - ப்ராபித்தாய், கரணகளேபர ப்ரதாநாதிகளைத் தன் பேருகப்பண்ணுகையாலே இவற்றை யெல்லாம் ஆத்மலாபமென்றுநினைத்து லபித்தாயென்னுதல். உறுவது - ஸ்வரூபாநுரூபமானபலத்தை, கொள்வார் - கொள்ளுமவர், பெறுவது - ப்ராபிப்பது, நின்னை - உன்னை, 'நாதேநஸ்த்ருண மங்யதங்யதபிவா' என்றுவைத்து ஸாராஸாரவிவேகம் பண்ணின பரமைகாந்தி ஸார்வபௌமர்க்கு நீயே ப்ராப்யம். நீயே ப்ரார்த்த்யம். 'நிரஹஸ०நிவி௨ஶ தவஶீய

ஹஸ்ருஷ்டிஜ்ஞாவதாரோஹிரண்யம் | ஸத்யம்ஸ்வேஷாராணஸ்மேய நாய வேக்ஷம்வாஷ்வி நஹேமிநாஷ:' என்பதிறே இவர்படி. அன்றிக்கே: உறுவது - விளம்பாக்ஷமனாய் அசக்தனான தன்ஸ்வரூபத்துக்கநுரூபமான உபாயவிசேஷத்தை, கொள்வார் - பரிக்ரஹித்தவர்கள், ப்ரபந்நரென்கை. பெறுவது நின்னை- உபாயாந்தரஸ்தாநத்திலே உன்னைப்பெறுவார்களாயிற்று. அவர்கள்; இன்பம்-ஸுகத்தை, பரமபதத்தையும், நின்னலன்றி - உனக்குப்புறம்பாமன்று, மன்னர்-அடையார்கள், 'நஜேவஜொகாக்ஷணம் நாஹ்ஸ்வஹம்வ்ருணே| வேஹஸ்யஹம் வாவிஜொகாநாம் காஹெயநக்ஷ்யாவிநா.' தன்னுடைச் சோதியிலும் அவர்களறியில் ஒட்டார்களென்றாயிற்றுக்காணும் மாயங்கள் செய்வது. தூபதூமம்மறைவாமன்றிறே வருவதும்போவதும். "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி யந்தூபந்தராநிற்கவே அங்கோர் மாயையினாலீட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்து மிலேற்றுவள்கூன்கோட்டிடை யாடினை குத்தடலாயர்தங்கொம்பினுக்கே" ஸ்நாநாஸநமும் அலங்காராஸநமும் தன்னுடைச்சோதி. போஜ்யாஸநம் திருவாய்ப்பாடி. நீ-ஸ்வாபிமதாநுரூப ஸ்வரூபரூபகுண விபவைச்வர்யாதி விசிஷ்டனான நீ, நின்பொருட்டு - உனக்காகவே, என்பொருட்டில்லை - எனக்காகவில்லை, 'வரதஸகலமேதத் ஸம்ச்ரிதார்த்தம் சகர்த்த' என்றுநீதான் எனக்காகச் செய்தாயென்றாலும் அதுதானு முனக்கேயாகையாலே இப்படி சொல்லுகிறது. 'உபாஜதேஸத்தாஸித்தி நியஹநாஜேஹ்யஸ்யிஜவிதேள ஸஹஸ்வஷிஹ் ஸ்ரீஹாநு' இறே. யார்கார்யம்செய்தோமென்றிருக்கிறாய், உன்கார்யமாயிற்று நீ செய்தது. உபாயதசையில் ஸ்வார்த்தகர்த்ருத்வாதி ப்ரமநிவ்ருத்திபோலே பலதசையில் ஸ்வார்த்தபோக்யத்வாதி ப்ரமநிவ்ருத்தி யாவச்யகமென்றதாயிற்று. நின்னுருநின்றும் - உனதுருபத்திலிருந்து, மின்னுரு - மின்னல்போலே அல்பாஸ்திரமான ஸ்வரூபத்தையுடைய சராசரம் முற்றவும், தோன்றும் - ஆவிர்பவிக்கும். நீதான் கொண்டல்வண்ணனிறே. மின்னல்தோன்றுவது கொண்டலிலேயிறே. அங்கேயேலயிப்பதும். அதுபோலே உன்னில்தோன்றி உன்னில்லயிக்குமென்கை. நாம் ஸமாதிகரஹிதரென்றிராதே கொள்ளாய். அதிகரில்லையானாலும் ஸமராவார்பலருண்டுகாண். அவர்களாரென்னில்; நின்னடியடைவார் - உனது சரணாரவிந்தங்களையடைபவர்கள், நின்தனக்கு - உனக்கு. நிகர்-துல்யர். 'சுவஸஹோஹாகுஜேதம்' என்றுவைக்கையாலே. 'யத்ர தஷம்ஜெமதஷம்ஜெஸ்வ வ்ருணஜெதஜ்ஹ்ருஜெதஷம்' என்றதிறே. 'நதாநாம்யத்ரஜொந்திஃ.' கைங்கர்யப்ரதிஸம்பந்தித்வத்தில்தான் போக்யத்வத்தில் தான் உத்தேச்யத்வத்தில் தான் ஸம்ஸாரோத்தாரணத்தில்தான் உன்னோடொப்பர் அவர்கள். 'தன்னையெந்நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தன்னையேயொக்கவருள் செய்வார்.' அவர்களுனும் வ்ருத்தியுமிதுவென்கிறார். நின்பால் - உன்திறத்தில், அன்பாலன்றி - பக்திரூபமான ப்ரீதியாலல்லது, உய்யார் - உஜ்ஜீவியார்கள். நீதான் உன்னடியார்திறத்து ப்ரீதியோடே நின்று அதொழிந்தவன்று உண்டதுருக்காட்டாதே நிற்குமாப்போலே அவர்களும் உன்திறத்து ப்ரீதியல்லது ஆத்மதாரணமில்லாதவர்கள். 'ஹஹஹக்ஷஹஜெக்ஷ வ்ரு திரஹ்யிகாஹவெதீ' என்றாயிறே. 'யந்ஹஹஜதஷம்க்ஷணம்வாவி வாஸஜெவொநவிஜ்யதே | ஸாஹாநிஸ்ஹவிக்ஷம் ஸாஹ்ராஷிஸ்யாவவிக்ரியா' என்றாயிற்றிவர்கள்படி. வேற்றுமைமாலையெனுஞ் சொல்லணி. (௧௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமகள்புதல்வன்றாதயசூரித் தாளிணைச்சென்னியிற்பூண்ட
திருவுடைத்தாதவேங்கடவரதக் குருவரன்றநயனாய்த்தந்தை
திருவடியொன்றிக்கசடறக்கலைகள் கற்றவன்கருவினிற்றிருவன்
திருமலைதாதக்கவிவரன்மொழிந்தான் மும்மணிக்கோவையின்பொருளே.

மும்மணிக்கோவையாவது முப்பதுப்பாட்டுக்கள் அந்தாதித்துடராக வேண்டுகையாலும் அந்தாதித்துடர்ப்பாமுடிவு துவக்கப்பாவின் முதலாக வேண்டுகையாலும் இங்குபத்தேபாக்கள் காண்கையாலும் அருள்தருமென்று துவக்கியது சாரணமேயென்று முடிகையாலும் இதையடுத்த பந்துகழலம்மானை யூசலேசற்பாக்கள் லோபித்துக்கிடைக்கையாலும் அவற்றுடன்சேர இப்ரபந்தத்தின் பின்னிருபதுபாக்களும், லுப்தமாயிருக்கிறனவென்று கண்டுகொள்வதென்று நம்மாசார்யன் அருளிச்செய்வர்.

மும்மணிக்கோவை வ்யாக்கியானம் முற்றிற்று.

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநமஃ.



ஸ்ரீஃ.

ஸ்ரீதேவநாயக பரப்ருஹ்மணேநமஃ.

தேசிகன்திருவடிகளேசரணம்.

# நவரத்நமாலை வியாக்கியானம்.

## கோடிகன்னிகாதானம் திருமலைதாததேசிகன் செய்தருளியது.

சந்தவிருத்தம்.

மலர்மகள்மணாளனைப் புகழ்ந்துபாடுமாறனன்
மலர்ப்பதத்தனுக்கமைந்த வாகமாந்தசூரிவாய்
மலர்ந்தநூல்கள்விள்ளநன்குரைத்தநாவின்வீறுடை
மலர்மகள்புதல்வனைப் பணிந்துபோற்றியேற்றுவாம். (௧)

கலித்துறை.

தாமரைமலரின்மங்கை தனியுறையகலன்பாதத்
தாமரைச்சிரமேற்கொண்ட மாறனார்தமிழ்மறைக்குத்
தாமுரைசெய்தபிள்ளான் திருக்குலத்துதித்தோமென்று
நாமுரைசெய்யப்புக்கோம் நவமணிமாலையிற்கே. (௨)

நவரத்நமாலையாவது 'அந்தாதித்து வெண்பாவாதிய, பாவும் பாவினமுமாகவொன்பது, செய்யுளணிபெறச் செப்புவததுதான், நவமணிமாலையாநாடுங்காலே' என்கையாலே வெண்பாவாதியாக பாவும் பாவினமுமொன்பது பாக்கள் அந்தாதித்துப்பாடுவதாம். ஆனாலும் அந்தாதித்தலும் வெண்பா முதலாதலுமின்றியே பலநவமணிமாலை காண்கையாலே அது இன்றியமையாத விலக்கணமல்ல வென்பது ஸாரம்.

ஆச்ரிதர் இழியுந்துறை திருவடிகளாகையாலே அதை அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. இவன்தான் அதை விட்டவ்வருகுபோவானல்லனிறே. 'நாபுரேத்வபிஜாநாமி நித்யம்பாதாபிவந்தநாத்,நாஹம்ஜாநாமி'இறே. மேலையார்செய்வனகள்என்று அதுவேயாயிற்றுவழி பின்னானார்க்கும். 'துயரறுசுடரடி தொழுதெழென்மனனே' என்பாரும், 'ஓரடியுஞ்சாடுதைத்த ஒண்மலர்ச்சேவடியுமீரடியுங் காணலாமென்னெஞ்சே' என்பாரும் 'பெருந்தவத்தோர்காண்பரோ காரோதவண்ணன்கழல்' என்பாரும், 'இன்றே கழற்கண்டேன் ஏழ்பிறப்பும் யானறுத்தேன்' என்பாரும் 'தாங்கட்த்தும் தன்மையான்தாள்' என்பாரும், சேவடி செவ்விதிருக்காப்பு' என்பாரும்' த்வத்பாதாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே' என்பாரும், ஆயிறே முன்னோர்கள் போனபடி. ஆகையாலே இவரும் 'அடியவர் மெய்யர் மலர்ப்பதங்களே' யென்பாரானார்.

ஒருமதியன்பருளங்கவர்ந்தன உலகமடங்கவளர்ந்தளந்தன
ஒருசடையொன்றியகங்கைதந்தன உரகபடங்களரங்குகொண்டன
தருமமுயர்ந்ததிதென்னநின்றன தருமனிரந்ததிசைந்துசென்றன
சகடமுடைந்துகலங்கவென்றன தமர்களருந்துமருந்திதென்பன
திருமகள்செய்யகரங்களொன்றின திகழ்துளவுந்துமணங்கமழ்ந்தன
செழுமணிகொண்டசிலம்பிலங்கின சிலைதன்னில்ன்றேரணங்குமிழ்ந்தன
அருமறையந்தமமர்ந்தபண்பின அயன்முடிதன்னிலமர்ந்துயர்ந்தன
அருடரவெண்ணியயிந்தைவந்தன அடியவர்மெய்யர்மலர்ப்பதங்களே. (க)

ஏகாந்திகளாய்த்து ஒருமதியன்பர். ஐகாந்திகாத்யந்திகபரபக்தி யென்பதிறே. ஏகாவலம்பியாயுள்ளமதியையும் அன்பையும் உடையவர்கள். அவர்களாகிறார் அயர்வறுமமரர்களும் - பராங்குசபரகாலாதிகளும் நாதயாமுனயதிவராதிகளும், பரமைகாந்தி ஸார்வ பௌமர்களது திருவுள்ளத்தைக் கைக்கொண்டதும் திருவடிகள். சூட்டுநன்மாலைகள் என்னும்படியாயிறே அங்குற்றைப்பரிவு. 'பரிஜனபரிசாரிகா பரிசரிதசரணயுகள' இறே. 'அடிச்சியோந்தலைமிசைநீ அணியாய் ஆழியங்கண்ணா வுன்கோலப்பாதம்' என்றும், 'தளிர்புரையுந்திருவடி யென்தலைமேலவே' என்றும், 'மதுஜிதங்க்ரிஸரோஜ தத்வஜ்ஞாந' என்றும் 'தவாம்ருதஸ்யந்திநி பாதபங்க்ஜே' என்றும் 'பாதாரவிந்தயுகளம் சரணமஹம்ப்ரபத்யே' என்றுமிறேஇங்குற்றைப்படி. களவில் நிலைநின்றவையாகையாலே உளங்கவர்ந்தன வென்கிறார். இப்படி 'வேறொன்றும் நானறியேன்' 'மறவேனினி நின்பதமே' என்று சொல்லுமாப்போலே 'உன்னடிசேர்வண்ணமருளாய்' என்பாரளவன்றிக்கே அபேக்ஷியாதார் தலையிலும் தன்பேறாக வடியிட்டபடி யென்தானென்கிறார். முன்னம் குறளாய் வந்து 'நிலம் மாவலிமூவடி' யென்று இரந்து அங்கேநின்றாழ்கடலும் மண்ணும்விண்ணும் முடியவோங்கிவளர்ந்து ஸகல புவநங்களையும் அளந்ததும் திருவடிகள். தாளாலுலகமளந்தவசைவேகொல்' என்றின்றளவும்வரஅயர்க்கும்படியிறே அளந்தது.இப்படி ஒருக்கால் அடியிட்டுப்போன வன்றும் தீர்த்தம் ப்ரஸாதித்தபடியை அநுஸந்திக்கிறார். அன்றிழந்தாரும் இழக்கக்கடவர்களன்றென்று பார்த்து பாவநதமமான கங்கையை ப்ரஸாதித்ததும் திருவடிகள். 'பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோஸ்மீத்யவதாரணாத்' என்றுவைத்து ததீயகம்பீர நிபாதஸஹநஸமர்த்தமாய் அத்விதீயமான சிவன் சடையில் நின்று ஏகீபவித்து ப்ரவஹிக்கும் கங்கையைத்தந்தன- கொடுத்தன. 'குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக், கறைகொண்டகண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான், அண்டத்தான் சேவடியையாங்கு' என்னக்கடவதிறே. 'தீர்த்தேநமூர்த்நிவித்ருதேந சிவச்சிவோபூத்.'கங்கோத்பாதநம் ஒரு திருவடியின் கார்யமானாலும் அவ்விஷயத்தில் இரண்டும் ஏகாபிப்பிராயமாகையாலே தந்தனவென்கிறார். மிதுநசேஷர்களிறே. 'உபயாதிஷ்டாநஞ்சைகம் சேஷித்வம்' என்றதிங்கும் ஒக்கும். மேலே ஆச்ரிதவிரோதிநிரஸந சீலதையை அநுஸந்திக்கிறார். துஷ்ட நிக்ரஹத்தில் திருவுள்ளம் பதறிப்பாயும்படி. காளியனென்றும் நாகராஜனது படங்களைத்தம்லீலாந்ருத்தங்களுக்கு ரங்கஸ்தலமாகக்கொண்டன. அநுகூலப்ரதிகூலவிபாகமற வெல்லார்தலையிலு மடியிட்ட ப்ரஸங்கத்திலே ப்ரதிகூலர்தலையில் மாறிமாறியடியிட்டபடி ப்ரஸ்துதமாய்த்து. த்ரிவிக்ரமாபதாநத்துக்கு விஜயத்வஜமான கங்காப்ரஸ்தாவத்திலே நிலையிலச்சினையிட்டது ஸம்ஸ்துதமாய்த்து. '[illegible]' என்றானிறே. இப்படி அநிஷ்டநிவர்த்தகத்வம் மாத்ரமன்றிக்கே இஷ்டப்ராபகத்வமுமிவைகளுக்குண்டாய்த்து, உயர்ந்தது-உத்தமமானதருமம், இதுவென்னலாம்படி நின்றன. அலௌகிகச்ரேயஸ்ஸாதநமிறே தர்மம். 'தஸ்யஸ்வாத்மப்ரதாநேது ஸாதநம்ஸ்வபதத்வயம்' இறே. 'உபாயத்வமிஹஸ்வாமிப்ாதயோரபிஸம்ஹிதம்.'இப்படியானபரத்வத்துக்குநிறங்கொடுக்கவற்றான ஸௌலப்யம்

சொல்லுகிறது. தருமபுத்திரன் அபேக்ஷித்தவாறே அவனுக்காக தூத்யத்தை அங்கீ சரித்துக் கடுந்தூரம் கடந்து நடந்தன, கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோவென்னலாம்படியிறே தன்னை அவர்களுக்கு பவ்யனாக்கிவைத்தது, தூதுநடந்த தன்னேற்றம் திருவடிகளுக்கேயாயிற்று. இப்படி பருவம் நிரம்பினவாறே அன்றிக்கே தன்னைத்தான் அறியமாட்டாத சிறுபருவத்திலும் தன்னை நோக்கிக்கொடு நின்று விரோதி நிரஸநம்செய்து ஆச்ரிதர்க்கு உபகரித்தபடி சொல்லுகிறது. சகடம்-ரக்ஷார்த்தமாகக்காவல்வைத்த சகடந்தானே அஸுராவேசத்தாலே ஊர்ந்துநலியவர அது தானே உடைந்து முறிந்து விழும்படி நிமிர்ந்தன. அத்தாலே வெற்றிபெற்றன. 'பொன்றச்சகடமுதைத்தாய் புகழ்போற்றி' இறே. இப்படியானகுணங்கள் காரநமெளமுகி ஆகாமே ஆச்ரிதர்க்கு ஸர்வாவகாஹநார்ஹமானமைசொல்லுகிறது. பக்திபாராவநதர்கள் ஸாதரமாக ஸேவிக்கும் அபர்யாப்தமான அமிருதம் இவையென்னலாய்த்தன. போக்யத்தம் திருவடிகளுக்கே. அபர்யாப்தியும் இவற்றின் அநுபவத்திலே. இவ்வளவுக்கும் அடிலக்ஷ்மீஸம்லாளநம் என்கிறது. பகவந்நாராயணாபிமதாநுரூபஸ்வரூபரூப குணவிபவைச்வர்ய சீலாத்யநவதிகாதிசயா ஸங்க்யேய கல்யாணகுணகணையான மலர்மகள் கூசிப்பிடிக்கு மவையாகையாலே செய்ய தாமரைக்கைகள் பதிந்துள்ளன. 'வடிவிணையில்லாமலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி' இறே. இப்படி நிறம்பெற்றன. அதன்மேலே மணம்கொண்டபடி. திகழ் தண்ணந்துழாய் மணம் கொண்டன. தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்ததண்ணந்துழாயுடையம்மானிறே. மேலே அலங்காரம். பல பலவேயாபரணம் இறே. நிர்துஷ்டரத்நகசித நூபுராலங்க்ருதங்கள். போக்யத்வம் பூஷணத்தாலே அதிசயிதமாகாநின்றது. மேலே ஆச்சர்ய சேஷ்டிதம். ஒரு சிலையிலே ஒரு கன்னிகையை உமிழ்ந்தன. உத்கிரணம்பண்ணின. "யோஷித்பூதத்ருஷந்தி.' மேல் அபரிச்சேத்யமகிமத்வம். 'யதோவாசோ நிவர்த்தந்தே' என்று வைத்து வேதங்களே சொல்லத்துடங்குமவையாயிற்று. ஸம்சயாநர்க்கு அர்ப்போதமான வேதாந்தங்களில் ப்ரதிபாதிதமான ஸௌலப்ய ஸௌசீல்யாதிகுணங்களையுடையன. ஜகத்ஸ்ரஷ்டாவான சதுர்முகன் ஸ்வாபேக்ஷித ஸித்திக்காகப் பணிகையாலே அவன் பக்திக்குமெய்ச்சி அவனது சிரத்தில் படிந்து ஆச்ரிதர்க்குத் தலையாய் உயர்ந்தன. 'த்ரிவிக்ரமத்வச்சரணம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி' என்றிறேயன்பர்படி. இவை யெல்லாம் ஒரு தேசவிசேஷத்திலே ஒரு கால விசேஷத்திலே யென்றாய் இருள்தருமாஞாலத்துள்ளாரும் பிற்பாடரும் இழக்கவொண்ணாதே எல்லாருக்கும் அருள்புரிய ஸங்கல்பித்து நடுநாடானதிருவகீந்திரபுரத்தில் ஆவிர்ப்பவித்து நித்யஸேவ்யமாயிராநின்றன. அவர்தாம் அன்பர்க்கு மெய்யன். 'மெய்யனாகும்விரும்பித்தொழுவார்க்கெல்லாம் பொய்யனாகும்புறமேதொழுவார்க்கெல்லா' இறே. மலர்ப்பதங்கள். பொன்மலர் நாறினாப்போலே யிருக்கையாலே இன்னமலர்என்னாதே மலர்என்றுபொதுவிலே அருளிச்செய்தபடி. அடியவர் மெய்யர் மலர்ப்பதங்கள். வேறோருபமானம் சொல்லவொண்ணாமையாலே தானேதனக்கொத்த திருவடிமலர்கள். ஒரு மதியன்பருளங்கவர்ந்தன. இத்யாதி. (௧)

மகரம்வளருமளவிற் பௌவமடையவுற்றலத்தனை
வடிவுகமடமெனவமர்ந்து கிரிதனைத்தரித்தனை
மலியுமசுரனுரமிடந்து வசுதைபேர்த்தெடுத்தனை
வலிகொளவுணனுடல்பிளந்து மதலைமெய்க்குதித்தனை
பகருமுலகமடியளந்து தமர்களுக்களித்தனை
பரசுமுனிவன்வடிவுகொண்டு பலவரைத்துணித்தனை
பணியவிசைவிறிசைமுகன் றன்முடிகள்பத்தறுத்தனை
படியுமுருவில்வருபிலம்ப வசுரனைத்தகர்த்தனை
நகரந்துவரையெனவுகந்துகிரிதனைத்தரித்தனை
நடமொடியலும்பரியில்வந்துநலிவறுக்கவுற்றனை
கலியும்வினைகள்செருமருந்தினலமுறைந்தவெற்பினை
நணுருகருடநதிகிளர்ந்தபுனலுகப்பில்வைத்தனை

வஸிஷ்ட:॥ ஶூத்ரவர்ணஸ்ய நிக்ஷிப்தம் க்ஷீரம் ஸர்வாஜ்ஞயா நர: ॥ ஸ்வஜாதி ஶ்ரேஷ்ட்டஸம்ஸ்கார ஹ்ருதேவிஷ்ணு ஸம்ஜ்ஞிதம் ॥ வர்ணேஷ்வேவ ஹிரண்யானி ஸர்வாண்யேவ அஸம்ஶய: । ஶூத்ரவர்ணம் ஆஹார க்ஷீரம் கபிலாக்ஷீரம் நாஶிநீ ॥ ஸ்த்ரீஶூத்ராணாம் ஸமயம் தாம்பூலம் ஸஹாக்ஷிதம் ॥ யதி ஶ்ரூத்ரஸ்ய பாஷாணவத் ஸக்ஷயேத் ॥ தைவஜ்ஞ: ॥ ஶ்ரீஜநர்தநம் தர்ஶனாஹார ஸாரதோஷணம் ஜ்ஞேயம் ॥ இதி ஶ்ருதி. ௧௧॥

சாதிகுணமாச்சிரமந் தேசங்காலந் தருமங்கணிமித்தங்கண் முதலாவோதும், பேதமுதலாகவொருதிரவியந்தான் பிறந்துநலந்தீங்கினையும்பெற்றுநிற்கும், பாதமிசைபிறந்தோர்க்குக்கபிலையின்பால் பருகிடலாகாதென்றுமறையோர்சொன்னார், ஆதலினாளோதியுணர்ந்தவர்பாலெல்லா மடிக்கடியுங்கேட்டயர்வுதீர்பினீரே. (௨௰)

இப்பாட்டாலே ஏகத்ரவ்யத்தில்விதிநிஷேதங்களை ஜாத்யாதிபேதங்களால் கபிலாக்ஷீரத்தில்போலே சாஸ்த்ரம்விதிக்கையால், அந்தவிதிநிஷேதங்களைப்பெரியோர்களைக் கேட்டறியுங்கோளென்கிறார்.

"ஸஏவதர்மஸ்ஸோதர்மஸ் தந்தம்ப்ரதி நரம்பவேத்" என்கிறபடியே சாதிகுணமாச்சிரம்-ஜாதி-ப்ராஹ்மணத்வாதிகள், குணம்-ஞாநாஜ்ஞாநங்களும், க்ருஷ்ணகேசத்வாதிகளும், ஆச்சிரமம்-ப்ரும்மசர்யாத்யாச்ரமங்கள், தேசம்-புண்யபாபக்ஷேத்ரங்கள், காலம்-உபராகாதிகள், தருமங்கள்-நித்யஸத்க்ரியா ப்ரஜாபாலகத்வாதிகளும், நிமித்தங்கள்-பாபிஷ்ட புண்யவத்வாதிகள், முதலாகவோதும்பேதம்-பால்யயௌவநவார்த்திகாவஸ்தைகளென்றபடி. ஓதும்-வேதம் முதலாக ஸ்ம்ருதிகள் சொல்லுகிற பேதபூர்வகமாக, ஒருதிரவியந்தான்,ஏகத்ரவ்யந்தான், பிறந்து-உத்பன்னமாய், நலந்தீங்கினை-நன்மையும் பொல்லாமையும், பெற்றுநிற்கும்-அடைந்திருக்கும், இதுக்குதாஹரணமேதென்னில், பாதமிசைபிறந்தோர்க்கு-ஸர்வேசுவரனுடைய ஸ்ரீபாதத்திலே பிறந்த சூத்ரஜாதிக்கு, கபிலையின்பால்- கபிலாக்ஷீரமானது, பருகிடலாகாதென்று மறையோர் சொன்னார் - பானம் பண்ணலாகாதென்று வைதிகர்சொன்னார்கள். ஆதலில் நாளோதியுணர்ந்தவர்பால்-ஆகையாலுக்தகாலங்களிலே அத்யயநம் பண்ணி ஸகலத்தையும்அறிந்தவர்கள்ஸந்நிதியிலே,எல்லாமடிக்கடிகேட்டு பததேபததே ஸகலார்த்தங்களையும் கேட்டு-அயர்வுதிர்மினீரோ-அஜ்ஞாநத்தையெல்லாம் போக்கிக்கொள்ளுங்கள். (௨௰)

ஹவிஷ்ப்ருதாதாரணே ॥ காவிதாமய: விபேதஸாரஸ்ய நரகேஷு தாவத்ருதே, ஹந்தபேஷம்விபேதிவேதாவிப்ரஸ்ய தந்த்யா ஶ்ருதி: ॥ இதி ஶ்ருதி. ௨௰॥

கங்கிருளால்விடியாதவுலகுக்கெல்லாங் கைவிளக்காமிவையென்றுகண்ணன்காட்டும், பொங்குபுகழாகமங்கடெரியச்சொன்ன பொருளிவைநாம்புண்ணியர்பாற்கேட்டுச்சொன்னோம், மங்குடலும் பொருளுமல்லதறியாமாந்தர் வலைவுளகப்பட்டுவரம்பழியாதென்றும், பங்கயமாதுற்றவருளாளர்தம்பாற் பத்திமிகுபவித்திரங்கள்பயின்மினீரே. (௨௧)

நிகமநத்திலே, நாமிந்த த்யாஜ்யோபாதேயங்களைப் பெரியோர்கள் உபதேசிக்க ஸங்க்ரஹித்தோம். சார்வாகாதிகள் சொல்லும்புத்தியிலே அகப்படாதே பெரியோர்கள் ஸன்னிதியிலேயிவ்வர்த்தங்களைக்கேட்டுப்பரிசயம்பண்ணுங்களென்கிறார்.

கங்கிருளால் விடியாதவுலகுக்கெல்லாம்-திவாராத்ரங்கள் விடியாதலோகத்துக்கெல்லாம், கைவிளக்காமிவையென்று-இவை ஶ்ருதிஸ்ம்ருதிகள் கைவிளக்காமென்று 'மாநம்ப்ரதீபமிவ' என்னக்கடவதிறே, கண்ணன்காட்டும்-க்ருஷ்ணன்காட்டுகிற, 'காருணிகோ ததாதி' என்றதிறே, பொங்குபுகழாகமங்கள்-நித்யத்வேந ப்ரஸித்தங்

களான வேதங்கள்; தெரியச்சொன்ன-ப்ரகாசிக்கும்படி ப்ரதிபாதித்த, பொருளிவை நாம் புண்ணியர்பால் கேட்டுச்சொன்னோம் - அர்த்தவிசேஷங்களை பெரியோர்கள், ஸன்னிதியிலேகேட்டு விண்ணப்பஞ்செய்தோம்; மங்குடனும் பொருளுமல்லதறியா மாந்தர்வலையிலகப்பட்டு வரம்பழியாது - நச்வரமான சரீரம் அர்த்தமொழிய வறியாத மனுஷ்யர் வலையிலே அகப்பட்டு மர்யாதைதப்பாதே, என்றும் பங்கயமாதுற்றவருளாளர்தம்பால் பத்திமிகு - பங்கஜவாஸிநியான பிராட்டி நித்யவாஸம்பண்ணப்பட்ட பேரருளாளன் விஷயத்தில் பக்தியை விருத்திபண்ணுமவையான, பவித்திரங்கள் பயில்மினீரோ - சுத்தபாதார்த்தங்களை இன்னதென்று கேட்டு பரிசயம்பண்ணுங்களென்றபடி. (உக)

## ஆஹார நியமம் வ்யாக்யானம் முற்றிற்று.

தேசிகன்திருவடிகளேசரணம்.

———:O:———



ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநம:.

# ப்ரபந்தஸார வ்யாக்யானம்.

தனியன்.

ஆரணநான்கின்பொருள்க ளாழ்வார்களாய்ந்திடவே யன்புடனேயம்புவியோரனைவருமீடேறவென்று, நாரணனார்தாள்களிலேநாலாயிரந்தமிழா னண்ணிபுரைசெய்தவற்றைநாடிவகைதொகைசெய்தாய், பூரணமாஞானியர்சேர்பொங்குபுகழ்த்தூப்புல்வரும் புனிதனென்றும்பிள்ளையென்றும்புவியோர்புகழ்வேங்கடவா, தாரணியோரிங்குகக்கச்சாற்றியநல்ப்ரபந்தசாரக் தனையுனாத்துவாழுமனந்தந்தருளாயென்றனுக்கே.

ஸ்ரீயஃபதியான ஸர்வேச்வரனாலே மயர்வறமதிநலமருளப்பெற்ற ஸ்ரீமத்பொய்கையாழ்வார் தொடக்கமானவர்கள் ருக்யஜுஸ்ஸாமாதர்வணமென்று நாலுவகையாயிருந்துள்ள வேதங்களுடைய ஸர்வார்த்தங்களையும் ப்ரீதியோடே பரமதநிரஸநம் ஸ்வமதஸ்தாபனமென்ற க்ரமத்தாலே நிரூபித்து, அழகிய பூமியிலே யிருப்பாரெல்லாரு முஜ்ஜீவிக்கவேணுமென்று, சேதநாசேதநங்கள் ப்ரகாரமாய்த்தான் ப்ரகாரியாயிருக்கையாலே நாராயணசப்தவாச்யனான ஸ்ரீயஃபதி திருவடிகளிலே பாதரேகைபோலேகிட்டி, த்ரமிடபாஷையாலே யருளிச்செய்த நாலாயிரத்தையும் நன்ருக வப்பொய்கையார் முதலானவர்கள் ப்ரஸாதத்தாலே யதிகரித்து, அவற்றின் அவாந்தர ஸமுதாய ஸங்க்யா நிஷ்கர்ஷரூபங்களான வகைதொகைகளை யருளிச்செய்தருளும் ஸ்வாமியாய், பரிபூர்ணமஹத்தரப்ரஹ்மவித்யாவான்களாலே ஸேவ்யமானராய், நித்யாபிவ்ருத்திசாலிகளான ஜ்ஞானவைராக்யபக்த்யாதி கல்யாணகுணங்களையுடையராய், தூப்புல்குடியிலே திருவவதரித்தருளும் பாவனரொன்றும் நமக்கு வகுத்த ஸ்வாமியென்றும் பூலோகத்திலுள்ளவ ரனைவராலும் கொண்டாடப்படுமவராய், 'ஸ்ரீமத் வேங்கடநாதோநாமகவி:' என்கிற ப்ரஸித்த திருநாமத்தையுடையவரே, பூமியிலே வஸிக்குமவர் ஆபாலகோபால முகக்கும்படி தேவரீரருளிச்செய்த ஸர்வப்ரபந்தோத்க்ருஷ்டமான ஸ்ரீமத் ப்ரபந்தஸாரமென்கிற திவ்ய ப்ரபந்தத்தை யனுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படியான நெஞ்சை யடியேனுக்கு க்ருபைபண்ணியருளவேணும்.

ஆதிமறையோதிமகிழயக்ரீவர்தம்மருளா லன்புடனே தூப்புனகரவதரித்திங்குவந்து, வாதியரைவென்றுவந்து வண்புவிமேலெதிராசர் வாழ்வுறுநற்றரிசனத்தைவண்மையுடனேவளர்த்து, நீதிநெறிதவறுமனிறுத்தியிடும்வேங்கடவாநேசமுடனாழ்வார்கணிலைகளையெல்லாமுணர்ந்து, சாதுசன்ம

வர்ழவென்றுசாற்றியநல்ப்ரபந்தசாரந்தனையுரைத்துவாழுமனந்தந்தருளா யென்றனுக்கே.

வேதங்களெல்லா மொருகாலவிசேஷத்திலே ப்ரமுஷிதங்களாக, வத்தசையிலே திருவவதரித்து வேதங்களையோதிவைக்கப்பெற்றேமே யென்னு முவப்பையுடையரான ஸ்ரீமத்ஹயக்ரீவருடைய பரமக்ருபையாலே ஸ்ரீகாஞ்சியென்கிறநகரத்திலே தூப்புலென்கிறகுடியிலே திருவவதரித்தருளி பாபிஷ்டஜநஸங்கலிதமானவிந்தபூமியிலுள்ள அர்வாரகர்வாநல பாஹ்யகுத்ருஷ்டி ப்ரதிவாதிகளை ஸம்யங்ந்யாயாநுக்ருஹீத ஸோபப்ருஹ்மணோபநிஷந்மார்க்க மீஷத்துந்தப்பாதே ஜயித்து, மிகவுமுவப்போடே ஆச்ரிதஜநங்கள்கிட்டி யாஶ்ரயிக்கும்படி மிகவும் ஸௌலப்யத்தாலே யவர்கிட்டவந்தவராய், அழகியபூமியிலே ஸ்ரீமத்யதிஸார்வபௌமருடைய, த்ருடதமமாக வாழும்படியிருக்கிற, ஸர்வோத்க்ருஷ்ட ஸித்தாந்தத்தை சீர்மையோடே யபிவ்ருத்தமாக்கி யதிகாராநுகுண ஸகலந்யாயாநுக்ரஹீத பக்திப்ரபத்திரூபமார்க்கங்கள் துர்கமாகாதபடி கண்டகசோதநம்பண்ணி ஸ்தாபித்தருளும் ஸ்ரீமத் வேங்கடநாததேசிகனே, ப்ரீதிபுரஸ்ஸரமாக ஆழ்வார்களுடைய திருவவதாரக்ரமம் திருநக்ஷத்ரம் ஊர் மாஸம்திருநாம மவர்களருளிச்செய்த ப்ரபந்தம் அதின்வகை தொகைகளாகிற ஸர்வஸ்திதியையும்ஸம்சயாதிகளறவறிந்து, 'அபகாரிஷுயஸ்ஸாதுஸ்ஸஸாதுஸ்ஸத்பிருச்யதே' என்று சொல்லப்பட்டஸாதுஜநமுவந்துவாழவேண்டுமென்று தேவரீரருளிச்செய்த ஸகலப்ரபந்த விலக்ஷணமான ஸ்ரீமத்ப்ரபந்தஸாரமென்கிற திவ்யப்ரபந்தத்தை யநுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படியான வந்தঃகரணத்தை கபிசபலமாகாதே ஸ்திரமாக க்ருபைசெய்தருளவேணும்.

அனைத்துலகம் வாழும்படிக்குடலாக திருவேங்கடத்துறைசெல்வனுக்குஉபகரணபூதரான திருமணியாழ்வார் ஸ்ரீமத்வேங்கடமஹீத்ரபதி ப்ரஹ்மோத்ஸவத்தினவப்ருதநக்ஷத்ரமான திருவோணமென்கிற திருநக்ஷத்ரத்திலே ஒளிமாடங்கள் சூழ்ந்தழகாயகச்சியிலே சந்தமிகுதமிழ்மறையோர்களாலே யாஶ்ரிதமான தூப்புல்குலத்திலே திருவவதரித்தருளின ஸ்வாமியாய், கருணைக்கடலான நடாதூரம்மாளுடைய வ்யாதஸாவென்கிற விசேஷகடாக்ஷமடியாகவுண்டான கிடாம்பியப்புள்ளாருடையபரமக்ருபையாலே திருவிலச்சினைமுன்பாகச் செந்தமிழும் வடகலையுமாகிற வுபயவேதாந்தங்களையும் பெற்றுடையராய், அதடியாகச் செங்கோலுடையதிருவரங்கச்செல்வனாருடைய திருவருளாலே ஸ்ரீமத்வேதாந்தாசார்யனென்கிற திருநாமத்தையும் அவர்தமக்கணியாகமன்னும்பங்கயமாமலர்ப்பாவையானஸ்ரீரங்கநாச்சியாருடையசீரருளாலே ஸ்ரீமத்ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரனென்கிறதிருநாமத்தையும்பெற்றுடையராய், அத ஏவ கவிதார்க்கிகஸிம்ம இதி விக்யாதகுண ஸமாக்யராய், 'விச்ருதநாநாவிதவித்ய:' என்கிறபடியே ஸகலசாஸ்த்ரபாரங்கதராய், வுஸூதம்வாவிவுஸஹஸ்ரம்ஸ்ரீ வெங்கடநாயகாத்தா: வூவநா: என்கிறபடியே வேதாந்தார்த்தப்ரகாசகங்களான பலப்ரபந்தங்களையருளிச்செய்து தந்முகேநநந்தர்சநத்துக்குவர்த்தகராயும்மஹோபகாரகராயும் உத்தாரகராயும்பிறந்தஸ்ரீமத்வேங்கடநாததேசிகன், பொய்கையார் தொடக்கமான த்ராமிடவேதத்ரஷ்டாக்களாயும் தத்ப்ரவர்த்தகராயுமிருந்துள்ள வாழ்வார்களவதரித்தருளின வடைவு இன்னபடியென்றும், அவர்களவதரித்தருளின திவ்யநகரமாஸ நக்ஷத்ரங்களிவை யிவையென்றும்,ப்ரபந்தங்களின் ஸங்க்யையிவ்வளவென்றும்,ஓரோராழ்வாரருளிச்செய்த ப்ரபந்தங்களில் பாட்டுக்களின்ஸங்க்யை யிவ்வளவென்றும், எல்லாப்ரபந்தங்களுக்கும் எல்லாப்பாட்டுக்களுக்குமாக ஸங்க்யை யிவ்வளவென்றும் தனித்தனியே தம்முடைய பரமக்ருபையாலே ஸ்ரீமத் ப்ரபந்தஸாரமென்கிற திவ்யப்ரபந்தமுகேந வனைவருக்கும் ஸங்க்ரஹமாம்படி யருளிச்செய்கிறார்.

ஆழ்வார்களவதரித்தநாளூர்திங்க ளடைவுதிருநாமங்களவர்தாஞ்செய்த, வாழ்வானதிருமொழிகளவற்றுட்பாட்டின் வகையாகத்தொகையிலக்கமற்றுமெல்லாம், வீழ்வாகமேதினிமேல்விளங்குநாளும் விரித்துரைக்

குங்கருத்துடனேமிக்கோர்தங்கள், நீள்பாதநிரந்தரமுந்தொழுதுவாழ்த்து நேசமுடனடியேன்றன்னெஞ்சுதானே. (க)

இதில் முதல்பாட்டில் பொய்கையார் தொடக்கமான வாழ்வார்கள்திருவவதரித்த க்ரமத்தையும் அவரவர்கள் திருவவதரித்தருளின திவ்யநகரமாஸாதிகளையுமிந்த பூமியிலே ஸுப்ரஸித்தமாம்படி ஸர்வகாலமும் பாவபந்தத்தோடேயுரைக்கும் மிக்கோர் திருவடித்தாமரைகளிலே தந்திருவுள்ளம் மிகவும் ப்ரவணமானபடியைக்கண்டு விஸ்மிதராயருளிச்செய்கிறார்.

ஸ்ரியஃபதியான ஸர்வேச்வரனாலே மயர்வறமதிநலமருளப்பெற்ற பொய்கையார்தொடக்கமான வாழ்வார்கள் திருவவதரித்தருளினக்ரமத்தையும்,அவர்கள்திருவவரித்தருளின திவ்யநக்ஷத்ரநகர மாஸங்களினுடைய திருநாமங்களையும், அவர்கள்தந்தம்முடைய பகவதநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே யருளிச்செய்தவையாயிங்குள்ள முமுக்ஷுக்களோடு அங்குள்ள நித்யமுக்தரோடு வாசியறவெல்லாருக்கும் நிரவதிக ஸம்பத்தாயிருந்துள்ள ஸ்ரீஸூக்திகளாகிற திவ்யப்ரபந்தங்களின் வகையையும், ப்ரபந்தங்களில் பாட்டுக்களின் தொகையையும், ஆச ப்ரபந்தங்களித்தனை அவைதம்மில் பாட்டுக்களித்தனையென்கிற ஸாமான்யஸங்க்யையாகிற தொகையையும், ப்ரபந்தத்ரஷ்டாக்களித்தனை திருநாமம் ப்ரபந்தமித்தனை ஆகப்பாட்டுகளித்தனையென்கிற விலக்கத்தையும் இப்ரபந்தப்ரவர்த்தகபரம்பரா முகங்களாலே யந்தப்ரபந்தத்ரஷ்டாக்களே தமக்கு யதாவத்தாக ப்ரஸாதித்தருள வேணுமென்று ப்ரார்த்தநாரூபமான மற்றுமுள்ளவையெல்லாவற்றையுமிந்த பூமிலேயிருந்துள்ள ஜநங்களுடைய நெஞ்சிலே நன்றாக விழும்படியாகவும் ப்ரகாசிக்கும்படியாகவும் விஸ்தரித்து நாள்கள்தோறும் பாவபந்தத்தோடே யருளிச்செய்யும்படி, பெரியோர்கள்தங்களுடைய ஜநநநிவாரணஜாங்கிகமாக நீண்ட திருவடிகளை 'ஸ்ரீமத்ப்யாம்ஸ்யாதஸாவித்யநுபதிவரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்ஸந்த்ருஷ்டனான' வடியேனுடைய மனஸ்ஸானது ஈஷத்துமிடைவெளியில்லாதபடி ஸர்வகாலமும் ப்ரீதியுடன் ப்ரணமபூர்வகமாக மங்களாசாஸநமே பண்ணிக்கொண்டிராநின்றது. நாள்-திருநக்ஷத்ரம். அடைவு-க்ரமம், திருமொழிகள்-ஸ்ரீஸூக்திகள், வகை-ப்ரகாரம், தொகை-ஸமுதாயஸங்க்யை, வீழ்வாக - விழும்படியாக, நெஞ்சிலே நிற்கும்படியாகவென்றபடி. நேசம்-ப்ரீதி. (க)

அருண்மிகுத்தவொருவடிவாய்க்கச்சிதன்னி லைப்பசிமாதத்திருவோணத்தினுளில், பொருண்மிகுத்தமறைவிளங்கப்புவியோருய்யப் பொய்கைதனில்வந்துதித்தப்புனிதாமுன்னாள், இருளதனிற்றண்கோவலிடைகழிச்சென் றிருவருடனிற்கவுமாலிடைநெருக்கத், திருவிளக்காமெனவையந்தகளிநூறுஞ் செழும்பொருளையெனக்கருள்செய்திருந்தநீயே. (உ)

இரண்டாம்பாட்டி லிவ்வாழ்வார்களெல்லாரிலும் முந்தறமுன்னம்பொய்கையாழ்வார் அவதரித்தருளுகையாலே யவர்திருவவதரித்தருளினதிவ்யநகர மாஸநக்ஷத்ரங்களைத் தனித்தனியே யிவையிவையென்று தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙனம் திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த முதல் திருவந்தாதியின் செழும்பொருளையடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

ஸ்ரீமந் நாராயணனாகிற மிக்கபொருளை ப்ரதிபாதியா நின்ற வேதமானது விளங்கும்படியாகவும் பூமியிலுள்ளாருஜ்ஜீவிக்கும்படியாகவும், மிகுத்ததாய் பெருத்ததாயிருந்துள்ள தேவரீருடைய க்ருபையைத்தானே யத்விதீயமான திருமேனியாகவுடையவராய்க்கொண்டு, காஞ்சியென்றுப்ரஸித்தமானபெருமாள்கோயிலிலே த்வாபரயுகத்தில் ப்லவங்க ஸம்வத்ஸரத்திலே ஐப்பசி மாதத்திலே திருவோணமென்கிற திருநக்ஷத்திரத்திலே சொன்னவண்ணஞ்செய்த பெருமாள்ஸன்னதிக்கு வடக்குதிக்கிலேயிருக்கிற ஸரஸ்ஸிலுண்டானதொரு காஞ்சனபத்மத்தின் கர்ப்பத்திலே பகவந்நியோகத்தாலே ஸ்ரீபாஞ்சஜந்யாம்சராய்க்கொண்டு திருவவதாரஞ்செய்தருளும்பரமபாவனரான பொய்கையாழ்வாரே, இங்ஙனவதரித்ததேவரீர் முற்காலத்திலே குளிர்ந்திருந்துள்ள திருக்கோவலூரில் திருவிடைகழியிலே யாத்ருச்சிகமாக

அந்தகாராவ்ருதமான தொருராத்திரியில், முந்தறமுன்ன மெழுந்தருளின தேவர்க்குப்பின்பெழுந்தருளின பூதத்தார்பேயாராகிறவிருவரோடுங் கூடவங்கே நிற்கிறவளவிலே, ஆஶ்ரிதவ்யாமுக்தனான ஶ்ரியஃபதி தேவரீர்கள் மூவருக்கும் நடுவேப்ரவேசித்து நெருக்கிக்கொண்டு மயர்வற மதிநலமருளாநிற்க, அவ்வளவிலே யவன் ப்ரஸாதத்தாலே யவனை யுள்ளபடியனுபவித்து அவ்வனுபவஜநிதப்ரீத்யதிசயத்தாலே விளக்குப்போலே யவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிசேஷ்டிதங்களுக்கு நேரே ப்ரகாசமாய், ‘வையந்தகளியா வார்கடலே நெய்யாக’ வென்று தொடங்கி தேவரீராலே யருளிச்செய்யப்பட்டதாய், தரிப்பாருக்கு ஸுகமமாம்படி நூறுபாட்டா யாவிர்ப்பவித்த முதல்திருவந்தாதி யாகிற வேதத்தினுடைய ச்லாக்யமான வர்த்தத்தை யதிலேயபேக்ஷையுடைய வடியேனுக்கு ஸம்சயவிபர்யாதிகள் தீரும்படி தத்வக்தாவானதேவரீரே க்ருபைபண்ணி யருளவேணும். நாளில்-திருநக்ஷத்ரத்திலே. பொய்கை-குளம். செழும்பொருள்-ச்லாக்யமானபொருள். திருந்த-தெரியும்படி. (உ)

கடன்மல்லைக்காவலனேபூதவேந்தேகாசினிமேலைப்பசியிலவிட்டநாள்வந், திடர்கடியுந்தண்கோவலிடைகழிச்சென் றிணையில்லாமூவருமாயிசைந்தேநிற்க, நடுவிலுமிலொருவருமன்றறியாவண்ண நள்ளிருளின்மானெருக்கநந்தாஞானச், சுடர்விளக்கேற்றியவன்பேதகளியான தொடைநூறுமெனக்கருள்செய்துலங்கநீயே. (௩)

மூன்றும்பாட்டில் பொய்கையாழ்வாருக்கநந்தர மவதரித்தருளினர் பூதத்தாழ்வாராகையாலே, யவர்திருவவதரித்தருளின திவ்ய நகர மாஸ நக்ஷத்ரங்களிவையிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீ ரருளிச்செய்த விரண்டாந்திருவந்தாதியை யடியேனுக்குப்ரஸாதித்தருளவேண்டு மென்று ப்ரார்த்திக்கிறார்.

திருக்கடல்மல்லை யென்கிற திவ்யதேசத்திற்கு நிர்வாஹகராயிருந்துள்ளபூதத்தாழ்வாராகிற ஸ்வாமியே, தேவரீர் த்வாபரயுகத்தில், ப்லவங்கவர்ஷத்திலைப்பசிமாஸத்தி லவிட்டமென்கிற திருநக்ஷத்திரத்திலே குறுக்கத்திப்பூவிலே ஶ்ரீகௌமோதக்யம்சராய்க் கொண்டிங்கே வந்தவதரித்தருளி, துக்கநிவர்த்தகமாயிருந்துள்ள திருக்கோவலூரில் திருவிடைகழியிலே தேவரீரும் பொய்கையாரும் பேயாருமாகிற வொப்பில்லாத மூன்றுதிருநாமமும் யாத்ருச்சிகமாக ஸங்கதராய் நீரும்நீரும் சேர்ந்தாற்போலே சேர்ந்திருந்தவளவிலே, யிம்மூவருமாகிற தேவரீர்களிலே யொருவராகிலு மறியாதபடி தேவரீர்கள் நடுவே காடதமோ வ்ருதமான ராத்ரியிலே யாஶ்ரிதவ்யாமுக்தனான ஶ்ரீயஃபதி தேவரீர்களை மிகவும்நெருக்க, வுடனே யவன்தன்ப்ரஸாதத்தாலே யவனையுள்ளபடி யனுபவித் தவ்வநுபவஜநித ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே, யொருநாளும் ஸங்கோசமன்றிக்கே யிருக்கிற நிரவதிக தேஜோரூபமான திருவிளக்கை ஞானச்சுடர் விளக்கேற்றினே னென்று ப்ரகாசமாக தேவரீ ரேத்தின ப்ரகாரத்தை வெளியிடாநிற்பதாய் ‘அன்பேதகளியா வார்வமே நெய்யாக’வென்று தொடங்கி தேவரீராலே யருளிச்செய்யப்பட்டதா யெழுத்தசை சீர்பந்தமித்யாதிகளான லக்ஷணங்களில் தொடையென்கிற லக்ஷணத்தை யுடைத்தாய், தரிப்பாருக்கு ஸுகம மாம்படி நூறுபாட்டா யவதரித்த விரண்டாந் திருவந்தாதியையதிலே யபேக்ஷையுடைய வடியேனுக்கு தத் வக்தாவான தேவரீரே நன்றாக வென்னெஞ்சிலே நிற்கும்படி ப்ரஸாதித்தருளவேணும். வேந்தே-ராஜாவே. இடர்-துக்கம். கடியும்-போக்கும். தண்-குளிர்ந்திருக்கிற, இணை-ஒப்பு. வண்ணம்-ப்ரகாரம். நள்ளிருள்-நெருங்கினவிருட்டு. நந்தா-விச்சேதியாத. அன்பே-ப்ரேமமே, தகளி-தீபபாத்ரம். துலங்க-விளங்கும்படியாக. (௩)

மாமயிலைப்பதியதனிற்றுலாமாதத்தில் வருஞ்சதயத்தவதரித்துக்கோவலூரில், தூமுனிவரிருவருடன்தூலங்கநின்று துன்னியபேரிருணீங்கச்சோதிதோன்றச், சேமமுடனெடுமாலைக்காணப்புக்குத் திருக்கண்டேனெனவுரைத்ததேவேயுன்றன், பாமருவுதமிழ்மாலைநூறுபாட்டும் பழவடியேனுக்கருள்செய்பரமநீயே. (௪)

இப்பூதத்தாழ்வாருக்கு அநந்தரம் திருவவதரித்தருளினர் பேயாராகையாலே, யவர்திருவவதரித்தருளின திவ்ய நகர மாஸ நக்ஷத்ரங்களிவையிவையென்று தனித் தனியே தர்சிப்பியாநின்று கொண்டு,இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச் செய்த மூன்றாந்திருவந்தாதியை யடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

தேவரீர் திருவவதரிக்கையாகிற பெருமதிப்பை யுடைத்தான மயூரபுரி யென் கிற திருப்பதிதன்னிலே த்வாபரயுகத்தில் ப்லவங்கவர்ஷத்தில் துலாமாஸமென்கிற பர்யாயநாமத்தை யுடைத்தான அந்தஐப்பசிமாதத்தில் அவிட்டத்துடனே வருகிற சதயமென்கிற திருநக்ஷத்ரத்திலே ஸ்ரீ நந்தகாம்சராய் திருவவதரித்தருளி,யாத்ருச் சிகமாகத் திருக்கோவலூரில் திருவிடைகழியிலே நிரஸ்த ரஜஸ்தமஸ்கராகையாலே பரிசுத்தராய் பகவத் குணங்களையே மநநம்பண்ணிக்கொண்டு போருமவர்களான பொய்கையார் பூதத்தாராகிற விருவரோடுங்கூட ஸ்வவ்யாவ்ருத்திதோற்ற நின்ற ருளினவளவிலே, அனேகமாயிரமாதித்யர்கள் சேரவுதித்தாலும் மாற்றவொண்ணாத படி நெருங்கிப்பொருந்தி யிருக்கிற அஜ்ஞாநாந்தகாரமானது நீங்கும்படி தேவ ரீரெழுந்தருளி யிருக்கிற திருவிடைகழியிலே நிரவதிக தேஜோரூபனான ஸ்ரீயப்பதி ஸந்நிஹிதனாக,மத்யேயொருவிச்சேதாந்தரமன்றிக்கேக்ஷேமத்தோடேகூட.வாஸ்ரித விஷயத்தில்மிகவ்யாமோஹத்தை யுடையவனான அவனைப்பெரியபிராட்டியார்முன் னிலையாக வவன்தன் ப்ரஸாதத்தாலே கண்ணாரக்காணப்புக்கு, அத்தசையிலே பெரியபிராட்டியார் முன்னிலையாக வவனைக்கண் டனுபவிக்கையாலே, யவ்வநுபவ ஜநித ப்ரீதிப்ரகர்ஷ முள்ளடங்காமே யதுக்குப்போக்குவீடாக, திருக்கண்டே னென்றுதொடங்கி மூன்றாந்திருவந்தாதியை யருளிச்செய்தகவிராஜனே,இப்புடை களிலே சீரியரான தேவரீராலே ரசிக்கப்பட்டதாய், கவிக்கவயவமான வெண்பா வென்கிற சந்தஸ்ஸோடே பொருந்தியிருப்பதாய், த்ரமிடபாஷானுரூபமான பதச் சேர்த்தியையுடைத்தாய் அதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி நூறுபாட்டாயாவிர்ப்ப வித்த மூன்றாம் திருவந்தாதியை யநாதியாக தேவரீர்க்கடிமைபுக்க வடியேனுக்கு, ஒருஹித மருளிச்செய்யுமிடத்தில் தேவரீருக்கு மேற்பட்டாரன்றிக்கே யிருக்கும் தேவரீரே, க்ருபைபண்ணியருளவேணும். மா-மதிப்பு. தூய்மை-பரிசுத்தி. துன்னிய- நெருங்கியிருக்கிற. பேர் - பெறுத்திருக்கிற. செமம் - க்ஷேமம். நெடுமை - மிகுதி. பா - சந்தஸு. (௪)

தைமகத்தில்வருமழிசைப் பரனேமற்றைச் சமயங்கள்பலதெரிந்து மாயோனல்லால், தெய்வம்மற்றில்லையெனவுரைத்தவேதச் செழும்பொரு ளுான்முகன்றெண் ணூற்றுறுபாட்டும், மெய்மிகுத்ததிருச்சந்தவிருத்தப் பாடல் விளங்கியநூற்றிருபதுந்தப்பாமன்மெய்யே, வையகத்தின்மற வாமலுரைத்துவாழும்வகையடியேனுக்கருள்செய்மகிழ்ந்துநீயே. (௫)

பேயாழ்வாருக்குப் பின்பு திருவவதரித்தவர் திருமழிசைப்பிரானாகையாலே, யவர் திருவவதரித்தருளின மாஸ நக்ஷத்ர நகரங்க ளிவையிவையென்று தனித் தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச் செய்தநான்முகன்திருவந்தாதியையும், திருச்சந்தவிருத்தத்தையும்அடியேனுக்கு ப்ர ஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

அந்த த்வாபரயுகத்தில் ப்லவங்கவர்ஷத்தில் தைமாஸத்திலே மகமென்கிற நக்ஷத்திரத்திலே,மஹீஸாரக்ஷேத்ரமென்று நிரூபிக்கப்படாநின்றுள்ள திருமழிசை யென்கிற திருப்பதியிலே, பார்கவமுநிகர்பத்தினின்றும் ஸ்ரீஸுதர்சநாம்சராய்க் கொண்டு திருவவதரித்தருளி,ஸ்வப்ரபந்தமுகத்தாலேஸாத்விகவர்க்கத்திற்கெல்லாம் உபகாரகரான திருமழிசையாழ்வாரே இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீர், அவைதிகஸமயங்களைப்பற்ற வத்யந்த நீஹீநங்களாகையாலே 'மற்றை'யென்னவேண் டும்படியான சாக்யோலூக்யாதி பாஹ்யகுத்ருஷ்டிஸமயங்களை யெல்லாம் பூர்வப க்ஷோபயோகித்வேந பலப்ரகாரங்களாலும் நிரூபித்து, ஆச்சர்ய சேஷ்டிதனான ஸ்ரீயப்பதியையொழிய வேறொரு உபாஸ்யவஸ்துவில்லையென்று அவன் ப்ரஸாதத்

தாமேல நிஷ்கர்ஷித்தனுபவித் தவ்வநுபவஜநித ப்ரீதிப்ரகர்ஷம் பேசுவிக்க 'நான்முகனை நாராயணன்படைத்தா' னென்று தொடங்கி தேவரீராலே யருளிச்செய்யப்பட்டதாய், நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே' இத்யாதி ஶ்ருதிகளால் ப்ரதிபாதிக்கப்படாநின்றுள்ள பகவத்பரத்வமாகிற ச்லாக்யமான வர்த்தத்தை ப்ரதிபாதியாநிற்பதாய், அதிகரிப்பவருக்கு ஸுகமமாம்படி தொண்ணூற்றாறு பாட்டாயவதரித்தநான்முகன்திருவந்தாதியையும், அப்படியே 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்மே' த்யாதிஶ்ருதிகளை யுட்கொண்டு'பூநிலாய வைந்துமா' யென்றுதொடங்கி தேவரீராலே யருளிச்செய்யப்பட்டதாய், ஸ்வப்ரதிபாத்யார்த்தத்தில் அர்த்தவாதகந்த மில்லாமையாலே யதாபூதார்த்தவாதித்வ மாகிற மெய்மை மிக்கிருப்பதாய், யாழிலே ஏறிட்டுப் பாடலாம்படி யிருப்பதொன்றாய், ஸ்வப்ரதிபாத்யார்த்தத்தின்சீர்மையாலே மிகவும் விளங்காநிற்பதாய், அதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி நூற்றிருபது பாட்டா யவதரித்த திருச்சந்தவிருத்த மென்கிற திவ்யப்ரபந்தத்தையு மீதி லொருபாட்டும் நழுவாதபடி கர்மபூமிகளிலே மறப்பன்றியே யதாவத்தாக வநுஸந்தித் துஜ்ஜீவிக்கும் ப்ரகாரத்தை யிவற்றி லபேக்ஷையுடையவடியேனுக்கு ப்ரீதிபுரஸ்ஸரமாக தேவரீரே க்ருபைபண்ணியருளவேணும். செழும்-ச்லாக்யமான. நான்முகன்-நான்முகன்திருவந்தாதி. மெய்-யதாபூதவாதித்வம். தப்பாமல்-நழுவாதபடி. மெய்-யதாவத்தாக. வையகத்தில்-பூமியிலே, வகை-ப்ரகாரம். மகிழ்ந்து-ப்ரீதிபுரஸ்ஸரமாக. (ரு)

முன்னுரைத்ததிருவிருத்தநூறுபாட்டும் முறையின்வருமாசிரியமே
ழுபாட்டும், மன்னியநற்பொருட்பெரியதிருவந்தாதிமறவாதபடியெண்பத்
தேழுபாட்டும், பின்னுரைத்ததோர்திருவாய் மொழியெப்போதும் பிழை
யறவாயிரத்தொருநூற் றிரண்டுபாட்டும், இந்நிலத்தில்வைகாசிவிசாகந்த
ன்னி லெழிற்குருகைவருமாறுவிரங்குநீயே. (சூ)

இத்திருமழிசைப் பிரானுக்குப்பின்பு திருவவதரித்தருளினநம்மாழ்வாருடைய அவதார திவ்ய நகர மாஸ நக்ஷத்ராதிக ளிவையிவை யென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளினதேவரீர் திவ்யசக்ஷுஸ்ஸாலே ஸாக்ஷாத்கரித்தருளின திருவிருத்தந்திருவாசரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி யென்கிற நாலுவேதத்திற்கு மெதிர்த்தட்டான நாலுதிவ்யப்ரபந்தங்களையு மடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணு மென்று ப்ரார்த்திக்கிறார்.

பாரெல்லாமுய்யும்படி இந்தப்பூமியிலே கலியுகத்தில் ப்ராதமிகமான ப்ரமாதி வர்ஷத்தில் நாற்பத்தைந்தாம்நாளில்வையாசிமாஸத்தில் விசாகமென்கிறதிருநக்ஷத்திரத்திலே அழகையுடைத்தாய் ஸ்ரீமத் குருகாபுரி யென்கிற பர்யாயநாமத்தையுடைத்தான திருநகரியிலே பகவத்ம்சபூதராய்க்கொண்டுஉடையநங்கையாருடைய கர்பத்திலே திருவவதரித்தருளி, பாஹ்யகுத்ருஷ்டிமதங்களுக்கு ப்ரதிபடராய் அவற்றைப் பஸ்மஸாத்தாக்குகையாலே மாறனென்கிறதிருநாமத்தையுடையரானநம்மாழ்வாரே, அகில கல்யாணகுணாகரனான ஸ்ரீயஃபதி தேவரீருக்கு மயர்வறமதிநலமருளுகைமுன்னாகத் தன் ஸ்வரூபகுணவிபூதி சேஷ்டிதங்களைத்தானே காட்டிக்கொடுக்க, அதைக் அனுபவித்து தேவரீ ரவ்வநுபவஜநிதப்ரீதி ப்ரகர்ஷத்தாலேஸ்ரீமதுரகவியாழ்வார் பட்டோலைகொள்ளப் 'பொய்நின்றஞானமும்' என்றுதொடங்கி முந்தறமுன்னம் தேவரீரருளிச்செய்ததாய், அதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி நூறுபாட்டாயவதரித்த திருவிருத்தத்தையும், அப்படியே இங்குற்றஸம்ஸாரிகளுக்குப் போக்யமாயிருந்துள்ள வவன்படிகளைப்பின்னையும் அவன்தானே காட்டிக்கொடுக்கக்கண்டனுபவித்துத் தேவரீரு மந்தக்ரமத்திலே 'சக்கர்மாமுகிலுடுத்து' என்றுதொடங்கி அருளிச்செய்ததா யதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி யேழுபாட்டா யவதரித்த திருவாசரியத்தையும், அப்படியே யனுபூதனான வவனிடத்திலே தேவரீருக்கு த்ருஷ்ணைகரைபுரண்டபடிக்கு ப்ரகாசமாம்படி 'முயற்றிசுமந்தழுந்த' வென்றுதொடங்கி தேவரீருளிச்செய்ததாய் பாஹ்ய குத்ருஷ்டிகளால் சலிப்பிக்கவொண்ணாதபடி ஸ்திரமாயிருந்துள்ள வேதாந்தார்த்தங்களுக்கு ப்ரகாசகமாயதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி எண்பத்தேழுபாட்டாயவதரித்த பெரியதிருவந்தாதியையும்,அப்படியே யித்திருவந்

தாதியையருளிச்செய்த பின்பு த்ருஷ்ணைக்கநுகுணமாக வவன் தேவரீரோடே ஸம்ச்லேஷித்தமைக்கு ப்ரகாசகமாம்படி 'உயர்வநவுயர்நல' மென்று தொடங்கி தேவரீரருளிச்செய்ததாய் ஸ்வப்ரதிபாத்யார்த்தத்தாலே அத்விதீய மாயிருப்பதாய் அதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி ஆயிரத்தொருநூற்றி ரண்டுபொட்டா யவதரித்த திருவாய்மொழியையும், ஸர்வாவஸ்த்தையிலும் ஸர்வ காலங்களிலும் விஸ்ம்ருதிகந்தமில்லாதபடியாகவும் உச்சாரணதிகளில் பிழை ஈஷத்தும் வாராதபடியாகவு மிவற்றின்வாசியறியாத வடியேனுக்கு இவற்றுக்கு தேசிகரானதேவரீரே க்ருபையோடே ப்ரஸாதித்தருளவேணும். முன்-முதலிலே. முறையில்-க்ரமத்திலே. எப்பொழுதும்-ஸர்வகாலங்களிலும். எழில்-அபிவ்ருத்தமான. (சு)

தேறியமாஞானமுடன் திருக்கோளூரிற் சித்திரையிற் சித்திரைநாள் வந்துதோன்றி, ஆறியநல்லன்புடனேகுருகூர்நம்பிக்கநவரதமந்தரங்கவடிமைசெய்து, மாறனையல்லாலென்றுமறந்துந்தேவு மற்றறியேனெனுமதுரகவியேநீமுன், கூறியகண்ணிநுண்சிறுத்தாம்பதனிற்பாட்டுக் குலவுபதினொன்றுமெனக்குதவுநீயே. (எ)

இந்த நம்மாழ்வாருடைய விஷயீகாரத்தாலே ஸத்தைபெற்ற ஸ்ரீமந் மதுரகவிகள் திருவவதரித்தருளின திவ்யநகரமாஸநக்ஷத்திரங்களிவையிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' என்கிற திவ்யப்ரபந்தத்தை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

பயிர் முளைக்கும்போதே பயிர் முளைக்குமாப்போலெ தான்பிறக்கும்போதே தொடங்கி ஸாராஸாரவிவேசனத்திற்குறுப்பான தெளிவையுடைத்தாய் ஆசார்யவிஷயத்திலே தானேயூன்றி நிற்கையாலே மிகவும் விலக்ஷணமாயிருந்துள்ள தத்வஹிதபுருஷார்த்த யாதாத்ம்யஜ்ஞானத்தோடேகூட திருக்கோளூ ரென்கிற திவ்யதேசத்திலே, கலியுகத்திலே நம்மாழ்வார் திருவவதரித்தருளின முந்நூற்றிருபத்திரண்டாம்நாளில் விக்ரமவர்ஷத்திலே சித்திரைமாஸத்தில் சித்திரையென்கிற திருநக்ஷத்ரத்திலே, ஸ்ரீகுமுதாம்சராய்க்கொண்டு பகவந்நியோகத்தாலே யிங்கேவந்து திருவவதரித்தருளி, விஷயவைலக்ஷண்யமடியாகப் பிறந்ததொன்றாகையாலெ சிறியதாய் அமைந்ததாய், பரிபூர்ணமாயிருப்பதாய், அன்பேபெருக மிகு மென்கிறவாழ்வாருடையவன்பைக்காட்டில் ச்லாக்யதமமான வன்போடே திருநகரிக்கு நிர்வாஹகராயன்பின் மிகுதியாலுண்டான ஜ்ஞானபக்த்யாதி குணபூர்த்தியையுடையரானவாழ்வார்பக்கலிலே ஸர்வகாலமும் அந்தரங்கவ்ருத்தியைப்பண்ணி, யவ்வ்ருத்திக்கு ப்ரதிபந்தியான வவ்வாழ்வாரை யல்லது மறந்தும் வேறொருதேவதையை நானறியேனென்றுசொல்லி, அச்சொன்னசொல் கல்வெட்டாம்படி 'தேவுமற்றறியே' னென்று உத்கோஷமாக வுரைத்திப்படி யாசார்யவிஷயத்திலே யினிதாகக்கவிபாடுகையாலே ஸ்ரீமந்மதுரகவியென்னும் பேர்பெற்றவரோ, இங்ஙன் ஆழ்வார்பக்கலிலே யடிமைசெய்துகொண்டு போந்ததேவரீர் அதடியாகவுண்டான ஹர்ஷப்ரகர்ஷம் வரம்பிட்டுக்கொடுக்க வத்தாலே 'கண்ணிநுண் சிறுத்தாம்பினு, லென்றுதொடங்கி முற்காலத்திலே யருளிச்செய்ததாய், ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரால் ஆதரிக்கப்பட்டுக் கொண்டாடப்படுகிற பதினொருபாட்டும் தேவரீரோ யவச்யம் ப்ரஸாதித்தருளவேணும். தேறிய - தெளிந்திருக்கிற, மா - விலக்ஷணமான, ஆறிய - பூர்ணமான, கூறிய-அருளிச்செய்த, குலவு-கொண்டாடப்படுகிற. (எ)

பொன்புரையும்வேற்குலசேகரனேமாசிப் புநர்பூசத்தெழில்வஞ்சிக்களத்திற்றோன்றி, அன்புடனேநம்பெருமாள் செம்பொற்கோயி லனைத்துலகின்பெருவாழ்வு மடியார்தங்கள், இன்பமிகுபெருங்குழுஉக் காண்மண்மே லிருளிரியவென்றெடுத்த விசையிற்சொன்ன, நன்பொருள்சேர்திருமொழி நூற்றைந்துபாட்டு நன்றாகவெனக்கருள்செய்நல்கிநீயே. (அ)

இவ்வாழ்வாருக்குப்பின்பு திருவவதரித்தருளினர் குலசேகரப்பெருமாளாகையாலே, யவர்திருவவதரித்தருளின மாஸநக்ஷத்ரநகரங்களிவையிவையென்றுத்தனித்

தனியே தர்சிட்பியா நின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச் செய்த பெருமாள் திருமொழியை யடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேணுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

பொன்போலே ஸ்ப்ருஹணீயமான வேலையுடைய ஸ்ரீகுலசேகராழ்வாரேயிந்த கலியுகத்தில் மனுஷ்யமானத்தாலே எழுபதாம்ஆண்டான ஸர்வதாரிவருஷத்தில் மாசிமாஸத்தில் புநர்வஸுவென்கிற திருநக்ஷத்திரத்தில் நிரவதிகசோபாயுக்தமான திருவஞ்சிக்களமென்கிற திவ்யநகரத்திலே, ஸ்ரீகௌஸ்துபரம்சராய்க்கொண்டு திருவவதரித்தருளி பகவத்விமுகருடைய ஸஹவாஸம் தேவரீக்கு அஸ்ஸஹமாகையாலேயவ்விழவுதீர, நிரவதிகப்ரீதியுடனே நமக்குவகுத்தஸ்வாமியான பெரியபெருமாள் விரும்பும்படி செம்பொன்னாலே செய்யப்பட்ட திருவரங்கப்பெருநகரியிலே யந்தபெரியபெருமாள்பக்கலிலே ப்ரேமசாலிகளாய்க்கொண்டுவஸிக்கிற ஸகலஜநங்களுடையவு மங்குற்றவாஸமாகிற மஹாஸம்பத்தையும், அதுக்குமேலே யப்பெரிய பெருமாள்பக்கலிலே செய்யக்கடவதான வடிமையொன்றுமே தங்களுக்கந்தரங்க நிரூபகமாகவுடையராய் அவரிலும்முத்தேச்யரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ப்ரேம மிக்கிருந்துள்ள பெரிய கோஷ்டியையுங் காணவேணும்மென் றவருடைய விஷயீகாரத்தாலே யவரையனுபவித்து, அவ்வநுபவபரீவாஹம் பேசிவித்தபடியே யிந்த பூமியிலேஅஜ்ஞாநாந்தகாரம்நிவ்ருத்தமாம்படி 'இருளிரிய' வென்றுதொடங்கிதேவகாநத்தோடே தேவரீரருளிச்செய்ததாய், பரமபுருஷார்த்தகாஷ்டை யாகிற ச்லாக்யதமார்த்தங்களோடே கூடியிருப்பதாய், அதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி நூற்றைந்துபட்டாயவதரித்த பெருமாள் திருமொழி யென்கிற திவ்யப்ரபந்தத்தைய ஹங்காராதிகளாலே மிகவும் தூஷிதனான வடியேனுச்கு என்பக்கல் வாத்ஸல்யாதிசயத்தைப்பண்ணி ஏதத்வக்தாவான தேவரீரோ ப்ரஸாதித்தருளவேணும். புரைதல்-உபமாநம். வேல்-ஆயுதவிசேஷம், எழில் - அழகு, செம்பொன்-சிவந்தபொன், உலகு-சேதநவர்க்கம், குழூஉ-கோஷ்டி, இரிய-நிவ்ருத்தமாக, எடுத்த-தொடங்கின, இசை-காநம், நல்கி - ஸ்நேஹித்து. (அ)

பேரணிந்தவில்லிபுத்தூரானிதன்னிற்பெருஞ்சோதிதனிற்றோன்றும் பெருமானேமுன், சீரணிந்தபாண்டியன்றன்னெஞ்சுதன்னிற் றுயக்கற மால்பரத்துவத்தைத்திரமாச்செப்பி, வாரணமேன்மதுரைவலம் வரவேவானின் நால்கருடவாகனனுய்த்தோன்றவாழ்த்து, மேரணிபல்லாண்டு முதற்பாட்டுநானூற்றெழிபத்தொன்றிரண்டுமெனக்குதவுநீயே. (கூ)

இக்குலசேகரப்பெருமாளுக்குப் பின்பு அவதரித்தருளினர் பெரியாழ்வாராகையாலே, யவர் திருவவதரித்தருளின திவ்யநகர மாஸநக்ஷத்ரங்க ளிவையிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண் டிங்ஙன் திருவவதரித்தருளின தேவரீ ரருளிச்செய்த பெரியாழ்வார்திருமொழியை அடியேனுக்குப்ரஸாதித்தருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

செம்பொன்மாடங்கள் தொடக்கமானபருப்பருத்தான நகராலங்காரங்களாலேயலங்க்ருதமான ஸ்ரீவில்லிபுத்தூரிலே, நம்மாழ்வார்திருவவதரித்தருளினவாண்டுக்குநூற்றெண்பத்து மூன்றுமாண்டான விஷுவர்ஷத்திலே ஆனிமாதத்தில் தேவரீருடைய பெருமைக்குத்தகுதியான பெருமையுடைத்தான ஸ்வாதி யென்கிற திருநக்ஷத்ரத்திலே ஸ்ரீவிஷ்ணுரதாம்சபூதராக்கொண்டுதிருவவதரித்தருளும்ஸ்வாமியானபெரியாழ்வாரே, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீர் முற்காலத்திலே சமதமாத்யாத்மகுணங்களாலே யலங்க்ருதனாய் பாண்டியனென்கிற பேரையுடையவனான ஸ்ரீவல்லப தேவராயனுடைய மநஸ்ஸிலுண்டாயிருந்த வாத்மைக்ய தேவதைக்யாதிகளாகிற விபரீதஜ்ஞாநாதிகள் நீரும்படி, முக்திதராயும் முக்தபோக்யராயும் ஸர்வஸ்வாமியாயு மிருந்துள்ள ஸ்ரீமந்நாராயணனுடைய ஸர்வாதிகாரமான பரதேவதாபாரமாத்ம்யத்தை யவன்வித்வத்கோஷ்டியிலே யெழுந்தருளிஸ்திரமாகநிஷ்கர்ஷித்தருளிச்செய்ததைக்காண, அந்த ராஜாவானவன் மிக்கப்ரீதியோடே யானையின்கழுத்திலே தேவரீரை யேறியருளப்பண்ணி ஸ்ரீமதுரையை ப்ரதக்ஷிணமாகவரு

கிறவளவிலே, ஸ்ரீயஃபதி கருடவாஹநனுகக்கொண்டு தேவரீரைக்கடாக்ஷிப்பதாக வாகாசத்திலே ஸன்னிஹிதனுக, வவ்வளவிலே ஸ்ரீயஃபதிப்ரஸாதத்தாலேயவ்வரை ஸாக்ஷாத்கரித்து முகப்பிலே தோற்றுகிறவருடைய ஸௌந்தர்யாதிகளைக் கண்டிதுக் காராலே யென்னதீங்கு வருகிறதோ வென்று கலங்கி,யதடியாக வுண்டான ப்ரேமாதிசயத்தாலே யவரை தேவரீர்மங்களாசாஸநஞ் செய்தருளினமைக்கு ப்ரகாசகமாய்சப்தாலங்காராதிகளாலே யலங்க்ருதமாய் 'பல்லாண்டு பல்லாண்டெ'ன்று தொடங்கிதேவரீரருளிச்செய்ததாய்,அதிக்ரிப்பாருக்கு ஸுகமமாம்படி நானூற்றெழுபத்து மூன்றுபாட்டா யவரித்தபெரியாழ்வார் திருமொழியை ஸாராஸாராவிவேக மில்லாதவடியேனுக்கு ஸாரார்த்தங்களே நெஞ்சிலேயிருக்கும்படி தத்வக்தாவான தேவரீரோப்ரஸாதித்தருளவேணும். பேர்-பெருக்க, அணிந்த-அலங்ருதமான, சோதி-ஸ்வாதி, சீர்- குணம், தியக்கம்-ஸம்சயாதிகள், அற - நிவ்ருத்தமாக, திரமாக-ஸ்திரமாக, வலம்-ப்ரதக்ஷிணம், ஏர்-அழகு, ஒன்றிரண்டும் - மூன்றும். (கூ)

வேயர்புகழ்வில்லிபுத்தூராடிப்பூரம் மேன்மேலுமிகவிளங்கவிட்டுசித்தன், தூயதிருமகளாய்வந்தரங்கனுர்க்குத் துழாய்மாலைமுடிசூடிக்கொடுத்தமாதே, நேயமுடன்திருப்பாவைப்பாட்டாறைந்துநீயுரைத்ததையொருதிங்கட்பாமாலை, ஆயபுகழ்நூற்றுநாற்பத்துமூன்று மன்புடனேயடியேனுக்கருள்செய்நீயே. (கo)

இப்பெரியாழ்வாருக்குப்பின்பு திருவவதரித்தருளினர் சூடிக்கொடுத்த நாச்சியாராகையாலே,அவர் திருவவதரித்தருளின திவ்யநகரமாஸநக்ஷத்ரங்களிவையென்றுதனித்தனியே தர்சிப்பியா நின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த திருப்பாவை நாச்சியார்திருமொழிகளை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறர்.

மூங்கில் குடியிலெ ஜநித்தவர்களாலே கொண்டாடப்படுகிற ஸ்ரீவில்லிபுத்தூரிலே ஸ்ரீநம்மாழ்வா ரவதரித்தருளின வாண்டுக்கு இருநூற்றிருபத்தோராமாண்டான ஸித்தார்த்தி வருஷத்தி லாடிமாஸத்தில் பூரமென்கிற திருநக்ஷத்திரத்திலே பகவத்ப்ரேமாதிசயத்தாலே உத்தரோத்தரம்விளங்க நிற்பாராய் ஸ்ரீவிஷ்ணுசித்தரென்கிற பர்யாயநாமத்தையுடையரான பெரியாழ்வாருக்குப்பெண்ணுகத் திருவவதரிக்கச்செய்தேயும், ஸ்ரீயவதாரரஹஸ்யத்தின்படியேதப்பாதபரிசுத்தையானபுத்ரீயாய்க்கொண்டு, பெரியாழ்வார் திருத்துழாய்ச்கன்றைக் கொத்தாநிற்க வதின்மண்ணின்கீழே ஸ்ரீபூமிப்பிராட்டியாருடைய அம்சமாகத்திருவவதரித்தருளி, யவர்திருமாளிகையிலே வளர்ந்தருளுகிற காலத்திலே, யவர் திருவாராதநமான வழகியமணவாளனுக்குச்சாத்துவதற்காகத்தொடுத்ததிருத்துழாய்மாலையையவர்மாத்யாந்ஹிகஸ்நாநாத்யர்த்தமாக க்ரஹாத் வெளியிலே யெழுந்தருளின தசையிலே, தேவரீருடையவாசப்பூங்குழலிலே நாள்தோறும் சூட்டிப்பரிமளிதமாக்கி யுடனேகளைந்து அவர் திருக்கைகளாலே தேவரீ ராழங்கால்படும் விஷயமான வழகியமணவாளனுர்க்குச் சூடும்படி கொடுத்தவராயும், அவர் விரும்பியருளும்படி ஸௌந்தர்யாதிகுணவிசிஷ்ட திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவராயுமுள்ள நாச்சியாரே, தேவரீரைந்து வயஸ்ஸிலேதானே பகவத்விஷயத்திலே நிரவதிகப்ரேமத்தை யுடையராய்க்கொண்டு மார்கழிநோன்பு நோற்றமைக்குப்ரகாசகமாம்படி 'மார்கழித்திங்க' ளென்று தொடங்கி தேவரீரருளிச்செய்ததா யதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படிமுப்பதுபாட்டாயவதரித்த திருப்பாவையையும், பின்னையும் 'தையொருதிங்க' ளென்றுதொடங்கியவனேடே ஸம்ச்லேஷித்தமைக்கு ப்ரகாசகமாம்படி தேவரீரருளிச்செய்தததாயதிகரிப்பாருக்கு ஸுகதமாம்படி நூற்றுநாற்பத்துமூன்றுபாட்டா யவதரித்த நாச்சியார் திருமொழியையும் வாத்ஸல்யாதிசயத்தாலே மிகுந்த ப்ரீதியோடே யபத்யபரிஹாரதீவிமுகனன வடியேனுக்கு நித்யமாகவேகரூபமாகயிருக்கிற ரமணீயப்ரீதிவிசேஷத்தையே தெகட்டாதே ஸகலகாலத்திலேயு மனுபவிக்கும் நிருபாதிக மாதாவான தேவரீரே க்ருபைபண்ணியருளவேணும். வெயென்றுமூங்கிலாய், அதனுல் மூங்கில்குடியையுபலக்ஷித் தக்குடியிலெ ஜநித்தவர்களுக்கு வேயரென்று பேரா

யிருக்கிறது. புகழ்-கொண்டாடப்படுகிற. மேன்மேல்-உத்தரோத்தரம். தூய-பரிசுத்தமான. முடி-மயிர்முடியிலே. மாதே-பெண்ணே. நேயம்-ஸ்நேஹம், பா-சந்தஸ்ஸு. ஆயபுகழ்-ஆயப்பட்டகுணங்கள். (க0)

மன்னுமதிட்டிருமண்டங்குடிதான்வாழ மார்கழிமாதக் கேட்டைநாளில்வந்து, துன்னுபுகழ்த்தொண்டரடிப்பொடியேநீமுன் றுழாய்மாலைப்பணியடிமைசெய்துநாளுந், தென்னரங்கமணவாளர்க்கன்புமிக்குச்செப்பிய நற்றிருமாலை நாற்பத்தைந்தும், பன்னியநற்றிருப்பள்ளியெழுச்சிப்பத்தும் பழவடியேனுக்கருள்செய்பரிந்துநீயே. (கக)

நாச்சியாருக்குப் பின்பு திருவவதரித் தருளினார் ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வா ராகையாலே யவர்திருவவதரித்தருளின திவ்யநகரமாஸநக்ஷத்ரங்களிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு, இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த திருமாலையையும் திருப்பள்ளியெழுச்சியையும் அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

ஸ்திரமான மதிலையுடைத்தான திருமண்டங்குடி யென்கிற திவ்யதேசமானது வாழும்படியாக, ஸ்ரீநம்மாழ்வார் திருவவதரித்தருளினவாண்டுக்கு முந்நூற்றறுபத்திரண்டாமாண்டான விக்ரமவர்ஷத்தில் மார்கழிமாஸத்தில் கேட்டையென்கிற திருநக்ஷத்ரத்திலே ஸ்ரீவைஜயந்தீ வநமாலாம்சரா யிங்கேவந்து திருவவதரித்தருளி நெருங்கியிருக்கிற ஜ்ஞாநபக்த்யாதி கல்யாணகுணங்களையுடையரான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாரே, தேவரீர் முற்காலத்திலே கோயிலேற வெழுந்தருளி பெரியபெருமாளுடைய வீஷயீகாரத்தாலே யங்குற்றைக்குப்பாங்காகத்திருத்துழாயை மாலையாகத்தொடுத்துச் சாற்றுவதாகிற தாஸக்ருத்யத்தை யநுஷ்டித்து,கோயிலைத் தமக்கு நிரூபகமாகவுடைத்தான வழகியமணவாளர்க்கு ஸர்வகாலமும் ப்ரேமமதிசயிக்கும்படியாக‘காவலில்புலனைவைத்’தென்றுதொடங்கி யனுபவபரீவாஹரூபமாக பாகவதவைபவ ப்ரதிபாதநமாகிற நன்மையுடைய திவ்யப்ரபந்தத்தையும், அதுக்குமேலே பாவுகராலே யனுஸந்திக்கப்படுகிற ‘கதிரவ’னென்று தொடங்கியதிகரிப்பாருக்குஸுகமமாம்படிபத்துபாட்டா யவதரித்த திருப்பள்ளியெழுச்சி யென்கிற திவ்யப்ரபந்தத்தையும், அனுதினமாக தேவரீருக்கே யடிமையுக்க வடியேனுக்கு நேரோதத்வக்தாக்களான தேவரீரே பரிவோடே ப்ரஸாதித்தருளவேணும். மன்னு-ஸ்திரமான, துன்னு-நெருங்கியிருக்கிற, பணி தொடுக்கை. பன்னு - அனுஸந்திக்கப்படுகிற, பரிந்து-பரிவோடே, ஸ்நேஹபுரஸ்ஸரமாக வென்றபடி. (கக)

உலகறியமலிபுகழ்கார்த்திகைமாதத்திலுரோகிணிநாளுறையந்தைவளம்பதியிற்றோன்றித், தலமளந்ததென்னரங்கர்பாலுலோக சாரங்கமாமுனிதோள்தனிலேவந்து, பலமறையின்பொருளாற்பாண்பெருமாளேநீ பாதாதிகேசமதாய்ப்பாடித்தந்த, சொலவமலனாதிபிரான்பத்துப்பாட்டுஞ்சோராமலெனக்கருள்செய்துலங்கநீயே. (கஉ)

தொண்டரடிப்பொடியாழ்வாருக்குப் பின்பு திருவவதரித்தார் திருப்பாணாழ்வாராகையாலே, அவர் திருவவதரித்தருளின மாஸநக்ஷத்ரநகரங்க ளிவையிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண் டிங்ஙன் திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த ‘அமலனாதிபிரா’ னென்கிற திவ்யப்ரபந்தத்தை யடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்தருளுகிறார்.

“ரங்கபதிநா பஹுமாநபூர்வம் நித்ராளுநாபிநியதம் நிஹிதாঃ கடாக்ஷாঃ” என்கிறபடியே பெரியபெருமாளுடைய பரிபூர்ணகடாக்ஷவிஷயமானவுறையூரிலே, தம்முடைய வவதாரவைலக்ஷண்யத்தை ஸகலரு மறியும்படியாக வளருகிற செய்கொள் சென்னல்கதிரிலேஸ்ரீநம்மாழ்வாரவதரித்தருளினவாண்டுக்குமுந்நூற்றெண்பத்தெட்டாமாண்டான பராபவவர்ஷத்தில் கார்த்திகைமாஸத்தில் ரோஹிணியென்கிற திருநக்ஷத்ரத்திலேஸ்ரீவத்ஸாம்சராயவதரித்தருளிஸகல திவ்யஸ்தலஸாராஸாரவிவேசநார்த்தம் ஸஞ்சரித் தொருவிரகாலே முக்தரானவர்களைக் கூட்டிக்கொண்டிருக்கிற பரமபதநாதனுடைய வாஸஸ்தாநமான ஸ்ரீவைகுண்டதிவ்யலோகாபே

க்ஷயா இந்ததிருவரங்கப் பெருநகரமே 'ஸ்ரீமாநசேஷ ஜந ஸங்க்ரஹணயசேதே' யென்கிறபடியே விண்ணவர் மண்ணவரோடு வாசியற ஸர்வரக்ஷண யோக்யஸ்தாநமானபடியாலே இக்கோயிலே ஸர்வதிவ்யஸ்தல ஸாரமென்று நிஷ்கர்ஷித்தருளினவராய், அப்படிக்கொத்த கோயில் ப்ரதேசத்தைத்தம்முடைய திருவடிகளாலே ஸ்பர்சிக்க நடுங்குகிற விவ்வாழ்வாரை வஹிக்கும்படி வரம்வேண்டிக்கொண்டமஹாப்ரபாவசாலியாயும், கோயில்ப்ரபாவத்தையே ஸர்வதேசஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலேயும் மநநம்பண்ணிக்கொண்டிருக்கிறவராயுமிருந்துள்ள ஸ்ரீலோகஸாரங்கமஹாமுநி தோள் தன்னிலே, யாராமாதிகளாலே மிகவுமழகான திருவரங்கப்பெருநகரியிலே யாஸ்ரிதஸம்ரக்ஷணார்த்தம் நித்யவாஸஞ்செய்தருளுகிற பெரியபெருமாள் பக்கலிலேகிட்டி ஸேவித்ததிருப்பாணாழ்வாரை, நானாவாகவிருந்துள்ள வேதங்களுடைய வர்த்தங்களையுட்கொண்டு தேவரீர் பெரியபெருமாளைத் திருவடிகள் தொடங்கித்திருமுடியளவாக, ஸகலவேதங்களுடைய வடிதொடங்கி முனிபர்யந்தம் தாம் ஸம்யக்காகவறிந்தபடிக்கு நிதர்சனமாக 'அமலனாதிபிரா' னென்றுதொடங்கி யருளிச்செய்ததா யதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படி யிசையோடே ஸாதித்தருளின பத்துப்பாட்டையும் ப்ரமப்ரமாதாதிகளையுடைய வடியேனுக்கு தத்வக்ஞாக்களான தேவரீரே அடியேனுடைய புத்திமாந்த்யவிஸ்ம்ருத்யாதிகளைக்கடாக்ஷித்துபேக்ஷியாதே யென்னெஞ்சிலும் நாவிலும் நன்றாகப் பிரகாசிக்கும்படி க்ருபைபண்ணி யருளவேணும். உரோகிணிநாள் ரோஹிணிநக்ஷத்ரத்திலே, உறைந்தை - எறையூர்என்கிற, வளம் - வளப்பம், ஸாரவத்தாயிருக்கை, தலம்-ஸ்தலம். எம்பெருமா னுகந்தருளின திவ்ய தேசங்களென்றபடி. பால்-பக்கலிலே. (கஉ)

அறிவுதரும்பெரியதிருமொழிதப்பாம லாயிரத்தோ டெண்பத்துநாலுபாட்டுங், குறியதொருதாண்டகநாலைந்தாறைந்துங் குலாநெடுந்தாண்டகமெழுகூற்றிருக்கையொன்றும், சிறியமடற்பாட்டு முப்பத்தெட்டிரண்டுஞ் சீர்பெரியமடறனிற்பாட்டெழுபத்தெட்டு, மிறையவனேகார்த்திகையிற்கார்த்திகைநாளெழிற்குறையல்வருங்கலியா விரங்குநீயே. (கங)

இத்திருப்பாண் பெருமாளுக்குப் பின்பு திருவவதரித்தருளினவர் திருமங்கைமன்னனாகையாலே யவர் திருவவதரித்தருளின மாஸ நக்ஷத்ரநகரங்களிவையென்று தனித்தனியேதர்சிப்பியாநின்றுகொண்டிங்ஙன்திருவவதரித்தருளின தேவரீரருளிச்செய்த திருமொழிதொடக்கமான வாறுதிவ்யப்ரபந்தங்களையும் அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறார்.

சாஸ்த்ரா விருத்தார்த்தங்களை ப்ரயோஜநமாகக் கொண்டு ப்ரவ்ருத்தமான நீதிசாஸ்த்ரத்தின்படியே 'அஸாதுப்யோர்த்தமாதாய ஸாதுப்யஸ்ஸம்ப்ரயச்சதி' என்கிறபடியே அர்த்தார்ஜநங்களைப்பண்ணி கோபுரப்ராகாரநிர்மாண ஸ்ரீவைஷ்ணவாராதநங்களிலே நியோகித்த ஸ்வாமியே, ஸ்ரீநம்மாழ்வார் திருவவதரித்தருளின வாண்டுக்கு முன்னூற்றெண்பத்தொன்பதாமாண்டான ப்லவம்கவர்ஷத்தில் கார்த்திகைமாஸத்தில் க்ருத்திகையென்கிற திருநக்ஷத்திரத்திலே நிரவதிகசோபாயுக்தமான திருக்குறையலூரிலே ஸ்ரீசார்ங்காம்சராகத் திருவவதரித்தருளி, திருமணங்கொல்லையில் திருவரசடியிலே வயலாலிமணவாளன் திருமணம்புணர்ந்து மணவாளக்கோலமும் தாமுமாய் ப்ராஹ்மணவேஷத்தை பரிக்ரஹித்து பத்நீஸஹிதனாய் ஸர்வபூஷணபூஷிதனாய் பரிவாரங்களோடும் வந்துதோன்ற, வித்திரளைக்கண்டு பஹுவாகஸந்தோஷித்துக்கொண்டு வாள்வேலாயுதராய் ஸபரிகரரா யதிஸம்ப்ரமத்தைப்பண்ணிக்கொண்டவர்களைவந்து சூழ்ந்து வஸ்த்ராபரணாதிகளையும்அபஹரித்துக்கொண்டு திருவிரலாழியையுந் திருமுகத்தாலே கடித்துவாங்க, ஸ்ரியஃபதியு மிதைக்கண்டு நங்கலியனோ வென்றுப்ரஸாதித்தருளின கலியனென்கிற பர்யாய நாமத்தையுடையீரான திருமங்கையாழ்வாரே, தேவரீரைப்போலே தத்வஹிதபுருஷார்த்த யாதாத்ம்யஜ்ஞாநத்தைக்கொடுக்க வற்றாய் ஸ்வவ்யதிரிக்தஸகலதிவ்ய ப்ரபந்தோத்க்ருஷ்டமாய் வயலாலிமணவாளன் ப்ரஸாதத்தாலே யவனையுள்ளபடியநுபவித்து அவ்வநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே 'வாடினேன்வாடி' யென்றுதொடங்கி தேவரீரருளிச்செய்ததா யதிகரிப்பாருக்கு ஸுகமமாம்படியாயிரத்தெண்பத்து நாலுபாட்டாயாவிர்ப்பவித்த திருமொழியையும், அப்படியேயவனை நெஞ்சாலே நினைந்தும் வாயாலேபேசியும் தேவரீர்தரித்தமைக்கு ப்ரகாசகமாய் 'நிதியினைப்பவளத்தூணை'

யென்றுதொடங்கி தேவரீரருளிச்செய்ததா யிருபதுபாட்டா யவதரித்ததிருக்குறுந் தாண்டகத்தையும், பின்னையும் தேவரீருடைய பரபக்திக்கு ப்ரகாசகமாய் பட்டர் போல்வராலே மிகவுங்கொண்டாடப்படுமதாய் ‘முன்னுருவா’ யென்றுதொடங்கி தேவரீரருளிச்செய்ததாய்முப்பதுபாட்டா யாவிர்பவித்த திருநெடுந்தாண்டகத்தையும், அப்படியே யவ்வாற்ருமையின் சுனாபுரட்சியாலே திருக்குடந்தையி லாராவமுதாழ்வார் திருவடிகளிலே தேவரீர் சரணம்புக்கமைக்கு ப்ரகாசகமாய் ‘ஒருபேருந்தி’யென்றுதொடங்கி சித்ரமென்கிறசவிதாசக்தியாலேரதபந்தமாக தேவரீரருளிச்செய்ததாய் ஒருபாட்டாயவதரித்த திருவெழுகூற்றிருக்கையையும், இங்ஙன்சரணம்புக்க விடத்திலும் அவன் முகங்காட்டாமையாலே வழியில்லாவழியேயாகிலுஞ்சென்றவனைமுகங்காட்டுவித்துக் கொள்வதாக ஸ்ரீமத்ராமாவதாரத்திலே தேவரீர் மடலெடுத்தமைக்கு ப்ரகாசகமாய் ‘காரார்வரைக்கொங்கை’ யென்று தொடங்கி தேவரீரருளிச்செய்ததாய் நூற்றைம்பதுபாதமாய் நாற்பதுபாட்டா யவதரித்த சிறியதிருமடலையும், இங்ஙன மவதாரத்தையழிக்கப் பார்த்தாரோயாகிலும் நமக்குந்தமக்கும் வைப்பான வர்ச்சாவதாரத்தை யழிக்கமாட்டாரோ யென்றுகொண்டு அவன் தேவரீருக்குப்பின்னையும் முகங்காட்டாதொழிய வவ்வர்ச்சாவதாரத்தையுங்கூடவழிப்பதாகவும் நின்றநிலைகுலைந்தவன்தானே சடக்கெனவந்து முகங்காட்டும்படியாகவும் பண்டேயுறைவான் திருநிறையூர்நம்பிபக்கலிலே தேவரீர் மடலெடுத்தமைக்கு ப்ரகாசகமாய் சவிக்கவயவமானலக்ஷணங்களோடேகூடி யிருப்பதாய் ‘மன்னியபல்பொறிசே’ ரென்றுதொடங்கி தேவரீரருளிச்செய்ததா யிருநூற்றுத் தொண்ணூற்றேழுபாதமாய் எழுபத்தெட்டுபாட்டா யாவிர்பவித்த பெரியதிருமடலையும் தப்பாதபடி யடியேனுக்கிவற்றுக்கு வக்தாக்களான தேவரீரோ க்ருபையோடே ப்ரஸாதித்தருளவேணும். குலவு-கொண்டாடப்படுகிற. சீர்-கவிக்கவயவமான லக்ஷணம், எழில்-அழகு. குறையல் - ஊர்ப்பேர். (கங)

தேசமெலாமுகந்திடவே பெரும்பூதூரில் சித்திரையிலாதிரைநாள்
வந்துதோன்றிக், காசினிமேல்வாதியரைவென்றரங்கர்கதியாகவாழ்ந்தருளு
மெதிராசர்முன், பூசுரர்தோன்றிருவரங்கத்தமுதனுருன்பொன்னடிமேலந்
தாதியாகப்போற்றிப், பேசியநற்கலித்துறைநூற்றெட்டுப்பாட்டும் பிழை
யறவேயெனக்கருள்செய்பேணிநீயே. (கச)

இவ்வாழ்வார்களுக்குப்பின்பு ஸ்ரீமன்நாதமுனி யாமுநமுநி முதலானவாசார்யக்ருபைக்கு பரிபூர்ணபாத்ரராய் குருபங்க்திஹாரத்துக்கு நாயகரத்நராய் யதிராஜரான வெம்பெருமானுர் திருவவதரித்தருளின திவ்யநகர மாஸநக்ஷத்ரங்களிவையிவையிவையென்று தனித்தனியே தர்சிப்பியாநின்றுகொண்டு இங்ஙன் திருவவதரித்தருளின தேவரீர் விஷயமாய் திருவரங்கத்தமுதனுர் விண்ணப்பஞ்செய்த நூற்றந்தாதியாகிற திவ்யப்ரபந்தத்தை யடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிருர்.

எம்பெருமானு ரிந்தகர்மபூமியிலே திருவவதரித்தருளுகையாலேயவர் ஸம்பந்தம் பெற்று நாமுஜ்ஜீவிப்போமென்று ஸர்வதேசங்களிலுள்ளாரு முகக்கும்படியாக ஸ்ரீபெரும்பூதூரென்கிற திவ்யநகரத்தில், ஸ்ரீநம்மாழ்வார் திருவவதரித்தருளினவாண்டுக்கு நாலாயிரத்துமுப்பத்தொன்பதாமாண்டானபிங்களவர்ஷத்தில்சித்திரைமாஸத்தில் திருவாதிரை யென்கிற திருநக்ஷத்ரத்திலே சேஷசேஷாசநாம்சராய்க்கொண்டு பூமியிலே யெல்லாருமெளிதாகக்கிட்டிவந்து ஆஸ்ரயிக்கும்படி திருவவதரித்தருளி, இவ்வவதாரப்ரயோஜநம் பெறுகைக்காக பூமியிலேசிஷ்யப்ரசிஷ்யாதிமுகேந வேரூன்றியிருக்கிற பாஹ்யகுத்ருஷ்டிகளாகிற துர்வாதிகளை வாதாஹவத்திலேஜயித்து, தேவரீருக்கந்தரங்கராயிருந்துள்ள திருக்குருகைப்பிரான் பிள்ளான் கூரத்தாழ்வான் முதலியாண்டான் முதலானமுதலிகளுக்கு ‘இஹாமுத்ரசதத்பாதௌ சரணம்தேசிகாவிது:’ என்கிறபடியே பரமப்ராபக பூதராய்க்கொண்டவர்களைகுணாநுபவகைங்கர்ய ஸ்ரீயோடேகூட்டிவைத்து வாழ்ந்தருளுகிற யதிராஜரோ, தேவரீருடையஸ்ப்ருஹணீயமாயழகிய திருவடிகளின் விஷயமாக, பூமியிலுள்ள ஸர்வவிப்ரவரருக்கு முத்தேச்யராயிருந்துள்ள திருவரங்கத்தமுதனுர், ‘பூமன்னுமா’ தென்று தொடங்கி பாட்டுக்களுக் கடியுரை வேண்டாதபடி அந்தாதியாக தேவரீருடைய திருக்கல்யாணகுணங்களைப்புகழ்ந்து நிரவதிகப்ரேமத்தாலே யதுவதுவென்றுவாய்

புலற்றவேண்டும்படி அத்யந்தஹ்ருத்யமாக வருளிச்செய்ததாய், மற்றப்ரபந்தங்களைக்காட்டில்மிகவும்விலக்ஷணமாய் நூற்றெட்டுபாட்டாயாவிர்பவித்த நூற்றந்தாதியாகிற திவ்யப்ரபந்தத்தை ஸம்சயவிபர்யயாதியாகிற பிழைநிவ்ருத்தமாம்படி தேவரீரோஸபலனுன வடியேனுக்குஅர்திகாரிகள் செவிப்படாமேயேகாந்தமாக ப்ரஸாதித்தருளவேணும். கீழ்பன்னிரண்டுபாட்டிலேயும் ப்ரபந்தத்ரஷ்டாக்களையே ப்ரார்த்தித்தருளி யிப்பாட்டிலேமாத்ரம் திவ்யப்ரபந்தப்ரதிபாத்யரானவரை ப்ரார்த்திக்கைக்கடி யென்னென்னில், த்ராமிடகவிதாசதுரரான திருவரங்கத்தமுதனர் பெரியோர்கள் நியமநத்தாலே அநேகப்ரகார மநேகாவர்த்தி நூற்றந்தாதியை விண்ணப்பம்செய்து பட்டோலைகொண்டு முதலிகள் திருவோலக்கத்தின் நடுவே வைக்க, அதைக்கடாக்ஷித்து த்ரைகாலிக ஜ்ஞானியான வெம்பெருமானர் திருவுள்ள முகவாததினலே முதலிகள் அதிகரியாமலிருக்க, விதக்குமேல் முதலிகளுமிவருமே எம்பெருமானர் ஸன்னிதியிலே, கண்ணிநுண்சிறுத்தாம் பென்கிற திவ்யப்ரபந்தாநுஸந்தாநத்தாலே மிகவும் ஸுப்ரீதராய் யேகதசையிலே ஸாக்ஷாத்க்ருதரான வாழ்வார் தந்திருவடிவாரத்திலே ஸ்ரீமன்நாதமுனிகளுக்கு பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைதர்சிப்பித்துதத்விஷயமாக திருவவதரிக்சத்த்க ப்ரபந்தத்தை மற்றதிவ்யப்ரபந்தங்களோடே சேர்த்துப்பாட்டுநாலாயிரமுபதேசித்தருளினரென்கிற வைதிஹ்யம் பொய்யோவென்றுவிண்ணப்பஞ்செய்ய, அதுக்குமேலேயதுபொய்யன்றுமெய்யேயென்றெம்பெருமானர் ஆளவந்தாருடைய அநுக்ரஹ விசேஷத்தாலே நம்மிடத்திலே யாழ்வார்முதலானவாசார்ய ப்ரஸாதமுண்டா யதினலே ஞானபிவிருத்தியுண்டானர்போலே நம்மாழ்வார் க்ருபைக்கு பூர்ணவிஷயரான திருவரங்கத்தமுதனரிடத்திலேயும் நம்மாழ்வாரும் ஸ்ரீமன்நாதமுநிகளும் பரிபூர்ணமாக க்ருபைசெய்து தாங்கள் பரஸ்பரம் நம்முடைய விஷயமாகப்பேசினபேச்சுகள் இவருக்கு யதாவத்தாக ஸ்பர்சிக்கும்படி பண்ணக்கடவ தொன்றுதம்திருவடித் தாமரைகளாலேயிவரை யலங்கரித்து அநுக்ரஹம் செய்தருள, வப்படியேபட்டோலையிட்டு ஸன்னிதியிலே ஸமர்ப்பிச்க,வதைக்கடாக்ஷித்தருளி திருவுள்ளமுகந்து, தத்த்ரஷ்டாவான திருவரங்கத்தமுதனரையிட்டு ப்ரவர்த்திப்பியாதே தாமேதிருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கு ஆழ்வார் ஸ்ரீமன்நாதமுனிகளுக்குப்ரஸாதித்தருளினநாலாயிரமுமின்றுநாமுமக்குத்தந்தோம்,நீரேத்ராவிட உபநிஷத்துக்களுக்குவ்யாக்யானஞ்செய்யுமென்று நூற்றந்தாதியை ப்ரவசநம்பண்ணபடியாலே ப்ரவசனகர்த்தாவிவரானபடியாலே யிப்பாட்டிலே ப்ரபந்தவிஷயனை ப்ரார்த்திக்கத்தட்டில்லை. திருவாதிரை - ஆர்த்ரா நக்ஷத்ரம், காசினி - பூமி, வென்று-ஜயித்து, பூசுரர்-ப்ராம்மணர், கோன்-ஸ்வாமி, போற்றி-புகழ்ந்து, பேசிய-அருளிச்செய்த, அற-திரும்படி, பேணி-ரஹஸ்யமாக. ()

இதுவரையில் பொய்கையார்தொடக்கமானருடைய திருவவதாரக்ரமத்தையும், அவர்கள் திருவவதரித்தருளின திவ்யநகரமாஸநக்ஷத்ரங்களுடைய திருநாமங்களையும், அவர்களருளிச்செய்த ப்ரபந்தங்களிவையிவையென்பதையும், ப்ரபந்தங்கள்தோறும் பாட்டுக்களின் ஸங்க்யை தனித்தனியே யிவ்வளவென்பதையும் அருளிச்செய்தவராய், மேலிரண்டுபாட்டாலே யவர்களிலே யொவ்வொருவர் தனித்தனியே யருளிச்செய்த ப்ரபந்தங்களில் பாட்டுக்களின் ஸங்க்யை யிவ்வளவென்று தர்சிப்பிக்கக்கோலி முந்தறமுன்னமொருபாட்டாலே பொய்கையாழ்வார்தொடக்கமான வொன்பது திருநாமமும் தந்தம்ப்ரபந்தங்களிலே தனித்தனியேயருளிச்செய்த பாட்டுக்களின் ஸங்க்யை யிவ்வளவிவ்வளவென்று தர்சிப்பித்தருளுகிறர்.

என்ணின்முதலாழ்வார்கண்மூன்றுநூறுமெழின்மழிசைப்பிரானிரு நூற்றிருபத்தாறு, முண்மைமிகுமாறன்மறையாயிரத்தோடுற்றவிரு நூற்றுத்தொண்ணூறுமாறும், வண்மையுடைமதுரகவிபத்துமொன்றும்வஞ்சியர்கோனூற்றைந்தும்பட்டநாதன், பண்ணியநானூற்றேழுபத்து மூன்றும் பார்க்கோதைநூற்றேழுபத்துமூன்றே. (கரு)

பொய்கையார்தொடக்கமான விவர்களருளிச்செய்த ப்ரபந்தங்களில்பாட்டுக்களின் ஸங்க்யையையெண்ணப்புக்கால் முதலாழ்வார்களாகிறமூவரில் பொய்கையார் முதல் திருவந்தாதியிலருளிச்செய்தது நூறுபாட்டு. பூதத்தாரிரண்டாந்திருவந்தாதியிலருளிச்செய்தது நூறுபாட்டு. பேயார்மூன்றுந்திருவந்தாதியிலருளிச்செய்தது நூறுபாட்டு. அழகியதிருமழிசையிலேதிருவவதரித்தருளி ஸ்வப்ரபந்தமுகேந ஸாத்வி

கஜநங்களுக் குபகாரகரான திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதியிலும் திருச்சந்தவிருத்தத்திலுமாக வருளிச்செய்தது இருநூற்றுப்பதினாறுபாட்டு. ஸ்ரியஃபதியைக்காட்டிலும் யதாத்ருஷ்டார்த்தவாதித்வமாகிற குணாதிகராய் பாஹ்யகுத்ருஷ்டிமதங்களை பஸ்மஸாத்தாக்குகையாலே மாறனென்று திருநாமத்தையுடைய நம்மாழ்வார்நாலுவேதத்துக்கு மெதிர்த்தட்டான ப்ரபந்தசதுஷ்டயாத்மகவேதத்திலருளிச்செய்தது ஆயிரத்தோடேகூடின இருநூற்றுத்தொண்ணூற்றாறுப்பாட்டு. ஔதார்யாதிகுணங்களையுடையரான ஸ்ரீமதுரகவியார் கண்ணிநுண் சிறுத்தாம்பென்கிற திவ்யப்ரபந்தத்திலருளிச்செய்தது பதினொருபாட்டு. திருவஞ்சிக்களமென்கிற திவ்யபுரியிலுள்ளாருக்கு நிர்வாஹகரான குலசேகரப்பெருமாள் பெருமாள் திருமொழியிலருளிச்செய்தது நூற்றைந்துபாட்டு. ஸர்வஸாத்விகப்ராஹ்மணருக்கு பரமோபகாரகரான பெரியாழ்வார் திருமொழியிலருளிச்செய்தது நானூற்றெழுபத்துமூன்றுபாட்டு. பூமியிலே கோதையென்கிற பர்யாயநாமத்தையுடையரான சூடிக்கொடுத்தநாச்சியார் திருப்பாவையிலும் நாச்சியார்திருமொழியிலு மருளிச்செய்தது நூற்றெழுபத்து மூன்றுபாட்டு. எழில்-அழகு, உண்மைமிகு-ஸத்யம்மிக்கிருக்கிற, யதாத்ருஷ்டார்த்தவாதித்வம் மிக்கிருக்கிற வென்றபடி. வண்மை-ஔதார்யம், கோன்-நிர்வாஹகன். (௧௫)

பத்தரடிப்பொடிபாடலைம்பத்தைந்தும் பாணர்புகழ்பத்துடனேபரகா
லன்சொல், அத்தனுயர்வேங்கடமாற்காயிரத்தோடான விருநூற்றோரைம்
பத்துமூன்று, முத்திதருமெதிராசர்பொன்னடிக்கேமொழிந்தவமுதர்பாட
னூறுமெட்டு, மெத்திசையும்வாழவிவைபாடிவைத்த வென்பவைநாலாயிர
முமெங்கள்வாழ்வே. (௧௬)

தொண்டரடிப்பொடியாழ்வார் தொடக்கமான நாலுதிருநாமமுமருளிச்செய்த ப்ரபந்தங்களில் பாட்டுக்களின் ஸங்க்யையருளிச்செய்யாநின்றுகொண்டு இஜ்ஜகதுஜ்ஜீவிக்கும்படி இந்நாலாயிரத்தையும்பாடியுபகரித்தோரிவர்களுஞ்சிலரோ, இதைச் சொல்லுவதே நமக்கு ஸ்வரூபானுரூபமான ஸம்பத்தென்றருளிச்செய்கிறார்.

ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையிலுந் திருப்பள்ளியெழுச்சியிலுமாக வருளிச்செய்தது ஐம்பத்தைந்துபாட்டு. நம்பாணநாதன் பெரியபெருமாளுடையபுகழ்ச்சியாக பாவபந்தத்தோடே அமலனாதிபிரானென்கிற திவ்யப்ரபந்தத்திலருளிச்செய்தது பத்துபாட்டு. பாஹ்யகுத்ருஷ்டிகளாகிற பரருக்குகாலம்ருத்யுகல்பராயிருந்துள்ள திருமங்கையாழ்வார் நிருபாதிகபிதாவா யாப்ததமரா யாஶ்ரிதஸம்ரக்ஷணாதிசயகரவேங்கடாசலவ்யா மோஹபரரான ஸ்ரீநிவாஸன்விஷயமாக பாவபந்தத்தோடேதிருமொழிதொடக்கமான ஸ்வப்ரபந்தஷட்கத்திலும் அருளிச்செய்தது ஆயிரத்தோடேகூடின விருநூற்றைம்பத்து மூன்றுபாட்டு. மோக்ஷப்ரதரான யதிஸார்வபௌமருடைய ஸ்ப்ருஹணீயமாயிருந்துள்ள திருவடிகள்விஷயமாகதிருவரங்கத்தமுதனா ரருளிச்செய்தது நூற்றந்தாதியில் நூற்றெட்டுபாட்டு என்றிப்படி சொல்லப்படுகிற விவைநாலாயிரம் பாட்டும் ஸர்வதிக்குகளிலுமுள்ள விசேஷஸாத்விகஜநமுமுஜ்ஜீவிக்கும்படியாகநெஞ்சிலே ஸதாவரப்ரதிஷ்டையாக வைத்துக்கொண்டு போருமவர்கள் எங்களுக்கு ஸ்வரூபாநுரூபஸம்பத்தா யிருப்பார்கள். (௧௬)

வையகமெண்பொய்கைபூதன்பேயாழ்வார்மழிசையர்கோன்மகிழ்மாற
ன்மதுரகவி,பொய்யில்புகழ்கோழியர்கோன் விட்டுசித்தன்பூங்கோதைதொ
ண்டரடிப்பொடிபாணாழ்வார், ஐயனருட்கலியனெதிராசர்தம்மோடாறிரு
வரோரொருவரவர்தாஞ்செய்த, துய்யதமிழிருபத்துநான்கின்பாட்டின்றொ
கைநாலாயிரமுமடியோங்கள்வாழ்வே. (௧௭)

பின்னையும் ப்ரதிபத்தாக்களுக்கு ப்ரதிபத்தியாம்படி பொய்கையார் தொடக்கமானாருடையவவதாரக்ரமந்தப்பாதபடி ஆதராதிசயந்தோற்றவவர்களுடைய திருநாமங்களையும் அவர்கள் திவ்யப்ரபந்தத்தின் ஸமுதாயஸங்க்யையையும் அவற்றின் பாட்டுகளின் ஸமுதாயஸங்க்யையையும் தர்சிப்பியாநின்றுகொண்டு இங்கன்திருவவதரித்தவிந்நாலாயிரமும் நமக்குஸ்வரூபாநுரூபமானஸம்பத் தென்றருளிச்செய்கிறார்.

பூலோகத்திலுள்ள வசேஷராலுந் தந்தாமுடையஹ்ருதயங்களிலே மிகவாதரத்தோடே யிறைப்பொழுதும் விடாதே யிவர்களுமிங்ஙனே செல்வரேயென்றநுஸந்திக்கப்படுமவர்களான பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை என்கிற திவ்யநகரத்தில் வஸிக்கிற ஸாத்விகஜநங்களுக்கு நிர்வாஹகரான திருமழிசையாழ்வார், ஸ்வபக்ஷஸ்தாபநமடியாக ஸந்தோஷித்து வகுளமாலாதரராய்க்கொண்டு இருக்கிறவராயும் பரபக்ஷநிராகரணம் பண்ணினவராயு மிருந்துள்ள நம்மாழ்வார், ஸ்ரீமதுரகவியாழ்வார், அதிவாதாதி தோஷகந்தமின்றியே யிருந்துள்ள வபதாநாதிகளையுடையராய் கோழியென்கிற நிசுளபுரியிலேவஸிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நிர்வாஹகரான குலசேகராழ்வார், ஸ்ரியஃபதியையென்று மொக்கத்தன் திருவுள்ளத்திலே யனுஸந்தித்துக்கொண்டிருக்கும்பெரியாழ்வார், ஸ்ரீமன்நாராயணனுக்குப்பிராட்டியாரிலும் ஸ்ப்ருஹணீயையாய் ஸ்ரீகோதையென்கிற, திருநாமத்தையுடையரான சூடிக்கொடுத்தநாச்சியார், யத்வா ஸ்ரியஃபதிக்குப்பூமாலையும் பாமாலையையும் ஸமர்ப்பிக்கிற ஸ்ரீசூடிக்கொடுத்தநாச்சியார், ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், ஸாத்விகவர்க்கங்களுக்கெல்லாம் ஸர்வோத்க்ருஷ்டபந்துவாய் ஸர்வேச்வரன்பக்கலிலே ஸர்வார்த்தக்ரஹண ஸமயத்திலே வந்தகலியனென்கிறபர்யாயநாமத்தையுடையரான திருமங்கையாழ்வார், யதிராஜரான விளையாழ்வாரோடேகூட வாறிருவரென்று ப்ரபந்தவக்தாக்களைக்கூட்டியருளிச்செய்து ஒருவரென்றுஅநுக்ரஹமுகேந பண்ணிவைத்தவனைத் தனியேயருளிச்செய்து இந்தப்பதின்மூவ்வர் ப்ரவசனஞ் செய்தருளினதுகளாய் ஸ்ருதிஸ்ம்ருத்யாதிகள் போலவன்றிக்கேதேவதாந்தரபாரம்ய ப்ரமாதிகள் வாராதபடியாசார்ய பரமாசார்யபாத்வ கல்யாணகுணகண மாத்ரப்ரதிபாதகமாகையாலே பரிசுத்ததமமான த்ராமிடபாபந்தங்களிருபத்துநாலு மந்தப்ரபந்தங்களிலேதொகை இவ்வளவென்றுநிஷ்கர்ஷித்து வைத்தபாட்டுக்கள் நாலாயிரமும் தத்வக்தாக்களும் தத்ப்ரவசநகர்த்தாவுமாகப் பதின்மூன்றுதிருநாமமானவர்கள் பரமக்ருபையாலே ப்ரஸாதிக்கப்பெற்ற வடியோங்களுக்கு அங்கோடிங்கோடுவாசியற நிரவதிக ஸம்பத்து. வையகம்-பூலோகம் எண்-அனுஸந்திக்கப்படுகிற, கோன் - நிர்வாஹகர், கோழி - நிசுளாபுரி, பூ - ஸ்ப்ருஹணீயம், யத்வா - பூங்கோதை, பூமாலை பாமாலை கொடுக்கிறவள், ஐயன் - பரமபந்து, துய்ய - பரிசுத்தமான. (௭௭)

அந்தமிலாவாரணநாலாகிநின்றவதன்கருத்தையாழ்வார்களாய்ந்தெடு
த்துச், செந்தமிழாலருள்செய்தவகைதொகையுஞ் சிந்தாமனுலகங்கள்வாழ
வென்று, சந்தமிகுதமிழ்மறையோன் றூப்புற்றேன்றும் வேதாந்தகுரு
மொழிந்தப்ரபந்தசாரம், சிந்தையினாலநுதினமுஞ்சிந்திப்போர்க்குச் சேம
மதாந்திருமாறன்கருணையாலே. (௭௮)

நிகமனத்தில் ப்ரபந்தநிர்மாண ப்ரயோஜனத்தையு மிப்ரபந்தவக்ருவனைலக்ஷண்யத்தையும் ஸர்வோத்க்ருஷ்டமான விப்ரபந்தத்தை நன்றாகவதிகரித்தநுஸந்திக்கிறவர்களுச்குபலத்தையும் தர்சிப்பியாநின்றுகொண்டு நிகமித்தருளுகிறார்.

உத்பத்திநாசரஹிதங்களாய் ருகாதிபேதத்தாலே நாலுவகையான உபநிஷத்துக்கள் தேவதாந்தரபாரம்ய ப்ரமஜநகமாய் நின்றவளவில் மயர்வறமதிநலமருளப்பெற்ற வாழ்வார் பேதஸ்ருதியாலே சிதசிதீச்வரதத்வங்களை விவேசித்து கடகஸ்ருதிஸித்தஸம்பந்தவிசேஷத்தாலே யபேதஸ்ருதிகளை விசிஷ்டைக்ய விஷயத்திலே முக்யவ்ருத்திகளாக்கி ஸம்யங்ந்யாயாநுக்ருஹீத ஸொபப்ருஹ்மண ஸ்ருதிகளாலேஸர்வார்த்தங்களையும் நிஷ்கர்ஷித்தருளி, அலபஸ்ருதருக்கு ஸர்வாவிருத்த ஸம்யக்அர்த்தநிர்த்தாரண ஸாமர்த்யமில்லாமையாலே தெளியாதமறை நிலங்களை தெளியும்படிஸகலதுரிதரோகபேஷஜங்களாயும், மதாந்தரஸ்தர்கள் கைப்படாதபடி ஏழைப்பேதைகளுங்கூடவர்த்தானுஸந்தாநம் பன்னும்படி த்ரமிடபாஷையாலே அருளிச்செய்ததுகளுமான திவ்யப்ரபந்தங்களினுடையவும் அவற்றின் பாட்டுகளினுடையவும் தனித்தனியே நாமநிர்தேசஸங்க்யா நிர்தேசரூபமானவகையும் அப்ரபந்தங்களெல்லாமாகநாலாயிரமென்று தொகையும் திவ்யப்ரபந்தத்தின் சீர்மையை ஈஷத்துந்தப்பாதே ஸகலஸாத்விகஜநருங் கற்றநுஸந்தித்துஜ்ஜீவிக்கவேணுமென்று ஸம்ஸ

க்ருதவேதங்களைக்காட்டிலும் வேதாந்த ரஹஸ்யவைசத்யாதிசய ஹேதுபூதத்வஸ்த்யஃபரமாத்மநி சித்தரஞ்ஜகதமத்வ ஸர்வோபஜீவ்யத்வ ப்ரப்ருதிகங்களான குணவிசேஷங்களாலே ஸ்ரேஷ்டதமங்களான த்ராவிடவேதங்களை யோதித் தெளியாத மறை நிலங்களை யெல்லாம் ஸம்யக்காகவறிந்தவராய், ஏழைபேதைகள்கூடக்கிட்டி ஸர்வார்தங்களையும் அதிகரித்துஜ்ஜீவிக்கும்படி தூப்பில்குடியிலே திருவவதரித்தருளினவராய், ஸ்ரீமத் வேங்கடநாதாசார்ய ரென்கிற பர்யாயநாமத்தையுடையரான வேதாந்தாசார்யர் ஆழ்வார்களவதரித்தருளின க்ரமம், அவர்கள் திருவவதரித்தருளின திவ்யநகரமாஸநக்ஷத்ரங்கள், அவர்களருளிச்செய்த ப்ரபந்தகளிவையிவை யென்பது, ப்ரபந்தங்கள் தோறும் தனித்தனியே பாட்டுக்களின் ஸங்க்யை, ஓரோராழ்வார்அருளிச்செய்தபாட்டுகளின் ஸங்க்யை, ப்ரபந்தப்ரவர்த்தகாளுடையவும் ப்ரபந்தங்களுடையவும் பாட்டுக்களுடையவும் ஆகஸமுதாயஸங்க்யையு மிவ்வள வென்றனைவரும் வாழும்படியருளிச்செய்த விப்ரபந்தஸாரமென்கிற கிரந்தத்தை ஸார்த்தமாக வதிகரித்துத்தந்தாமுடைய நெஞ்சாலே திநங்கள்தோறும் பதாக்ஷராதிகள் நழுவாமல் ப்ரீதிபுரஸ்ஸரமாக வநுஸந்திக்கிற மஹாநுபாவர்களுக்கு திவ்ய தம்பதிகளுடைய பரமக்ருபையாலே த்ருஷ்டாத்ருஷ்டங்களிலே ஈஷத்துங்குறையின்றிக்கே குசலங்களுமுண்டாகும். அந்தமிலா - நாசமில்லாத, ஆரணங்கள் - உபநிஷத்துக்கள், ஆய்ந்து - விசாரித்து, செந்தமிழ் - செவ்வியதமிழ், சிந்தாமல் - விழாமல், அநுபாதேயஸ்தலத்திலே தவறிவிழாமலென்றபடி. யத்வா - நழுவாமல்- பதாக்ஷராதிகளில் தோஷம்வராதபடி என்றபடி. சந்தம் - வேதம், ஸம்ஸ்க்ருதவேதமென்றபடி. மொழிந்த - அருளிச்செய்த, சேமமதாம் - க்ஷேமமுண்டாம், திவ்ய தம்பதிகள் க்ஷேமத்தைக்கொடுத்தருளுவர் என்றபடி. (கஅ)

## ப்ரபந்தஸார வ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாயநமஃ.



